☞ சைவசமயசாரமாகிய இந்நூல்— சென்னை : வைத்தியநாதமுதலியார் தெருவில் 44-வது கதவிலக்கமுள்ள வீட்டில் C. S. கோவிந்தராஜமுதலியாரவர்களிடத்திலும், இராமநாதபுரந்தாலூக்கா உச்சப்புளிப்போஸ்டைச்சார்ந்த பிரப்பன்வலசையில் ஸ்ரீ. உடையநாயகம்பிள்ளை யவர்களிடத்திலுங் கிடைக்கும்.

சிவமயம்.

குருப்ரஹ்மணேநம:

திருத்தேவையெனுந் திருவிராமேச்சுரத்தைச்சார்ந்த

பாம்பன்:

ஸ்ரீமத் - குமரகுருதாசசுவாமிக ளருளிச்செய்த




**First Edition—400 Copies.**

இது,

**(N. SUBRAMANIA PILLAI AVERGAL,**
*Government Telegraph Office, Trivandrum.)*

திருவனந்தபுரம்: கவர்ண்மெண்ட் டெல்லகிராப் ஆபீசு

ம-௱-௱-ஸ்ரீ

N. சுப்பிரமணியபிள்ளை யவர்களால்

பதிப்பிக்கப்பட்டது.

MADRAS:
THE PROGRESSIVE PRESS, 14, BAKER STREET.



1908.

இதன்விலை ரூபாய்—1-12-0.

உ

சிவமயம்.

குமாரகுருப்யோநம:

# பதிப்புரை.

தசரத இராமசந்திரர் இராவணனைக்கோறல்புரிந்ததனாலெய்திய பிரஹ்மஹத்தி நீங்கியுய்யுமாறு சிவபூஜைசெய்த திருவிராமேச்சுரமெனுந் திவ்யஸ்தலத்திற் சனனமாகி அதனைச்சார்ந்த பாம்பனெனும்பதிக்கட் பன்னாள், நிர்மல நிஜாநந்த ஏகபரிபூர்ண வியாபக வஸ்துவாய்த் தஹராகாசப்பொருளா யிராநின்ற இறைவனும் ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய பரமாத்மாவினது பெருங்கருணையிற் சிறுவயது தொடங்கி அப்பரமாத்மாவின் பேரிலேயே பாடு நியமங்கொண்டு வைதிகசைவசித்தாந்த பாநுவா யெழுந்தருளியிருந்து இராமநாதபுரந்தாலூக்கா—பிரப்பன்வலசையெனும் பெயரிய ஊரின் ஒருசார் (௩௫) முப்பத்தைந்துநாள் சிவநிஷ்டையிலிருந் தெழுந்த பின்றை, அத்யாச்ரமமெனுந் துறவு பூண்டவரும்; இயலிசைத் தமிழ்க் கட்டுரைச்சுவைமல்கு பெருந்தோத்திர வடிவினவாகவும், தத்துவப் பெருவிளக்கான சாத்திரவடிவினவாகவும், பரமதகண்டனமுஞ் சுவமதத்தாபனமுமான நூல் பலவற்றுள்ளுந் தலைநின்றுத்தரிப்பனவாகவும், ஐயமறுக்கும் ஆற்றலுள்ள வைதிக சைவ சித்தாந்த வேதாகமபாடிய மென மிளிர்ந்து சொன்னயம், பொருணயம், தொனிநயமெனு முத்திறமுந் துறுமிவிளங்குவனவாகவும், யாப்பிலக்கண இலக்கியங்களாகவும், அதி விசித்திரச்செய்யுள் பலவுட்கொண்டுள்ளனவாகவும் விளங்காநின்ற—

குமரகுருதாசசுவாமிகள் பாடல் (திருச்செய்யுள் கஉஅக),

திருவலங்கற்றிரட்டு (திருச்செய்யுள் ககரு௫),

திருப்பா (திருச்செய்யுள் கக0க),

காசியாத்திரை (திருச்செய்யுள் ௬0அ),

பரிபூரணாநந்தபோதம்,

தகராலயரகசியம்,

குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதி,

செக்கர்வேள் செம்மாப்பு,
செக்கர்வேளிறுமாப்பு,
ஜீவயாதனையைக்குறித்தவியாசம்,
ஷண்முககவசம்,
பஞ்சாமிர்தவண்ணம்,
திருத்தொடையல்,
கந்தரொலியலந்தாதி,
குசப்பிரமவருட்பத்து,
ஞானவாக்கியம்,
கந்தகோட்டமும்மணிக்கோவை,
வட்டிருமுல்லைவாயிற் குகபரர்வண்ணம,
நவவீரர் நவரத்தினக் கலிவிருத்தம்,
திருத்தல தரிசனகாலங்களிற் பாடியருளிய கட்டளைக்கலித்துறைகள்,
அஷ்டாஷ்டவிக்கிரகலீலை விருத்தம்,
சேந்தன்செந்தமிழ் (வடசொற்புகாது பாடப்பட்டது),
ஐந்தந்தாதியெனும் பகுபஞ்சசம்,
சஷ்டிவகுப்பு (கூஉ - சந்தபேதம),
பிரிதுபொட்டுப்பிரபந்தம்,
பிரிதுபடுதுவிதபங்கி,
பிரிதுபடு திரிபங்கி,
சஸ்திரபந்தம்,
மயூரபந்தம் (சதாக்கரம்),
அந்தாதித்தொடைக் கமலபந்தம் : பலபங்கி (விசித்திரகவி),
தங்க ஆனந்தக்களிப்பு,
அனவரதபாராயணாஷ்டகம்,

முதலிய செய்யுள் வடிவாய நறுநூல்களையும்; சிவஞானதேசிகத்திற் குருசிட சம்வாதக் கடாவிடைகளாய் கூஉ - வியாசங்களாய் விளங்கு பெருநூன் முதலிய—

பல வசன நூல்களையும்,
நாலாயிரப்பிரபந்த விசாரத்தையும்,

அருளிச்செய்த ஆசிரியருமான ஸ்ரீமத் - குமரகுருதாசசுவாமிகளால் அருளிச்செய்யப்பட்ட இந்தச் சைவசமயசரபமெனும் அரிய

பெரியநூல்—அந்தமிலின்பம் பயக்குஞ் சைவசமயத்திற்கு ஒரு பேராணுயுள்ளது: போதகமுறையினே புனிதந்நியாயங்கள் பொலியப்பெற்ற பொற்பினைத் தன்கண்ணே கொண்டு நிகரற்று நிற்பது: இருக்கு முதலிய வடமொழிவேதமே தேவார திருவாசகங்களாய தென்மொழி வேதமாய் விளங்குகின்ற தென்பதை விளக்குமியல்பிற்று: பரமதநிராகரண ஸ்வமதஸ்தாபன தர்ப்பண நிகர்த்தது: "செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம்" என்றபடி கேட்போர் செவிகளை மாதுரியத்தினுன்மல்குவித்து ஆனந்தக்கண்ணீருகுமாறு செய்வது: பரவஸ்து அதுவோ இதுவோவென் றுழிதருவாரை யுண்மையினிறுவுந் தகைத்து: அங்ஙன நிற்கு நிலையையு நிகழ்த்தும் வாய்மைத்து: ஆகலின் மேனியாய போதகத்தின் இதனின் மிக்கநூ லின்றுகாறு மேற்பட்டதின்றென்பது இதனை நன்கு நோக்கும் விவேகிகட்குப புலப்படாது போவதில்லை. புண்டையார் வழக்கிற் பிரமாணமாக நிலவும் இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம், சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோபிசிதம், சோதிடம், புராணம், நியாயம், மீமாஞ்சை, மிருதியெனும் வித்தை கச-ல்—

> "ஸ்மிருதிகள் வேதார்த்தத்திற்கு விரோதமாக விருக்கின்றனவோ மற்றுஞ் சாருவாக சித்தாந்தமுதலிய குற்சிதசித்தாந்தங்க ளெவையுண்டோ அவையெல்லாம மறுமையில் நல்லபலன் பயவாதனவாம்."

எனும் மனுதருமநூலின் கஉ-ம் அத்தியாயத்து வேதப்பிரசம்சைப் பொருளின்படி பிரதானமான சுருதிகளையே பெரிதும் பிரமாணமாகக்கொண்டு பிரகாசிக்கின்ற இந்நூல்—"இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே—யொழுக்க முடையார்வாய்ச் சொல்" என்பதையுணர்ந்த வைதிகசைவத் திருக்கூட்டத்தவர் யாவர்க்குஞ் சமைத்ததொரு பெருவிருந்தாயிருத்தலின், ஈதொவ்வொரு சைவசமயச் செல்வர்கள் பாலும் எஞ்ஞான்று மிருத்தற் குரித்தென்பது கருதி யிதனை யச்சிற் பதிப்பித்தேன். இவ்வாறு நிறைவேறச் செய்தருளிய திருவருளை உளம், மொழி, மெய்யெனு மூன்ருனு நினைத்து வழுத்தி வணங்குகின்றேன்.

இங்ஙனம்:

திருவனந்தபுரம்,

N. சுப்பிரமணியபிள்ளை.

பதிப்புரை முற்றிற்று.

## இந்நூலச்சிட முன்பணமளித்த
## சிவநேயச்செல்வர்கள் பெயர்.

| | | ரூபாய். |
|---|---|---|
| (1) | புலியனூர் - சம்பந்தமுதலியார் (Madras Club) | 5 |
| (2) | சென்னை - குஹப்ரஹ்மதாஸர் | 5 |
| (3) | ,, C. S. கோவிந்தராஜமுதலியார் | 5 |
| (4) | ,, சு. பெ. பொன்னுச்சாமிமுதலியார் | 5 |
| (5) | திருநெல்வேலி-புஸ்தகவியாபாரம் S. முத்தையபிள்ளை | 5 |
| (6) | ,, சிக்கநரசையன்கிராமம் - S. சரவணப்பெருமாள்பிள்ளை (ரெவினியூ இனிஸ்பெக்டர்) | 5 |
| (7) | சிதம்பரம் - வே. தில்லைநாயகமுதலியார் | 5 |
| (8) | ,, கு. வே. இராஜா முத்துக்கிருஷ்ணநாயுடு | 5 |
| (9) | சிதம்பரந்தாலூக்கா, பின்னத்தூர் - ரா. ஜகந்நாதபிள்ளை | 5 |
| (10) | ,, ,, பொ. சிவராமபிள்ளை | 5 |
| (11) | வரகூர் - ஆறுமுகபத்தர் | 5 |
| (12) | பாம்பன் - L. D. முத்துக்கருப்பபிள்ளை | 11 |
| (13) | இராமநாதபுரந்தாலூக்கா, பிரப்பன்வலசை - தி. உடையநாயகம்பிள்ளை | 10 |
| (14) | ,, ,, செ. சின்னசாமிப்பிள்ளை | 5 |
| (15) | ,, வெற்றிலைமண்டபம் - கோ. ப. ராம. நாகலிங்கம்பிள்ளை | 5 |
| (16) | சிவநேயர் | 20 |

---

## குறிப்பு விளக்கம்.

தே - குருபரம்பரை=தென்கலைக் குருபரம்பரை. (ஆறாயிரப்படி)
வ - குருபரம்பரை=வடகலைக்குருபரம்பரை. (மூவாயிரப்படி)
ய - ப்ரபாவம்=யதீந்த்ரப்ரணவப்ரபாவம். (மணவாளமுனிசரிதை)
ப=பக்கம்.

## அநேகச்ருதி ஸ்ம்ருதி புராணேதிஹாஸமுதலிய பிரமாணங்களோடு விளங்காநின்ற இவ்வரியபெரியநூலிலெடுத்துக் காட்டப்பட்ட மேற்கோட்பனுவல்களாவன:—

### வேதப்பகுதிகள்.

௧. ருக்வேதத்து அ-வது மண்டலம்.
௨. ருக்வேத ஸம்ஹிதா.
௩. யஜுர்வேதம்.
௪. ஸ்ரீருத்ரநமகம்.
௫. சதருத்ரீயம்.
௬. புருஷஸூக்தம்.
௭. சதபதப்ராஹ்மணம். (ஆங்கில மொழி)
௮. தைத்திரீயாருணசாகை நாராயணம்.
௯. சாமவேதம்.
௧௦. சாமவேதப்ராஹ்மணம்.

### நூற்றெட்டுபநிஷத்க் கோவையிலுள்ள உபநிஷதங்கள்.

௧. அக்ஷமாலிகை.
௨. அதர்வசிகை.
௩. அதர்வசிரம்.
௪. அத்வயதாரகம்.
௫. அந்நபூர்ணா.
௬. அம்ருதநாதம்.
௭. ஆத்மபோதம்.
௮. ஈசாவாஸ்யம்.
௯. ஐதரேயம்.
௧௦. கடவல்லி.
௧௧. காலாக்நிருத்ரம்.
௧௨. கிருஷ்ணம்.
௧௩. கேநம், (தலவகாரம்).
௧௪. கைவல்யம்.
௧௫. கௌஷீதகிப்ராஹ்மணம்.
௧௬. சரபம்.
௧௭. சாண்டில்யம்.
௧௮. சாந்தோக்யம்.
௧௯. சாரீரகம்.
௨௦. சுகரஹஸ்யம்.
௨௧. சுவேதாச்வதரம்.
௨௨. ஜாபாலம்.
௨௩. ஜாபாலி.
௨௪. ஸந்நியாஸம்.
௨௫. ஸுபாலம்.
௨௬. ஸூர்யம்.
௨௭. ஸௌபாக்யலக்ஷ்மீ.
௨௮. ஸ்கந்தம்.
௨௯. தக்ஷிணாமூர்த்தி.
௩௦. தர்சநம்.
௩௧. தியாநபிந்து.
௩௨. திரிபுராதாபிநி.
௩௩. துரீயாதீதாவதூதம்.
௩௪. தேஜோபிந்து.
௩௫. தேவீ.
௩௬. தைத்திரீயம்.
௩௭. நாதபிந்து.
௩௮. நாரதபரிவ்ராஜம்.
௩௯. நாராயணம்.
௪௦. நிராலம்பம்.
௪௧. நிருஸிஹ்மதாபிநி.
௪௨. நிர்வாணம்.
௪௩. பஞ்சப்ரஹ்மம்.
௪௪. பஸ்மஜாபாலம்.

# மேற்கோட்பனுவல்கள்.

௪௫. பரப்ரஹ்மம்.
௪௬. பஹ்வ்ருசோபநிஷத்.
௪௭. பாசுபதப்ரஹ்மம்.
௪௮. பிரச்நம்
௪௯. பிரஹ்மம்.
௫0. பிரஹ்மவித்யை.
௫௧. பிருஹஜ்ஜாபாலம்.
௫௨. பிருஹதாரண்யகம.
௫௩. பைங்களம்.
௫௪. மண்டலப்ராஹ்மணம்.
௫௫. மஹாநாராயணம்
௫௬. மஹோபநிஷத்.
௫௭. மாண்டூக்யம்.
௫௮. முக்திகம்.
௫௯. முண்டகம்.
௬0. மைத்ராயணி.
௬௧. மைத்ரேயம்.
௬௨. யோகசிகை.
௬௩. யோகசூடாமணி.
௬௪. யோகதத்வம்.
௬௫. ராமதாபிநி.
௬௬ ராமரஹஸ்யம்.
௬௭. ருத்ரஹ்ருதயம்.
௬௮. ருத்ராக்ஷஜாபாலம.
௬௯. வராஹம்.
௭0. வாஸுதேவம்.

---

௧. பிரசண்டோபநிஷத்.

---

## ஸ்ம்ருதி புராணேதிஹாஸம் முதலியன.

௧. விஷ்ணுஸ்ம்ருதி.
௨. சாதாதபஸ்ம்ருதி.
௩. கௌதமதர்மசாஸ்த்ரம்.
௪. பராசரஸ்ம்ருதி.
௫. மநுஸ்ம்ருதி.
௬. பிருஹந்நாரதீயம்.
௭. கூர்மபுராணம்.
௮. ,,—தமிழ்.
௯. மஹாஸ்காந்தபுராணம்.
௧0. ,, காளிகாகண்டம்.
௧௧. ,, ஸூதகீதை.
௧௨. ,, ஸூதஸம்ஹிதை.
௧௩. ,, சூதசங்கிதை - தமிழ்.
௧௪. ,, கந்தபுராணம.
௧௫. ,, காளிகாகண்டத்துக் காஞ்சிப்புராணம்.
௧௬. ,, மதுரைத் திருவிளையாடற் புராணம்.
௧௭. ,, காசிகாண்டம்.
௧௮. சைவபுராணம்.
௧௯. ,, வாயுஸம்ஹிதை.
௨0. ,, வாயுசங்கிதை - தமிழ்.
௨௧ ஸௌரபுராணம்
௨௨. வஹ்நிபுராணம்.
௨௩. மார்க்கண்டேயபுராணம்.
௨௪. பாத்மபுராணம் - சிவகீதை.
௨௫. இலிங்கபுராணம.
௨௬. பராசரபுராணம்.
௨௭. மாநவபுராணம்.
௨௮. வசவபுராணம்.
௨௯. மஹாபாரதம்.
௩0. வில்லிபுத்தூராழ்வார் பாரதம் (ஆறுமுகநாவலரவர்களது வித்தியாநுபாலன அச்சுக்கூடத்திலும், வேறுசில அச்சுக்கூடங்களிலும் பதிக்கப்பட்டுள்ளது).
௩௧. சிவரகசியம் ௩ - ம அமிசம்.
௩௨. காமிகாகமம்.
௩௩. பராக்கியை.
௩௪. சிவதருமோத்தரம்.
௩௫. சிவபுண்ணியத்தெளிவு.
௩௬. சிவபோகசாரம்.
௩௭. சித்தாந்தசிகாமணி.

௩௮. திருஞானசம்பந்தசுவாமிகள்தேவாரம்.

௩௯. திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்.

௪௰. ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரம்.

௪௧. ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள் திருவாசகம்.

௪௨. திருமந்திரம்-திருமூலநாயனார்.

௪௩. சிவஞானசித்தியார்.

௪௪. சிவப்பிரகாசம்.
௪௫. நெஞ்சுவிடுதூது.
௪௬. சங்கற்பநிராகரணம்.
} ஸ்ரீஉமாபதி சிவாசாரியர்.

௪௭. பிரஹ்மஸூத்ரம.

௪௮. நீலகண்டபாஷ்யம்.

௪௯. போதாயந க்ருஹ்யஸூத்ரம்.

௫௰. புருடசூக்தபாஷியம்.

௫௧. மாதவியவுரை.

௫௨. மஹாவாக்ய ரத்நாவளி.

௫௩. திருப்புகழ்.
௫௪. கந்தரலங்காரம்.
௫௫. கந்தரநுபூதி.
} ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள்.

௫௬. ஸௌந்தரியலகரி.

௫௭. ,, —தமிழ்.

௫௮. குறள் — திருவள்ளுவர்.

௫௯. நல்வழி.

௬௰. இரட்டையர் தைவீகவுலா.

௬௧. காளமேகப்புலவர்பாடல்.

௬௨. தாயுமானசுவாமிகள்பாடல்.

௬௩. மதுரைக்காஞ்சி.

௬௪. சிறுபாணாற்றுப்படை.

௬௫. நச்சினார்க்கினியருரை.

௬௬. சங்கராசாரியர் சரித்ரம்.

௬௭. மத்வசித்தாந்தோங்காகினி ஸபா சரித்ரம்.

௬௮. ஜீவயாதனவியாசம்.

௬௯. திருவலங்கற்றிரட்டு.

௭௰. காசியாத்திரை.

௭௧. நாலாயிரப்பிரபந்தவிசாரம்.

௭௨. சதுரகராதி.

## நிகண்டுகள்.

௭௩. அமரஸிம்ஹம்.

௭௪. டீகா அமரம்.

௭௫. லிங்காபட்டீயம்.

௭௬. நாநார்த்த ரத்நமாலா. [ண்டு.

௭௭. பிங்கலந்தையெனும் பிங்கல நிக

௭௮. சூடாமணிநிகண்டு - மண்டலபுருடன்.

௭௯. சேந்தன் திவாகரம்.

## பத்திரிகைகள்.

௧. விவேகபாநுவெனும் பத்திரிகை.

௨. பிரஹ்மவித்யாவெனும் பத்திரிகை.

௩. மதுரைச்செந்தமிழ்ப்பத்திரிகை.

௪. உபந்நியாஸமெனுந் துண்டுப்பத்திரிகை.

## வைணவச்சுவடிகளும், வைணவர்பிரசுரித்த புத்தகங்களும்.

௧. நாலாயிரப்பிரபந்தம்—வியாக்கியானங்கட்கிணங்கச் சித்திரகூடம் கந்தாடை - திருவேங்கடாசாரியரைக்கொண்டு பரிசோதிப்பித்த முதலாயிரமும், இயற்பாவும், வியாக்கியானங்கட்கிணையப் பரிசோதிக்கப்பட்ட பெரிய திருமொழியும், திருவாய்மொழியும் சென்னை : ஊ-புஷ்பரதசெட்டியாரால் கலாரத்நாகர அச்சுக்கூடத்தில் ௧௮௭௬ - ம் வருஷத்திலும் ௧௮௮௫ - ம் வருஷத்திலுமாகப் பதிப்பிக்கப்பட்டு ஒன்றாகக்கட்டப்பட்டது 1. புர

சப்பாக்கம் ஏழுமலைப் பிள்ளையின் விவேகவிளக்க அச்சுக்கூடத்தில் 1883 - ம் வருஷத்திற் பதிக்கப் பட்டது 1. கொண்ணூர் மாணிக்கமுதலியாரது மநோன்மணிவிலாச அச்சுக்கூடத்தில் ஸ்ரீமுக ௵ ஆவணிமீ பதிக்கப்பட்டது 1.

௨. ஆறாயிரப்படி - தென்கலைக் குருபரம்பரை—சித்ரகூடம் கந்தாடை - திருவேங்கடாசார்யராற் பரிசோதிக்கப்பட்டுச் சென்னை: மிமோரியல் அச்சுக்கூடத்தில் ௨௩௩ - பக்கங்களில் 1892 - ம் ௵ பதிக்கப்பட்டது. இயற்றினவர்—பின் பழகிய பெருமாள் ஜீயர்.

௩. மூவாயிரப்படி - வடகலைக் குருபரம்பரை—பெருமாள் கோவில் உ. வே. வித்வான் கிடாம்பி-ரங்காசார்யரென்பாராற் பரிசோதிக்கப்பட்டுக் குணுக்கரம்பாக்கம் – அநந்தாசார்யராற் சென்னைக் கலாரத்நாகர அச்சுக்கூடத்தில் ௧௫௬ - பக்கங்களிற் கலியுகம் ௪௯௯௰ - ம் ௵ பதிப்பிக்கப்பட்டது. இயற்றினவர்—த்ருதீய ப்ரம்ஹ தந்த்ர ஸ்வதந்த்ரர்.

௪. யதீந்த்ரப்ரணவப்ரபாவம்—பிள்ளை லோகார்ய ஜீயரென்பாராலியற்றப்பட்ட தென்கலை வைணவச்சுவடியாகிய இது—சித்ரகூடம் கந்தாடை - திருவேங்கடாசார்யராற் பரிசோதிக்கப்பட்டுச் சென்னை: மிமோரியல் அச்சுக்கூடத்தில் ௩௩௪ - பக்கங்களில் 1891-ம் ௵ உ-ம் பதிப்பாகப் பதிக்கப்பட்டது.

௫. ஆழ்வாராசாரியர்கள் வைபவம் — தென்கலை வைணவச்சுவடியாகிய இது—திருமலை - ஸ்ரீநிவாச தாதாசாரியராலும், சே. முத்து கிருஷ்ண நாயுடென்பாராலும் பரிசோதிக்கப்பட்டு, பத்தி - ரா. வேங்கட கிருஷ்ணசாமிநாயுடென்பாராற் சென்னை : ஸ்ரீ நிகேதந முத்ராக்ஷர சாலையில் ௨௪0 - பக்கங்களில் 1902 - ம் ௵ பதிப்பிக்கப்பட்டது.

௬. தென்னாசாரியப்பிரபாவம் — தென்கலை வைணவச்சுவடியாகிய இது—அட்டவணை எ - பக்கமும் மற்றவிடயம் ௧௨எ - பக்கமுமாக அச்சிற் பதிக்கப்பட்டது. இயற்றினவர் யாவரென்பதைத் தென்னாசாரியப்பிரபாவ கண்டன அவதாரிகையிற் காணலாம்.

எ. தென்னாசாரியப்பிரபாவகண்டனம்—வடகலை வைணவச்சுவடியாகிய இது—பா. சடகோபாசாரியராற் பார்வையிடப்பட்டு அ. இராமசுவாமி வாத்தியாரால் மெய்ஞ்ஞானவிளக்க அச்சுக்கூடத்தில் அட்டவணை அ - பக்கமும், மற்றவிடயம் ௨0௬ - பக்கமுமாக விரோதிகிருது ௵ மாசி மீ பதிப்பிக்கப்பட்டது.

அ. விஷ்ணுதத்வவிளக்கம்— வரயோகி ராமாநுஜதாசரென்பாராலியற்றப்பட்ட தென்கலை வைணவச்சுவடியாகிய இது—சே

ஷாத்ரி ஐயராலும், சென்னை : நார்மல்ஸ்கூல் தமிழ்த்தலைமைப் புலவர் கோமளபுரம் — இராஜகோபாலபிள்ளை யென்பாராலும் பார்வையிடப்பட்டு, ஸ்ரீயோகவாஹன ஆழ்வார்சபையாராற் கலாநிதிஅச்சுக்கூடத்தில் ௧௫௨- பக்கங்களில் 1872 - ம் ௵ பதிப்பிக்கப்பட்டு ரிஜிஸ்தருஞ் செய்யப்பட்டதாகவுளது.

௯. **உடையவர்சூர்ணவிளக்கம்**— தென்கலை வைணவச்சுவடியாகிய இது—புதுவை : ஏ. வே. இராமாநுஜரென்பாரா லியற்றப்பட்டு, சென்னை : ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்திற் சாத்துகவி ௧௫ - பக்கமும், மற்றவிடயம் ௧௦௬ - பக்கமுமாகக் கலி - ௪௯௮௭-ற்பதிக்கப்பட்டது.

௧௦. **ஆசார்யஹ்ருதயம்** — அழகிய மணவாளப்பெருமாளென்பாரா லியற்றப்பட்டதென்கலைவைணவச்சுவடியாகிய இது—செஞ்சி- இல்வீடு அரங்கசாமி முதலியாராலும், செ. இ. திருவேங்கட முதலியாராலுங் கார்டியன் அச்சுக்கூடத்தில் அவதாரிகை ௪ - பக்கமும், மற்றவை ௪௨ - பக்கமுமாக 1895 - ம் ௵ பதிப்பிக்கப்பட்டது.

௧௧. **திருஅல்லிக்கேணி மஹாத்மிய சங்கிரகம்**—ஸ்ரீ வில்லிபுத்தூர் வடகரை உபய - அழகமலை ஐயங்காரால் நிறைவேற்றி முடிபுல - இளையபெருமாள்நாயுடென்பாரால் ஸ்ரீநிலய அச்சுக்கூடத்திற் ௧௮ - பக்கங்களிற் பிரமாதி ௵ பதிப்பிக்கப்பட்டது.

௧௨. **பிரமசூத்திரத் திராவிடபாஷியம்** — தர்க்கதீர்த்தரான வித்வான், சிங்கப்பெருமாள்கோவில் மாடபூசி ராமாநுஜாசார்யரால் வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு, சிதாராமசாஸ்திரியாராற் பரிசோதிக்கப்பட்டு, அ. அநந்தாசார்யராற் சென்னை : சாஸ்திர சஞ்சீவிநி அச்சுக்கூடத்தில் 1905 - ம்௵ பதிக்கப்பட்டு ரிஜிஸ்தருஞ் செய்யப்பட்டதாகவுளது.

௧௩. **கூரேசவிஜயம்** — திருவஹீந்திரபுரம் வீரராகவாசாரியராற் பரிசோதிக்கப்பட்டு மை. ராமாநுஜாசாரியரது ராமப்ரசந்நோதய அச்சுக்கூடத்தில் ௩௮௨ - பக்கங்களிற் கர ௵ சைத்ரமீ பதிக்கப்பட்டது.

௧௪. **பாஷண்டமத சபேடிகை**— க. நாராயணஸ்வாமிநாயுடென்பாரா லியற்றப்பட்டுச் சென்னைச்செங்கல்வராய செட்டியாரது ஸ்ரீநிலய முத்ராக்ஷரசாலையிற் பராங்குசர் அவதார ௵ ௪௯௮௧ - என்பதில் அச்சிடப்பட்டதாகவுளது.

௧௫. **விஷ்ணுபுராணம்** —திருவல்லிக்கேணி - திருமலை ஈச்சம்பாடி ஸ்ரீநிவாசராகவாசாரியரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு, ஔ - புஷ்பரத செட்டியாராற் கலாரத்நாகர அச்சுக்கூடத்தில் ௪௯௮ - பக்கங்களிற் பார்த்திவ ௵ தைமீ பதிப்பிக்கப்பட்டது.

௧௬. **வைணவபாகவதம்**— புலியூர் இராமநுஜபிள்ளை மணிப்பிர

வாளமாக மொழிபெயர்த்த தசமஸ்கந்தமும், கோமளபுரம் வேஞு கோபாலாசாரியர் சம்ஸ்க்ருதத்திற் கிணங்கப் பரிசோதித்த மற்ற ஸ்கந்தங்களும் ஒன்றுகச் சூளை - எதிராஜமுதலியாரது பிரின்ஸ்ஆவ் வேல்ஸ் அச்சுக்கூடத்தில் 1891 - ம் ௵ பதிக்கப்பட்டது.

௧௭. ,, பாகவதம்—வடமொழி.

௧௮ பகவத்கீதை—வடமொழி.

௧௯. இராமாநுஜபகவத்கீதாபாஷ்யம்.

௨௦. இராமாநுஜ தசோபநிஷத்பாஷ்யம்.

௨௧. லக்ஷ்மீ தந்த்ரம்.

௨௨. வான்மீகராமாயணம்.

௨௩. கம்பராமாயணம்.

௨௪. இருசமயவிளக்கமெனுஞ்சுவடி. ஆ- ௧௮௮.

**ஆங்கிலநூல்கள்.**

1. இண்டியன் ரிவியூ எனும்பத்திரிகை.
2. இந்துப்பத்திரிகை.
3. லிபெரல் எனும் பத்திரிகை.
4. தென்னுறுகாடு - கெஜட்டியர்.
5. இந்தியாவின் இராஜாங்கத்துக் கெஜட்டியர்.
6. மதச் சீர்திருத்தம்.
7. பூர்வீக இந்தியா. - ரோமேஷ் சண்டர் டட்.
8. ராஜஸ்தானம். - கர்னல் ஜேம்ஸ் டாட்.
9. பாரத முகவுரை. - எப். மாக்ஸ் முல்லர்.
10. சுவாமி விவேகாநந்தர் புத்தக முகவுரை.

---

## அத்தியாய அட்டவணை.

# அத்தியாய அட்டவணை.



அத்தியாய அட்டவணை முற்றிற்று.

உ

சிவமயம்.

குமாரகுருப்யோ நமஃ

# முன்னுரை.



(சிவாத்பரதாம்நாஸ்தி.)

அதர்வணவேத மாண்டூக்யோபநிஷதம்— "அமாத்ரச் சது ர்த்தோவ்யவஹார்ய: ப்ரபஞ்சோபசமச் சிவோத்வைத ஏவ மோங்கார:" என்று கூறுமாறு அளவிலாதவராய், வாக்கு வியவ ஹாரத்திற்கு எட்டாதவராய், பிரபஞ்சோபசாந்தராய், அத்வைத ராய், (பிரமன் விஷ்ணு உருத்திரனெனும் மூவர்க்கும் மேலாய) நான்காவது தெய்வமாய், ஓங்காரப் பொருளாயுள்ள சிவபெரு மானே சைவஸமய தெய்வமென்பதை யறிந்துய்யும் பரமபாக்கிய மில்லாத வைணவர்—விட்டுணுவையும், ஆழ்வார்களையும், பூதூர்-இராமாநுஜன் முதலியோரையும் பெரிதும் புகழ்ந்தெழுதலான வைஷ்ணவ குருபரம்பரைமுதலிய சுவடிகளில், அநந்தச்ருதி படித மான விபூதி ருத்ராக்ஷங்களையும், சிவபெருமானையும், சிவசக்தியை யும், சிவகுமாரனையும், திருஞானசம்பந்தர்முதலிய திருவருட்பெ ருஞ்செல்வ சைவாசாரியர்களையும், சைவாகமாதிகளையும் பெரிது மிகழுமிடங்களில் ஆழ்வார்க்குஞ் சிவன் கீழானவனென்பது மரி யாதையில்லாச் சில வசனங்களோடும் வரையப்பட்டுளது. அங்ங னமே சிவனுக்கு அசுத்தங்கற்பித்துச் சிவவழிபாடு செய்யொணா தென்பது மெழுதப்பட்டுளது. விவரம்:— இந்நூலின் ௫௧, ௬௦, ௭௦, ௭௧-ம் பக்கங்களிற் காணலாம். இவற்றினையே வைஷ்ணவா சாரியரென்பார்— சைவரைப்போலத் திருநீறிட்டுக்கொண்டிருப் பார்க்கும், பிற மந்த மதியர்க்கும் பன்முறை போதித்து அன்னோ ரைப் பாஷண்ட வைஷ்ணவராக்கிக்கொண்டு வருதலைக் கண்ணுற் றுப் பரிதாபமடைந்த யாம்— கருககுழ்நாற்றங் கமழப் பிறவா இறவாக் கண்ணுதற் பெருமானாஞ் சிவனொருவனே பரத்துவ வஸ்து, சிவசின்ன விபூதி ருத்ராக்ஷதாரணமே வேதோக்தம், இவற்றோடுங்கூடிய சைவச் செந்நெறியே மேம்பட்டதோர் முத்தி மார்க்கம், வெண் மண்ணும் மஞ்சட் பொடியுங் கொண்டு சித்தி ரோர்த்துவ புண்டரந் தீட்டித் திரிவாரது வைணவம் கல்பனா கௌரவ புறச்சமயமே யென்பதைப் பிரகாசப்படுத்துமாற்றாற்

புண்டரகாண்டம், இதோபதேசகாண்டம், ஆசாரியவிசாரகாண்டம், கைவல்லியகாண்டமெனு நான்கு பகுதியாய், ௬௫ - அத்தியாயங்களாய் மிளிரும் இந்தச் சைவசமயசரபத்தை ஆறுமுகச்சிவனது திருவருட்டுணைகொண்டு செய்யலுற்றனம். இதனிற் போந்த நியாயங்கள் வேதத்தானும், வேதாந்தமாகிய உபநிடதங்களானும், பிற பிரமாணங்களானும், வைணவருடைய குருபரம்பரை ஆழ்வார் செய்புண்முதலிய சுவடிகளானும் நிலையுறுதலின் இந்நூல்— வைஷ்ணவகண்டன வஜ்ரகுடாரமெனவும் பிரகாசிக்கத் தக்கதே. போந்த ௫௬ - ம் பக்கத் தெடுத்துக்காட்டுகளில்—திருமழிசையாழ்வானைச் சுட்டுகையில் மரியாதைப்பன்மை பொருந்தப் பன்முறை "இவரும்" "இவரும்" என்றும், பரமசிவனைச் சுட்டுகையில் அப்பன்மை யின்மையாகப் பன்முறை "அவனும்" "அவனும" என்றும், திருமங்கையாழ்வானைக் குறிக்கையில் "ஆழ்வாரை" என்றும், "இவரும்" என்றும, திருஞானசம்பந்தசுவாமிகளைக் குறிக்கையில் "சம்பந்தன்" என்றும, "அவனும்" எனறும வைணவர் வரைந்துவைத்த காரியம் நியாயம அன்றென நாலாயிரப்பிரபந்தவிசாரத்தில் யாம் விளக்கியதை நோக்கிய வைணவர்— தமதாசிரிய ராற்றலுக்கேற்ப வரைபலுற்ற அது நியாயமேயெனப் புகறல் இஞ்ஞான்று வெளிப்பட்டதனால், சிவனடியவ ராற்றலுக்கேற்ப வைணவர்வழிபடுகடவுளையும், அவராசிரியர்களையுங் குறிக்கையில் அப்பன்மை யின்மையாக இந்நூற்கண்ணே● தெரித்தல் எமக்குங் கடன்மையே யாயிற்று.

(𑌨 𑌸𑌾 𑌸𑌭𑌾 𑌯𑌤𑍍𑌰 𑌨 𑌸𑌨𑍍𑌤𑌿 𑌵𑍃𑌦𑍍𑌧𑌾 𑌵𑍃𑌦𑍍𑌧𑌾 𑌨 𑌤𑍇 𑌯𑍇 𑌨 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌧𑌰𑍍𑌮𑌮𑍍 ।
𑌨𑌾𑌸𑍌 𑌧𑌰𑍍𑌮𑍋 𑌯𑌤𑍍𑌰 𑌨 𑌸𑌤𑍍𑌯𑌮𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌤𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑌂 𑌯𑌚𑍍𑌛𑌲𑍇𑌨𑌾𑌨𑍁𑌵𑌿𑌦𑍍𑌧𑌮𑍍 ॥)

"நஸாஸபாயத்ர நஸந்தி வ்ருத்தா வ்ருத்தா நதேயே நவதந்தி தர்மம் |
நாஸௌ தர்மோ யத்ர நஸத்யமஸ்தி நதத்ஸத்யம் யச்சலேநாநுவித்தம் ||"

"எந்தச் சபையிற் பெரியோர்களில்லையோ அது சபையன்று: தருமத்தைச் சொல்லாதவர் பெரியோரல்லர்: எங்ஙனம் சத்தியமில்லையோ அது தருமமன்று: எச் சத்தியம கபடத்தோடுசேர்ந்ததோ அது சத்தியமன்று." என மஹாபாரத ஸபாபர்வத்திற் சொல்லப்பட்ட நியாயத்தையும, இந்நூலின் எக, எ௨, எ௩, எ௪ - ம் பக்கங்களிற் காட்டலுற்ற பிரமாணங்களிலுள்ள நியாயத்தையுங் கண்ணுற்ற வெமக்கு இந்நூலைச் செய்தலும் அவசிய கருமங்களிலொன்றாயிற்று. ஆறவறப்புக்க திருவாதவூரடிகள் பௌத்தத்

தைக் கண்டித்ததூஉம், மாமுனிவர் பலர் உபநிடதாதி வாயிலாகச் சமயத்தாபனஞ் செய்திருப்பதூஉம் இந் நியாயமேயாம்.

இந்நூலின் உ௬௬-ம் பக்கத்திற் காட்டலுற்ற "ஓரேனந் தனைத்தேட" என்றற் றொடக்கத்துச்செய்யுள் நவீன வைணவர் கொள்கைக்கு விரோதமாதல் கண்டு அஃதவர்களா லெடுத்துவிடப் பட்டதென்பதை, சைவத்வேஷியா யிருந்த கோ-இராஜகோபால பிள்ளையென்பார் வித்யாகளாநிதி அச்சுக்கூடத்தில், துன்மதிஹு மார்கழிமீ பதிப்பித்த பிரதி காட்டுதலானும்; இன்னும் அப் புத்தகத்திலும் கம்பராமாயணத்திலும் வைஷ்ணவசாதக மாகாதவற்றை யொழித்தும், மாற்றியும், ஏற்றியும் பதிப்பித்தமை உலகறிந்த விடயமாதலானும்; சைவ விரோதிகளாற் சைவசாதகமாயிருந்த சுலோகங்களை யெடுத்துவிட்டு மநுஸ்மிருதி அச்சிடப்பட்டதென லறியப்படுதலானும்; இனையசெய்கை வைணவர்க்குண்டென்பதை வைணவச்சுவடிகளே காட்டுமென்பது இந்நூலின "வைணவர் கற்பனை மறுப்பு" எனும் அத்தியாயத்தும், அது கடந்துவருஉம் உ௬-ம் பக்கத்தும், ௩உ௬-ம் பக்கத்தும் வெளிப்படுதலானும்; இந்நூலின் இறுதிக்கட் சேர்க்கப்பட்ட ஆங்கிலமொழிகளிற் பலவும் அச் செய்கையை விளக்குதலானும் இச் சைவசமயசரபத்தை நோக்கும் வைணவர் இதனி லெடுத்துக்காட்டப்பட்ட புத்தகங்களிலும் மாற்றுதல் முதலியன செய்தல் கூடுமாகலின் வைதிக சைவாபிமானிகளா யுள்ளோர் தங்கள் நறுநூல்களை நறும்பெட்டியில் இரீஇ நன்கு பேணிக்கோடல்போல வைணவச் சுவடிகளையும் ஒருமூலையிற் கிடத்திப் பேணிக்கோடல் பெருங்கடன்மையேயாம். அக் கம்பராமாயணத்து மந்தரை சூழ்ச்சிப்படலத்தில்—

> "கரிய மாலினுங் கண்ணுத லானினு
> முரிய தாமரை மேலுறை வானினும்
> விரியும் பூதமோ ரைந்தினு மெய்யினும்
> பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால்."

* எனுஞ் செய்யுளிற் 'கரியமாலிற்கும் அந்தணர் பெரியர்' என்று தசரதமஹாராஜன் இராமனுக்குச் செவியறிவுறுத்த செய்தி காணப்படுதலானே அவ் விராமாயணந்தான் வைணவச் சுவடியாதல் யாண்டையதென்ப நட்பமோர்ந்தார். கூறிப்போந்தவா றெடுத்துவிடப்பட்டதாய் இந்நூலின் உ௫0-ம் பக்கத்திற் பிரமாணிக்கப்பட்டதாயுள்ள மநுஸ்ம்ருதி ச்லோகம் S. M. நடேசசாஸ்திரியார், B. A., M. F. L. S. எனும் பண்டிதரா லியற்றப்பட்டு 1903-ம் ஹு 154-பக்கங்களாகச் சென்னையிற்பதிப்பிக்கப்பட்ட இந்துக்களின்விரதங்களெனும் ஆங்கிலமொழிப் புத்தகத்தின் 110-ம் பக்கத்திற் பிரமாணிக்கப்பட்டுமுளது. இச்சுலோகத்தின் பொருள்:—

" அந்தணர்க் காதி யீச னேனையோர்க் கரியே வேதா
விந்திர னென்று வேத மியம்பிய மறையோர் தங்கண்
முந்தையின் முதலை நீத்து முறையகன் றொழுகல் பெற்ற
தந்தையை விலக்கி வேறு தேடுவான் றன்மை யன்றே."

எனுங் கந்தபுராணத்துத் ததீசிப்படலத்துத் திருவிருத்தத்தி னும் பெறப்படுதல் காண்க. வைணவம்— இழிகுலத்தவரானுங் காமோற்சவப் பிரியர்களானும் இனிது கொண்டாடப்படுவதாமெ ன்பதையும், வைணவருள் இழிகுலத்தினர் உயர்குலத்தினரென வுளரென்பதையும், சைவம் மாறுநீர்த்தென்பதையும், ராமராஜ்யம் சைவமாகவே யிருந்ததென்பதையும் இந்நூலினீற்றிற் சேர்க்கப் பட்ட ரோமேஷ் சண்டர் டட் என்பாரது பூர்வீகஇந்தியாவெனும் புத்தகமும், லிபேரலெனும் பத்திரிகையும், இந்தியாவின் இராஜாங் கத்துக் கேஜட்டியரெனும் புத்தகமும், கர்னல் ஜேம்ஸ் டாட் என் பாரது ராஜஸ்தானமெனும் புத்தகமும் தீர்மானவாயிலாகவும் அபிப் பிராயவாயிலாகவும் விளக்குதலானே உயர்குலத்தவரும், உயர் நெறி விருப்பரும் வைணவத்திற் புகாதிருக்குங் கடன்மையரேயா வர். பிற ஆங்கிலமொழிவாயிலாகவுஞ் சைவத்தின் மேம்பாடுணரக் கிடக்கின்றது.

வேதமுதலிய பிரபலநூல்கள் வெளிப்பட்ட காலந்தொடங் கிச் சைவசமயமாகவே யிருந்த இப்பரதகண்டத்திற் பல்வேறு வகைப்பட்ட நூதனசமயிகள் பிரவேசித்து நாளிடையில் தத்தம் மதபோதகங்களைச் செய்தவழி அனேகர் அவ்வம்மதஸ்தராயிருத் தல் கண்கூடாகலின், இஞ்ஞான்று வைதிகசைவசமய விருத்திக் கும் அவ்விதபோதகம் வேண்டற்பாற்றே. பரமதகண்டனமுஞ் சுவமதத்தாபனமுமாம் அப்போதகத்திற்கு ஏற்புடைப்பெருநூல் இந்நூலாகலின் இதனைப் பன்முறைபோதிக்கும் புண்ணியத்தைச் சைவசமய வித்துவான்களே யெய்தற்பாலர். போதகம் சமயவிரு த்திக்கு முக்கிய ஏதுவென்பது, மண்ணிட்டு மண்ணுக விருந்த சில ரை நீறிட்டு நீடுய்யுமாறு செய்த வெமது போதகத்தானுங் காட்சி யளவையாயிற்று.

வடமொழிகளின் றொடக்கத்து மெய்யெழுத்துக்கள்— தமிழ் வழக் கிற் கியைய உயிர்மெய்யெழுத்துக்களாக இந்நூற்கண் வரையப்பட்டன.

சிவார்ப்பணமஸ்து.

---

உ

சிவமயம்.

குமாரகுருப்யோநம ꞉

திருச்சிற்றம்பலம்.

# சைவசமயசரபம்.

## புண்டரகாண்டம்.

---

### கடவுள்வணக்கம்.

கலிநிலைத்துறை.

*தன்னத்தா தன்னத்தா தனதன தனதன தன்னத்தா.*

பொன்னைத்தா மண்ணைத்தா புதுமல ரணியணி பெண்ணைச்சேர்
கொன்னைத்தா தென்னைத்தா குருபர வெனலறு முன்னத்தோ
டென்னைத்தா நின்னைத்தா வெனுமறி வணைகச கன்னத்தே
வன்னைக்கோர் நன்னர்ச்சே யடிகளை நினைகுது மன்னுற்றே.

*தனதத்தா தனதத்தா தனதன தனதன தனதத்தா.*

கமலத்தா ளிணையைத்தே டவுமரி யெழிலுறு கமலத்தான்
விமலத்தார் முடியைத்தே டவுநிமி ரரன்மகன் விறலைப்பா
டமலத்தா னருணைப்பேர் முனிவர னருணெறி யதனைப்பே
ணிமலத்தாள் வினைமிக்கா ரடிநனி நினைகுது நிலையுற்றே.

நூல்.

### க. பாஞ்சராத்திரம் பிரமாணமன்று.

---

பிரமசூத்திரத்தில் (உத்பத்த்யஸம்பவாத்) "உத்பத்த்யஸம்பவாத்" எனவுள்ள சூத்திரத்திற்கு, பூதூர் - இராமாநுஜனேன்பான் "(ஜீவனுக்கு) உத்பத்தி ஸம்பவியாமையாலே, (ஜீவோத்பத்தி சொல்கிற பாஞ்சராத்திரம் பிரமாணமாகமாட்டாது)" என்று பிரதிபதமும், "பாஞ்சராத்ரத்திலுஞ் சிலவேதவிருத்தார்த்தங்கள் பிரதி பாதிக்கப்படுகின்றன. அவையாவன:—வாஸுதேவாத் ஸங்கர்ஷணோ நாம ஜீவோஜாயதே (வாஸுதேவாத் ஸங்கர்ஷணோநாம ஜீவோஜாயத)

என்று ஸங்கர்ஷணனென்கிற ஜீவனுண்டாகிறானென்று சொல்லி ற்று. இது நஜாயதெ ம்ரியதெ (நஜாயதேம்ரியதே) என்று ஜீவனு க்கு உத்பத்தி விநாசங்களில்லையெனும் வேதத்தோடு விரோதிக்கின் றது. மேலும் நாலுவேதங்களிலும் பரமபுருஷார்த்த மின்ன தென்று அகப்படாமல் பின்பு இப்பாஞ்சராத்ரத்தைக் கற்றானெ ன்று வேதத்தை அநாதரித்துச்சொல்லிற்று. ஆகையால் இவ்வாக மமும் அப்ரமாணமென்று பூர்வபக்ஷம்."

என்று விரியுரையுமெழுதியிருக்கின்றனன். இதனை வைணவர் வெளியிட்ட பிரமசூத்திரத்திராவிடபாஷிய மெனும் புத்தகத்திற் காண்க. வைணவப் பிரதானாசாரியனே இப்படி யொப்புக்கோட லால் நூற்றெட்டுச் சங்கிதையுள்ளதெனும் பாஞ்சராத்திர மெவ் வாற்றானும் பிரமாணமாவதில்லை. வேதத்தை அப்பிரமாணப்படுத் தும் இப்பாஞ்சராத்திரத்தை இராமாநுஜன் இப்படித்தள்ளாது கொள்வனேல், அவனதுபாடியமும் அப்பிரமாணமாய்விடு மென்ப தறிக. ஸ்ரீ சைவபாஷிய நீலகண்டசிவாசாரியரும் மேலைச்சூத்திரார் த்தத்திற் பாஞ்சராத்திரம் பிரமாணமாகாதென்பதே இதன்பொரு ளெனத் தீர்த்துவிட்டனர். புராணரத்நமாகிய மஹாஸ்காந்தாந்தர்க் கத சூதசங்கிதை மோசகனையுரைத்த வத்தியாயம்—

"மறைமூ லகமா காதலின் மருவு பாஞ்ச ராத்திர நூற்
றுறைபோ மவர்கள் யாரேனுந் தொலையாப் பாவத் துறைசென்றோர்
கறையார் மலின சித்தரே கைக்கொள் வார்க ளந்நூலை
யறைகோ டிகற்ப மாயிடினு மன்னோர் முத்தி யடைவரிதே."

என்றும், ஞானோற்பத்தியில்லாமைக் கேதுநவின்ற வத்தியா யம்—"பாமர ரேகொளும் பாஞ்ச ராத்திரம்" என்றும், புராணம் கஅ-ல் ஒன்றான கூர்மபுராணத்துத் திருக்கலியாண வத்தியாயம்—

"சாறு வாகங் காபாலஞ் சாற்றும் பாஞ்ச ராத்திர நூன்
மாறு செய்யும் வாமமுள்ள மயங்கச் செய்த நூலாகுந்
தேறி யிந்நூற் படிநின்றோ ரிவற்றை யுலகிற் செப்பிடுவோர்
பாறு தொடரு நரகத்தி லளப்பில் காலம் படிந்திடுவார்."

என்றுங் கூறுதலானும், யாம்படித்த கOஅ-உபநிடதங்களி லும் "பாஞ்சராத்ரம்" எனுஞ் சொல்லே வாராதிருத்தலானும் பாஞ்சராத்திரம் அப்பிரமாண மென்பதும், அதன்வழிபாடு நரகப் பிராப்தியாமென்பது முறுதியாம். யாம்படித்துப்பார்த்த ஆழ்வார் பாடல் நாலாயிரத்திலும் பாஞ்சராத்திரமெனுஞ் சொல்லும், அத

வில் விஷ்ணு வியூகமாகச்சொல்லப்படும் வாஸுதேவ ஸங்கர்ஷண பிரத்யும்ந அநிருத்த மூர்த்த வொழுங்குகளுங் கூறப்படவில்லையாத லின், அவர்க்கும் பாஞ்சராத்திர முடன்பாடன்றென லேற்பட் டது. விஷ்ணுபுராணத்து ௯-ம் அமிசம்—

"ஸ்ரீ விஷ்ணுபகவான் தனது திருமேனியிலிருந்து ஒரு மாயா மோகனை யுண்டாக்கி. ....இந்த மாயாமோகன் அந்தத் தைத்தியரை மோஹிக்கும்படி செய்வான் அதனாலே யவர்கள் வேதமார்க்கத்திற்குப் புறத்தவர்களாய் உங்க ளாலே கொல்லத்தக்கவர்களாவார்கள் (எனவியம்பினன்.)"

என்றபடி வேதமார்க்கத்திற்குப் புறம்பான ஜைன பௌத்த மதநூல்களை விஷ்ணுவே செய்தாங்கு வேதவிருத்தமாய்ப் பொய் யாயுள்ள இப் பாஞ்சராத்திராகமத்தையும் அவனே செய்துள் ளான். இஃதவனுக் கோரியற்கை வஞ்சகமேயாம். திருவாய்மொழி "நிச்சித்திருந்தேன்" என்றற்றொடக்கத்துச்செய்யுளில் "கைச்சக் கரத்தண்ணல் கள்வம் பெரிதுடையன்—மெச்சப் படான்பிறர்க் கும் மெய்போலும் பொய்வல்லன்" என்றதும் அவ்வியற்கையை விளக்குவதாயிற்று. இவ்வஞ்சகமே விஷ்ணுவுக்கு "மாயன்" எனும் பெயராய் நிகழ்தலை, "மாய னிகாதன் வஞ்சனை யாளன்" எனும் பிங்கலந்தைக் கூற்று னறிக. 'பாஞ்சராத்ரம்' என்பது ஐந்திராத் திரியென்றும். அதனால், ஆளுங்கறப்பு நாலுங்கறப்பென்பதே சித்தித்தது. இப்படிப் பொய்யாயிருக்கும் புத்தகத்தைத் தேன்னு சாரியப்பிரபாவத்தில் "ஸ்ரீ பாஞ்சராத்திரம், ஸ்ரீ பாஞ்சராத்திரம்" எனப் பலவிடத்தும்பகர்ந்து பக்கம் ௬௬-ல் "பாஞ்சராத்திர பிர மாணங்களாலே இதற்குப் பரிகாரஞ் சொன்னோம்" என்றும், தென்னுசாரியப்பிரபாவகண்டனமெனும் வடகலை வைணவச்சுவடி யின் பக்கம் ௧௨௭-ல் "ஸ்ரீ வைஷ்ணவருக்கு முக்கியமான ஸ்ரீபாஞ் சராத்திரத்தில்" என்றும், உடையவர்சூர்ணவிளக்கமெனுந் தென் கலை வைணவச் சுவடியின் பக்கம் ௬௭-ல் "நமது தர்சனத்திற்கு முக்கியமாக அங்கீகாரமுள்ள பகவத் சாஸ்த்ரமென்னும் ஸ்ரீபாஞ்ச ராத்திரத்தில்" என்று மெழுதியிருப்பவைகளை நோக்க, சித்தி ரோர்த்துவ புண்டரதாரிகளான தென்கலையார் வடகலையாரெனும் இருதிற வைணவருந் தங்கள் பரமாசாரியனான இராமநுஜனதுரை யை மீறினவர்களும், பாஞ்சராத்திரத்தையே முக்கியப் பிரமாண மாகக்கொண்ட பாஷண்டிகளு மாயினரென்ற லேற்படுகின்றது. அவ் வாசாரியன் ஈண்டிவ்வாறுகூறினும் பிறநூல்களிற் பாஞ்சராத்

திரம் பிரமாணமாமென்று கூறியுளானெனில்,—அவனும் பாஷ ண்ட பாஞ்சராத்திரியாவனென்பது தப்பாது. முன்னுக்குப்பின் முரணக்கூறிவோனு மாவனென்பதுந் தெள்ளிது.

## உ. சித்திரோர்த்துவபுண்டரதாரணம்அவைதிகம்.

மேலைக்கோட்டைத் திருநாராயணபுரம் முதலிய விடங்களி லுள்ள வெள்ளைமண்ணும, மஞ்சளிற் செய்யபபடும் பொடியுங் கொண்டு வைணவர்தரிக்குஞ் சித்திரோர்த்துவ புண்டரமானது வேதத்தின் பூர்வபாகத்திலாவது, கO அ - உபநிஷத்துக்களாகிய உத்தரபாகத்திலாவது கூறப்படவில்லை. இப்புண்டரமானது பூதூர்- இராமாநுஜ னென்பானாற் புதுவதாகக் கற்பிக்கப்பட்டதாகும். ஆதாரம—ஆறுயிரபபடியெனுந் தென்கலைக்குருபரம்பரை ப - ககசு- ல் அவ்விராமாநுஜனுடைய சிறியதாய் மகனாகிக் காளஹஸ்தியிலிரு ந்த கோவிந்தபட்டனை வைணவமதத்திற் றிருப்பசசென்ற பெரிய திருமலைநம்பிக்கும் அபபட்டனுக்கும நிகழ்ந்த தர்க்கங்களெழு தப்பட்ட விடத்தில்—

"அவனுங் குறுக்குநெடுக்காகில் பேதமென்னென்ன, இவருஞ் செவ்வை யிருக்கத் திரியக்கு ஆகையே பேதமென்ன, அவனும இது புதுவார்த்தைக் கட்டுகளோவென்ன, இவரும் பழையவார்த்தைக் கட்டுகளும்ப்படியே யெ ன்ன, அவனும் இதிலே பூர்வவிசாரம் வேண்டாவோவென்ன, நம்பியும் பரத் துவத்திலேகாண் விசாரமிருப்பதென்ன."

என்ற வசனங்களும ; உடையவர்சூர்ணவிளக்கமெனும் வை ணவச்சுவடியின் ப - உசு, உஎ - ல்—

"ஸ்ரீ பெரும்பூதூரில் இவ்வருஷத்திற்கு அஎO - வருஷமான கலிநாலா யிரத்து நூற்றெட்டுக்குமேல் பிங்களஸ்ரீ சித்திரைமீ கஉவ வெள்ளிக்கிழ மைத் திருவாதிரை கடகலக்கினத்தில் திருவவதரித்தருளிய ஸ்ரீ பாஷ்யகாரர் காலத்திற்கு முன்பு இப்போதுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்கள் பஸ்மாதிதாரணராய், க்ஷுத்ரதேவதாந்தர பரராய் மந்த்ராந்தர பரராயிருந்தார்கள். அப்படியிருந்த இவ்வைஷ்ணவர்களுக்கு ச்வேதபீதவர்ண புண்டரங்களையும் அஷ்டாக்ஷர வாசக வாச்சியனை ஸ்ரீமந்நாராயண பரப்ரஹ்மத்தையும் சிதசித்விசிஷ்ட வேஷத்தோடுங்கூடிய ஏகைகபாவமாயுள்ள ஆநந்த ஸஹிதவிசிஷ்டாத்வைதத் தையும் ப்ரபத்தியுபாயத்தையுந் தொடக்கமானவற்றையும் நூதனமாக வெளி யிட்டு அவைகளைத் திக்விஜயஞ் செய்வித்துத் தாபித்தார் ஐடாய். அதற்கு முன் னிவர்களுக்குத் திருமணேது சிவந்த ஸ்ரீ சூர்ணமேதுகாண்."

என்று வைணவர்களே சொல்லுவதாக எழுதியிருக்கும் வசனங்களுமாம். இவற்றிற் பிற்பட்ட வசனம் முற்பட்ட குருபரம்பரைக் கூற்றினையே வலியுறுத்த வெழுந்ததாகும். இதனை யுணரமாட்டாமல் அச் சூர்ணவிளக்கக்காரர் முன்னேறப்பட்டிருந்து மத்தியிலொழிந்து போனதைத்தான், இராமாநுஜர் புதுக்கினரென்று சாதிப்பான் சிலவசனங்கள் பொறித்துள்ளார். அப்பொறிப்பனைத்தும் பொறிந்தொழியும்படி அக்குருபரம்பரைக்கூற்றுளதன்றே. என்னை? "அவனும் இது புதுவார்த்தைக்கட்டுகளோ வென்ன, இவரும் பழைய வார்த்தைக் கட்டுகளுமிப்படியே யென்ன" என்றெருப்புக் கோடலின். "அவனும்" என்றது கோவிந்தபட்டனையும், "இவரும்" என்றது பெரியதிருமலை நம்பியையுங் குறித்து நின்றன. "பழைய வார்த்தைக் கட்டுகளுமிப்படியே" என்ற வைணவன் வாசகம் கோவிந்தபட்டன் தரித்திருந்த திருநீற்றுத் திரிபுண்டரத்தைக்கூறும் வேதத்தைக் குறித்தெழுந்ததாகும். "என்ன" "என்ன" என்று வருபவை 'என்றுரைத்தவளவிலே' எனும் பொருளுடையன.

வைணவர்கள் தரிக்கும் மட்குறி "சித்திரோர்த்துவ புண்டரம்" எனும் பெயருடைத் தென்பதை வைணவர்களே யொப்புகின்றனர். அது—வைணவர்களில் (Pleader) தி. திருவேங்கடமுதலியார், இரா. கேசவபிள்ளை, கு. கோவிந்தபிள்ளை, ஷாப்பு மு. அழகப்பிள்ளை, வா. கி. பார்த்தசாரதிபிள்ளை, ஜவுளி ரங்க நாயகலு செட்டியார், மளிகை வி. இராஜகோபாலநாயுடு, வெண்கலகடை கண்ணுசாமி நாயுடெனும் பெயர்களையும், 20-8-06 எனுந்தினத்தையும், சிதம்பரம் ஸ்ரீ குஞ்சிதசரணபிரஸ் என்பதையும் அடியிற்கொண்டு சிதம்பரத்தில் வெளிப்பட்ட உபந்யாஸமெனுந் துண்டுப்பத்திரிகையில் "ஸ்ரீ வைஷ்ணவர்கள் தரிக்குஞ் சித்ரோர்த்வபுண்ட்ரமே வேதோக்தம்" என்பதிருத்தலானு முறுதிப்படும். அக்கூட்டத்தாரைப் பின்னத்தூர்-இரத்தினசாமிப்பிள்ளையெனுஞ் சைவர்பார்த்து "நுங்கள் புண்டரம் வேதோக்தம் அன்றென்று நுங்கள் புத்தகங்களாலேயே சாதிப்போம்: நீங்கள் வேதமெனவெடுப்பதை வேதம் அன்று கற்பனையென நிறுவுவோம்: எங்கள் ஸ்ரீமத் - சுவாமிகள் எங்கள் வேண்டுகோட் கிரங்கி யருளிச்செய்த நாலாயிரப்பிரபந்த விசாரத்தின் •பதிப்புரையில் எம்மாலேற்படுத்தப்பட்ட உடம்படிக்கைக்கு உடன்படுவீர்களாயின்" என்றுரைத்த ஞான்று "அதற்

குடன்படோம்" என்று ஒதுங்கிவிட்டவரே அக்கூட்டத்தார். மேலுமவர்கள், சிவாதிக்யரத்நாவளி உ-ம் பாகத்தாற் கண்டிக்கப்பட்டொழிந்த பாஷண்டமத சபேடிகையெனும் பதிதச்சுவடியில், ச. பு. குருஸ்வாமி நாயுடெனவெழுதப்பட்ட பெயருடையாரைக் கொண்டு பின்னத்தூரிற் சைவதூஷணப்பிரசங்கஞ் செய்யவந்த காலத்தில், மேற்போந்த இரத்தினசாமிப்பிள்ளை, அன்னோருண் முக்கியமானவரைக் கண்டு நம்பிரசங்கத்தில் எம்மனோர் வாதிக்கலாமோ என்று வினவியபோது அன்னோர், "அதுகூடாது, வைஷ்ணவர்களுக்காகச் செய்வது இப்பிரசங்கம்" என்றுரைத்துப் போந்தாராயினர். பின்னைப் பிரசங்கியாரு முடம்படிக்கைக் குடன்படேனென்றே போந்தார்.

இந்த ஹேதுக்களால் வைணவர்களிற் சிலர் "சித்ரோர்த்வ புண்ட்ரம் வேதோக்தம்" என்று சாஸ்திர ஆராய்ச்சியில்லாச் சாமானியர்க்குரைத்து, அதனை யவர்களுடம்பிற் றீட்டுதலும், இது வேதோக்தமல்லாத அவைதிகமென்பார்பாலும் இதற்கு உபநிஷத்துக்களிருக்கின்றனவென்று ஏற்றபடி கூறுதலும், அவ்வாறே காகிதங்களிற் கீறுதலும் அயோக்கியமாமென்றல் தெள்ளிது. அந்த அயோக்கியத்தின் உயிரைப்போக்க மேலையவுடம்படிக்கை முளைத்ததுமாயிற்று.

## ரு. வைணவர் கற்பனை மறுப்பு.

தென்னாசாரியப்பிரபாவமெனும் வைணவச்சுவடியின் ப-கக-முதல் உள-வரை, பாதபுண்டரந்தரிக்கவேண்டுமென்பதற் காதாரமாகக் காத்யாயன வுபநிஷத்து, சாந்தோக்கிய வுபநிஷத்து, புராணம், பாஞ்சராத்திரத்திற் பாத்மசம்மிதை, வாசிஷ்டசம்மிதை, பிரஹத்சேந சம்மிதை, காரணசம்மிதை, பராசரசம்மிதை, சாண்டில்யஸ்மிருதி, பிரஹந்நாரதீயம், காசியபர்வசனம், பிருகுவசனம், கூர்மமஹாத்மியம், பராசரஸ்மிருதி, ஹாரீதஸ்மிருதி, பாத்மோத்தரம், பிரம்மாண்டபுராணமெனும் பெயரிட்டெடுத்துக் காட்டப்பட்ட வடமொழியனைத்தும், தென்னாசாரியப்பிரபாவகண்டனமென வடகலைவைணவரென்பாரெழுதிய சுவடியின் ப-ருள-முதல் கூஅ-வரை சில கற்பனைகளென்றுஞ் சில வேறுபொருளுள்ளனவென்றுங் கண்டிக்கப்பட்டன. அக்கண்டன வசனங்களிற் சில வருமாறு:—

(பக்கம் ௩௯ - ல்) "பூர்வபக்ஷி, திருமண்காப்புவிஷயமாய் தனக்கு வெகு பிரமாணங்களிருக்கிறதாக வெகுஅட்டகாசஞ்செய்திருக்கிறார். இதைப்பார்க்கிறவர்கள் உளுத்தமுருங்கைக் கொம்புகளை யுறுதியான புளியங்கொம்புகளென்று பிரமித்துப்பிடித்துக்கொண்ட பேதையினரவாரம்போல் நினைப்பார்கள். ஏனெனில் அந்தப் பிரமாணங்களிற் சில கற்பிதங்கள் சிலவேறு பொருளுள்ளன. யுக்திகளெல்லாம் பொருந்தாதனவாயும் பேதமையாயுமிருக்கின்றன." (ப - ௩அ, ௩௯ - ல்) "அவைகளில் காத்தியாயனோபநிஷத்தென்று எழுதியிருக்கிற வாக்கியம் மேற்படி யுபநிஷத்திலில்லை." (ப - ௪௧, ௪௨ - ல்) "பூர்வபக்ஷியெழுதியிருக்கிற புராணாதி வசனங்களில் பெரும்பாலுங் கற்பிதங்களாகவே யிருக்கின்றன." (ப - ௪௩ - ல்) "பரப்பாயும் சிதறித் தலைகால் முறைகள் தெரியாமலும் கிடக்கிற புராணங்களிற் கற்பிதங்களிருக்கக் கேட்கவேண்டுமோ" "இந்தப்பூர்வபக்ஷி யாரோ கற்பித்துக்கொடுத்த வசனங்களை நம்பியெழுதினதற்கென்ன செய்யலாம். இப்படியே இன்னுமெழுதியிருக்கிற வசனங்களும் நல்லவிற்பத்தியில்லாதவர் கற்பித்தவைகளென்று அவ்வசனங்களைப் பார்க்கும் வித்துவான்களே நினைப்பார்கள். (ப - ௪௫ - ல்) அண்ணாப்பங்கார் கிரந்தமோ அவர் தம் பக்ஷத்துக்கு எதையாவது சேர்த்து எழுதவேண்டுமென்று ஆக்கிரகமா யெழுதினாரென்கிறது மேனாட்டு ரங்காசாரியர் முதலானோர்செய்த கண்டனங்களாலும் தெரியவருகிறதே. (ப - ௫௧, ௫௨ - ல்) "சாந்தோக்கியோபநிஷத்திலென்றது முயற்கொம்புக்குத் துணையாயிருப்பதுந்தவிர திருவடிகள் தாமரை மலரிலிருக்க வேண்டுமென்கிற பொருளுமதில் காணவில்லை." (ப - ௫௪, ௫௫ - ல்) "கற்பிதசுருதியிலும் கற்பிதசங்கிதாபுராணங்களிலும் நாசிகையில் ஒரு அங்குலபீட மிடும்படியாகச் சொல்லியிருக்கிறது. மற்றொரு கற்பித பாஞ்சராத்திர பராசரசங்கிதா வசனங்களில் இரண்டங்குலபீடமிடும்படி சொல்லியிருக்கிறது." (ப - ௫அ - ல்) "புளுகினாலும் பொருந்தப் புளுகவேண்டு மென்றில்லாமல் பொருந்தாமல் புளுகியிருக்கிற வசனங்களுக்கெல்லாம் பலநீட்டுக்கு மொருமுழக்கென்றது போல விதுவரையிற்சொன்னதே போதுமானதா யிருக்கின்றது."

என்பனவாம். இவ்வெடுத்துக்காட்டுகளில் வரூஉம் இலக்கண வழுக்களெம்முடையனவாகா. இருந்தபடியே காட்டினோம். பிறகாட்டுகட்கு மிங்ஙியாயங்கொள்க. சித்திரோர்த்வ புண்டரத்தைக் குறிக்கும் ஹாரீதஸ்மிருதி வசனமானது—

இத்தேய வைணவரிடமிருந்து கிடைத்த புத்தகங்களிலேயே யுண்டென்றும், காசிதேயத்தாராலச்சிடப்பட்ட ௨௦ - ஸ்மிருதிப்புத்தகங்களிலும் மூன்றுதேயத்திலிருந்து வந்த ௩௬ - மூலஸ்மிருதியடங்கிய மூன்றேலைப் புத்தகங்களிலுமில்லையென்றும் விளக்குஞ்செய்தி—பண்டிதர், தொழுவூர் வேலாயுதமுதலியார் மொழிபெயர்த்த மாதவியவுரையில் ஊர்த்துவபுண்டரமெனுமிடத்தி லெழுதப்

பட்டுள்ளது. மாதவியமென்பது பராசரஸ்ம்ருதிக்கு மாதவாசாரியர் செய்த வியாக்கியானமாம். பராசரஸ்ம்ருதியிற் சித்திரோர்த்துவபுண் டரச்செய்தியே யில்லை.

இக்காரணங்களால் வைணவர் தங்கள் நவீனமதக்கொள்கை யை யுறுதிப்படுத்துமாறு பற்பல கற்பித வசனங்களையுஞ் சுவடிக ளையுஞ் செய்தனர், செய்கின்றனர் செய்வரென்பதும், அப்படிச்செ ய்யப்பட்டவைகளைச் சிலபிரதிகளிலும் நுழைத்தனர், நுழையச் செய்கின்றனர், நுழைப்பரென்பதும் ஸ்பஷ்டமே. அதனாற் பிர மாணநூல்களில் இவ்விடய மெங்கெங்கே காணப்படுமோ அங்கங் கே யில்லாதொழிய அதனைக் கண்டித்தல் விவேகிகள் தேடிக்கொ ள்ளும் ஒரு பெரும்புண்ணியமாம். முன்னிருந்தோர் செய்தன வாக வைணவர் பல சுவடிகளையுங்கற்பிப்ப ரென்பதை அத் தேன் ஞசாரியப்பிரபாவகண்டனத்தின் ப - சச, சரு - ல்—

"சைவ வைஷ்ணவமென்கிற கிரந்தமோ இதுவரைக்கு மிருக்கிற ஸ்ரீ ராமாநுஜ சித்தாந்தப் பிரவர்த்தகர்களும் அன்னியர்களும் கேட்டறியாததா யிருக்கிறது" "மணவாளமாமுனிகள்செய்ததன்று ஏனெனில் முக்கியமாய் அவர் வைபவத்தைச் சொல்லுகிற யதீந்திரபிரணவபிரபாவமென்கிற கிரந்தத் திலும், கந்தாடையண்ணன் வமிசஸ்தர் செய்த வரவரமுனி வைபவமென்கிற சமஸ்கிருதகிரந்தத்திலும் இதின்பெயர் காணப்படவில்லை. கிரந்தங்களித்தனை யென்று கணக்கிட்டிருக்கிறவைகளி லிது சேர்க்கப்படவுமில்லை."

என வரைந்தவழிக்காண்க. மேல் வந்த யதிந்த்ரப்ரணவப்ர பாவத்தை யாமும் பார்வையிட்டோம்: அந்தச் சைவவைஷ்ணவ மெனுஞ் சுவடிப்பெய ரில்லை. மேலே காட்டுற்ற தென்னசாரியப் பிரபாவத்திற் காத்யாயனோபநிஷத்தொன்றுண்டெனல்வெளிப்பட் டதுபோல விஷ்ணுதத்வவிளக்கமெனுந் தென்கலைவைஷ்ணவச்சுவ டியின் ப - ருக, சுoo - ல் காண்டவவேதமென்பதும், காத்யாயன உபநிஷத்தென்பதும், ப - சுஉ - ல் வராஹோபநிஷத் தென்பதும் வெளிப்பட்டன. இவற்றுள் வராஹோபநிஷத்தென்பது கoஅ -உப நிஷத்துக்களின்பெயரிலுண்டு. அஃதைந்தத்தியாயமுடைத்து. அவ் வைந்தனுள்ளும் எந்தப்புண்டரவிதியுங் கூறப்படவில்லை. ஈண்டு ஊர் த்துவபுண்டர முரைப்பது அதனுத்தரபாகமெனின்,—அப்படிப்ப ட்ட பாகம், நாகரம் கிரந்தம் தெலுங்கு இம்மூன்றக்ஷரங்களிலும் ஆங்கிலத்திலும் அச்சிடப்பட்ட நூற்றெட்டுபநிஷத்துக்கோவையி லெதிலும் இன்றாகலின், அது கற்பனையென்பது ஸ்பஷ்டமே.

இக்கற்பனை, மேலைய தென்னாசாரியப்பிரபாவ மேற்பட்ட பின்னர்த்தான் ஏற்பட்டதாகும். என்னை? வடகலைப்புண்டரத்திற்குந் தென்கலைப்புண்டரத்திற்குமுண்டான வாதாரம்பம்,'சௌமியஹு' எனத் தென்னாசாரியப்பிரபாவ கண்டனத்தின் தலைப்பிலும், மேலைய விஷ்ணுதத்வவிளக்கம் "ஆங்கீரசவருஷத்திற்குச் சரியான 1872 - ம்ஹு" பதிப்பிக்கப்பட்டதாக அதன் பதிப்பு விவரத்திலுமிருத்தலினால். இவ்விசாரணைவாயிலாக அந்தச் சௌமியஹு கி. பி. 1850 - ம் வருடமாகலின் கி. பி. 1907 - வது ஆகிய இவ்வருடத்திற்கு (ருஎ) ஐம்பத்தேழு வருடங்களுக்குட்படவே அவ் வராஹோத்தரமெனுமுபநிஷத்து உண்டாயதென்பதைப்பாதபுண்டரத்திற்குப் பல பிரமாணமுளவெனக் கூறப்புறப்பட்ட அத் தென்னாசாரியப்பிரபாவம்—பாதபுண்டரத்தைப் பஹு விஸ்தாரமாகக் கூறும் இவ்வுபநிஷத்தின் பெயரையே கூறுதொழிந்தது கொண்டு நன்குவிளக்குவதாயிற்று. காத்யாயநோபநிஷத்தென்ப தொன்று அஷ்டோத்தர சதோபநிஷத்திலுமில்லை. இருக்கு, யஜுர், சாமம், அதர்வணமென்பன வேதத்தின் பெயர்களேயன்றிக் காண்டவவேதமென்பதொன்றில்லை. சுருதியிலொருபாகத்திற்கு அது பெயராகுமெனின்,—அந்தச்சுருதி யாதோ? யாதாயினுஞ் சித்திரோர்த்துவ புண்டரங்கூறுவது கற்பனையேயாம்.

இப்புண்டரத்தைக் கடவல்லி யுபநிஷத்துக் கூறுவதாக, இரு சமயவிளக்கமெனுஞ் சைவதூஷணச்சுவடியில் "சீதரனு ரிணையடியின்சீர்மைபெற விடைவெளியுந் திருத்தமாக—மீதுயர்புண்டரமணிவா ரங்நெடுமா றிருவுள்ளம் விருப்பம் பெற்றுப்—பாதகமெல் லாந் தொலைத்துப் பரமபதத் தானந்தம் பயில்வா ரென்று—மாதுநல்லாய் வேதாந்த மெண்ணுறன்கி னுரைத்தகட வல்லி சொல்லும்" என்பது கூறப்பட்டிருக்கிறது. இப்படிக் கூறினவன் அவ்வுபநிஷத்திற் றனது பாஷண்டபுண்டரமிருப்பதாக நில்லாதோடு நீர்மேலெழுதியிருக்கக் கண்டனன்போலும். பலபிறக் கற்பனைகளில் இதுவுமொன்றே.

இந்நூல் ௩ - ம்பக்கத்திற் காட்டப்பட்ட உடையவர்சூர்ணவிளக்கம் ப - சூல் "ச்வேத ம்ருத்திகையை வராகோபநிஷத்து காத்யாயநோபநிஷத்து வாசுதேவ நாராயணோபநிஷத்துத் தொடக்கமான வேதாந்தங்களினும் ஸ்ரீபாஞ்சராத்திர வைகாநச வாசிஷ்டாதி ஸம்ஹிதாதிகளினுஞ் சொல்கிறபடியே" எனுஞ் சொற்களெழுதப்பட்டன. வராஹம், காத்யாயந மென்பவற்றின் யோக்கியதை மே

லே காட்டப்பட்டது. வாஸுதேவோபநிஷத்தோவெனின்,—நார தமுனிவர் ஊர்த்துவபுண்டரவிதி யாதெனவிசாரித்தபோது வாஸு தேவனுகிய கிருஷ்ணன் கூறியதாயுள்ளதே அவ்வுபநிஷத்து. அத னில் ஊர்த்துவபுண்டரத்திற்குத் திரவியம் கோபீசந்தநம் கூறப்பட் டுளது. மேல் விதிகூறி முடித்த விடத்தில்—

([illegible]) "யோகோ பீசந்தநாபாவேதுலஸீமூல ம்ருத்திகாம் |"

எனும்வசனமுங் கூறப்பட்டது. இதன் பொருள் "கோபீசந்த நங் கிட்டாவிடில் துளஸியடியிலுள்ள மண்ணை யுபயோகப்படுத்த லா மென்பதைப் பொருந்தும். இங்குரைத்தமண்ணணிகை ஆபத் கால கர்மவிஷய மாமேயன்றி நித்யகர்மவிஷய மாகாது. இது வெண் மண்ணெனற்குச் "ச்வேத ம்ருத்திகாம்" என மேல்வசனத்தினு மில்லை. இவ்வுபநிஷத்திற்றனே—

([illegible])

"அதிராத்ராக்நிகோத்ர பஸ்மநாக்நேர் பஸிதம்தம் விஷ்ணு ஸ்த்ரீணிப தேதி மந்த்ரைர் வைஷ்ணவ காயத்ர்யா ப்ரணவேநோத்தூளநம்குர்யாத் | ஏவம்விதிநாகோபீசந்தநஞ்ச தாரயேத் |"

என்பதுங் கூறப்பட்டுள்ளது. இதன்பொருள்:— 'கோபீசந்த நோர்த்துவ புண்டரமணியினும், பிரணவத்தோடு விஷ்ணுமந்திர கா யத்திரிகள் ஜபித்துப் பஸ்மோத்தூளனமுஞ் செய்யவேண்டும்' என வாம். இவ்வுபநிஷத்திற் கூறப்பட்ட சந்தநோர்த்துவபுண்டரத்தை இச்சந்தனமெனும் பெயரோடு யாவருந்தரிக்கலாமென்பது' போ தர மற்றோருபநிஷத்து ஆதரித்துக் கூறுமையானும், கிருஷ்ணனுற் கூறப்பட்ட இஃது அக்கிருஷ்ண னுற்பத்திக்குமுன் இப்பூமியி லாசரிக்கப்பட் டிருந்ததில்லையென லறியப் படுகின்றமையானும் அனேகோபநிஷத்துக்களிற் பிரதிபாதிக்கப்பட்ட சிவ பஸ்மத் தைப்போல அச்சந்தநம் ஆசரிக்கத்தக்க தன்றெனல் ஈண்டேற் புடைத்து. குசங்களிற் சந்தநம்பூசிக்கொண்ட கோபிகாஸ்த்ரீகளைக் கிருஷ்ணன் கூடும்போது அவனதுடம்பி லொட்டிக்கொண்ட சந்த நமே "கோபீசந்தநம், விஷ்ணு சந்தநம்" எனும் பெயர் பெற்றதென் றும், இப்போது அவனுக்குச் சமர்ப்பிக்கப்படுஞ் சந்தநமும் அப்

பெயர்களுறுமென்றுஞ் சிலர் கூறுகின்றனர். இவ்வுபநிஷத்தில் (மஞ்சட்பொடி) ஹரித்ராசூர்ணமெனும் வசனமேயில்லை. அதனாற் சித்திரோர்த்துவபுண்டரத்திற்கு இவ்வுபநிஷத்து ஒரு சிறிதுஞ் சாதகமாகாது. நாராயணமெனும் பெயர்பெற்ற எந்தவுபநிஷத்திலும் ஊர்த்துவபுண்டரவிதி சொல்லப்பட்டதின்று. அதனால், அச்சூர்ணவிளக்கத்தில் அந்நன் அப்பெயரைக் கிறியது அறியாமையாம். அவ்விளக்கத்துப் பிரமாணப்ரகரணமெனுமிடத்தில் இந்நூல் ௬ - ம் பக்கத்தில்வந்த பாஞ்சராத்திரத்திலுள்ளனவாகச் சில வடமொழிகளும், வைகாநச சூத்ரமென வடமொழி வசனமும், நாரதீயபுராணம், பிரமாண்டபுராணம், வராஹபுராணம், பாத்மோத்தரபுராணமெனச் சில தமிழ்ச் செய்யுள்களுங் காட்டப்பட்டன. சுருதிவாக்கியமேதுங் காட்டப்படவில்லை. இவ்விடயத்திற் சுருதியென்பதே கற்பனையாய் முடிகையிற் புராணமென்பன பிரமாணமாதல் யாங்ஙனம்? அவைகளுங் கற்பனையேயாம். கற்பனையன்றி பழமையெனினும், வேதசம்பந்தம் வைதிகமெனுமாற்றால் அச்சம்பந்த மில்லாக் கொள்கை அவைதிகமேயாம். அதுவே பாஷண்டம். அதனாற் புராணக்கூற்றானும், ஸ்மிருதிக்கூற்றானும், வைகாநசக்கூற்றானும், பாஞ்சராத்திரக்கூற்றானுஞ் சித்திரோர்த்துவ புண்டரம் மேலே சாதித்தபடி பாஷண்டமேயாம். பாஞ்சராத்திரம் பிரமாணம் அன்றெனப் பூதூர் - இராமாநுஜனே யொப்பியுளோ னென்பதையும் மேலே விளக்கினும். வைணவர், வேதத்தின் கரைகண்டவரும் பெரிய பெருமாளால் வேதாந்ததேசிகனெனும் பெயரிடப் பெற்றவருமான தேசிகர் தேசிகரென்று புகழவுள்ள வேங்கடநாதனெழுதிய சச்சரித்திரரக்ஷை, தொட்டையாசாரியனெனும் வைணவனெழுதிய பரிகரவிசயமெனுங்கிரந்தங்களிற் சித்ரோர்த்வபுண்டரத்திற்கு அதர்வணோபநிஷத் வாக்யமட்டுமிருப்பதாக வரைந்திருக்குஞ் செய்தி காணப்படுகின்றது. இதனைத் தென்னாசாரியப்பிரபாவகண்டனம் ப - ௩௬, ௪௦ - ல்—

“வேதாந்த தேசிகர் செய்தருளின சச்சரித்திரரக்ஷையென்கிற கிரந்தத்திலும் சோளசிங்கபுரம் தொட்டையாசாரியர் செய்தருளின பரிகரவிசயமென்கிற கிரந்தத்திலும் திருமண்காப்பின் ஆகாரத்தைக்குறித்து (ஹரிபாதாகாரமாயும் நடுவில்வெளியுள்ளதாயுமிருக்கிற ஊர்த்துவபுண்டரத்தையெவன் தன்னன்மையைக்குறித்துத்தரிக்கிறானோ அவன் பரப்பிரமத்துக்கு இஷ்டனாகிறான் அவன் புண்ணியவானாகிறான் அவன் மோக்ஷமடையத்தக்கவனாகிறான்) என்று பொருளுள்ள அதர்வணோபநிஷத்தின் வாக்கியத்தையல்லது, வேறு

வேதவாக்கியங் காணப்படவில்லை. பூர்வபக்ஷியெழுதியிருக்கிற மேற்படிவாக்கியம் வேதவாக்கியமாயிருந்தால் வேதாந்ததேசிகர் முதலானோர் இவ்வாக்கியத்தை தம்கிரந்தங்களில் உதாகரித்திருப்பார்களே ஷை கிரந்தங்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள் தரிக்கிற திருமண்காப்புக்கு வேதப்பிரமாணமில்லையென்று மதாந்தரஸ்தர்சொல்லு மாக்ஷேபங்களைக் கண்டித்துச் சுருதிபிரமாணங்களை யுதாகரிக்கவந்தவையாகையால் ஆகிருதியை விளங்கச்சொல்லாநின்ற இவ்வாக்கியம் அவசியமுதாகரிக்கப் பட்டிருக்கவேண்டும். பலமாயும் விளக்கமாயுமிருக்கிற பிரமாணங்களை யுதாகரிப்பது கக்ஷிக்குப் பலமாயிருக்குமன்றோ. ஷை கிரந்தங்களில் மற்ற பிரகரணங்களிலும் புராணாதிவசனங்களும் பல உதாகரிக்கப் பட்டிருக்கின்றன."

எனவுள்ள வசனங்களானுமறிக. இதனாற் சித்திரோர்த்துவ புண்டரம் அவைதிகமெனஅக்காலத்திலேயே கண்டிக்கப்பட்டதாமென்பதூஉம், அங்ஙனமவ்வசன முண்டென்பதன்றி வேறுவிதியில்லையென வைணவர் கையை விரித்தனரென்பதூஉம் காணப்படுமாற்றானும் அக் காத்யாயந முதலிய சுருதிகளுளவெனப் பிதற்றுவனவெல்லாங் கற்பனையென்பது பசுமரத்தாணியறைந்ததுபோலாமென்க. இக்கற்பனை :—வடகலைக்குருபரம்பரை கூறுமாறு கலியுகம் சஙஎக-ற் பிறந்தவனாகநினைக்கவுள்ள அவ்வேங்கடநாதன் காலத்திற்குப் பின்னர்த்தானுண்டாயிற்றெனவு மோர்க.

இனி, அவ்வேங்கடநாதனெடுத்துக்காட்டிய அதர்வணோபநிஷத்வாக்கியமேனுஞ் சித்திரோர்த்துவ புண்டரத்திற்குச் சாதகமாகாதோவெனின்,—ஆகாது. என்னை? இந்நூல் ௬-ம் பக்கத்திற் காட்டப்பட்ட குருபரம்பரை வாக்கியத்தில் இப்புதுப்புண்டரத்திற்குச் சுருதி முதலியன வேண்டாவோவெனும் பொருடோன்ற, "இதிலேபூர்வவிசாரம் வேண்டாவோ" என்று கோவிந்தபட்டன் கேட்ட கேள்விக்குப் "பரத்வத்திலேகாண் விசாரமிருப்பது" என்று பெரியதிருமலைநம்பியளித்த விடையானது.—அவையில்லையெனக் காட்டிற்றாகலின். சுருதிமுதலியன விருப்பின், அங்ஙனம் இன்னனவெனக் கூறுதிருக்க நியாயமில்லை. அதனாலதுவுங்கற்பனையேயாம். வைஷ்ணவக் கிரந்த மெழுதுவோர்கள் சில வடமொழி வசனங்களைக்கற்பித்து இன்ன சுருதியெனக்குறியாமல், சுருதியென்றும், மற்றொருசுருதியென்றும், பின்னுமொரு சுருதியென்றும், இன்னுமொரு சுருதியென்றும் வரைந்துவைக்கும் வழக்கம் உளதென்பதைப் பலசுவடிகளினுமறியலாம். இச்செய்கையை வைணவரு

மொப்புகின்றன ரென்பதை, அத் தென்னுசாரியப்பிரபாவகண்ட னம் ப - ௩௧ - ல்—

"இப்போது பிராமணர் ஓதிவருகிற வேதங்களிற் காணப்படாமற் போனாலும் சிலசுருதியென்றுவது சாதாரணமாய் பிரசித்தமான கிரந்தங்களி லுதாகரிக்கப்பட்டிருக்க வேண்டும்."

என்று வரைந்தவழிக்காண்க. அப்படிக் கற்பித்தெழுதாவிடின் வைணவம் வைதிகமென்பதற்கு வாந்திபேதி சம்பவிக்கும். அன்னணமெழுதப்பட்ட வசனங்களேயே, இக்கால வைணவருட் சிலர் தாங்கள் கிறுஞ்சுவடிகளில் மேற்கோளாக வரைதலுண்டு. அவை யெச்சுருதி? காட்டக்கூடுமா? என்று அறிந்தார் அதட்டிக் கேட்டக்கால், அவரங்ஙனம் பல்லைக்காட்டிப் பசபசென விழித்து நிற்பதுதான் விடையாகும்! இதுநிற்க. அவ்வேங்கடநாதனது அதர்வணோபநிஷத் வாக்யத்தை யங்கீகரிப்பதனுனுஞ் சித்திரோர்த்துவ புண்டரஞ் சித்தியாது. ஏனெனின்,—தென்னுசாரியப்பிரபாவம் ப - ௧௧, ௧௨ - ல்—

"நாஸாதிகேசம் வரைக்கும் ஊர்த்துவபுண்டரந் தரிக்கவேணும். அப்படித் தரிக்கும்டத்தில் விஷ்ணுவினுடைய விரண்டு திருவடிகளைப்போலும் அந்த ஹரியின் திருவடிகளாகிற தருக்களுக்கு ஒரு அங்குலம் வேர்போலப் பத்ம பீடமான ராமாநுஜனுந் தரிக்கவேணும். அந்த வேரின் உற்பத்தியில் இரண்டுகிளை கிளர்ந்தாற்போல இரண்டு திருவடிகளைக் கற்பிக்கவேணும். இரண்டு திருவடிகளுடைய நடுவில் ஒரு அங்குலத்தைக் காட்டிலுங் குறையாமலிருக்கிற வெளியை நிருபிக்கவேணும். அந்த வெளியில் மஞ்சள் சூரணத்தினலே பிராட்டியைப் பிரதிஷ்டை பண்ணவேணும்."

என்று வரையப்பட்ட கற்பனைக்காத்யாயநோபநிஷத் வசனர்த்தத்தை மறுத்த தென்னுசாரியப்பிரபாவகண்டனத்தாரும் தஞ்சுவடியின் ப - ௬௦ - ல்—

"ஆகிருதியை விளங்கச் சொல்லாநின்ற இவ்வாக்கியம் அவசியமுதாகரிக்கப்பட்டிருக்கவேண்டும்."

என்றனர். எனவே விவரமில்லாச்செய்தி பயன்படாதவாறு, அவ்வேங்கடநாதன்சுருதியு மாதலினென்க. தென்கலை வைணவரென்பார் "பத்மபீடம்" என்றென்று கிறிக்கொண்டு அதனை "ராமாநுஜன்" என்பதும் அசங்கதமென்க. ஆதிசேஷனே இராமாநுஜனென்று கூறுவதன்றிப் பத்மமே இராமாநுஜனென்று எந்த வைணவ நூலுங் கூறிற்றில்லை.

## ௪. ஊர்த்துவபுண்டரவாக்கியமு மருத்தமும்.

**நாரதபரிவ்ராஜகோபநிஷத்தில்** ([illegible]) *“ ச்வேதோர்த்வபுண்ட்ரதாரீ த்ரிதண்ட: | ”* என்றும்,

**ஸந்நியாஸோபநிஷத்தில்** *மேல்வந்தபடியே “ ச்வேதோர்தவபுண்ட்ர தாரீ த்ரிதண்ட: | ”* என்றும்,

**துரீயாதீதாவதூதோபநிஷத்தில்** ([illegible])

*“ க்ஷௌராப்யங்கஸ்நாநோர்த்வபுண்ட்ராதிகம்விஹாயலௌகிகவைதிக மப்யுபஸம்ஹ்ருத்ய ஸர்வத்ர புண்யாபுண்ய வர்ஜிதோ ”*

என்றும் வருவசனங்களுஞ் சித்திரோர்த்துவ புண்டரத்தை விளக்கா. உபநிஷத்து ௧௦அ - ல் இம்மூன்றனிலும், மேற்சொன்ன வாஸுதேவோபநிஷத்திலும் ‘ஊர்த்வபுண்ட்ரம்’ எனுஞ்சொல் வந்ததேயன்றி மற்றெதனிலும் வந்ததின்று. இங்குக் காட்டப்பட்ட மூன்றுபநிஷத்தும் ஸந்யாஸங் கூறுவனவா யுள்ளன. அவற்றுள் துரீயாதீதாவதூதோபநிஷத், அது கூறும் ஸந்யாஸிக்கு ஊர்த்துவபுண்டரங் கூடாதென்று கூறிற்று. ஏனைய விரண்டுந் திரிதண்டதாரியாங் குடீசக ஸ்ந்யாஸிக்கு அப்புண்டரத்தை விதித்து அவனினு முயர்ந்தோனாகும் பகூதகஸந்யாஸி முதலினோர்க்குப் பஸ்மதாரணம் விதித்துள்ளன. இக்கிரமத்தால் ஈண்டு வெளியான ஊர்த்துவபுண்டரம—அதர்வணவேத பஸ்மஜாபாலோபநிஷத் “ ஏவம் பஸ்மதாரணம் ” என்று தொடங்கி, “ ப்ரஹ்மசாரி க்ருஹி வாநப்ரஸ்த யதீநா மேததகரணேப்ரத்யவைதி ப்ராஹ்மண: ” என்றுகூறிச் செல்லும்வழி நான்காச்சிரமிகளு மணியத்தக்க பஸ்மதாரணம் போலாது ஸந்யாஸிகளில் தாழ்ந்தவனுக்கே யாகின்றமையாலும், அப்புண்டர திரவியம் வெண்மண்ணும் மஞ்சளுமென அங்ஙனமில்லாமையாலும் அது பஸ்மதாரணம்போ லுயர்வுடைத்தன்றென்பதும், சித்திரோர்த்துவபுண்டரமன்றென்பதும் வஜ்ரலேபமாக நாட்டப்படும். இவ்வாறும் அவ்வூர்த்துவபுண்டர வாக்கியங்களைச் சித்திரோர்த்துவபுண்டரதாரிக ளெடுத்தாள நினைத்தக்கால், அஃது இழுக்குடைமைக்கஞ்சா நீர்த்தும், மேலே காட்டப்பட்ட குருபரம்பரைக் கூற்றைப் பொச்சாந்த நீர்த்துமேயாம். ஆயின், திரவியம்

விளக்காத அவ்வுபநிஷத்துக்கள் "ஊர்த்வபுண்ட்ரம்" என்றல் வெற்றுரைகொல்லோவெனின்,—அற்றன்று. வாஸுதேவோபநிஷத்திற் சொல்லப்பட்ட சந்தநம் திரவியமாகலாம். அங்ஙனம் "ச்வேத" என்றது, "ரக்தசந்தநம்" எனுஞ் செஞ்சந்தனத்தை விலக்கி வெண்சந்தனத்தைக் கொள்ளுமா றறிவுறுத்தவெழுந்த தென்னலாம். இங்ஙனம்—"ஊர்த்வம்" என்பது மேலெனும் பொருளைத்தருதலின், கண்டத்திற்கு மேலே தரிக்கும் பஸ்மபுண்டரத்தையே "ச்வேதோர்த்வ புண்ட்ரம்" என்றதென்றும்; அதர்வண வேத பிருஹஜ்ஜாபாலோபநிஷத் "ஊர்த்வபுண்ட்ரம் பவேத் ஸாம மத்யபுண்ட்ரம் யஜூம்ஷிச | அத: புண்ட்ரம் ருசஸ் ஸாக்ஷாத் தஸ்மாத் புண்ட்ரம் த்ரியாயுஷம் |" என்றபடி பஸ்மத்ரியக்புண்ட்ரத்தின் மேலே யுள்ளது ஊர்த்துவ புண்டரமென்றும், மத்தியிலுள்ளது மத்திய புண்டரமென்றும், கீழுள்ளது அதபுண்டரமென்று மறியப்படு மாற்றானே அந்தச் சுவேதோர்த்துவ புண்டரம் திரியக்புண்டரத்திற் சாமவேத ரூபமாய் மேலேயுள்ள ஏகரேகையாமென்றும்; அந்த ரேகை வெண்சந்தனங்கொண்டு (திரியக்கு) குறுக்கு ஆக இடுதலுமாமென்றும்; "ஹம்ஸோ ஜடாதாரீ த்ரிபுண்ட்ரோர்த்வ புண்ட்ரதாரீ" என்று ஸந்நியாஸோபநிஷதம் உரைக்கின்றபடி, இருவகைப் புண்டரமும் ஹம்ஸஸந்யாஸிக்கு ஆகுமென்றுஞ் சிலர் கூறுப.

ஊர்த்துவ புண்டரார்த்தம் இப்படியெல்லா மாமென்பது நோக்கியே வைணவர் தங்கள் குறிக்குச் "சித்திரோர்த்துவபுண்டரம்" எனும் பெயரிட்டுக் கொண்டனர். இப்பெயர் புதுவதன்று பழைய தெனின்,—இப்பெயரும், (வெண்மண்) ச்வேத ம்ருத்திகா என்பதும், (மஞ்சள்) ஹரித்ரா என்பதும் உபநிஷத்துக்களில் வெளியாகாவாறென்னை? மேலும் உபநிஷத்துக்கள் :—(மேலைப் பஸ்மஜாபாலோபநிஷத்) "தத்ரதத்கோமயத்ரவ்யம் நிதாய" என்றும், (மேலைப் பிருஹஜ்ஜாபாலோபநிஷத்)—

"தஸ்யா: கபிலவர்ணாநந்தா | தத்கோமயேந விபூதிர்ஜாதா |" "தஸ்யா: க்ருஷ்ணவர்ணாபத்ரா | தத்கோமயேந பஸிதஞ் ஜாதம் |" "தஸ்யாரக்தவர்ணாஸுரபி: | தத்கோமயேந பஸ்மஜாதம் |" "தஸ்யா: ச்வேதவர்ணாஸுசீலா | தஸ்யாகோமயேந க்ஷாரஞ் ஜாதம் |" "தஸ்யாச்சித்ரவர்ணாஸுமநா | தத்கோமயேந ரக்ஷா ஜாதா |"

என்றுந் திருநீற்றிற்குத் திரவியங் கூறியாங்கு, அந்த ஹரித்ரா என்பதோடு செஞ்சித்திரோர்த்துவ புண்டரவைணவர் சேர்க்கும்

அரிசி, குன்றிமணி, விளாம்பிசின், எலுமிச்சம்பழச்சாறு, துளவீதளம், வெண்காரம், சீனக்காரமென்பனவும்; மஞ்சட்சித்திரோர்த்துவ புண்டரவைணவர் அந்த ஹரித்ராவென்பதோடுசேர்க்கும் அரிசிமாவுங் கூறினன்றோ பழையதென்பதுநிலைக்கும்: அக்கொள்கையும் வைதிகமாகும். இங்குரைத்தபெயர்களிலொன்றேனும் நூற்றெட்டுபநிஷத்தில் யாண்டும் வந்ததில்லை. கௌஷீதகிப்ராஹ்மணோபநிஷத்தில், "சதமாஞ்ஜநஹஸ்தாச்சதம்சூர்ணஹஸ்தா" என்றதிலுள்ள'சூர்ணம்' ஹரித்ராசூர்ணமன்று. கோமயசூர்ணமெனும் விபூதியாம். இதனை, வைணவர் சிறப்புநூலெனப்படும் விஷ்ணுபுராணம் ரு-ம் அம்சத்து ரு-ம் அத்தியாயத்திற் கிருஷ்ணனுக்குப் பூசப்பட்ட சிவபஸ்மத்தை விளக்குஞ் செய்தியில்—

"உடனே நந்தகோபரும் வந்து அக்குழந்தையை யெடுத்துக்கொண்டு கோமய சூர்ணத்தை அதன் சிரசிற் காப்பாக வைத்து"

என்றதுகொண்டும், "கோமயசூர்ணம்=விபூதி" என்று மேலைய புராணத்து ௩௦௭-ம் பக்கக்குறிப்பில் விளக்கியதுகொண்டு மறிக. இப்புராணத்திலிருப்பதுபோல அவ்வுபநிஷத்திற் கோமயசூர்ணமெனவில்லையேயெனின்,—ஆண்டு ஹரித்ரா சூர்ணமெனவு மில்லையே யெனமறுக்க. இராமாநுஜமார்க்கிகள் தரியாத 'அஞ்ஜந' முமங்஖னிருத்தலின், சூர்ணமென்றது அவர்தரிக்குஞ் சூர்ணமாகாதென்றும் மறுக்க. அதனைச் சித்திரோர்த்துவ புண்டர மஞ்சட்பொடியாக நினைப்பது இந்நூல் அ-ம் பக்கத்தில் வந்த விஷ்ணுதத்வவிளக்க மெனுஞ் சுவடியின் ப-௧௩௦-ல்—

"ஸ்ரீ சடகோபரும் "நிதியுநற்சுண்ணமு நிறைகுடவிளக்கமும் மதிமுகமடந்தைய ரேந்தினர் வந்தே" என்கிறபடியே நிதியே யென்கிற ஸ்ரீ சடகோபரும் நற்சுண்ணமென்கிற திவ்யபரிமளமுடைய மகரந்தப்பொடியாகிய கதம்பப்பொடிகளும்"

என்று வரைந்ததற்கு விரோதமாமென்றும் மறுக்க. ஈண்டுச் சுண்ணம், கதம்பப்பொடி, சூர்ணமென்பன வொருபொருட் கிளவிகளாதல்காண்க. இவ்வாறு வைணவ மதக்குறி புதுவதாயின் மதுரைத் திருவிளையாடற்புராணத்தின் விருத்தகுமாரபாலரான படலத்தில் "மண்மாசு படப்பூசும் வடிவுடையார்" என்பது வைணவரைக்குறித்தலின் அப்புராணமும் புதுவதுதானோ வெனின்,—கூறுதும். சூதசங்கிதை சிலமறையோர்க்குச் சிவபத்தியிலாமைக் கேதுவுரைத்த வத்தியாயத்தில்—

"சக்கரஞ்சங் கங்கதைதா மரைமுதலா மடையாளந் தனுவிற் றக்கித்
துக்கமிக வரசிலேபோற் பாதிமதி போற்சுடருந் தீப மேபோன்
மிக்கநுத லங்கிதங்கொண் டுறவட்ட வடிவும்விழைந் திட்டு நீவிர்
தக்கநெறி யொழுகாது தீநெறிச்சென் றளறனைத்துந் தாழ்ந்து சோர்க."

என்றுகூறியபடி பூதூர் - இராமாநுஜனுக்கு முற்பட்டவராய்க் கௌதம மாமுனிவரிட்ட சாபத்திலகப்பட்டவராயுள்ள வைணவர் ஏற்றபடிதரிக்கு மட்குறியை அத்திருவிளையாடற் புராணங் கூறிற் றாகலின் அது புதுவதாகாது. அந்தமண்ணும் அவ்விராமாநுஜனது சித்திரோர்த்துவ புண்டரமாகாதென்க. அந்நியாயம் மேலேச்சங்கிதையின் ஐதரேயவுபநிடததாற்பரிய வத்தியாயத்தில் "பரம வஞ்ச வாச்சிரமப் பற்றி லாது வெறுப்பாரும்—விரவ நுதலி னீறொழி த்து மேனைக் கியபுண் டரமேனு—மருவு மருக்த மதிவடிவ மாக வேனு மதியாம—லொருவு வட்ட வடிவாக வேனு முறக்கொண் டுழல்வோரும்" என வரூஉஞ் செய்யுட் செய்திக்குங் கொள்க. அஞ் ஞான நீக்கத்திற்காகத் திருநீற்றைத்தான் உபநிஷத்துக்க ளணியக் கூறுமென்பதை அத் திருவிளையாடற்செய்யுண் முதலடி "உண்மாசு கழுவுவது நீறென்றே யுபநிடத முரைப்பக் கேட்டும்" என்று வலி யுறுத்தவாறுங் காண்க.

## ௫. சித்திரோர்த்துவ புண்டரோற்பத்தி.

பொய்கை, பூதன், பேய், திருமழிசையான், குலசேகரன், பெரியான், ஆண்டாளெனுஞ் சூடிக்கொடுத்தாள், தொண்டரடிப் பொடி, திருப்பாணன், திருமங்கையான், நம்மாழ்வா னெனுஞ் சடகோபன், மதுரகவியென்னு மிப்பன்னிரண் டாழ்வாரும், அன் னோர்க்குப் பின்னிருந்துபோய நாதமுனி, உய்யக்கொண்டான், மணற்கானம்பி, ஆளவந்தான்வரை யுள்ளவர்களுஞ் சித்திரோர்த் துவ புண்டரதாரிகளல்ல ரென்றல் தே - குருபரம்பரையிலுள்ள அன்னார் சரித்திரங்களி லறியப்படுதலானும்; அவ்வாளவந்தான் சீடனாகிய பெரியநம்பியைக் குருவாகக்கொண்டு அவனுபதேசித்த துவயமெனும் மந்திரதீக்கை பெற்றபின்னர்த் தன்மனைவியோடு பிணங்கிச் சந்யஸித்துக்கொண்ட பூதூர் - இராமாநுஜனென்பான் தன்னை நம்பிய கந்தாடை முதலியாண்டானுக்குந் திருமறுமார்பனெ னுங் கூரத்தாழ்வானுக்கும் மேற்போந்த குருபரம்பரை ப - ௧௦௬-ல்,

"ராமாநுஜனும் திருவுள்ளமுகந்தருளி, அவர்கள் பிரார்த்தித்தபடியே செய்தருள, அவர்களும் பஞ்சஸம்ஸ்காரங்களையும் லபித்து க்ர்தார்த்தராய்"

என வருமாறு சித்திரோர்த்துவ புண்டரந் தீட்டினனெனுஞ் செய்தி காணப்படுதலானும் இராமாநுஜன் ஸங்யஸித்துக்கொண்ட பின்னர்த்தான் அவனால் அப்புண்டரம் ஏற்பட்டதாகும். பஞ்சஸம்ஸ்கார மென்பது சக்கிராங்கனம், சித்திரோர்த்துவ புண்டரம், தாஸ்யநாமம், மந்திரங்கள், ஆராதனக் கிரமமெனவாம். ஆழ்வாரெழுதிவைத்த சOOO - செய்யுளி லொன்றிலேனும் இப்புண்டரத்திற் குரியனவாய திரவியங்களேனும், ஊர்த்துவபுண்டரம் சித்திரோர்த்துவபுண்டர மென்பவற் றொன்றேனும் வரவில்லை. இங்கே, திருமழிசையான் மண்கொண்டு நாமஞ் சாத்திக்கொண்டன னென்பதூஉம், திருமங்கையான் ஊர்த்துவபுண்டர மிட்டுக்கொண்டன னென்பதூஉம் அன்னார் சரிதைகளிற் காணப்படுகின்றனவேயெனின்,—அவற்றுட் சித்திரோர்த்துவ புண்டரமெனும் வாக்கியமும் விவரமும் இன்மையால் அவை, கௌதமசாபத்தி னேற்றபடி தரிப்பனவாக வேண்டுமென்க. இராமாநுஜ புண்டரமேயெனின்,—இந் நூல் ச - ம் பக்கத்திற் காட்டப்பட்ட பெரியதிருமலைநம்பி கோவிந்தபட்ட னென்பார் தருக்க வாக்கியங்கட்கு முரணுமாகலானும், நம்பிள்ளை யென்பானுக்குப் பின்னெழுதப்பட்ட அக்குருபரம்பரை பல முரணுளதாகலானும், ஆழ்வார் செய்யுள்களி லவ்விதபுண்டரம் விளக்கப்படாமையானும் அது சழக்குரையாமே யன்றி வழக்குரையாகா தென்க. இவ்வேது முதலியன கொண்டுதான் "ஸ்ரீபாஷ்யகாரர் காலத்திற்குமுன்பு இப்போதுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் பஸ்மாதி தாரணராய், க்ஷுத்ர தேவதாந்தரபரராய் மந்த்ராந்தரபரராயிருந்தார்கள்" என்று வைணவருங் கூறினர். இவ்விவரத்தை இந் நூல் ச - ம் பக்கத்திலெடுத்துக் காட்டினோம், காண்க. பாஷ்யகாரர்—இராமாநுஜன். ஈண்டுரைக்கப்பட்ட புண்டரமண்ணைத் திருநாராயணபுரத்து வெள்ளைக் களிமண் அல்லாத யாதானுமோர் மண்ணைகத் தீர்மானிக்கவேண்டும். என்னை ? மேற்சொற்ற தீட்டுகளின் பின்னர்த்தான் அக்களிமண் கண்டுபிடிக்கப்பட்ட செய்தி காணப்படுதலின். அது வருமாறு :—வ - குருபரம்பரை ப - ளள - ல்—

" சகவர்ஷம் ஆயிரத்திருபத்தொன்றான பகுதான்ய வர்ஷம் பங்குனி மாதத்தில் சுக்ல சதுர்த்தசி குருவாரங்கூடின புனர்வஸு நக்ஷத்ரத்தில் திரு

*நாராயணப் பெருமாளைக்கண்டு திருவடிதொழுது சகல மங்களவாத்யங்களோடே பாவினால் திருமஞ்சனஞ் செய்வித்துக் கல்யாண ஸரஸின் வடமேற்கில் திருமண்ணையுங் கண்டெடுத்துக் கோயில் நகர் முதலியவைகளைத் திருத்தி "*

என்பதாம். இதனானே சாலிசகம் கஅஉக - ல் நிகழும் இந்தப் பராபவ வருடத்திற்கு அ௦அ - ம் வருடத்தில் அவ்வெள்ளைக் களிமண் வெளிப்பட்டதென்க. இராமாநுஜன் காலம் அவ்வளவாகாது, குருபரம்பரைக் கூற்று நம்பத்தக்கதன் றென்றுஞ் சிலர் கூறுப. அஃதி யாதாயினுமாக. அக்களிமண்ணிற் கியைந்த மஞ்சட்பொடியு மங்ஙனமே அவ்விராமாநுஜனா லுண்டாக்கப்பட்ட தென்பதூஉம் உடையவர்சூர்ணவிளக்கம் ப - க௦க, க௦உ - ல்—

*" இந்நாட்டில் திருமண் கிடைத்ததுபோல் ஸ்ரீசூர்ணமுங் கிடைக்கவேண்டுமேயென்று தமது திருவுள்ளத்திலெண்ணி மூன்று ஸாத்தாத முதலிகளைக் கீழ்நாட்டினின்றும் வருவித்து அவர்களைக் குடியேற்றி அவர்களைக் கொண்டு ஸ்ரீசூர்ணஞ் செய்வித்துப் பகவத் சந்நிதிமுதலிய விடங்களில் விநியோகித்து வர்த்திக்கக் கட்டளையிட்டருளினார் கிடீர் ஸ்ரீ உடையவர். அவர்களும் நாளது வரையில் திருநாராயணபுரத்தில் மூன்று குடிகளாக விருந்துகொண்டு ஸந்நிதி கைங்கர்ய பராளாக ஜீவித்துவருகிறார்கள். இஃது இன்றுஞ்சான்றாக அக்குடிகளைக்கேட்டுணரத் தட்டில்லை. அன்றுதொட்டு உடையவர் ஸ்ரீ சூர்ணமென்று வழங்கிவருகிறது ப்ரசித்தமன்றே......உடையவர் ஸம்பந்தமுடையார் அகிலருக்கும் அதுவே உஜ்ஜீவனமாயிற்று."*

என்று வரையப்பட்ட சொற்களினறியபபடுகின்றது. உடையவர்=பூதூர் - இராமாநுஜன். இனைய நவீனக்கொள்கையை இராமாநுஜன் ஏனுண்டுசெய்தன னெனின்,—கூறுதும். மேற்சொற்ற கௌதம மாமுனிவர் சாபத்திலகப்பட்ட வைணவ ரேற்றபடி தரித்து வந்த குறிக்குவேறாக நாமொன்று கற்பித்து அதனை நம் பேரால் விளங்கவைத்துக் கொள்வோம்: இம்மதத்திற்கு நாமொரு பேராசிரியராய் விளங்கிப் புகழ்பெறுவோம்: பூஜையும் பெறுவோமென் றெழீஇய தன்கருத்து முற்றுறுமாறே அவனவ்வாறு புரிந்தவனாதல் வேண்டும். இவ்வித நவீனமதவெண்ணம் இக்காலத்தும் பலர்பாலுங் காணலாம். இவ்வேதுவை அவ்வெளிற்று மட்குறிப்பொடி " உடையவர்சூர்ணம் " எனவும், தென்கலைப்புண்டரத்தி னடியில் வரையும்பீடம் "இராமாநுஜன்" எனவும் வழங்கப்படுதலும், இந்நூல் ச - ம் பக்கத்தி லுதாகரிக்கப்பட்ட குருபரம்பரைக்கூற்றில் "இதுவும் புதுவார்த்தைக்கட்டுகளோ" என்ற வினாவிற்கு அவ்

விராமாநுஜன்காலத்திருந்தபெரியதிருமலைநம்பி"பழையவார்த்தைக் கட்டுகளு மிப்படியே" என்ற ஒப்புவிடையிற் சித்திரோர்த்துவ புண்டரம் புதுக்கட்டுத்தானென்று பொருளாதலும் வலியுறுத்தும். இப்படி யொப்பியுள்ளதை அன்னார்க்குப் பின்னுண்டாய வைண வருட்சிலர் தமது புண்டரம் வைதிகர்களால் அவைதிகமென் றலைக் கப்படுதலை மாற்றுவான் பல வாக்கியங்களையுங்கற்பித்தமை ஆசாரி யத்துரோகமும், அயோக்கியமுமாகும். ஒருபொய்யை நிறுவ எத தனையோ பொய் வேண்டும்! இதுநிற்க.

இப்புண்டர விடயத்திற் சிற்சிலர் தெரிக்கும் அபிப்பிராயங் களையும் ஈண்டுக் கூறுகின்றனம். சந்தநோர்த்துவ புண்டரத்தை வைஷ்ணவர்களும், சில சிமார்த்தர்களுந் தரிக்கின்றமையால் அவ ருள் வைஷ்ணவரைப்பார்த்தவுடன் இவர் வைஷ்ணவரென வறியக் கூடவில்லையென்பது கருதியே இராமாநுஜர் இம்மண் மஞ்சளோடுங் கூடிய புண்டரத்தை யேற்படுத்தின ரென்கின்றனர் சிலர்.

விரஜாநதியடையாளமாகப் பிறைபோன்ற வெண்கீற்றும் அத னடுவிற் சோதியடையாளமாகச் செந்தீபாகாரரேகையும் இராமா நுஜரேற்படுத்தினர்: அவற்று ளிக்காலத்தார் வெண்கீற்றை நெருக் கியும், அடிகளாக வரைந்தும் பலவிகாரஞ் செய்துகொண்டனரென் கின்றனர் சிலர்.

வெண்கோட்டி னிருகடையும் புறஞ்சாய்ந்து மேற்பாக விடை யகன்று கீழ்ப்பாகவிடை யொன்றி நடுவே செந்நிற இரேகையிருப் பது பெண்குறிபோலிருக்கிறதென்று பிறர் பரிஹாஸஞ்செய்தனர்: அதன்பின்றைத் தென்கலையாரென்பார் அவ் வெண்கோட்டை யிரண்டு பாதங்களாகச் செய்துகொண்டனர்: வடகலையாரென்பார் அதனை மிகவு நெருக்கிக்கொண்டன ரென்பது சிலரபிப்பிராயம். யோனிபுண்டரமென்பதுஞ் சில புத்தகங்களிற் காணப்படுகின்றது.

இராமாநுஜருடம்பில் வியர்வையுண்டான போது அவரது நெற்றியி லிடப்பட்ட புண்டரத்தின் கீழ்ப்பாகவெள்ளை கலந்து மூக்கினடியிலிறங்கிப் பின்புலர்ந்திருந்தது. அஞ்ஞான் றவரைக்காண் பான்வந்த வைஷ்ணவர்கள் மூக்கிலிருக்கும் இறக்கங் குறித்து இப் படியு மிடலாமோ வென்று கேட்டகாலை இடலாமென்று அவர் கூறினர்: அதுமுதற் றென்கலையர் மூக்கிலெழுதும் வெள்ளையுண் டாயிற்றென்றல் சிலரபிப்பிராயம்.

தென்கலைக்குறியெனப் படுவதன்கீழே தாமரைமலர்போலே வரைதல் பற்றித் தென்னாசாரியப்பிரபாவகண்டனத்தார் ப - ௮௧-ல் "சிலர், திருமணிடுகிற சுமார்த்தரில் வைலக்ஷணிய மேற்படும் பொருட்டு அடிப்பாதமிடும்படி மணவாளமாமுனிகள் நியமித்தார் என்று சொல்லுகிறார்கள்" என்றனர். வித்தியாசத்தையே வைலக்ஷணியமென்றனர். இவர் ப-௭௩-ல் "குருட்டுத்தனமாய்வந்த வழக்கத்துக்கு ஒரு கெதிசொன்னதுபோலவே யல்லாமல் வேறல்ல." என்று தென்கலைக்குறிச்சமாதானத்தைக்கண்டித்தவருமாயினர்.

## ௬. சித்திரோர்த்துவபுண்டரம் பாஞ்சராத்திரத்துளதுகொலெனும் விசாரணை.

---

"நாஸாத்வியங்குளம்பாதம் மத்யம் ஸார்த்தாங்குளம் பவேத் |
பார்ச்வ மங்குளமாத்ரந்துஸ-ஸ்பஷ்டம் தாரயேத்விஜ ஃ||"

(இ-ள்.) அடிமூக்கி லிரண்டங்குல பாதமும் நடுவி லொன்றரையங்குலமடமும் விட்டுப் பக்கத்தில் ஓரங்குலமும் நன்றாய்த் தரிக்கவேண்டும்.

விஷ்ணவர்ப்பிதம் ரக்தவர்ணம் ஹரித்ராசூர்ண முத்தமம் |
லக்ஷ்மீ நிவாஸ ஸித்யர்த்தம் தீபாகாரந்து ஸூக்ஷ்மகம் ||
ஊர்த்வபுண்ட்ரஸ்ய மத்யேது லலாடே தாரயேத்விஜ ஃ |

(இ-ள்.) ஏ ப்ராஹ்மண! பெருமாளுக்குச் சமர்ப்பித்ததாய், சிவந்த நிறமுள்ள உயர்ந்த ஸ்ரீ சூர்ணத்தைப் பிராட்டி நிலைபெறுகைக்காகத் தீபாகாரம் போலே மெல்லியதாய்த்திருமாண்காப்பினடுவில் நெற்றியிற்றரிக்க வேண்டும்."

எனும் வடமொழிகளும் பொருள்களும் மேற்போந்த சூர்ணவிளக்கத்தின் ப - ௬௪, ௬௫ - ல் எழுதப்பட்டன. அங்ஙனம் இவ்வடமொழிகள் பாஞ்சராத்திர பராசரசம்மிதையிலுள்ளன வென்பதும் வரையப்பட்டுள்ளது. இவற்றுண் முந்துற்ற வடமொழி, தென்னாசாரியப்பிரபாவ மெனுஞ் சுவடியின் ௨௦ - ம் பக்கத்திலும், "மூக்கின் மூன்றிலொருபாகமான நாஸிகையிலிருந்து புண்டரந் தரிக்கவேண்டும்." எனும் பாஞ்சராத்திர பாத்மசம்மிதையின் வசனமென்பதொன்று ௬௩ - ம் பக்கத்திலுமாக வந்து மேற்படிகண்டனம் ப - ௫௫, ௫௬ - ல்—

"கற்பித பாஞ்சராத்திர பராசரசங்கிதா வசனங்களில்" என்றுதொடங்கிச் சிலகூறி, "நாசிகையினுதியாவது, இரண்டங்குலத்துக்கு அதிகமாயிருக்க வேண்டியது: இருந்தால் மூக்கு ஆறங்குலத்துக்கதிகமாயிருக்கவேண்டுமே:

அங்குலமாவது லீலாவதிமுதலான கணிதசாஸ்திரத்தில் சொன்னபடி குறுக்காக வைக்கப்பட்ட எட்டு யவதானியங்களி னளவாகின்றது. அதாவது இப்போது வழங்கிவருகிற கஜக்கோல் முதலானவைகளிற் குறித்த அங்குலந்தான். ஆகவே இப்படி ஆறங்குலத்துக்கு மேற்பட்ட மூக்கு இந்தப் பூமண்டலத்திலெந்த மனிதனுக்கு மிருக்கமாட்டாதே ஆகவே இந்த வசனங்களைக் கற்பித்தவர்கள் நன்றாயோசித்துக் கற்பிக்கவில்லையென்று தோன்றுகிறது."

என்று பரிஹாஸஞ்செய்து கண்டிக்கப்பட்டன. இதனாற் சித்திரோர்த்துவ புண்டர விடயமான கற்பனா வாக்கியங்கள் சில புத்தகங்களி னுழைக்கப்பட்டபடியே பாஞ்சராத்திரத்தும் நுழைக்கப்பட்டனவாகும். இந்நுழைப்பினை யுறுதிப்படுத்த இன்னும் வரு வாக்கியங்களாவன :—தென்னாசாரியப்பிரபாவம்—

ப-௯-ல் "திரவிடவேதத்தையும் அத்தியயனம் பண்ணும்படி" என்றும், ப-௪-ல் "தென்கலையையப்பியசித்து அதன்பொருளை யறிந்தவர்கள்" என்றும், ப-௫-ல் "தங்கள் சாகைகளுந் திருவாய்மொழியும் மூன்றுதலைமுறை அத்தியயனம் பண்ணாமல் எவர்களால் விடப்பட்டதுகளோ அவர்களிடத்தில் சொல்லத்தகாத துர்ப்ராமணத்துவமுமாகும் என்று கேழ்விப்படப்படும்."

என்றும் வருவனவே. இவை பாஞ்சராத்திர வாக்கியங்களின் பொருள்களென்று அங்ஙனே உரியவடமொழிகளோடெழுதப்பட்டுள்ளன. இவற்றுள் ஆள்வாரெனப்படுவா ரெழுதிவைத்த (௪000) நாலாயிரப்பிரபந்த மென்பதே திரவிடவேத மெனப் பட்டது. அதனுள்ளுஞ் சடகோபனென்பா னெழுதி வைத்த ௧000-செய்யுளே திருவாய்மொழியெனப்பட்டது. வ-குருபரம்பரையினுள்ளபடி அச்சடகோப னென்பானது ஜனனகாலம் கலியுகம்பிறந்த பிரமாதிவருடமெனவும், எல்லா ஆழ்வார்க்கும் பிற்பிறந்த கள்ளத்திருமங்கையானது ஜனனகாலம் கலியுகம் ௩௯௮-வதான நள வருடமெனவுங் கொள்ளினும் அச்செய்யுட்டிரட்டு, கலியுகத்த தென்றலேற்படும். இது பழமையான பாஞ்சராத்திரத்தி னுழைந்தமையின், இதனை விளக்கும் வடசொற்பல அதனிடை நுழைக்கப்பட்டனவென்றலேற்புடைத்தே. இதுவேயுமன்றி, வ-குருபரம்பரையினுள்ளபடி கலி ௪௩௭0-க்கு மேல் சுக்கிலவருடம் பிறந்த வேங்கடநாதனையும், ஆழ்வாராசாரியர்கள்வைபவ மென்பதிலுள்ளபடி கலி ௪௪௭௨-வதான சாதாரண வருடம் பிறந்தவனாக வெண்ணப்படும் மணவாளமுனியையும் பாஞ்சராத்திரமானது நிரலே கண்டாவதாரமென்றும், சேஷாவதாரமென்றும் பகர்வதாக அத் தேன்

ஞசாரியப்பிரபாவத்தின் ப-எகூ - ற் சில வடமொழிக ளுதாகரிக்கப் பட்டன. அவ்வுழை யின்னன பலவுள. இவையுறுழைப்பே. சமீப காலநுழைப்பாய இவையெல்லாம் அந்த மட்குறிநுழைப்பை யுறு திப்படுத்துதல் காண்க. மேலெடுத்துக் காட்டிய வடசொற்களைத் தென்ஞசாரியப்பிரபாவகண்டனத்தாரும்—

"ஒரு பிரசித்த கிரந்தத்திலும் இவ்வசனங்க ளெடுத்திருக்கவில்லை இது முதலான காரணங்களால் சந்தேகிக்கத் தக்கனவா யிருக்கின்றன......இவ்வச னங்களை மத்தியஸ்தருக்கு ஒப்புக்கொடுக்கக் காரணங் காணப்படாமையா லிப் படி யெழுதலாயிற்று." என்று ப - உஎ, உஅ - லும்,

"அவ்வைபவ விஷயத்தில் புராண பஞ்சராத்திர முதலான பிரமாணங்க ளெழுதினதைக் குறித்து மாத்திரம் சிரிக்கவேண்டி யிருக்கிறது—ஏனெனில் திருமழிசை யண்ணுப்பங்காரே தேசிகர் மணவாளமாமுனி இவர்களுடைய அவதாரத்தைக் குறித்த புராணுதி பிரமாணங்களில்லை யென்பதை **திரிம்சத் பிரசிஞேத்தரம்** என்கிற கிரந்தத்தில் தெரிவித்திருக்கிறது மல்லாமல் இது வரையி லவர்வைபவங்க ளெழுதினவர்களி லொருவரும் புராணுதி வாக்கியங் களை எழுதினுரில்லை. ஆனல் இப்புராண பஞ்சராத்திரங்களை யிவரைப்போ லிருக்கிற இக்காலத்து முனிவர் செய்திருக்கலாம். பூர்வபக்ஷி, தாம் புராணு திகளென்று எழுதின சுலோகங்களெல்லாம் யதார்த்தமென்று ஸ்தாபிக்கவந் தால் இதற்கு மிகவும் விபரீதமாக மாறுபட்டிருக்கிற அர்த்தமுள்ளதாய் சில ஸ்ரீ வைஷ்ணவர் **பிரமாண்டபுராணத்திற் சேர்ந்ததென்று இரண்டத்தி யாயம்** வைத்துக்கொண் டிருப்பதையும் ஸ்தாபிக்கவேண்டி வரும்."

என்று ப - கஅங - லுங் கண்டித்தனர். பாஞ்சராத்திரம் அப் பிரமாணமாமென மேலே யினிது விளக்கினுமாகலின், அதிலுள்ள நுழைப்பும் பயன்படுமாறின்று. இவ்விடயம்பற்றி யின்னும் விசா ரிப்போமாக. கோவிந்த பட்டனுக்கும் பெரியதிருமலை நம்பிக்கும் புண்டர விஷயமாக நிகழ்ந்த தருக்கங்குறித்து இந்நூல் ச - ம் பக்க த்தி லெடுத்துக்காட்டப்பட்ட தே - குருபரம்பரைக் கூற்றில் "இதி லே பூர்வவிசாரம் வேண்டாவோ" எனுங் கோவிந்தபட்டன் வினு, வேதமுதலிய நூல்களைக் குறித்துப் பொதுமையி லெழுந்ததாகும். அதற்கு விடையிறுத்த அந்நம்பி, வேதம் விளம்பாவிடினும் பாஞ்ச ராத்திரமுண்டு, ஸ்மிருதியுண்டு, புராணமுண் டென்னுமற் "பரத்வத் திலேகாண் விசாரமிருப்பது" என் றெழுந்தவனுயினுன். ஆண்டு விவரமுரையாதிருக்க நியாயமின்றே. இருப்பினன்றோ வுரைப்பன் இருந்தவற்றை அவனறியானெனின்,—அறியாது கூறினுய். அவ

ன்.—பூதூர் - இராமாநுஜனுக்குத் தாய்மாமனும், அக் குருபரம்பரையின் ப - ௩0௬ - லுள்ளபடி அவ்விராமாநுஜனால் "தேசிகாக்ரேஸரான பெரியதிருமலை நம்பியே கடவர்" என்று புகழ்ந்தனுப்பப் பட்ட வைஷ்ணவாசாரியனுமாவனாகலின் அவனறியாத வைஷ்ணவாநுகூல வசனகோச மிராதென்க. அதனால் அந் நம்பி விடை மொழிக்குப் பின்னைதான் மண்மஞ்சட்புண்டர வசனங்கள் பாஞ்சராத்திரத்திலும், சில மிருதி புராணங்களினு நுழைக்கப்பட்டன வென்பது தெள்ளிதாம். இவ்வித ஹேதுக்களை யறியாதார் சித்திரோர்த்துவ புண்டரதாரணம் பாஞ்சராத்திரக் கொள்கை யென்ப. ஆழ்வார் செய்யுள்கள், பெரும்பான்மை பாவினமாகிய நாலடி விருத்தங்களாக விருத்தலால் வ - குருபரம்பரை கூறிய அந்த ஆழ்வார் காலங்கள் அத்துணைத் தூரமாகா வென்பதேற்படும். அவை சமீபமேயா மென்பதைப் பின்றை விளக்குமிடத்து விளக்குதும்.

## எ. நாராயண விக்கிரகத்திற்குச் சித்திரோர்த்துவ புண்டரமிடலொண்ணாது.

மேலே சாதிக்கப்பட்ட நியாயவாயிலாகச் சித்திரோர்த்துவ புண்டரதாரணம் வேதப்பிரதிபாதிதமாகாத பாஷண்டமாகலின், அதனை நாராயண விக்கிரகத்திற்கு எவருமிடலொண்ணாது. பூதூர் - இராமாநுஜன் காலத்திலும் அவ்வித விக்கிரகாதிகட்கு அஃதிடப் பட்டதின்று. பிற்காலத்தினரால் சில விக்ரஹங்களுக் கிடப்பட்டதாகும். இதனை, விவேகபானுவெனும் பத்திரிகையின் க - வது வால்யூம் உ௩௪ - ம் பக்கத்தில்—

"தாம் நெற்றியிலிடப்பெற்ற சின்னத்தைப் பெருமாள் நெற்றியிலும் ஏற்றிவிட்டனர்"

என்று வைஷ்ணவாபிமானமுள்ள எஸ். ஆர். கிருஷ்ணமாசாரியார். பி. ஏ. எழுதியிருத்தல் கொண்டுமறிக. திருநீறுதரிக்க மனமிலா வைஷ்ணவாசாரியருளொருவனை கூரத்தாழ்வான்மகன் பராசரபட்டனென்பான்—

"திருநுதலில் கஸ்தூரித்திருநாமமும் பரமபதத்தில் கண்டிலேனாகில் ஒரு மூலையடியே முறித்துக்கொண்டு குதித்து வருவேன்"

என்றுரைத்தனனென்றல் தே - குருபரம்பரை ப-௩௨௫ - லுள்ளதுஞ் சித்திரோர்த்துவ புண்டரத்தை மறுக்கின்றது. நிற்க. இக்

நூல் கங-ம் பக்கத்தி லெடுத்துக்காட்டப்பட்டபடி சித்திரோர்த்துவ புண்டரத்தின் வெண்குறிகள் ஹரியின் பாதங்களென்றும், மஞ்சட்குறி யல்லது சிவப்புக்குறி இலக்குமியென்றும், அவ்வைணவரொப்புகின்றனர். ஆயின், ஹரிபாதங்களையும், ஹரி மார்பிலிருக்கும் இலக்குமியையும் ஹரியினது நெற்றியிலேற்றுவது நறிதாங்கொலோ? அவன்றான் அன்னணமேற்றிக்கொளற்கு நியாயமுண்டுகொலோவெனுங் கடாக்களுக்குப் பாலுண்குழவிநோய் நிமித்தந் தாய்மருந்துண்ட லொக்குமெனல் விடையாமெனின்,—அது சாலாது. என்னை? கறுப்புப்புண்டர சந்தநபுண்டர வைணவரொப்புதலும், நான் தரிக்குஞ் சித்திரோர்த்துவபுண்டரம் இன்ன பொருளுடைத்தென ஹரி சொன்ன பிரபலவாக்கியமும், ஹரியின் அகப்பாதஞ் செம்மையேயன்றி வெண்மையென்பதும், வைணவர்க்கிடுஞ் சங்கசக்ரச் சூடுகள் ஹரிக்குமிடுதலும் இல்லையாகலின். ஹரியின் அகப்பாதஞ் செம்மையென்பதை, "கையொடு கால்கள் செய்ய கண்ண பிரானுக்கென்" எனுஞ் சடகோபன்கூற்றானுமறிக. இவ்வாறாயின் நாராயணவிக்கிரகத்திற்கு இடத்தக்க புண்டரந்தான் யாதெனின்,—வேதபடிதமான சிவபஸ்மமே யிடத்தக்கதாகும்: வாஸுதேவோபநிஷத்திற் கூறப்பட்ட சந்தநபுண்டரமு மாகுமென்க. ஸ்ரீமந் நாராயணன் சிவபஸ்மதாரியென்பதைச் சுருதியாதி பிரமாணவாயிலாக விளக்குழி விளக்குவேம்.

## அ. சித்திரோர்த்துவபுண்டரம் ஒழுங்கீனமாகக் கற்பிக்கப்பட்டது.

தென்கலை வைணவரென்பாரெழுதும் அரிபாதாகிருதியிற் சங்கு, கொடி, தண்டம் முதலியன வெழுதல் சாமுத்திரிக சாத்திரத்திற்குமுரணும். இம்முரணைத் தென்னாசாரியப்பிரபாவகண்டனத்தாரும், ப-சுக-ல்—

> "இஞ்சித் தந்தவடிவானரேகைகள் மஹாபுருஷன் திருவடியிலிருக்குமென்று சாமுத்திரிக சாஸ்திரஞ் சொல்லுகையால் அப்படி சில ரேகைகளெழுதவேண்டியதே யல்லாமல் சங்குமுதலான சொரூபங்களை யெழுதவேண்டுவதில்லை."

எனவிளக்கினர். இனி அப்புண்டரம் பதுமபீடத்திற் பாதமிருப்பதாகச் சித்திரிக்கப்படுவதில், குதிங்கான்மட்டும் பதுமவிதழ்

நுனியிற் பொருந்தவும், பாதத்தின் மற்றைப்பாகம் மேலேயெழும்பிக்கொண்டிருக்கவுஞ் செய்தலும் ஒழுங்கீனமே. இச்செய்கை நாராயணனது முதுகு கீழேபடிய அவனை மலர்த்தி வீழ்த்திய குற்றமாகவேனும், அவனடிக்கு அலக்கணிழைத்த குற்றமாகவேனும் முடியும். பதுமத்திற் பாதம் முழுதும் பொருந்த அங்ஙனெழுத வேலாதெனின்,—ஏலுமென்பதைச் சித்திரங்களிற் காண்கவென்க. அவ்வாறுவதேல் மேனோக்கிய ஊர்த்துவபுண்டர மாகாதேயெனின்,—ஆகாததை யேன்செய்யவேண்டுமென்க. அதனால், அப்புண்டரம் பாதாகிருதியாகவும், பதுமபீடமாகவு மமைக்கொணாதென்க. இந்நியாயம் தென்னாசாரியப்பிரபாவகண்டனம் ப - ருஉ - லும்—

"குதிகாலைப் பீடத்திலிருத்தி மற்றைப்பாகத்தை மேனோக்காகவைத்துக்கொண்டிருக்கும்படியான நிலை யெவனுக்கு மெக்காலத்திலு மிருக்கமாட்டாது."

என்றொப்புக்கொள்ளப்பட்டது. இதுநிற்க. விஷ்ணுவின் மார்பிலிருக்கும் இரமையாகிய இலக்குமியை விரல்களோடுங்கூடிய பாதவுருக்களின் மத்தியில் அவயவமில்லாமல், தீபாகாரமாகப் பிரதிஷ்டைபண்ணுதலும் அங்ஙன் அசங்கதமே. இரண்டடிகட்குந் தீபாகாரத்திற்குங் கீழே பெரிதாயெழுதப்படாமற் சிறிதாயெழுதப்படுவதைப்பீடமென்பதும் அளவைக்கிலக்காகாததே. சுவர்முதலியவற்றிற் பீடமொன்று பெரிதாயெழுதிக்கொண்டு அதன்மீதெழுதும் பட்டைச் சித்திரோர்த்துவபுண்டரத்தி னடியிற் சிறுத்துளதைப் பீடமென்பதும் அசங்கதமே. மூக்கிலிருந்து மேனோக்கமாகத் தீட்டப்படும் அத்தென்கலைப்புண்டரமானது நெற்றியி லொருவிதமும், நாபி, மார்பு, கழுத்து, நாபிக்கு வலப்பக்கம், வலத்தோள், அத்தோளின் மேலிடம், நாபிக்கு இடப்பக்கம், இடத்தோள், அத்தோளின் மேலிடம், முதுகு, பிடர் இவைகளி லொருவிதமுமாகவிருத்தலும்; இந்தப் பட்டைப் புண்டரத்திற்கு வேறான வொன்று வைணவப் பெண்கள் முகத்திற் காணப்படுதலும் ஒழுங்கீனமே. அடியின்கீழ்வரையுங் கமலத்தை இராமாநுஜ னென்றலும், சிவந்த பாதத்தை வெண்பாதமாயிடலும் ஒழுங்கின்மையே. விவரம் இந்நூல் கரு - ம், உரு - ம் பக்கங்களிற் சொற்றும். இவ்வேதுக்களான் "ஒட்டகமே யுன்னுடம்பி லெவ்விடஞ் செவ்விது!" என்றபடி பரிஹாஸம்பண்ணுவதற்கன்றோ அக்கொள்கை யமைந்ததாயிற்று.

அந்தப் பட்டைப் புண்டரந் தீட்டப்பட்ட முகமானது பெருவிகா ரமாய்ப் பார்ப்பவர்க்குப் பயங்கரத்தை யுண்டுசெய்வதா யுளதென் பதை நாகரிகமுளாரி லெவர்தா மறியகில்லார். கர்மம்! கர்மம்!! மனிதருறுப்பிற் சிறப்புடைத்துமுகம். அதனின்மூக்கு நேரியதாய் அழகுவாய்ந்ததாகும். எல்லா அவயவங்களு நன்கமையப் பெற்ற யாதோருருவில் அம்மூக்கொன்று சிறுவரை கோணினும், பதுங்கி னும், குறையினும், பெருக்கினும் அவ் வழகெலாம் நீங்கும். மூக் கறுபட்டவனையே 'மூக்கறை' என்றும், பெருத்து நீண்ட மூக்க னையே 'மூக்கன்' என்றும், பதுங்கிய மூக்கனையே 'சொட்டை' 'சப்பட்டை' என்றும் இழித்துக்கூறு மிவ்வுலகம். இதனை யொரு சிறிது முணராராய் மூக்கினடியில் வெள்ளை யடித்துக்கொண்டு வேதபடிதமான அழகிய பஸ்மதாரணத்தை நிந்தித்துத் திரிகின்ற விவேகஞ் சால வியக்கற்பாலதே! குடுகுடுப்பைக்காரன் முகத்தி லேனு மிவ்விகார முளதுகொல்லோ! யாதானு மோர்தண்டனை நிமித்தம் ஐங்குடுமிவைத்து முகத்திற் கரும்புள்ளி செம்புள்ளி குத்தி யொருவனை யனுப்புதல் பண்டைக்காலத் திருந்ததெனுஞ் செய்தி, யாங் கேள்விப்படுமாறன்றோ இவ்வைணவர் கோலமு மாகின்றது. இவ்வாறுதல் அவர் பட்டாங்கிழைத்த பவாநுபவம் போலும். முகத்தில் வெளிற்றுப்பட்டை தீட்டல் விகாரமென்பது கருதியே அவ் வைணவர் பெண்கள் மூக்கின்மேலே யிளம்பிறை போன்ற வெண்குறி யிடும்படி பராசரசங்கிதை யென்பதி லெழு திக்கொண்டனர் போலும். அதுவுங் "காணுங் கோழிக்குக் கழுத் திலே வெள்ளை" என்றபடி மூக்கின தழகைச் சிறிது குறைக்கத் தான் ஏற்பட்டதாயிற்று.

வெள்ளைக்காரருள் உத்தியோக வுயர்வுள்ள ஒருதுரையின திருப்புக்குக் கீழான கட்டிடத்தில் எழுத்து வேலைக்காக வமர்ந்தா ருள் ஒரு வைணவர் தமக்குரிய விசேடதின மொன்றிற் றம்முடம் பிற் பெரும்புண்டரந் தீட்டிக்கொண்டு மேற்கஞ்சுகமின்றி வேலையி லிருப்ப, அத் துரை ஏணிவழியாக இறங்கி வருகையில் அவர துருவைக்கண்டு இது பேயோ மற்றியாதோ வென்றஞ்சி யலறிக் கீழே வீழ்ந்து மூர்ச்சித்துச் சிலர் விசிறிகொடு வீசியபின் றெளிந் தெழுந்து அஃதென்னையென விசாரித்துண்மை யுணர்ந்து, அவரை யக்குறியை யழித்து வருமாறு செய்வித்தழைத்து, இனி யிவ்வித விகாரங்களைச்செய்துகொண்டு வருவையேல் நீ வேலையினின்றும்

விலக்கப்படுவாயென் றறிவித்தபின்பு அவ்வைணவர் பிறரிடுஞ் சிறு கீற்றுச் சித்திரோர்த்துவ புண்டரமுமிலாது வேலைபார்த்து வந்தன ரெனுஞ் செய்தியொத்த பலசெய்தியுஞ் சென்னையி லுளார்பால் இன்றுங் கேட்டறியலாம். இருட்டிலே யிப்பெரும் பட்டைப்புண் டரமுகம் எவரைத்தான் அச்சுறுத்தா திருக்கும்! அதனினுங் கரிய முகமாயின் எற்றென்னலாம்!! இப்படிப்பட்ட விகாரக்குறி.— கேசவாதிநாமஞ் சொல்லி யிடப்படுதலால் நாமமெனும்பெயர் பெற்றதெனச் சிலர்மொழிப. அப்பொருளும்; நாம்+அம்=நாமம். நாம்=அச்சம், அம்=பண்புப்பெயரிறுதிநிலை யென்றுமாற்றுற் பார்ப்பவர்க்கு அச்சத்தை விளைக்கும் விகாரமுடைத்தெனும் இப்பொருளும் பொருந்த எந்தப் புத்திசாலியோ வைணவருங் கூசாது கூறிக்கொள்ளும்படி அக்குறிக்கு நாமமெனும்பெய ரமை த்துவிட்டனன். சொல்லிய துரையின் செய்கை வெளிப்பட்ட பின்னர் அனேக வைணவர்கள் அப் பட்டைநாம மொழித்துச் சிறுகீற்றுக்குறி யிட்டுக்கொண்டு வெள்ளைக்காரர்களிடம் வேலை பார்த்துவருகின்றன ரென்பதும் அச்சென்னையிலறியலாம். வைண வர் பல்லோருள்ளும் நாகரிகத்தை அபேக்ஷித்த சிலர், மிகு வெள் ளைதோன்றாது மெல்லியதாய் நெருங்கியதாய்த் தெரிவான் அக் குறியிடுகின்றனர். அவரினு நாகரிகத்தை அபேக்ஷித்தவர் சிவப்பு அல்லது மஞ்சணிறமான சிறிய இரேகைமட்டுமே யிடுகின்றனர். நாகரிக மொருசிறிது மற்றவரே அப்பட்டைநாமந் தீட்டிக்கொள் கின்றனர். அன்னவருளொருவரை நாங்கண்டவாறு நவில்கின்றாம். யாமும், எம் அன்பார்ந்த (சென்னை) C. S. கோவிந்தராஜமுதலியா ரும் சென்னைச் சமுத்திரக்கரையைக் குறுகி யவணிருந்தபோது ஆண்டொரு புஷ்டித்த வைணவர், மேற்செம்போர்வை யொன்று போர்த்துக் கையிலொரு தடிபிடித்து அசைந்தசைந்து நிமிர்ந்த ஆகாரமாக வந்தனர். அப்போது புறத்தே விளையாட் டயர்ந்துகொ ண்டிருந்த சிறுவர்கள் விரைந்து வந்து அவரது முகத்தை யுற்றுற் றுப் பார்த்தனர். அதுகண்ட யாங்களிருவரும் அவரது முகத்தை நோக்கினோம். அவருமெங்களையும் அச்சிறுவர்களையுங் கடைக் கண்ணானே பார்த்து நமதுநாமத்தைத்தா னிவர்கள் அதிசயமாகப் பார்க்கின்றனரெனுங் கருத்தோடு நாணிச்செல்லுங் குறிப்பு அவர் கண்ணே காணப்பட்டது. உச்சியிற் சிறுசிகைவிட்டுச் செவ்வே சிரைக்கப்பட்ட மண்டையினும், நெற்றியினும், மூக்கினும், புருவத்

திலும் பொருந்தத் தீட்டப்பட்ட அவரது புண்டரத்தின் வெளி ற்றுமட்டுகுறி, மூக்கினின்றெழுந்து இரண்டு புருவங்களையு முட்படு த்தி யிரண்டு செவிவரையும் அகன்று உச்சிச் சிறுசிகைபரியந்தம் ஓரளவாய் மேனீண்டிருந்தது. அதன்மத்தியிற் றீட்டப்பட்ட சிவப் பும் அச்சிகைபரியந்தஞ் சென்றிருந்தது. இந்த ஆகாரத்திற்கியைய அடிப்பீடம் பெரிதா யமைப்பதற்கு அவரதுமூக்குப் போதாமை யாயிற்று. போதாமை கணித்து அவரும் வியசனித்திருப்பர்போ லும். இக்கோலத்தை யெம்முடனிருந்து கண்ணுற்ற கோவிந்த ராஜமுதலியார், நான் பார்த்த பெருநாமங்க ளெல்லாம் இதற்கீடா காவென நகைத்திருந்தனர். இவ்வைணவரைப்போல ஏனைய வைண வரும் நாமந்தீட்டத் துணிந்தால் வீடுகட்டுப் பூசப்படும் வெண் மண்ணும், மங்கையர் விழையும் மஞ்சளும் அந்தோ அரிதுபட் டொழியுமே! நிற்க. தென்னாசாரியப்பிரபாவம்—

ப-கரு-ல் "புருவங்களின் கீழிருந்து இரண்டு ரேகைகள் சமமாகப் பிராம்மணுள் நித்தியந்தரிக்கவேணும்" என்றும், ப-ககூ-ல் "நாசாதியில் இரண்டங்குலம்பாதமும், நடுவிலிரண்டங்குலம் வெளியும் பக்கங்களில், ஒவ் வொரு அங்குலந் திருவடிகளும் இடவேணும்"

என்று மெழுதப்பட்ட பொய்ப்பாஞ்சராத்திர வாக்கியங்களு க்கும் முரணுக அவ்வைணவர் அத்துணைப் பெரியசித்திரமெழுதிக் கொண்டதுதா னெற்றுக்கோ! ஓராறு, பஸ்மாவைச் சைவஸந்யா ஸிகள் உடம்பெங்கும் உத்தூளனஞ் செய்கின்றனரே, அவ்வாறு நாமும் இப்புண்டரத்தைப் பெரிதாக்கிக் கொள்வோமெனு வெண் ணி அவர் அச்சித்திரவேலையிற் பிரவேசித்தவராவரோ? அங்ஙன மாயின், அந்த உத்தூளனம் ஆக்நேயஸ்நாந மென்னப்படுவதாய் வேதோக்தமாயுள்ளது. இச்சித்திரமப்படி யாவதன்றே. அவைதிக மாக இஷ்டம்போற் றீட்டினும் மேற்பசை வறளவறளவன்றோ பிடிக்கும். இதுகிடக்க.

இங்கிலிஷ் (English) அரசு இவணேற்படுமுன் இத்தேயத் திற் சிலபாகத்தை யாண்டுகொண்டிருந்த முகம்மது மதத்தரசரி லொருவன், திருச்சிராப்பள்ளியெனும் ஊரிலிருக்கு ஞான்று சிறிய பெரிய பட்டை நாமங்கள் தீட்டிக்கொண்டு வரும் ஐயங்கார்கண் முகங்களைப் பார்த்து, இவை வெண்மை செம்மையோடுங் கூடிய விகாரவேடிக்கையா யிருக்கின்றனவே, இவற்றை அந்தப்புரஸ்திரீ

கள் பார்க்க வனுப்புவோ மென்றெண்ணி இவ்வித முகத்தலைகளில் இரண்டு கொணர்மினென்று சேவகர்களை யனுப்பினன் : உடனே யவர்களும் அவ்விதத் தலையிரண்டு வாள்கொடு கொய்துவந்தனர் : அங்ஙனம் அரசன், இக்கோலமழியாமல் இவற்றை இன்ன அந்தப் புரத்திற் சேருமாறு செய்திரென் றன்னவர்க்கு ஆஜ்ஞாபித்தனன்: அவ்வாறு செய்யப்பட்ட அத்தலைகளை யவணிருந்த இராஜஸ்திரீ முதலினோர் காணா அச்சோ! அச்சோ!! இப்படியுமொரு மதக் கொள்கை யுளது கொல்லோவென் றதிசயித்தனர் : அவ்விடயங் கேள்விப்பட்ட பிறிதோ ரந்தப்புரஸ்திரீ நாளும் பார்க்குமாறு ஐயங்கார் தலைக ளனுப்புதல் வேண்டுமென்று தன் கணவனாகிய அவ்வரசனுக்குத் தெரிவித்தனள் : அஃதறிந்த வரசன் பெயர்த்தும் அவ்விதத் தலைகளிற்சில கொடுவரும்படி கட்டளையிட்டு வந்த வுடன் விரும்பினவ ளிருக்கைக்கு அனுப்பினன் : மற்றுமுள்ள அவ்வரசன் மனைவிகள் பலரும் அன்னணமே விரும்புதலும் அப்ப டிப் பன்முறை யவனுஞ் செய்யலுற்றனன் : இப்படித் தலைகள் கொய்யப்படுஞ்செய்தி யூரிற்பெரிதும் பரவவே அக்கொள்கையி னின்று அனேகர் நீங்கியும் ஊர்விட்டோடியு முய்ந்தனரென்னும் வதந்தியும் இந்நாட்டின்க ணுளதன்றே. வ - குருபரம்பரை ப - கஉச - ல், "திருச்சிராப்பள்ளியில்" "துருஷ்கர்சேனை வெகு ஸ்ரீ வைஷ்ணவர்களை ஹிம்ஸித்துக் கொண்டிருக்கையில்" எனவெழுதி யிருத்தல்கொண்டு மிதனை யுறுதிப்படுத்திக் கொள்க. இதனானும், மேற்சொற்ற நியாயங்களானுஞ் சித்திரோர்த்துவபுண்டரஞ்செவ்வ னமைக்கப்பட வில்லையென்பது தேற்றமே. இந்தேற்றத்தை, உடையவர்சூர்ணவிளக்கத்தின் ப - கO௫ - ல்—

"ஒருவரிட்டுக்கொண்டிருக்கின்ற ஸ்ரீ சூர்ணத்தைக்கண்ட மற்றொருவன் என்னகாணும் நீரிட்டுக்கொண்டிருக்கிற ஸ்ரீ சூர்ணம் வெளிறு பாய்ந்திருக் கிறதேயென்றும் களையற்றுத் துக்காவகமாய் காக்கைக்கொடிய ளாக்கைக்கிட மாயிருக்கிறதே லக்ஷ்மவிலாசங் காணப்படவில்லையே அழகும் அலங்காரமு மில்லையே இதைவிட மூன்றுரேகையுந் திருமண்ணுகவே யிருந்தால் நன்கு இருக்குமேயென்று பரிகசித்துச் சொல்லாமலிருக்கிறதற்கு எவ்வளவு செவ் வையாக விருக்கவேண்டுமோ அவ்வளவு செம்மையோடு செவ்வையாயிருந் தால் அதுவே போதுமானது இதுவே ஸர்வஜனஸம்மதம்"

என்று வரையப்பட்டசெய்தியும் ஆதரிப்பதாயிற்று. வைஷ் ணவ புண்டரம் இட்டம்போ லிடவேண்டுமென்பது மிங்ஙனமேற்

பட்டது.. துவிதவைணவராகிய மத்துவரது* மதத்தின் கறுப்புப் புண்டரம் அவைதிகமாயினுஞ் சித்திரோர்த்துவ புண்டரம்போல விகாரமுடைத்தன்று.

## ௬. கூறிப்போந்த சித்திரோர்த்துவபுண்டரத்திற்கு வேறான அவைதிக புண்டரங்கள்.

தீபாகாரம், தண்டாகாரம், மத்ஸ்யாகாரம், கூர்மாகாரம், சங்காகாரம், வேணுபத்ராகாரம் ஆகிய இவைகளும் வைணவர்தரிக்கத் தக்க புண்டரங்களே யென்பது தென்னாசாரியப்பிரபாவகண்டனம் ப-௬௪-ல்—

"திருமணை யெந்த ஆகிருதியாயிட வேண்டுமென்று வர அதைக்குறித்து, தீபாகாரமென்றும், தண்டாகாரமென்றும், மச்சியாகாரமென்றும், கூர்மாகாரமென்றும், சங்காகாரமென்றும் இப்படிப்பலவிதமான ஆகாரங்களைக் காட்டி"

என்று வருதலானும்; உடையவர்சூர்ணவிளக்கம் ப-௫௬-ல், பிரமாண்ட புராணக் கூற்றாக—

"சித்திரதீ பாகாரம் போல வாத ரிருநெடுமா லத்தமுறு தண்டமாத— லெத்திறமாம் வேயினொளி ரடையை யாத விலகிடவைத் திடல் வேண்டும்"

என்று வருதலானு முறுதிப்படும். இவற்றுண் முன்னையது மட்குறியைக் குறிக்கின்றது. பின்னையது மஞ்சட்குறியைக் குறிக்கின்றது. இஃதொரு மாறுபாடு. புகன்ற அவைதிக புண்டர மனைத்தையும் இக்காலத்து வைணவர் தாரணஞ்செய்யக் கண்டிலம். அதனு லவைகள், இவர்க்கு முற்பட்டார்தாரண மாதல்வேண்டும். ஆவதேல், பூதூர்-இராமாநுஜனது புண்டரமும் ஒருபடித்தாயில்லை யெனவேற்படுமன்றே. அவ்விராமாநுஜனது ஏற்பாடு உண்டாதற்கு முன்னே கமலாகிருதி சந்திராகிருதி முதலிய புண்டரங்களுண்டாயிருந்தனவென்பதை மேலைச்சூர்ணவிளக்கம் ப-உ௬, உ௭-ல்—

"கமலாக்ருதி புண்டரத்தைப்பார்க்கப் பழமைபாராட்டத்தக்கதும் ஏக தேசப்ரமாண முடையதுமான சந்த்ராக்ருதி புண்டரத்திற்கே ஆதிக்கமாகுங்கிடீர்" என்றும், "அங்ஙனமாயின் வைஷ்ணவர்களுக்கு ஸதாசார்ய ஸம்பந்தத்திற்கு முன்பு பழையவழக்கத்துள்ள வந்தேறியான தேவதாந்தர மந்த்ராந்தர சாதநாந்தர சந்த்ராக்ருதி புண்டரம் முதலானவற்றை அநுசரித்து இதற்கு ப்ரதிகோடியானவற்றை யெல்லாம் த்யஜிக்க வேண்டி வரும்,"

என்றும் வைணவர்கள் ஒப்புக்கொள்கின்ற படியுங் காண்க. இங்குரைத்த கமலாகிருதி சந்திராகிருதி முதலியனவே, இந்நூல் கஎ - ம் பக்கத்தி லுதாகரிக்கப்பட்ட சூதசங்கிதைச் செய்யுளில் முனிவர் சாபவாக்கியமாக "அரசிலைபோற் பாதிமதிபோற் சுடருந்தீப மேபோன் மிக்கநுத லங்கிதங்கொண்டுறவட்டவடிவும்" என்று வருகின்றன. பாம்பின் படத்திலிருக்கிற ஹரிபாத அடையாளம்போன்ற ஊர்த்துவபுண்டரம் வெண்மண்ணாலிடும்படி ஸ்மிருதி முதலியன கூறுகின்றனவாகலின் வடகலையார் நெற்றியிலிடும் ஒரு பாதாகிருதியே ஏற்புடைத்தென்றும், இரண்டு பாதாகிருதி யேற்புடைத் தன்றென்றும் தென்னாசாரியப்பிரபாவகண்டனத்தார் ப - ௯௪, ௯௫ - ல் தீர்மானித்திருக்கிறார். இப்படியும் அவரதுபுண்டரம் நிலையாது. என்னை? பாம்பினது படரேகை இருநுனியும் புறவளைவாய் நடுவி லெவ்விதரேகையு மின்மையா யிருக்கின்றதாகலின். இன்னுமொரு விரோதமுமுளது. என்னை? அவ்விரேகை ஸர்ப்பத்தின் முகத்திலிருந்து மேனோக்கமாயில்லாமற் கழுத்தின் மேலிடமிருந்து அப்படியிருத்தலின் அதுகுறித்து இவர்நெற்றியிலிடும் பாதக்குறி மேல் கீழாதல்வேண்டு மாகலின். இவ்விதக்குறியும் அப்பூதாரனேற்பாட்டிற்கு முன்னிருந்ததுபோலும். ஆமையி னெற்றியிலிருக்கும் ஒருவகை யிரேகையையுஞ் சித்திரோர்த்துவ புண்டரத்திற் காதாரமென வைணவர் கூறுதலுண்டு. ஆவதேல், பாரை நகரையெனும் பெயரிய மீன்கள், வரிநண்டு, வரிப்புலி, அணில், விரியன் பாம்பு, வரிக்கோழி, வரிவெள்ளரிக்காய் முதலியவற்றிற் காணப்படும் பல்வகை யிரேகைகளில் அவரவர்க் கியைந்தபடி கூறுதலுமாமே. இவையிற்றை யெல்லாம் யோசிக்குங்கால் வைணவர் சித்திரோர்த்துவ புண்டரம் ஒருபடித்தெனற்கு ஆதரவிலாது அங்குமிங்கும் ஓடி முட்டியுழிதரல் நனிபெரிதென்பதுதானே போதரும். தென்னாசாரியப்பிரபாவகண்டனத்தாரும் ப - அ௨ - ல் "கூர்மத்தின் நெற்றியில் சுபாவமா யொருவகை ரேகையுண்டு அது திருமண்குறிக்கு நிதர்சன மாக்கக் கூடாது" என்று அவ்வாமை யிரேகையெடுப்பைக் கண்டித்தனர். இவட்போந்த புண்டரங்கட்கு வேறான துவித வைணவ மத்துவமதத்தினது கறுப்புப்புண்டரமு முளதென்பது மேலே கூறியுள்ளாம். வடநாட்டின்கண் விபூதி உத்தூளனமும், காஷாயதாரணமும், இந்திரியஜயம் பெற்றோரெனும் பொருளைத்தரும் கோசாமிகளெனும் அபிதானமுமுளோர், பரமசிவனது நெற்றிக்கண் ணடையாளமென மேனோக்கியெரியுந் தீபம்போலத்

தங்கள் நெற்றிகளிற் றீட்டிக்கொள்ளுங் குறியும் புண்டரவிவரங் கூறிய வுபநிஷத்துக்களிற் கூறப்படவில்லை.

## ௧௦. வைணவர்தாங் நம்பிடும் விக்கிரகங்களிலிடப்பட்ட சித்திரோர்த்துவக்குறிகளைப்பின்னப்படுத்தல்.

தென்னாசாரியப்பிரபாவம் ப - ௩௧ - ல்—

"ஸ்ரீ வில்லிபுத்தூரில் எழுந்தருளியிருந்த வேதாந்தாசாரியர் விக்கிரஹத்துக்கும் பாதபுண்டரமுடைய ரேகையிருந்தது. அந்த விக்கிரஹத்தை பீடமில்லாத் திருமணிதாரிகள் பின்னப்படுத்திப் போட்டார்கள்." என்றும்,

தென்னாசாரியப்பிரபாவகண்டனம் ப - எ௬, அ௦ - ல்—

"திருநாராயணபுரத்தில் உடையவருக்கு இப்போது திருமண்காப்பை மாற்றினதுபோல் கொஞ்சகாலத்துக்கு முன்னே ஸ்ரீ பெரும்பூதூரில் உடையவருக்குத் திருமண்காப்பை மாற்றினபோது ஒரு அதிகாரி அந்தரங்கமாக ஒருவரைக்கொண்டு எம்பெருமானார் திருநெற்றித்திருமண்காப்பு ரேகையை சந்தனக்காப்பில் ஒற்றிக்கொண்டுவரச் சொல்லிப்பார்த்து தென்கலையார் அனியாயஞ் செய்கிறார்களென்று சொன்னான். அதுமுதல் அடிரேகையை நன்றாய் விளங்கவொட்டாமல் திருமஞ்சனகாலத்தில் தேய்த்துவருகிறார்கள்."

என்றும் பொறித்திருக்கும் வழியே வைணவர் கும்பிடும் விக்கிரகங்களி லிடப்பட்ட சித்திரோர்த்துவக்குறிகளைப் பின்னப்படுத்துதல் காண்க. இதனால், வைணவ ரெனப்படுவார் பழிபாவங்கட்கொருசிறிதும் அஞ்சாதாரும், விலாவிரியத்தின்னும் புளியோரைக்குந் ததியோதனத்துக்குமே கோவில் விழைந்திருப்போரு மாவ ரென்பது துணிபன்றோ. உற்சவமூர்த்தம் வெளிவரின், அவர்கள் பிருந்தாவன லோலனஞ்செய் தாடுதலும் பாடுதலுங் கூடுதலுங் கும்பிடுகள் போடுதலு மெல்லாம் அப்பேருண்டி யவாவிய பெற்றியே யாகுமென்ப வுண்மையுணர்ந்தோர். அப்பெற்றிதான், சிலநாராயண விக்கிரகங்கட்கும் ஏற்றபடி நாம மேற்றினதும், ஏற்றுகின்றதும், ஏற்றுவதும், சந்தர்ப்பத்திற்குத் தக்கபடி மாற்றுவதுமாகும்.

## ௧௧. சித்திரோர்த்துவபுண்டரத்தையிகழ்தலும், அத்தாரணத்தானரகுறுமெனலும்.

அவரவரிஷ்டம்போலச் சிறிது சிறிது பேதப்படுத்திக்கொண்டதாயெண்ணப்படும் இராமாநுஜ சித்திரோர்த்துவ புண்டரத்தை,

வைணவரே பலபடியாலும் இகழ்ந்து திரிவோராவதுமன்றி, அத் தாரணம் நரகத்தையே எய்விக்குமென்று கூறுவோருமாவர். அக் கூற்று யாங்ஙனமெனிற் காட்டுதும். தென்னாசாரியப்பிரபாவம்—

ப-உக, உஉ-ல் "திருமண்ணும் ஸ்ரீசூரணமுங் கலக்கும்படியாயும், பாதமில்லாமலும் ஸ்ரீசூரணங் கலக்கும்படி நடுவே யிடமில்லாமலுந் தரிக்கு மவர்கள் துராத்மாக்கள் அவர்கள் நரகசமுத்திரத்தில் அழுந்திக் கிடப்பார்கள்" எனப் பாஞ்சராத்திரங் கூறுகிறதென்றும்; ப-உரு-ல் "பீடமான ராமாநுஜனில்லாமலும் வெண்மை யில்லாமலும் மெல்லிசாயும்......தரிக்கையும் நரகத்தை யடையும்படி பண்ணும்" எனப் பாத்மோத்தரங் கூறுகிறதென்றும்; ப-உச, உகு-ல் "பாதமில்லாத புண்டரத்தை வைத்தவர்களும் ரௌரவநரகத்தை யடைகிறார்கள்" "என்னுடைய பாதாகிருதியான புண்டரத்தை பதுமபீடமில்லாமல் வைத்தவர்களையும், நானொருக்காலுஞ் சந்தோஷிக்கிறதில்லை. மூதேவி சந்தோஷிப்பாள் இது சத்தியம்" எனப் பிரமாண்டபுராணங் கூறுகிறதென்றும்; விஷ்ணுதத்வவிளக்கம் ப-கூஅ-ல் "பாதமில்லாத திருமண் தரிக்குமவர்களும் ரௌரவாதி நரகத்தை யடைவார்கள்" எனப் பகவான் சொல்லினனென்றும் வரைந்திருத்தல் காண்க.

இவை பீடமில்லாத வடகலைப் புண்டரத்தை யிகழ்ந்து அக் கொள்கைக்கு இரௌரவாதி நரகந் தாபிக்கக் கிளப்பப்பட்டன. தென்னாசாரியப்பிரபாவகண்டனம் ப-சரு-ல், தென்கலைச் சித்திரோர்த்துவ புண்டரமானது அடிமூக்கிலிறங்கி யிருத்தலால் அது "சூலபுண்டரமென்றும் அத்தைத் தரிக்கிறவர்கள் நரகமடைவார்களென்றுஞ் சொல்லிய பிரமாணங் காட்டுகிறோம்" என்று தொடங்குபு மேலெழுதப்பட்ட வசனங்களில்—

"பிராமணன் ஒருகாலாவது விளையாட்டினாலாவது சூலபுண்டரத்தை யிட்டானாகில் அவன் அந்த ஆகாரமான ஆயுதக் கூட்டத்தைக்கொண்டு யமகிங்கரரால் பீடிக்கப்படுவான்" எனப் பாஞ்சராத்திரம் பகர்கிறதென்றும்; "சூலபுண்டரத்தைத் தரித்தவர்களாய் வேதத்தையும் யாகாதி கருமங்களையும் நிந்திக்கிறவர்களாய் சில ராக்ஷசர்கள் கலியுகத்தில் பிராமணகுலங்களிற் பிறப்பார்கள்" "கலியுகத்தில் பூமியில் சிலமனிதர் சூலபுண்டரந் தரித்தவர்களாய் சிராத்தாதிகளைக் கூட அழிப்பார்கள், அவர்கள் பிணமுதலானவைகளைப் போலே பார்க்கவுந் தகாதவர்கள்." "சூலாகாரமான புண்டரத்தை யெவன் நெற்றியில் தரிக்கிறானோ அவன் கோரமான ரவுரவமென்கிற நரகத்தில் சந்திர நக்ஷத்திரங்களுள்ள காலவரையில் இருப்பன்."

என்பவைகளும் உரிய வடமொழிகளுமெழுதப்பட்டு இவை சச்சம்பிரதாயமெனும் ஒரு வைஷ்ணவக் கிரந்தத்தில் உதாகரிக்கப் பட்டிருப்பன வென்றும் வரைந்திருத்தல் காண்க. நெற்றியிலிடப்

பெற்ற இரண்டு கோட்டினையும் இரண்டு பாதாகிருதியாகத் திருத்திக்கொண்ட தென்கலை வைணவரென்பார் கொள்கைகட்கே யிங்குரைக்கப்பட்ட வேதநிந்தை முதலிய அகிர்த்தியங்கள் பெரும்பாலும் ஒத்திருத்தலுங் காண்க. உடையவர்சூர்ணவிளக்கமெனுந் தென்கலைவைணவச் சுவடியின்—

ப - கஉ - ல் "உடையவர்பேரால் விளங்குகின்ற சிவந்தவர்ணமுள்ள ஸ்ரீசூர்ணத்தைப் பரிசித்தாலும் பதிதராவர்" "சிவந்துள்ள அது துர்க்கைக்குப் பிரியமானது" "பரதகண்ட முழுதுமுள்ள ஸர்வரும் அறியாமையாற்றான் றரித்துக்கொள்ளுகிறார்கள்" என்றும், ப - உ௯ - ல் "இரண்டுவிதமான (வெண்காரம் படிகாரம்) ச்வேதகாரங்கள் கேவலம் நீசத்தன்மையுடையதுங் கையினாற் பரிசிக்கவும் யோக்கியதை யில்லாததும் அப்படி பரிசித்தபோதிலும் நீராடத்தக்கதும் கசுமாலர்களாலே ஸதா தீண்டப்படுவதுமானவைகளை விலக்ஷணமாகிய அரித்ரையோடு ஸம்பந்திப்பித்து இட்டுக்கொள்வது பெருங்குற்றமாகவிருக்கிறது" என்றும், ப - ௩௫ - ல் "சிவந்த ஸ்ரீசூர்ணம் (மகளிர்சூதகநீர்) பஹிட்டை நீருக்கொப்பாம்" என்றும், ப - ௩௬ - ல் "ஸ்ரீசூர்ணத்திற்குச் சர்வ சண்டாளத்வ தோஷமுண்டு" என்றும், ப - ௩௯ — ல் "சிவந்தமஞ்சட்பொடி .........விசேஷமாய் லௌகிகர் தரித்துக்கொள்வது" "காம்யபலார்த்திகளிடுவது" "மோக்ஷார்த்திகளிடுவதில்லை" "இதனாலேயே உலகமுழுவதுமிடுவது" என்றும், ப - எச, எ௫ -- ல் "சூர்ணமானது சிவந்திருக்கப்போகாது" "அதையிடுமவர்களெல்லாம் பதிதர்கள்" "சிவந்த ஸ்ரீசூர்ணமிடும் ஆசார்யபுருஷர்களெல்லாரும் அறிவீனர்கள்" "அஸம்பரதாயர்கள்" "ஆபிஜாதிகளல்லர்" "தாஸிவிடாள்" "பரதாரபரிக்ரகாதி அகிர்த்ய கரணர்கள்" என்றும், ப - கＯஉ - ல் "உடையவர்......விக்ரசத்தைப் பற்றிக்கொண்டிருக்கிற தரித்ராசூர்ணமென்கிற மூதேவிசூர்ணம்" என்றும் சித்திரோர்த்துவபுண்டரத்தில் வெண்மஞ்சட்பொடியிட்டுக் கொள்பவர் கூறுங்கூற்றாக வரைந்திருத்தல் காண்க. இவை உடையவர்சூர்ணமெனுஞ் செம்மஞ்சட்பொடியை யிழித்துக்கூறுவானெழுப்பப்பட்டன. அவ்வுடையவர் சூர்ணவிளக்கச்சுவடியின்—

ப - கக - ல் "கலிமகிமையால் எப்போதும் அபேதமாய் வெள்ளரிசனமிட்டுக்கொண்டுள்ளவர்கள்" என்றும்; ப - உＯ - ல் "அது மஞ்சட்காமாலை நிறமாயும், கந்தகநிறமாயும் பீர்க்கம்பூநிறமாயும், அப்ரமாணமாயும் ஜந்துஜநகமாயுமிருக்கின்றது" என்றும்; ப - ௬எ - ல் "ப்ராஹ்மணனானவன் அந்த வெறுமஞ்சட்பொடியை யெதுவரையிலுந் தரித்துக்கொண்டு எதுவரையிலும் ஸ்நாநம் பண்ணாமலிருக்கிறானோ அதுவரையிலுமவன் சண்டாளனாகிறான்" என்று பாஞ்சராத்திரம் பகர்கிறதென்றும்; ப - கＯச - ல் "தனியே யிடித்துக்கொண்டுள்ள புழுத்துப்போகாநின்ற வெறுமஞ்சட் சூரணத்தை ஜந்துஇம்ஸாமாம்சமயமாகும்படிக்குக் குழைத்துக் கமலாக்ருதி புண்டரத்தி விடலாமென்று

யோசித்தாலும் அதற்கு ஒருப்ரமாணமுஞ் சொல்லவில்லையே நாமென்ன செய்யலாம்" "நீயரோடு போராடப்போகும் வெள்ளாிசனம் வேண்டற்பாற்றன்று இடாய்"

என்றும் வரைந்திருத்தல் காண்க. இவை சித்திரோர்த்துவ புண்டரத்தின் வெண்மஞ்சட் பொடியை யிழித்துக்கூறுவா னெழுப் பப்பட்டன. இப்படியே கறுப்புப்புண்டர வைணவருஞ் சித்திரோர்த்துவபுண்டர வெள்ளைமண்ணையும், செந்நிறம் மஞ்சணிறமெனு மிரண்டனுக்கும் பொதுவாயுள்ள மஞ்சட்பொடியையும் இழித்துக் கூறி இவை கொண்டு புண்டரதாரணஞ் செய்வார் நரகடைவரென் றும் ஆயிடை வற்புறுத்துவர். இக்கறுப்பு இத்தேயத்தி லதிக வியாபகமில்லாமைக்குக்காரணம்—அப் புண்டரதாரிகள் பிராமண ஜாதியாரல்லாத இதரஜாதியாரைத் தம்மதத்திற் சேராமையேயாம். இதுகாறும் விளக்கப்பட்டவைகளை நன்கு விசாரித்தறியா வைணவருளொருவராய்ச் சித்திரோர்த்துவபுண்டரதாரியாயுள்ள நாயுடொருவர் சித்திரோர்த்துவ புண்டரம் வேதோக்த மென்றும், அது காத்யாயநம், வராஹோத்தரம், ஸுதர்சநம், த்வயம் எனும் உபநிஷத்துக்களில் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்ட தென்றும், இது விஷயமாக நானும் ஒருபநிஷத்து உண்டுசெய்திருக்கிறேனென்றும், இவை நூற்றெட்டு உபநிஷத்துக்கோவையிற் சேராதனவென்றும், அவைகளை யச்சிட்டு வெளிப்படுத்தப் போகிறேனென்றுஞ் சொல் லிய செய்தியை நேரினின்று கேட்ட பின்னத்தூர் - இரத்தின சாமிப்பிள்ளையே எமக்குத் தெரிவித்தனர். அங்ஙனமாயின்—

## பிரசண்டோபநிஷத்.

"கடையுகத்தொருஞான்று பரதகண்டத்தை நோக்கிச் சென்ற நாரத முனிவர் பிரமனும் விஷ்ணுவுஞ் சந்தித்திருக்குமிடத்தை அண்முற்றனர். அம் முனிவரை அவ்விருவரு நோக்குபு யாதுவிசேடமென வினவினர். உடனே முனிவரும் சர்வேச்வரனை பரமசிவனையிகழ்ந்து நாராயணனைப்புகழ்ந்து உழி தரும் பதிதரையும், அவர்கையில், நான் சொன்னபடி வியாஸரால் இஃதொன் றுமே யுண்மையுணர்ந்து நன்கு செய்யப்பட்ட தென்பதாய்ச் சிவநிந்தையா யுள்ள சுகர்பாகவதமெனும் பொப்பதேவனென்பான் செய்த கற்பனைச் சுவடி யையும் பூமியிற்கண்டேன். கண்டதோஷபரிகாரநிமித்தம் கங்காநதி யாடிக் காளகண்டனையுந் தொழுதிங்கு வந்துளேனென்றனர். அதுகேவிக்கொண்ட பிரம விஷ்ணுக்கள் ஹரஹரவென்றெழுந்து சிவஸ்தோத்ரம் பலசெய்து தொழுதிருந் தனர். அங்ஙனம் ஹே நாரதமுனி! ஈதொன்றுதானோ இன்னும்பலஅநர்த்திய ங்கள் நடக்கப்போகின்றன. கூறுவல் - நிகழுங்கலியுகத்திற் சிலகாலஞ்சென்ற

பின்னே சில பாவிகள் கர்மத்திற்கீடாகப் பூமியிற்பிறந்து எழுதுந் திராவிட வாக்கியங்களில் ஆங்காங்குத் தனக்கு ஒப்பாரும் மிக்காருமில்லாத சிவபரஞ் சோதியை யிகழ்ந்தும் புகழ்ந்தும் நாராயணனே பெருந்தெய்வமென்று பெரிதுந் துதித்தும் உழலப்போகிறார்கள். பின்பு அவரினும் பெரும்பாவிகள் பலர் அவரவர் கர்மாநுசாரப்படி பார்ப்பார் குலத்தினுஞ் சூத்திரவர்க்கத்தினுமாகப் பிறப்பர். அன்னவருள், பூதூரெனுமூரில் இராமாநுஜனெனப்படுவானொருவன் பிறப்பன். அவன் தனக்கென ஒருபெருமை யவாவினவனாய் நாராயணனே பெருந்தெய்வமென நடித்துச் சிவத்துரோக புத்திமீக்கொண்டு விபூதி ருத்திராக்ஷமெனுஞ் சிவசின்னங்களை யிகழ்ந்து விலக்கி வேதவிருத்தமாக மண்மஞ்சட்பொடி முதலியனகொண்டு மேனோக்கித்தீட்டும் பல விகாரஹேதுவாம் புண்டரம் ஏற்படுத்தித்தன்னோக்கத்திற்கியைய எழுதவேண்டியவற்றையு மெழுதித் தன்னருகிப்பாரை நோக்கிச் சிவபுராணங்களில் வரூஉஞ் சிவோத்கர்ஷ சரிதைகளுக்கு எதிரிடைக்கதைகளை யாரேனுங் கற்பித்து அவற்றை வியாஸப்ரோக்தங்களான பாத்மோத்தரம் முதலியன வெனச் செய்யக்கடவீரென் றேற்பாடுசெய் தொழிவன். அப்படி நடக்கவும் அன்னோர்க்குப்பின் பிறக்கவும் ஒருமனிதனை யொருமனிதனிகழ்தலுங் குற்றமே, எப்படித் தெய்வத்தை யிகழ்தல் கூடுமென் றொருசிறிது மெண்ணாது சிவநிந்தை சிவசக்திநிந்தை முதலியனசெய்து தமக்கு முன்னிருந்த பாவிகளைத் துதித்து அங்ஙன மென்னை யுந் துதிப்பார் போலிருந்து துன்புற்றுச் சாகவுமிருக்கும் மற்றைப்பெரும்பாவிக ளிட்டுக்கொள்ளும் புண்டராதிகள் வைதிகோத்தமர்களால் அலைப்புண்ணும். அவ்வலைப்பொழிக்கவென்று அவர்கள்காத்யாயநோபநிஷத், வராஹோத்தரோபநிஷதாதி பெயர்களிட்டுச் சில வடமொழிகளைக் கற்பிப்பார்கள். இன்னும் ஏற்றபடி அகிர்த்தியம் பல புரிவார்கள். ஈண்டுரைக்கப்பட்டவருள் அந்தத்தில் ஹரசப்தோச்சாரணஞ் செய்யுஞ் சடகோபனெனப்படுவானையும், சிவநிந்தை செய்யாத ஒரு ஸ்திரீயையும் விதிப்படி விலக்கிக்கொண்டு மற்றனைவரையும் இவர் மார்க்கம் பேணுவாரையும் எனது வைகுண்ட மடையவொட்டாது இரௌரவாதி நரகங்களிற் றள்ளும்படி செய்வலென்று இலக்குமி சணவனாகிய விஷ்ணுமூர்த்தி பெரிதுங் கோபித்துக் கூறி மேலுஞ் சொலற்குமேயினன். தூம்பிலோடுந் துர்நீரெல்லாங் கூடி யொரு குளமாதல்போலத் துராத்மாக்கள் கூட்டமாகும் அந்தப்பதிதர்கள் செய்கைகளில் வைதிகராவார் மயங்காவண்ணம், என் முதலினோர்க்குமுள்ள விபூதி ருத்ராக்ஷதாரணமும் ; உமாகாந்தனுஞ் சம்புசப்த வாச்யனுமான சிவனொருவனே பரன், பிரம விஷ்ணு ருத்ரர் முதலினோர் அவனடிமைகளென வழிபடுதலுமே வைதிகம் : இவையெல்லாம் நெற்றியிற்கண்ணுள்ள அந்தச் சிவனதருளறிவிக்க வறிந்தேனென்பதை யுணர்த்தத்தக்கதும், என்றுற் சொல்லப்பட்டதுமான இவ்வுபநிஷத்தைப் பூலோகத்திற் கனுப்புகவென்று நாராயணன் ஆஜ்ஞாபித்தபடி பிரமதேவனும் இதனைப் பிரமமுனிவர்கட் குபதேசித்தனன். இதனைப் படிப்பவர் பாவநீங்கிப் பரகதி யடைவர்."

என்று பொருளாகத்தக்க (𑌬𑍃𑌹𑌜𑍍𑌜𑌾𑌬𑌾𑌲𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍) பிரசண்டோபநிஷத்தையும் வைதிகசைவர் வெளிப்படுத்தாதிரார். என்னை? காட்டெருமைகள் கருப்பம்படப்பையை உழக்கியழிக்கவரின், ஆண்டுத் தக்கதடியெடுத்தோட்டுதல் தக்கார் கடமையாகலின். இப்பெயரிய உபநிஷத்து ஈசாவாஸ்யம் முதல் முக்திகோபநிஷத்து வரையுள்ள நூற்றெட்டினுமின்றே யெனின், அச்சித்திரோர்த்துவபுண்டர நாயுடென்பார் கூறிய வுபநிஷத்துக்களும் அங்ஙனமில்லையென்க. அவ்வுபநிஷதமெனல் பிரமாணமாயின் உடம்படிக்கைக்கு அவருடன்படாதிடைந்ததென்னை? வடகலையாரென்பார்பீடமிலாப் புண்டரத்திற்கும், தென்கலையாரென்பார் பீடபுண்டரத்திற்கு நிகழ்ந்த தருக்கத்தில் அண்ணப்பங்காரென்பார் காத்யாயனோபநிஷத்திற் பீடபுண்டர வசனம் இஃதென்று அவ்வசனத்தை யுதாகரித்தபோது ஆங்கிருந்த வடகலை வைணவரொருவர் பரிஹாஸஞ்செய்து அதனைக் கண்டித்தன ரென்பதாக—

"இது வேதவாக்கியமென்பது மெய்தான். இதின் மேல்வாக்கியமும் அடியேனுக்குத் தெரியுமென்று ஒரு வாக்கியத்தை யுதாகரித்தாராம். அதாவது—𑌏𑌵𑌮𑌾𑌕𑌾𑌰𑌂 𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑌂 𑌯𑍋𑌧𑌾𑌰𑌯𑌤𑌿 𑌸𑌨𑌾𑌰𑌕𑍀𑌭𑌵𑌤𑌿 𑌸𑌪𑌾𑌪𑍀 𑌭𑌵𑌤𑌿 𑌸𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌹𑌾𑌭𑌵𑌤𑌿 || (ஏவமாகாரம் புண்ட்ரம் யோதாரயதி ஸநாரகீபகவதி ஸபாபீயாங்பவதி ஸப்ரஹ்மஹாபவதி || ) என்பதுதான். இதின் பொருள் ஓரங்குல வேர் மேலே இரண்டு கிளைகிளைத்தாற் போலென்று முன் சொல்லப்பட்ட விதமான திருமணை யெவன் தரிக்கிறானோ அவன் நரகத்துக்கு உரியவனாகிறான். மிகவும் பாவியாகிறான். பிரமஹத்தி செய்தவனாகிறான்."

என்று தென்னாசாரியப்பிரபாவகண்டனம் ப-௬௪-ல் வரையப்பட்டதும் மேற்சொல்லுற்ற நியாயத்தைப் பொருந்துகின்றதன்றே.

புண்டரகாண்டம் முற்றிற்று.

---

# இதோபதேசகாண்டம்.

## க. சைவரைப்போலிருப்பார் சில வேளைகளிற் சித்திரோர்த்துவ புண்டரந் தீட்டுதலானே யெரிவாய் நரகிற் கிரையாகின்றன ரெனல்.

வைதிக சைவமரபிற் றோன்றிய மாண்புளீர்! இனி, ஈண்டுரைக்கப்படுவனவற்றைக் கேண்மின்! மேலே விளக்கப்பட்டயாவற்றானுஞ் சித்திரோர்த்துவ புண்டரமானது இராமாநுஜனெனும் ஒரு மனிதனது கற்பனையாய், அவைதிகமாய், அமுகிலதாய், பல் வேறுபாடுளதாயிருப்பதை நன்கு புலப்படுத்திறும். அதன் வடகலைப்புண்டரமும், குருட்டுத்தனமாய் வந்ததெனப்பட்ட தென்கலைப் புண்டரமுந் தம்மைத் தரிக்குநரைத் துராத்துமாக்களும், மூதேவிக்குப் பிரிய மக்களும், பார்க்கத்தகாத பிணமும், யமகிங்கரர்களாற் பிடிக்கப்படுவோர்களுமாக்கி இரௌரவாதி நரகங்களிற் றள்ளுமென்றும்; அப்புண்டரங்களின் நடுவட் டிட்டப்படும்பொடியிரண்டனுட் செந்நிறத்தது பஹிஷ்டைநீ ரொத்ததும், சர்வ சண்டாளத்வ தோஷமுடையதும், தரித்ரா சூர்ணமெனு மூதேவிசூர்ணமெனப்படுவதும், அறிவினர்களாற் றீண்டப்படுவதும், தீண்டினவரைப் பதிதராக்கும் ஆற்றலுளதுமாமென்றும்; பிறிதொரு மஞ்சணிறத்தது மஞ்சட்காமாலை முதலிய இழிநிறங்களுளதும், புழுத்துப்போவதும், தன்னை யணிபவரைச் சண்டாளராக்கும் ஆற்றலுளதுமாமென்றும்; வைணவர்புத்தகங்களே தெரிக்கின்றனவென்பதையுந் தெற்றென வெளிப்படுத்திறும். வேறு பிரமாணம் யாதுக்கு! இக்காரணங்களாற் சிவநிந்தகரை யிப்படித் தெய்வமே தெருவில்விட்டு வேடிக்கை பார்ப்பதாயிற் றென்பதுங் கண்டோம்! கண்டோம்!! கண்டோம்!!! இவற்று ளொருசிறிதுமறியாராய்ச் சைவரைப்போன்று திருநீறிட்டுக்கொண் டிருப்பாராயுளோரிற் சிலர் தங்கள் விரதகாலமாகுஞ் சனிவாரம், ஏகாதசி, சிராத்தம், அமாவாஸ்யை முதலிய காலங்களில் அந்தச் சித்திரோர்த்துவ புண்டரந் தீட்டிக்கொள்கின்றனர். சிலர் திருவேங்கடம் முதலிய தலங்களிற் சென்ற காலை அணிந்திருக்குந் திருநீற்றையுமழித்து முகங்கழுவியங்குள்ள பதிதர்கள் வைத்திருக்கும் மண்ணுங்கட்டியையும் மஞ்

சட்பொடிகளையும் பெற்றுத் தீட்டிக்கொள்கின்றனர். இத்தீட்டுக ளால் அன்னோர் யாதொரு நற்பலனுமிலராய் எரிவாய் நிரயத்திற் கிரையாகின்றனரன்றோ. இவ்வறியாமையையும், அச்சித்திரோர்த் துவபுண்டரதாரிகள்.—இதுதான் வேதத்திலுள்ளது: இதனைத்தரிப் பவரிடத்திற்றான் இலக்குமி வசிக்கின்றனள்: இதுதான் பரகதிகொ டுப்பதென்று பொய்ச்சான்றுச் சுவடிகள்படித்துப் போதிக்கும் பெரும்போதக வயப்பட்டு நிற்பார் பேதைமையையு நோக்கி மிக்க பரிதாபமுற்றே யிவ்வுண்மைகளை விஸ்தரித்து விளக்கலுற்றேம். அதனால், விவேகிகள் அவ் வகிர்த்திய சித்ரோர்த்துவபுண்டரத்தை யாதோரிடத்தேனும் யாதொரு போதேனுந் தரிக்கலாகாது. பின் னே பிரகாசப்படுத்தப்படும் வேதப்பிரதிபாதிதமாய் மஹா மகி மைத்தாயுள்ள சிவபஸ்மமே தரிக்கத்தக்கது. இந்த இதோபதேசம் நல்லூழுள்ளார்க்கு உடனே பலிக்கும். தீயூழுள்ளார்க்குப் பலியாது. அவர் "மூர்க்கனு முதலையுங் கொண்டதுவிடா" என்றதற்கிலக்கா யிருப்பர்.

## உ. முன்னோராசரித்துவந்தகுறியையிப்பொழுது விடுதல்கூடுமோவென்பார்கூற்றைமறுத்தல்.

சிலர்—எங்கண்முன்னோ ராசரித்துவந்த சித்திரோர்த்துவ புண்டரத்தை யாங்களிப்போது நீக்கல் கூடுமோ வென்கின்றனர்—

"எங்கண்முன் னவரூ னுண்ட வழக்கமே யெனக்கு மாதல்
பங்கமின் னெறியாமென்று பகர்தலும் வித்யா ரண்ய
புங்கவ னவனை நோக்கிப் பொறியிழந் தேயுன் முன்னோர்
துங்கமின் மலமே நாளுஞ் சுமந்தறு காசு பெற்றே.

உய்ந்ததுண் டெனிலிந் நாணீ யும்மதை யேசெய் வாயோ
மைந்தனே யெனவன் னேனும் வாய்திறந் திலன்"

என்று ஜீவயாதனுவியாசத்தில் வழக்கமூடன் வாதத்தைக்கண் டித்த நியாயமன்றி மற்றியாது கூறலாம். போந்த செய்யுள் வாக்கி யப்பொருள்:—"எங்கள் முன்னோர் மாமிசம் புசித்து வந்தனர்: அவ் வழக்கமேயெனக்குமாதல் குற்றமில்லாத மார்க்கமாகுமென்று வழ க்கமூடன் கூறியவுடன் வித்தியாரண்யரெனும் ஆசிரியர், அந்தமூட னைப்பார்த்து உன்முன்னோர் அறிவிழந்து பிரதி தினமுந் தூர்க்கந்த மலத்தையே சுமந்து தினமொன்றற்குக் கேவலம்ஆறு செம்புக்

காசுகூலிபெற்று, ஜீவனஞ்செய்துவந்த வழக்கமுளதாயின் இப்போது நாகரிகமுடையவனாயிருக்கின்ற நீயும் அந்தத்தொழிலையேசெய்வாயோ பிள்ளாய்! என்ன; அந்த மூடனும் அதன்மேல் வாய்திறவாதிருந்தனன்." என்றவாறுகாண்க. இவர்கூறும்வழக்கமும் மூன்றாம் நாள் முளைத்து நேற்று வளர்ந்ததுதானே. அது, பூதூர் - இராமாநுஜனது காலத்துட்பட்டதுதானே. ஏமாற்றப்பட்ட ஏழைகண் முகத்தேறியதுதானே. அற்றாகலினன்றே யாரானுமோர் விடயத்திலொருவனை யொருவன் ஏமாற்றினபோது ஏமாற்றப்பட்டவனை யறிந்தானொருவனோக்கி " அவனுனக்கு நாமம் போட்டானா ! மண் போட்டானா !! குல்லாப் போட்டானா !!! " என்று பரிஹஸித்துக் கடாவுங் கடாவுக்குப் "போட்டான், போட்டான்" என்றுவயிறெரிந்துவிடையிறுக்கும்வழக்கச்சொல் அந்நாமதாரிகள் வாய்களினும் அவரையறியாமலேபிறக்கின்றது. உள்ளது போமா ? 'குல்லா' என்பது வைணவர்கோயில்களில் வைணவர்தலையிற் குல்லாய்போலச் சார்த்தியெடுக்குஞ் சடகோபமும். சடகோபனென்பான் சம்பந்தமாயுள்ள இதனைத் தலையிற் சார்த்திக்கோடலும் அவரது ஸ்வய கர்மம்போலும். இது நிற்க. பார்ப்பார் குலத்திற் பிறந்தும் பாடண்டக் கொள்கையினுழைந்த அவ்விராமாநுஜனது ஏற்பாட்டை, அவனதுவமிசத்தினர் விடோமெனக்கொண்டாடுதல் ஒரு வழக்காயினும், ஏனை வமிசத்தினர்க்கு வந்த வழக்கென்னோ! கேடென்னோ! அவரிட்டனரே இவரிட்டனரேயெனுங் கருத்தால் யாதொரு விசாரணையுமின்றிச் சமாதானங்கூறுவதுதா னென்னோ! பேதைமை! பேதைமை!! இவ்வழக்கத்திற்கெல்லாம் முற்பட்ட வழக்கமாய் வைதிகமாயுள்ள திருநீற்றையே கோடல்வேண்டும். இப்பழமை நோக்கியே " ஸ்ரீபாஷ்யகாரர் காலத்திற்கு முன்பு இப்போதுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்கள் பஸ்மாதிதாரணர் " என்று வைணவருங்கூறினதை இந்நூல் ௪ - ம் பக்கத்திற் காட்டினு மாகலின், முன்னணிந்திருந்த திருநீற்றைப் பின்னெவ்வாறு போக்கி மூதேவிபுண்டரந் தீட்டினரோ அவ்வாறாகவும் ; உடையவர்சூர்ணவிளக்கம் ப - கக - ல் " முன்னிட்டுக் கொண்டிருந்துள்ள சிவந்த மஞ்சட் சூர்ணத்தை மாற்றிக்கொண்டு வெள்ளரிசனப் பொடியை யிட்டுக்கொண்டு தம்மைப்போலவே " என்று வரைந்தபடி சிலவைணவர் சிவப்புப்பொடிபோக்கி மஞ்சட் பொடி யெவ்வாறு தீட்டினரோ அவ்வாறாகவும் இஞ்ஞான்று சித்திரோர்த்துவபுண்டரத்தை விலக்கித் திருநீற்றை யிடுதல் மரபாம்,

## ௩. ஒருகுருவுக்குச்சீடனானவன் மற்றொருகுருவுக்குச் சீடனாதல் கூடாதென்பதைமறுத்தியையுரைத்தல்.

---

அற்றேலஃதாக. சிலர், ஒருவனுக்கு மனைவியானவள் மற்றொருவனுக்கு மனைவியாதல் கூடாதவாறு ஒரு வைஷ்ணவாசாரியர்க்குச் சிஷ்யனானவன் ஒரு சைவாசாரியர்க்குச் சிஷ்யனாதல் இனிக் கூடாதென்பர். இவர்க்கும் மேலுரைத்த நியாயமே சாலும். ஆயினும் பிறிதொருபடியு முரைப்பம். யாவரு மணிந்துகொண்டிருந்த வேதோக்த பஸ்மத்தை விலக்கி மூதேவிபுண்டரந் தீட்டிக் கொண்டதே வியபிசாரத்தைப் பொருந்திற்று. இந்நீர்மை நீத்துத் தொன்னீர்மையாதல் வியபிசாரத்தில் திரிதந்துண்டவள் நல்லுணர் வுற்றுத் தன் கணவனையே நேடியுய்யுந் தன்மையொக்கும். அங்ஙன மவள்புரிந்த அகிர்த்தியத்திற்கு யாதானுமோர் பரிகாரமுஞற்றிச் சேறல்போல மூதேவிசூரணதீக்ஷை பெறீஇ நடந்ததற்கும் ஓர் பரிகாரமுஞற்றித் திருநீறிட்டுக்கொள்ளலாம். இங்ஙன மாஞேரும், ஆகின்றோரும் எண்ணி லடங்காரே. சுருதி - பிருஹஜ்ஜாபாலம் (ब्रह्महत्यादिपापनाशकं । महाविभूतिदमिति) "ப்ரஹ்மஹத்யாதிபாபநாசகம் | மஹாவிபூதிதமிதி" என்றோலிடுமாறு பிரஹ்மஹத்யாதி சர்வபாபங்களையும் போக்குவதாய் மஹைச்வர்யத்தைக் கொடுப்பதாயுள்ள விபூதிதாரணமே சுலபமான பரிகாரமென்றும் ஈண்டுணர்ந்துகொள்க. இவ்வாறு மாறுதலே, ஆசாரியத் துரோகமென்று சிலர் கூறுவர். இருளப்பசாமி வழிபாட்டைப் பெற்றுக்கொண்ட வொருவன் அதினின்று நீங்கி ஆன்மலாபோபதேசம் பெற்று அம்மார்க்கத்தி னடத்தல் ஆசாரியத்துரோக மாகாதவாறு அஃதுமாகாதென்று அவரறியக்கடவர். மேலுரைத்த நியாயங்களையும் அவருய்த்துணரக்கடவர். ஆசாரியரும் சதாசாரியர் துராசாரியரென இருதிறப்படுவர். அப்படியே சீடருமாவர். சதாசாரியத்துவம் தக்ஷிணாமூர்த்யுபநிஷத் "பவாநீபதிம் ந்யக்ரோதாத்தநிவாஸிநம் ஸுரகுரும்த்யாயே தபீஷ்டாப்தயே" என்றும், பஞ்சப்ரஹ்மோபநிஷத் "சம்போர் மஹாதேவம் ஜகத்குரும்" என்றும், திருவாசகம் "நன்றாக நால்வர்க்கு நான்மறையி னுட்பொருளை—யன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ" என்று மியம்புகின்றபடி சுரகுருவாய், ஜகத்குருவாய்ச் சனகாதிமுனிவர்க்

குபதேசித் தருளிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி வழிவந்ததாகும். அத் தக்ஷிணாமூர்த்யுபநிஷத் "தத்பரமரஹஸ்ய சிவதத்வஜ்ஞாநம்" என்றுரைக்கின்றபடி அத் தக்ஷிணாமூர்த்தியே பரம்பொருளென்றும், அப்பொருளை யறியுஞானமே சிவதத்துவஞானமென்றுமாம். பூதூர் - இராமாநுஜன் வழியாகக்கோடல் துராசாரியத்துவமாம். அது மேலே பெரிதும் விளக்கப்பட்டது. இன்னும் வந்துழி வந்துழிக் காண்க.

சித்திரோர்த்துவபுண்டரங் கற்பித்த அவ்விராமாநுஜனுக்குத் துவயமென்பதை யுபதேசித்த பெரியநம்பியும், நாராயண நாமாஷ்டாக்ஷரத்தையுஞ் சரமச்சுலோகார்த்தத்தையு முபதேசித்த திருக்கோட்டியூர்நம்பியும், ஆசாரியனைத் தெய்வமாகத் தியானிக்கவேண்டுமெனுஞ் சரமபுருஷார்த்தமென்பதை யுபதேசித்த திருவரங்கப்பெருமாளரையனும் ஆசிரியராவர்: பெரியநம்பி முதலிய இம்மூவர்க்கும் ஆசிரியன், தனது கொள்கை விசிஷ்டாத்வைதமென்று கூறிக்கொண்ட யமுனைத்துறைவனெனும் ஆளவந்தானுவன்: இவனுக்குத் *திருவிலச்சினையிட்டுச் சரமச்சுலோகார்த்தமட்டு முபதேசித்த ஆசிரியன் 'ராமமிச்ரன்' எனும் மணக்காலநம்பியாவன்: இவனுக்கு ஆசிரியன் உய்யக்கொண்டானுவன்: இவனுக்கு ஆசிரியன் நாதமுனியாவன்: இவனது உபாசனையில் வெளிப்பட்டு இரகசியத்திரயார்த்த மென்பதை யுபதேசித்தவன் அர்ச்சாவதார நம்மாழ்வானெனுஞ் சடகோபனுவன்: இவன் வைகுண்டப் பெருமாளின் றரிசனகிருபையுடையனு யிருந்தனனென்று தே - குருபரம்பரை தெரிக்கின்றது. இப்பரம்பரை வைதிகமெனற்கு வேதமுதலிய பிரபலசாஸ்திராதார மேதுமின்று. சடகோபன் இம்மார்க்கத்தி லிருந்தனனென்னும் விவரமும் அவனுடைய செய்யுள்களின் கண்ணவேயில்லை. அவன், தான்செய்த செய்யுள்களில் ஆங்காங்குச் சிவத்தோத்திரமுஞ் செய்துகொண்டே வந்து திருவாய்மொழி யெனுங் கடைப்புத்தகத்தின் கடைப்பத்தினும்—

> "அவாவறச்சூழரியையயனையரனையலற்றி
> அவாவற்றுவீடுபெற்றகுருகூர்ச்சடகோபன்சொன்ன
> அவாவிலந்தாதிகளாலிவையாயிரமுமுடிந்த
> அவாவிலந்தாதியிப்பத்தறிந்தார்பிறந்தாருயர்ந்தே."

* திருவிலச்சினை=தோள்களிற் சுடப்படுஞ் சங்குசக்கரக் குறி. இது வெளிற்று மட்குறிக்கு வேறு.

எனுமொழிகளாற் கடைச்செய்யுண்முடிய முடித்தனன். இத னூனே அவன் அரியையும், அயனையும், அரனையும் தோத்திரித்து அவாவெனும் பற்றறுத்து வீடுபெற்றன னெனுஞ்செய்தி காணப் படுதலானும், அத்தெய்வமொழி மூன்றனுள்ளும் "அம்ருதாக்ஷரம் ஹர:" என்று சுவேதாச்வதரோபநிஷத்தில் விதந்தெடுத் தோதப் பட்ட 'அரன்' என்பதே முடிவிலிருக்கின்றமையானும் அவன் இந் தச் சிவத்துவேஷ வைஷ்ணவாசாரியனென்றல் ஒருசிறிதும் பொ ருந்தாது. இவ்விடயத்தை நாலாயிரப்பிரபந்தவிசாரத்துழை விரித்து ரைத்தனம். ஆண்டுப்பரக்கக்காண்க. மேலைய திருவாய்மொழி அங்கு மிங்குமென்றற் றொடக்கத்துப்பத்தில், "திருமா னன்முகன் செஞ் சடையானென் றிவர்களெம்—பெருமான் றன்மையை யாரறி கிற்பார் பேசியென்—ஒருமாமுதல் வாவூழிப்பிரா னென்னையாளு டைக்—கருமா மேனிய னென்பேன் காதல் கலக்கவே." என அச் சடகோபன் வரைந்து வைத்தது, விஷ்ணு, பிரமன், உருத்திரனெ னும் மூவராயிருப்பதே யெம்பெருமானாகிய கரியமேனிக் கடவு ளின்றன்மை: அதனை யாரறியவல்லா ரெனும்பொருள் பயத்தலையு மிங்ஙனங் கருதிக்கொள்க. மாலெனும்பெயரிய விஷ்ணு இலக்குமி கணவனாகலின், 'திருமால்' என்றனன். ஒராறு இச்சடகோபனுக்கு அவ்வைஷ்ணவ ரஹஸ்யதீக்ஷையை விஷ்ணுவே செய்தனனெனக் கொள்ளினும் அஃது இந்நூல் ௩ - ம்பக்கத்திற் சொற்றவாறு அவ் விஷ்ணுவினாலுபதேசிக்கப்பட்ட அவைதிக ஜைநபௌத்தமார்க்கங் கள்போலத் தள்ளப்படுவதே யன்றிக் கொள்ளப் படுவதன்று. இதுவேயுமன்றி, விளக்கியபடி, சரமச்சுலோகார்த்தமட்டு முபதே சிக்கப்பெற்ற அவ் வாளவந்தானென்பான் தன்சிடர்களுக்குப் பிற வுபதேசங்களுஞ் செய்தன னென்றலும் பொருத்த முளதன்று. மேலும், மேற்போந்த குருபரம்பரை ப - அஉ, அ௩ - ல் உங்கள் பாட்டனாரான நாதமுனியாவார், உய்யக்கொண்டாராகிய என்னு சாரியர்க்கு உபதேசியாதுள்ள யோகநிலை அந்தமுனியின் மற்றொரு சீடரான குருகைக்காவலப்பனிடத்தி லுண்டென்று மணக்கா னம்பி அவ்வாளவந்தானுக்குச் சொல்லின னென்பதூஉம், ப - அச - ல் அக்காவலப்பனிடத்தில் அவ்வாளவந்தான் அவ்வுபதேசம் பெறத் தவறி விட்டன னென்பதூஉம் வெளியாகின்றமையின், யோகவாயிலாக அடையும் அநுபூதி ஞானமானது அவ்வாளவந்தா னுக்கும், அவன் குருவிற்கும் அவன்குருவிற்குக் குருவான உய்யக்

கொண்டார்னுக்கு மில்லாததாயிற்று. ஆகவே ஆளவந்தான் சீடர்க ளுக்கும், அச்சீடர்களுக்குச் சீடனை இராமாநுஜனுக்கும், அவன் வழிநின்ற யாவர்க்கும் அவ்வநுபூதி யில்லாதொழிந்தது. அதனால் மூக்கறையானு னொருவன் றன்னையெவரு மிகழாதிருக்குமாறு வூரிலுள்ளாரை யெல்லாம் மூக்கறைகளாச் செய்தனனெனுங் கதைக்கிணங்க யோகாநுபவமில்லா விராமாநுஜனும் அது வேண் டா, பஞ்சசம்ஸ்கார விதாயக பிரபத்தியே வேண்டுமென் றியைந்த படி சிலவெழுதியோதி யாசைகாட்டிச் சீடர்களையுங் கெடுத்தனன்: அது மந்தமதியர் பலரையுங் கெடுப்பதாயிற் றென்க. பக்தி, பிரப த்தி யென்பன சரியை கிரியையெனுங் கருமங்களி லடங்கும். இவற் றின் மேம்பட்டது யோகம். இம்மூன்றும் ஞானத்திற்கு ஆசார நெறியாமேயன்றி, அவை தனித்தனி யொருமுடிவினின்று முழுப் பலனல்கா. ஞானமொன்றாலேயே முழுப்பலனுன மோக்ஷம் பொ ருந்தும். சந்தேகமில்லை. இதனை, (யஸ்யவிஜ்ஞாநமாத்ரேண மோக்ஷ ஸ்ஸாக்ஷாந்நஸம்சய:।)"யஸ்யவிஜ்ஞாநமாத்ரேண மோக்ஷஸ்ஸாக்ஷாந் நஸம்சய: |" எனுஞ் சுகரஹஸ்யோபநிஷத் வசனத்தானுமறிக. இந்நியாயம் பின்னே யினிது விளக்கப்படும். அவ்விராமாநுஜன் முதலினோர் திரிமூர்த்திகளும் வந்திக்கத் தக்க சிவபெருமானையுஞ் சிவசின்னங்களையு மிகழ்ந்து பாஷண்டக் கொள்கையுடையராயினமை யின், பாஞ்சராத்திரத்தில் விரித்துக் கூறப்பட்டதாயுள்ள அந்தப் பிரபத்தியுந் தனக்குள்ள பலனைக்கொடா தொழியுமால். இப்பிர பத்தி மார்க்கமும் மதுரகவியாழ்வானுக்குக் குருவாயிருந்த சட கோபனுள்ளிட்ட நாதமுனி முதலினோர்க்கே யுபதேசக் கிரமமாக வுளதென்றும், அது, போந்த குருபரம்பரை ப - கஅறு - ல் "கீதா சார்ய னருளிச்செய்த சரமச்லோகார்த்தத்தை ப்ரகாசிப்பிக்கை யாலும்" என்றுரைக்குமாற்றான் இராமாநுஜனாற்றான் பிரகாசிப்ப தாயிற்றென்று மறியும்வழி ஏனையாழ்வார்க்கும், வைணவர் பாக வத சிரோமணிகளாகக் கொண்ட விபீஷணன், பிரகலாதன், அரு ச்சுனன், துரோபதை முதலாயினார்க்கும் அப்படி யிருந்ததில்லை; அவர்மார்க்கம் வெவ்வேறுமென்றுந் துணிபு கூறலாம்.

ஆழ்வார்க ளனைவரும், திருஞானசம்பந்தராதி மஹாத்மாக்க ளைப்போலத் தமிழ்ப் பாடல்களை யருளிச்செய்யுங் காரணத்தா லேயே பேரற்புதம் பல விளைத்த பேரருட் செல்வர்களு மல்லர். அந்தச் சம்பந்த சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய ஏகபாதம்,

மாலைமாற்று முதலிய பல திருப்பாடல்களில் ஒன்றனை யொத்த வொரு செய்யுளேனுஞ்செய்த ஆற்றலுடையருமல்லர். சாமானியப் புலவர் செய்யுஞ் செய்யுளொத்த சிலவற்றையே தோத்திரமாக வியற்றினர். அவற்றுளுஞ் சில, தேவார திருவாசகங்களைப் பார்த்துப் பார்த்துக்கொண்டே செய்யப்பட்டனவா யுள்ளன. வேத முதலியபிரமாண விரோதப்பொருளுடையன பல்ல. அந்தச் சம்பந்தசுவாமிகள் பல்லாயிரந் திருக்கூட்டத்தாரோடு சிவஜ்யோதியில் ஐக்கியமும், திருநாவுக்கரசு சுவாமிகள் சிவலிங்கத்தில் ஐக்கியமும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் உலகறிய வெள்ளையானையி லாரோகணித்து விஷ்ணு பிரமன் இந்திரன் முதலியதேவர்க ளெதிர்கொண்டழைக்கத் திருக்கூட்டத்தாரோடு ஸ்ரீகைலாசம் புக்க தன்மையும், ஸ்ரீமங் மாணிக்கவாசகனார் ஸ்ரீசிதம்பர சிற்சபைக்கண்ணின்றபடியே சிதாகாசமயமான பெற்றியும், ஸ்ரீபட்டினத்தடிகள் பத்திரகிரியடிகள் சிற்றம்பலநாடிகள் முதலிய சிவஞானச் செல்வர்கள் பலரும் தூலவுடம்பு பிணமாகாவண்ணஞ்செய்து சிவ சொரூபமான தன்மையும்போல ஆழ்வார் பன்னிருவரு மாயினரோவெனின்,— திருவரங்கத்திலே சூடிக்கொடுத்தாள் மறைந்தனளெனுஞ் செய்தியொன்றேயன்றிப் பிறிதொரு விசேடமுமில்லை. சூடிக்கொடுத்தாள் சிவநிந்தை செய்யாதவளாகலின் அவளவ்வணமாயினு மாகலாம். மற்ற வைணவக்குருக்களுட்பலரும், இராமாநுஜனும் நோயுற்றொழிந்தவரே யாவர். இராமாநுஜன் வேறுசில அகிர்த்தியங்களையுஞ் செய்தோனவன். விளக்குமிடத்து விளக்குவேம். இனைய காரணங்களானே வைணவத்திற்குக் குருபரம்பரை வைதிகமாக வேற்பட்டதன்றென்பதும், ஏற்பட்டதும் வைதிகசைவாசாரிய பரம்பரைபோல மேன்மைத்தன்று கீழ்மைத்துங் குழறுபாடுமா மென்பதும், இராமாநுஜன் துராசாரிய னென்பதும் புலப்படுத்தப்பட்டன. இவ்வநுஜ னேற்பாட்டை நம்புதல், அவரவர் நினைப்பனவெல்லா மெழுதும் மகிமை யுடையதெனச் சிலரேற்படுத்திய பிளான்செட்டு (Planchette) எனுமொரு பலகையை நம்பி மோசமுறுவார் தன்மையையும், காமதேனுவை விட்டுக் கழுதைக்காலில் வீழ்ந்துகும்பிடுதலையுமே நிகர்க்குமாகலின், இவனது மார்க்கத்தினின்று விலகல் ஆசாரியத் துரோகமாவதின் றென்பது தெள்ளிது.

---

## ச. சித்திரோர்த்துவபுண்டரவிருத்திக்கு ஏதுவுரைத்தல்.

இப்படிச் சிவநிந்தகனானவனது கொள்கை உலகிலெப்படி விருத்தியாயிற்றெனின்,—இடுங்காஷ்டத்தை யெல்லாம் அக்கினி யேற்றெரிதல்போலவும், பெருகிவரும் யாற்றுநீரையெல்லாங் கடல் கொண்டிருத்தல் போலவும் பாவிகளையெல்லாங் கொள்ளத்தக்க நரகவளங் குன்றாதிருக்கவே அது விருத்தி யாவதாயிற்று. அஃததிக விருத்தியு முடைத்தன்று. இத்தென்றிசைக் கண்ணதாய திருவரங்கமே முதலிய சிலவிடங்களிற்றானுளது. வடதிசைக்கண்ணே யேற வில்லையென்பதை அங்குளார் முகத்தினே யறியலாம். இப்பூமியில் வைணவர் கூட்டங் குறைவுஞ் சைவர்கூட்டம் மிகுதியுமா மென்றல் கண்கூடே. இது, கூரேசவிஜயமெனுந் தாதச்சுவடியிற் பூமியிலனேகர் பூஜிக்கிற கக்ஷியிற் சிவனு ரனேகராற் பூஜிக்கப்படுவோ ரென்பதை யொப்பி யெழுதியவாற்றானு முறுதியாதல் காண்க. அக்காலத்தில் வேதபாஹ்யமான ஜைனபௌத்தக்கொள்கைகளும், இக்காலத்தில் ராம்மோஹனராயன் கேசப்சந்த்ரசேனென்பாராலுண்டாக்கப்பட்டபிரமசமாஜமும்,பிறமதங்களும், ஆங்கிலநாட்டாருடையஉடை நடைமுதலியனவும் இத்தேயத்தி லெப்படித் தினேதினே விருத்தியாயினவோ அப்படியே அவ்விராமாநுஜ னேற்பாடும் விருத்தியாயிற்று. கெதாநுகெதிகநியாயவிருத்தியுமாம். கெதாநுகெதிகம்—ஒன்றும் விசாரியாமே ஒருவர்சென்றவழி யொருவர்செல்லல். அனைத்துஞ் சிவச்செயலேயாயினும் அச்செயலாற் காரியப்படுஞ் சீவகரண நிகழ்ச்சி, கர்மாநுகுணச் சிற்றறிவுஞ் சிறுதொழிலுமான சீவச்செயலேயாகும். இதற்குவமானம் சூரியனும் விழியுமாம். அச்சீவச்செயல் வழியான விருத்திகளைக்கொண்டே ஒருதெய்வீகம் பேசுதல் கூடாது. யாம், ஸ்ரீசிதம்பரத்தின் கண்ணதாய ஒருசிலைக் கடைமுன்னின்றபோது சிலரோடு சித்திரோர்த்துவ புண்டரங் குறித்துப் பேச நேர்ந்து பேசினேம். அங்ஙன் அப்புண்டரதாரியாய் நின்ற ஓரையங்கார் "எங்கள் நாமத்திற்கும் உங்கள் திருநீற்றிற்கும் வேதப்பிரமாணமுண்டோ? எல்லாம் அவரவரிஷ்டம் போல இட்டுக்கொள்வனவே" என்றனர். இத்திற ஐயங்கார்களனேகருளர். இதனானுஞ் சித்திரோர்த்துவ புண்டரதாரணம் பெரும்பான்மை கெதாநுகெதிக நியாயமாகவே விருத்தியாயிற்றெனல்

ஸ்பஷ்டமாம். மேலுமொன்றுகூறுதும். ஆளவந்தான்சீடனைபெரிய திருமலைநம்பியின் மூத்தசகோதரிமகனே பூதூர்-இராமாநுஜன். இளையசகோதரி மகனே கோவிந்தபட்டனெனும் எம்பார். இவனுடைய தம்பிமகன் பராங்குசநம்பி. அந்தப்பூதூரனுகிய இராமாநுஜனுடைய சகோதரியின் மக்கள் கூரத்துமுதலியாண்டான், நடாதூராழ்வானெனு மிருவர். அம் முதலியாண்டான் மகன் கந்தாடையாண்டான். இவனுடைய பந்துவாருங் கந்தாடையர் பலராவர். அக் கூரத்துமுதலியாண்டான், நடாதூராழ்வா னென்பார் சார்பாகவே வந்து பூதூரனை நேசித்திருந்தவன் கூரத்தாழ்வான். இம்மூவருமே அந்தப் பூதூரனுக்கு முக்கிய சீடர்கள். கூரத்தாழ்வான் மக்கள் (பராசரபட்டன்) பட்டன், சீராமப்பிள்ளையெனு மிருவர். இப்பட்டனுக்குப் பூதூரனே தன்னாசிரியனை பெரிய நம்பியின் சம்பந்திகளா யிருந்த சாந்தானிகர் வீட்டுப்பெண்களைக் கூரத்தாழ்வான் காலத்திற்றானே விவாகஞ் செய்வித்தனன். அப் பெரிய நம்பியின்மகன்புண்டரீகாக்ஷன். பூதூரனுக்குத் தாய்மாமனை அந்தப் பெரியதிருமலைநம்பியின் மக்கள் இராமாநுஜன், (திருவாய்மொழியெனுஞ் சுவடிக்கு ௬000 - படி யெனும் வியாக்கியான மெழுதிய பிள்ளான்) திருக்குருகைப்பிரான் பிள்ளானெனுமிருவர். அத்திருமலைநம்பியின் மனைவிக்கு அண்ணன் மகனே கிடாம்பியாச்சான். அப் பூதூரனுடைய சீடர்களில் எ௪ - ஸிம்ஹாஸநாதிபதிகளென்று வைணவர் பிதற்ற வுள்ளாருள் மேல்வந்த பெயருடையரிற் பலர் சேர்ந்தோராவர். இப்படி மாமன், மருகன், அண்ணன், தம்பி, தந்தை, மகன், மைத்துனன், சம்பந்தி, சிநேகர் முதலியோராமவர்—தத்தந் தீயூழின்படி இன அபிமானத்தானும், இவ்வழியாக இரைதேடி நாமெல்லாம் பிழைக்கலாமெனுங் கருத்தானும், மந்தமதியானு மொன்றுபட்டு வைதிக சைவசின்னத்தைப் பலவாறிகழ்ந்து பூதூரனுடைய புதுப்புண்டரந் தீட்டிக்கொண்டு மற்றியைந்தாரையு மதனுட் படுத்திவந்தது மவ்விருத்தியாகும். "உபாதாநம் பண்ணிவந்தே திருமேனி யாத்ரை நடக்க வேண்டுகையாலும், அற்றைக்குத் திருமாளிகையிலே ஸஞ்சித பதார்த்தம் ஒன்றுமில்லாமையாலும்" எனும் தே - குருபரம்பரைக் கூற்றின்படி அக் கூரத்தாழ்வான் கஞ்சிக் கலைபவனென வறியப்படுமாற்றானே அவன் குருவான பூதூரன் முதலினோரும் பரம தரித்திரர்களேயென்றல் வெளிப்பட்டு, அஃது இவ்வழியாக இரைதேடிப் பிழைக்

கலாமெனுங் கருத்தை வலியுறுத்தவாறு காண்க. இவ்வுளவுகள் புத்திசாலிகட்கேபுலப்படும். ஈண்டுச் சைவரீட்டமதிகமென்பது—பாற்கடையிற் கூட்டங் குறைவுங் கட்கடையிற் கூட்டமதிகமு மாதல் போலுமென வைணவர் கூறின், பாவாடைராயன் கூட்டம் வைணவக்கூட்டத்தினுங் குறைவாகலின், அஃதுயர்ந்த பாற்கடைக் கூட்டமாதல் வேண்டுமென்க. சிவன்கோவில் ஆயிரத்தெட் டென்றதற்கு விஷ்ணுகோவில் அதிகமாமாறு நவகோடி நாராயணக்ஷேத்திரமென்று வைணவச் சுவடிகளில் வரைந்திருத்தலின், அது புளித்த கட்கடைக் கூட்டங்கொலோ வென்றுங் கடாவுக. நாராயண க்ஷேத்திரம் நவகோடியாம்போது சிவக்ஷேத்திரம் ஸஹஸ்ரகோடியா மென்க.

## ரு. எந்தவுருவிலுஞ்சித்திரோர்த்துவபுண்டரந்தீட்டொண்ணாது, தீட்டில்வருங்கே டிற்றெனவுணர்த்தல்.

சைவரைப்போ லிருப்பாருட் சிலர், இப்புண்டரம் விஷ்ணு, இராமன், பரசுராமன், கிருஷ்ணன் முதலினோர்க்கும், தருமராஜன் முதலிய பாண்டவராதியோர்க்கும், ஹநுமான், கருடன் முதலினோர்க்குமுண்டென்று நினைத்துப் படங்களில் வரையப்படும் அவ்வுருக்களையும், கல் மரம் மண் முதலியவற்று லாக்கப்படும் அவ்வுருக்களையும், சுவர் முதலியவற்றிற் சித்திரிக்கப்படும் அவ்வுருக்களையும் அழகாகவமைத்து முகத்தில் அம் மூதேவி புண்டரத்தையுந் தீட்டிவிடுகின்றனர்! இது வீடெங்கும் நற் கோமயங்கொண்டு மெழுகி நடுவே துர்க்கந்த மலத்தை வைத்தது கடுக்குமாகலின் அச்செய்கை பெரும் பேதைமையே. கேண்மின்! இத்தேயத்தே யிருநூன்று கவர்ண்மென்றுப் பாடசாலைகளில் வித்தியாசாலைச் சட்டப்படி ஈ. மார்ஸ்டன் துரை (E. Marsden) லாங்குமென்ஸ் சங்கத்தார் (Longman's & Co.,) முதலினோர் தாங்களியற்றிய வாசக பாடங்களிலுள்ள இராமன்கதை, பாண்டவர்சரிதை, இந்தியசரித்திரம் முதலியன கூறும்பாங்கர் வரூஉம் படங்கட்கு இப்புண்டரத்தைத் தரியாது திருநீற்றையே தரித்திருக்கின்றனர். இவ்வாங்கில பண்டிதர்களோ பலதேச சரித்திரங்களையு முணர்ந்து உண்மையை யெழுதுவதில் மஹா சமர்த்தர்கள். தூரதேயத்தா ரான இவர்களும் உண்மைகண் டொழித்த இப் பாஷண்டக்குறியை யித்தேயத்தா ரொழியாமல் அங்கீகரித்து வருதல் பேதைமையன்றி

மற்றியாதாகும்! இனியேனும் அக்குறியை யொழித்துத் திரிபுண்டர மிடக்கடவர். நாராயணனுக்குச் சித்திரோர்த்துவ புண்டரதாரண மின்றென்பதையும் மேலே யினிது விளக்கினோம். இன்னும் அப்பேதைய ருணருமாறு சுருக்கமொன்று கூறுகின்றனம். விஷ்ணுவுக்கேனும், அவனடியவர்க்கேனும் மண்மஞ்சட் புண்டரமுளதாயின், வைணவருள் மத்துவ மதத்தினர் அதனைக் கொள்ளாதிருக்க மாட்டாரன்றே. அவரதனை விலக்கி விட்டிருப்பதைமட்டும் ஊகித்து உறுதியிற்றென வுணரலாம். சைவர்களுக்குச் சுவதந்திரமான ஆலயங்கள் சத்திரங்கள் மடங்களாகிய இவையிற்றிற் சுண்ணம்புகொண்டுஞ் சித்திர வர்ணங்கள் கொண்டுஞ் செயப்படும் விஷ்ணுமுதலிய வுருவங்களிற் சித்திரோர்த்துவ புண்டரத்தைச் சாஸ்திர வுணர்விலாத அவ் வேலைக்காரர்கள் சார்த்திவிடுகின்றனர். அதனால், சமயம்பார்த்து அவ்வாலயாதிகளை வஞ்சக வைணவர் பற்றிக்கொண்டு தங்கள் கொள்கைக் குட்படுத்தவுநேரும். இதற்கு முன்னே அவ்வைணவர்கள் சில சிற்றரசர்களுக்கு நாமந்தீட்டி அவர்களது வலிகொண்டு சில சிவாலயங்களைச் சுவாதீனப்படுத்திக் கொண்டவரென்றல் உலகறிந்த செய்தியே. இக்காலத்தும் விஷ்ணு கோவில்கள் சிலவற்றில் நவீனமா யமைக்கப்பட்ட வடகலைக்குறியைத் தென்கலையா ரென்பாரும், தென்கலைக்குறியை வடகலையா ரென்பாரும் யாற்றியிடுதன் மேற்குறித்தகருத்தேயாகும். அதனால், எவ்விடத்தும் இவர் மார்க்கசம்பந்த மிருத்தலே கூடாது. இதனை வைணவரே வலியுறுத்துநருமாவர். எங்ஙனே யெனின்,—தென்னாசாரியப்பிரபாவகண்டனம்—

ப-அ௦-ல் "சில விடங்களில் தென்னாரியர் கொஞ்ச நாளாய் லவுகிக பலத்தாலே திருமண்காப்புகள் மாற்றியும் சில சொதந்திரங்களைக் கொண்டுமிருக்கிறார்கள். இவைகளைக் குறித்து விரித்தால் விஸ்தாரமாகு மாகையால் விடுத்தோம்." என்றும்; ப-கஅஅ-ல் "இவர்கள் இதைக்கொண்டு சில அனர்த்தங்கள் செய்வாரென்று நினைத்து அந்தத்தனியனை நிறுத்தி யருளினார்." என்றும் வருவனவே. இம்மோசம் நோக்கியே—

> "காலப் புரட்டர் மதப்புரட் டோடு கலகஞ்செயுந்
> தாலப் புரட்டர் மயில்வாக னேசன் றலஞ்சுருதி
> நாலைப் புரட்டிப் பரத்துவ மென்பர்தந் நாரணனும்
> மாலைப் புரட்டும் வயிணவப் புன்மத வாதிகளே."

என்று சைவப்பெரியருஞ் சாற்றனுற்றனர். இந்நியாயத்தானே அக்குறி யெங்கெங்குளதோ அங்கங்கு அதனை யழித்தொழித்தல்

வேண்டும். அஃதிருக்குமிடமு மிடப்பட்டவுருக்களும் அசுத்தமும், பூஜிக்க யோக்கியமில்லாதனவுமாம். அதனால் அந்த அவைதிகக் குறியை வெள்ளி முதலியவற்றிற் செய்து விக்கிரகமுகத்திற் சார்த்துதலுங்கூடாது. வழக்கமுளதேற் கெட்டவழக்கமென் றொழிக்க.

## சு. நாராயணனால்வெளிப்படுத்தப்பட்ட வெண்மண் ணணியலாமேயென்பார் மாற்றத்தைமறுத்தல்.

"மாறுகண்ணுக்கு மூலைசெவ்" என்றபடி, இக்குறியின் பேரழுக்கு ஆசைப்பட்டாருட் சிலர்—சித்திரோர்த்துவ புண்டரம் வேதோக்தம் அன்றெனினும் குருபரம்பரை கூறுகின்றபடி திருநாராயணபுரத்துப்பெருமாள் இராமாநுஜரது கனவிற்றோன்றி நீயிர் விரும்புமண் இவ்வுழையுளதென்றுரைத்தபடி கண்டெடுக்கப்பட்ட அந்தப்பால்மண், பெரியதிருவடியாகிய கருடனாற் சுவேதத் தீவிலிருந்து கொணர்ந்து வைக்கப்பட்டமையின் அதனை யணியலாமே யென்பர். அவர், மண்கொணர்ந்து வைக்கப்பட்டதென வரைந்தது போல மஞ்சட்பொடியுங் கொணர்ந்து வைக்கப்பட்டதென வரையாததென்னையென்பதையும்,வைணவரிடு மக்குறியெல்லாம் ஆபாஸமூதேவித்தன்மையும் நரகத்துய்க்கு மாற்றலு முள்ளனவென்று அவர் சுவடிகளே யறைகின்றன வென்பதையும், எத்தனையோ கற்பனைகளி லிதுவுமொன்று மென்பதையும் ஒருசிறிது முணராதவரேயாவர். கனவுச்செய்தி மெய்யெனப் பொருளாங்கால், அது.—கொடுந்தொழில் புரிவான் இராக்கதர் தபசுவாயிலாக விரும்பு வரங்களையுங்கொடுக்கும் வள்ளற்றன்மை தெய்வத்தின்கட் காணப்படுமாறு பாஷண்டியாகிய இராமாநுஜனது விருப்பத்தையு நாரணன் நிறைவேற்றின னென்பதாக வேண்டுமெனக் கழிக்க. அது நாரணன் சம்மதமெனவாங்கால், அவனுண்டுசெய்த அவைதிக ஜைன பௌத்தங்களொக்குமென் றொழிக்க.

## எ. கனவுப்பிரமாணத்தைமறுத் தியைபுரைத்தல்.

சிலர்—துவாதச நாமமுந் தீட்டிக்கொண்ட மேனியோடு ஒரு வடிவம் எங்கனவிற்தோன்றி ஒன்று சொல்லிற்று: நோய்போக்கிற்றுகலின் அந்நாமந் தேவாங்கீகாரமாகாதோ வென்றுஞ் சங்கிப்பர். அங்ஙனம் நம்மைப்போலவே ஜைநர் பௌத்தர் முதலிய பாஹ்யு

மதஸ்தரும் அவ்வக்குறி நிகழ்ச்சியொடுங் கனவினுண்மையைக் கழறுவர்: அதனானும்; கொற்றவன்குடி ஸ்ரீஉமாபதிசிவாசாரியர் "கனவின் பயனு நனவின் பயனும்—வினையின் பயனவை பொய்யென வேண்டா" என்றருளிச் செய்தபடி, யாதொரு கனவு வினையளவாக வுந் தற்கால நிகழ்ச்சிக் கியையவு முண்டாகும்: அதனானும் அது வழக்காகாதென்று அவர் சங்கையையொழித்துச் சிவபஸ்மதாரண வடிவைக் கனவிற் காண்டலே நல்வினைப் பேறுமென நாட்டுக.

## அ. எதனையிட்டாற்று னென்னென்பார் கூற்றைமறுத் தியைபுரைத்தல்.

சிலர்—எதனையிட்டாற்று னென்னை? நெஞ்சன்றே நேராயி ருக்கவேண்டுமென்றும் ஒருஞானம் பேசுவர். இவர்க்கு மொன்று கூறி அவர்கோட்பாட்டை யொழிப்பாம். நெஞ்சு நேராயிருப்போர் கழிமலமெடுத்து நெற்றியி லிட்டுக்கொள்ளக் கண்டிலம். கட்டியிரு க்குந்துணியை யவிழ்த்தெறிந்து திரியவும் பார்த்திலம். அத்துணி சுத்தமாயிருத்தல் நன்றெனு முடிவின்படி, அந்த முழுநரகிலாழ்த்து மூதேவிபுண்டரத்தை விலக்கி, சுருதி - பிருஹஜ்ஜாபாலம்—விபூதி யானது சருவபாவங்களையும் பக்ஷணஞ்செய்யுந் தன்மைத்தாற் "பஸ்மம்" எனும்பெயர் பெற்றதாகப் "பஸ்மஸர்வாகபக்ஷணாத் |" என்று புகழவுள்ள வைதிகத் திருநீற்றை அசுத்த நேர்ந்தபோதுந் தெய்வசிந்தனை செய்யுமபோதுந் தவத்தழகு பொருந்தப் பூசியுய் தலே அவர்க்குச் சன்மார்க்கமாமென்க. "பூசப்பூசப்பொன்னிறம் பூசாதுவிட்டால் முன்னிறம்" எனும் பழமொழியையும் அவர்க்கு ஞாபகப்படுத்துக.

## கூ. உறவினர்க் கஞ்சுவார்மயக் கொழித்திடுமா றுணர்த்தல்.

சிலர்—இம் மட்குறிபோக்கித் திருநீறிட்டுக்கொளின் எம் முறவினரெம்மை விலக்கி யிடுவரென மயங்குப. இவரது மயக்கத் தையு மொழிப்பாம். வேற்றிடத்தில் வசித்துக்கொண்டிருந்த ஒரு வெள்ளைக்காரமங்கை, ஒரு கரியநிறப் பிள்ளையைப் பெறுவளேல், அவளப்பிள்ளையை மறைவிடத்திற் சேர்த்துவிட்டு எப்படி நீங்கு வளோ அப்படியாகவும்; அக்கினி சூழ்ந்துகொண்ட தமதுவீட்டை

லையில் விட்டு எப்படி வெளிப்பட வேண்டுமோ அப்படியாக வும், வினையை நினைத்து விசனித்து அப்பதிதர் குடியைவிட்டு நீங்குபு நல்லார்சார் பெய்துபு நன்மார்க்கம் பேணுபு வாழ்தல் இகபரசௌ க்கிய விவேகிகள் கடமையாகும்; செருப்புக்காகக் கால் குறைப்பா ரிலரென் றவரைத் தெளிவித்திடுக.

## கO. இக்காண்டத்தின்முதற்கண் வைணவச்சுவடிகள் கொண்டுங் காட்டப்பட்ட விடயத்தைப் பிற பிரமாணங்களானுமுறுதிப்படுத்தி யுணர்த்துவன வுணர்த்தல்.

---

நற்குடிப்பிறந்துளீர்! வைணவரென்பார் தம்மில் ஒருவர் குறியை யொருவ ரிழித்துக்கூறும் வகையானே அக்குறியெல்லாம் யாதொரு நன்முடிவுக்கும் வராமல் மஹா தோஷமுடையனவா யிருத்தலுமன்றிச் சூதசங்கிதையின் ஐதரேயவுபநிடத தாற்பரிய வத்தியாயம்—

"சிறப்பில் வேத பாகியமார்க் கத்திற் றீக்கை பெற்றோரும்
விறப்பு நீங்கப் பரசிவனை விதியிற் பூசை செய்யாரும்.

பஞ்ச யாகம் புரியாரும் பகரா ரணபா கியமார்க்க
நெஞ்சம் விரும்பி யுலகளந்த நெடுமால் பூசை புரிவாரும்
அஞ்சன் கரியோ னுருத்திரன்மற் றொருவர்க் கொருவ ரதிகரென
விஞ்ச நினையா ரபேதமென நினைத்துப் பேசும் வீணர்களும்.

பரம வஞ்ச வாச்சிரமப் பற்றி லாது வெறுப்பாரும்
விரவ நுதலி னீரொழித்து மேனைக் கியபுண் டரமேனும்
மருவு மருத்த மதிவடிவ மாக வேனு மதியாம
லொருவு வட்ட வடிவாக வேனு முறக்கொண் டுழல்வோரும்.

சங்க நேமி முதலாகச் சாற்று நிற்கு மங்கிதங்க
ளங்கம் புனைந்து திரிவாரு மறையுஞ் சுருதி மிருதிசொலுந்
துங்க வாசா ரத்தையநுட் டியாத தோட முடையாரும்
பங்க மாரு மிவரெல்லாம் பாடண் டிகளா குவர்மன்னோ."

என்று கூறுகின்றபடி வேதபாஹ்ய பாஷண்டிகளுக்கே யுரி யனவாகவு மிருத்தலால், அவையற்றை யணிந்துளோரையும், புஜங் களிற் சங்குசக்கரச் சூடிட்டுக்கொண்டோரையுங் காண்டலும்,

---

* இச்செய்யுள்—கஎ-ம் பக்கத்திலுங் காட்டநேரிட்டுக் காட்டப்பட்டது.

வணங்கலும், தீண்டலும், அவரோடுசம்பாஷித்தலும், அ[illegible] டிருத்தலும், அவர்கரத்திருந்து சோறு நீர் முதலிய அருந்தும் பண்டங்களையுஞ் சந்தனமுதலிய பூசும் பண்டங்களையும் ஏற்றலும், அவரிருக்குமிடத்தேகலும், அங்கிருத்தலும், அவரைக்கொண்டு யாதொரு வைதிக கருமத்தைச் செய்வித்தலும், அவர்பார்வையிலேனும் அவர்வசிக்குமிடத்திலேனும், அவ்விதகரும நடாத்துவித்தலுங் கூடாதனவே. மூதேவிபுண்டரத்தோடுங்கூடிய வேடமிட்டாடுங் கூத்தும் பார்க்கத்தக்கதன்று. இந்நியாயத்தை—

சுடுகாட்டிலுள்ள காஷ்டமானது எக்கர்மங்களிலும் எப்படி விலக்காயிற்றோ, அப்படியே சங்குசக்கிர முத்திரைகளைத் தரிப்பவரும் விலக்கப்படுவரெனும் பொருளைத் தருகின்ற "யதாச்மசாநகங்காஷ்டமநர்ஹம் ஸர்வகர்மஸு | சங்கசக்ராத்யங்கநம் சந்ருத்ய கீதாதிகம் ததா ||" எனும் விஷ்ணுஸ்ம்ருதி வாக்யத்தானும்; எந்தப் பிராமணன் அறிவின்மையாற் சங்கு சக்கிர முதலிய முத்திரைகளைத் தரித்துக்கொள்வானோ அந்தப்பிராமணன் கர்மங்களுக்கு யோக்கியனாகாத பாஷண்டனாவனெனும் பொருளைத்தருகின்ற "ப்ராஹ்மணோயதி மோஹாத்வாதாரயேத்வஹ்நிமுத்ரயா | நகர்மார்ஹோபவேதத்ர ஸவைபாஷண்ட ஸம்ஜ்ஞித: ||" எனுஞ் சைவபுராண வாயுஸம்ஹிதா வாக்யத்தானும்; எந்தப்பிராமணன் (மேற்போந்த சங்கு சக்கிர முதலிய) அக்கினி தப்தமுத்திரைகளை அறியாமையாற் றரித்துக்கொள்வானோ அந்தப் பிராமணனைப் பார்த்தவுடன் பார்த்தபாவந் தீரும்பொருட்டுச் சூரியதரிசனம் பண்ணல்வேண்டுமெனும் பொருளைத் தருகின்ற "ப்ராஹ்மணோயதிமோஹாத தாரயேந் தப்தமுத்ரிகா: | தஸ்யதர்சநமாத்ரேண சூர்யாத் ஸூர்யாவலோகநம் ||" எனும் ஸௌரபுராண வாக்யத்தானும்; எந்த விப்பிரன் அக்கினி தப்தமான சங்க சக்ராதிகளால் உடம்பைச் சுட்டுக்கொள்வானோ அந்த விப்பிரனுக்கு ஸ்நாந தாந விரத முதலிய சற்கருமங்களாலேயும் பரிகாரமுண்டாவதின்றெனும் பொருளைத்தருகின்ற "பூர்வஜஸ்து தநும் தக்த்வா சங்கசக்ராதிபி: ப்ருதக் | நஸத்யநிஷ்க்ருதிர்வாபி ஸ்நாந தாந வ்ரதாதிபி: ||" எனும் வந்ஹிபுராண வாக்யத்தானும்; தீயிற்காய்ச்சியிடப்படுஞ் சக்ராங்கநாதி அடையாள சின்னங்கள் சண்டாளப் பிராப்தத்தைப் பயக்கும்: சங்கு சக்கிரமுதலிய அடையாளக் குறியுள்ளவரோடு சம்பாஷித்தலு நரகம்: சக்ராங்கநமுதலிய கிரியையாற் சூடுண்டவனைப்பார்த்த தோஷ நிவாரணமாகச் சூரிய ஜபமும் புருஷசூக்தஜபமுஞ் செய்யாவிடின் இரௌரவஞ்சேறல் சித்தமெனும் பொருள்களைத்தருகின்ற "யஸ்துஸந்தப்தசங்காதி லிங்கசிஹ்ந தநுர்நர: | ஸஸர்வயாதநாயோகி சண்டாள கோடிஜந்மபி: |" "யோத்விஜஸ் தப்தசங்காதி லிங்காங்கித தநுர்நர: | ஸம்பாஷ்ய ரௌரவம்யாதி யாவதா சந்த்ர தாரகம் |" "ஜபேச்ச பௌருஷம் ஸூக்த மந்யதாரௌரவம் வ்ரஜேத் |" எனும் பிருஹந்நாரதீய வசனங்களானும்; தாந்திரிகர்களான பாஞ்சராத்திரி

களுடைய தேஹங்களிலும் அந்தத் தேவதைகளெல்லா மிருக்கின்றனவாயினும், ஹே பிராமணர்காள்! தப்தமுத்ராங்கனத்தால் அத்தேஹங்கட்கு அசுத்தமுண்மையின் அத்தேவதைக ளங்ஙனம் பிரகாசியாதுள்ளன. எப்படியெனின்,— ஜனித்த சிசுக்களுடம்பில் உபநயனாதி ஸம்ஸ்கார மின்மையாற் சர்வதேவதைகளும் எப்படி யென்றுமென்றும் மிகவும் மறைந்துள்ளனவோ அப்படியே தப்தமுத்ராங்கித தேஹத்திலுமாமெனும் பொருள்களைத் தருகின்ற "தாந்த்ரிகாணாம் சரீரேஷு தேவதாஸ் ஸகலா அபூ: | பர்தந்தேநப்ரகாசந்தே த்விஜேந்த்ராச் சுத்த்யபாவதா: | யதாஜாத ஜநாநாந்து சரீரே ஸர்வதேவதா: | திரோபூததயா நித்யம் பர்தந்தே தீவஸத்தமா: ||" எனும் ஸூதஸம்ஹிதாந்தர்க்கத ஸூதகீதாவசனங்களானும்;

"மன்னுமவன் மனையிற்சிவ லிங்கசித்ர மேனுமொன்று வகுத்த தில்லை
யன்னதனு லவ்வாறு செறிமனைகள் புலைச்சேரி சுடுகா டாகும்
பன்னுசிவ பூசையில்லார் மனைபுகுதிற் சலபானம் பண்ணி லன்னோர்
அன்னமருந் திடிலவர்கள் புலையராய் நரகமெல்லா மடைவ ரன்றே."

"பரமனை நிந்தை செய்த பாவியைக் கண்ணுற் றாலுந்
திரமுறு பாவஞ் சேரு மதுதீரச் செய்யுஞ் சாந்தி
யுரமுறு நூறு பேதஞ் செய்யினு மொழிவு றாதா
லரனுறு பத்தி பெற்றோ ரபராதன் றனைச்சே ராரே."

எனும் மஹேதிகாசமாகிய சிவரகசியத்து ௬-ம் அமிசத்து முதற்காண்டத்தின் ௨௯-ஞ் சருக்கத்தும், மன்மதவதைச்சருக்கத்துமுள்ள செய்யுள்களானும்;

"வெண்ணீ—றணிகிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே"

"முகைநகைக் கொன்றை மாலை முன்னவன் பாத மேத்தி
யகநெகா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே."

எனுந் திருவாசக வாக்கியங்களானும்;

"உற்றதிரு நீறுஞ் சிவாலயமு முள்ளத்துச்
செற்ற புலையர்பாற் செல்லாதே"

எனும் நெஞ்சுவிடுதூது வாக்கியங்களானும்; மஹாஸ்காந்தபுராண உபதேசகாண்டத்து எ௨-ம் அத்தியாயத்து ௨௪, ௨௫, ௨௬, ௨எ, ௨அ-ஞ் சுலோகங்களின்படி விஷ்ணுமுதலிய தேவர்களுரைத்தவுரை—

"இன்றுமுதல் இவ்வுலகில் சுரர் அசுரர் நரரெனப்படுவோருள் எத்திறப்புண்ணிய தேவர், முனிவர், மானுடர், சித்தர், கந்தர்வராயினும் அன்னோருள் விபூதியுருத்திராக்ஷ மணியாமற் பாஷண்ட மார்க்கத்தி னடப்பாரோடுஞ் சிவலிங்கபூஜை செய்யாதாரோடும் நாம் பேசுதலுங் கூடாது. அவரோடு ஸம்பா

ஷித்தலும், அவரோடு சேர்ந்திருத்தலும், அவரோடு சுருதி மிருதி முதலிய வற்றில் விதிக்கப்பட்ட கருமங்களைக் கூடிச்செய்தலுமுள்ளவர்கள் மோக்ஷமே யெய்தாதொழிக. இவையெல்லாஞ் சத்தியமேயன்றி மித்தையில்லை."

என்று பொருளாதலானு முணர்க. பதிதஸம்பாஷணந் தோஷ மென்று பொருளாமாறு (பதிதஸம்பாஷணாத்தோஷோ பவதி।) "பதிதஸம்பாஷணாத்தோஷோ பவதி|" எனும் வசனம் ஸுபாலோப நிஷத்தில் வருதல்போலப் பலவுபநிஷத்திலும்வருகின்றது. பதிதம், பாஷண்டமென்பன வொரு பொருளையே பயக்கும். சங்கு சக்கரக் குறிகளிடுங் கருவிகளைத் தீயிற்காய்ச்சி யெடுத்து அக்குறிகள் தோள்களிற் பொருந்தப் பொறிக்கலாமென்பது நூற்றெட்டுபநி ஷத்துக்களி லொன்றிலேனுங் கூறப்படவில்லையாகலின், வேத பாஹ்யகர்மங்களிலே அவைகளுஞ் சேரற்பாலனவே. அவைகள் பாஞ்சராத்திரத்திற் சொல்லப்பட்டன. இக்காரணம் முதலியன நோக்கித்தான் "ஸ்ரீ வைஷ்ணவர்க்கு முக்கியமான ஸ்ரீபாஞ்சராத்திரம்" என்று அந்த இருட்டுநூலை யேற்றபடி வைணவருயர்த்துகின்றனர். அதுவும்— மேற்சொல்லுற்றவழியே இராமாநுஜனது பிரமசூத்திர வுரையாலும் அப்பிரமாணமாயிற்று. அது தவறான வுரையெனப் புறம்போக யோசிக்கினும் பாஞ்சராத்திரத்தைக் குறிக்கும் "உத் பத் யஸம்பவாத்" எனுஞ் சூத்திரம்—பிரமசூத்திரத்திற் பரமதநிரா கரணங் கூறும் உ-ம் அத்தியாயத்துளதாகலிற் போகலொட்டா தன்றே. உய்த்துணர்க. இவையெல்லாம் அவர்கள் தலைவிதியாகவே முடிகின்றன. இந்தச் சண்டாளபுண்டர தாரிகளைப் பார்ப்பதுந் தோஷமென்னின் ஊரில் நாஞ்சரித்த லெவ்வாறுகூடு மென்பி ரேல்,—கூறுதும். மேல் விடயங்கருதியே அன்னோரை யூருக்குப் புறம்பான விடங்களில் வசிக்கும்படி அக்காலத் தரசர்கள் செய் திருந்தார்கள். இக்காலத்தரசில் அஃதின்மையுற்றதால் அன்னோரைக் கண்டவுடனே மேற்போந்த பரிகாரங்களைச் செய்யவேண்டும். கூடாதார் சிவபஸ்மத்தை யெடுத்துத் தாரணஞ் செய்துகொண்டு ஸ்ரீ சிவ பஞ்சாக்ஷரம், ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய ஷடக்ஷரம் முதலிய மஹாமந்திரங்களி லெதனையேனும் (௧௦) பத்துமுறைக்குக் குறை யாது ஜபித்துக்கொண்டு செல்லுமிடஞ் சேறல்வேண்டும். மந்திர மில்லாதார் அங்ஙனம் விபூதிதாரணத்தைச் செய்துகொண்டு சிவ சிந்தனைபண்ணலாம். சம்பாஷணைக்கும் இக்கழுவாயே சாலும். அப்பாடண்டிகளோடு ஜீவனார்த்தமாக வேலைபார்க்க நேருமாயின்,

இல்லம்புக்கவுடன் ஸ்நாநமாதல் கை கால் முகங் கழுவலாதல் செய்து திருநீறணிந்து மேற்சொற்றபடி செய்யவேண்டும். தீண்டும் விஷயத்திற்கும் ஈண்டுரைத்த கழுவாயே சாலும். அங்ஙனம் (௧0௮) நூற்றெட்டுரு நனி ஜபித்தலும் மிக்க நலமாம். யாதானுமோர் இலௌகிக காரியார்த்தமாக அப்பதிதர் பகற்காலத்தில் வைதிக சைவருடைய கிருகத்தில் வந்திருந்து செல்ல நேரிடுமேற் சுத்தியி னிமித்தம் அவ்விடத்திற் செவ்வனே கோமய மிடல்வேண்டும். இராக்காலமாயிற் சுத்த ஜலங்கொண்டு கழுவுதலாதல் தெளித்த லாதல் செய்யலாம். இரவிற்கோமயஞ் சுத்தமின்று. கோமயம்= சாணி. புட்பம், பழம் முதலிய நறும்பண்டங்கள் கொள்ள நேரிடி னும் அவற்றின்மீது விபூதியாதல் பிரணவாதி மந்திரத்தோடுங் கூடிய ஜலமாதல் தெளித் துபயோகப்படுத்தல்வேண்டும். தப்த முத்ரை முதலிய தாரணதோஷங்களுக்குப் பரிகாரமின்றெனும் வந்ஹிபுராணத் தீர்வை, பரமசிவனை நிந்தித்தவரைக் கண்டதோ ஷந் தீர்த்துக்கோடல் கூடாததாமெனுஞ் சிவரகசியத்தீர்வையாகிய விரண்டும்—அத்தாரணத்தையும், அந்நிந்தகர் நேயத்தையும் விரும் பாதிருக்குமாறு வற்புறுத்த வெழுந்தனவாகும். கருத்து,—இச் செய்கை மேன்மேலும் பல்கி நீக்கற்கரிய பவமாகுமென்றும்.

ஈண்டு, அப்பாடண்டிகளிற் சிலர் வேதபாராயணம் பண்ணு கின்றனரே அதனாலன்னோர் சுத்தராகாரோ வெனின்,—ஒருகானு மாகாரென்க. என்னை? விபூதி தாரணமின்றி யாதொரு வைதிக கர் மமுஞ் செய்யொண்ணாது, செய்யினும் பயன்படாதெனும் விதியிரு த்தலின். அவ்விதி.—'ஹே முனி! சுருதியிற் சொல்லப்பட்ட பஸ்ம த்தி லெக்காலமுஞ் சிரத்தை யில்லாதார்க்குக் கர்ப்பாதான முத லான ஸம்ஸ்காரங்கள் நடக்கவில்லையென்று நிச்சயிக்கவேண்டும்' எனும் பொருளைத் தருகின்ற—

(யெஷா௦நாஸ்தி முநெசுருத்தாசுரௌதெபஸ்மநிஸவஷா ।
கப்பாயாநாதிஸ௦ஸ்காரஸ்தெஷா௦நாஸ்தி நிஸ்சயஃ ||)

"யேஷாம்நாஸ்திமுநேச்ருத்தாச்ரௌதேபஸ்மநிஸர்வதா |
கர்ப்பாதாநாதிஸம்ஸ்காரஸ்தேஷாம்நாஸ்தீதிநிச்சயஃ ||"

எனும் சுருதி - பிருஹஜ்ஜாபால வசனத்தானும்; 'எவன் திரிபுண்டர மணியவில்லையோ அவனுடைய ஆசாரம், தவம், ஓமம்,

புண்ணியதீர்த்த ஸ்நாநம், தேவபூஜை யெல்லாம் நிஷ்பலமாகும்' எனும் பொருளைத் தருகின்ற—

"ஸத்யம்சௌசம்தபோஹோமஸ்தீர்த்தம்தேவாதிபூஜநம் |
தஸ்யவ்யர்த்தமிதம்ஸர்வம்யஸ்த்ரிபுண்ட்ரம்நதாரயேத்||"

எனும் சாதாதபஸ்ம்ருதி வசனத்தானுமறிக. இச்சான்றுபோல் வருவனபல்ல. கர்ப்பாதான மென்பது வேதியர்க்குரிய பதினாறு கர்மங்களின் முதலாகவுள்ளது. அது கர்ப்பாரம்பத்திற் செய்யப் படுவது. இதனால் விபூதி தாரணமில்லாமற் பிராமணத்துவமே யில்லை: அஃதில்லாதவன் வேத மோதொண்ணாதென்பதுந் தேற் றம். அற்றாகலினன்றே விஷ்ணு பக்தியுள்ள சில சிமார்த்தரும் விபூதி தாரணத்தை விடாது கொள்கின்றனர். அந்தப் பாடண்டி கள் இற்றைஞான்று வேதமோதுதல் கலிகாலப்பண்பாம். ஈண்டு, அப் பாடண்டிகளகத்து அன்னபானாதிகளைத் தினமுமருந்தித் தின மும் மேற்சொன்ன பரிகாரஞ்செய்தல் கூடாதோவெனின்,—பிரா மண ஜாதியா யிருப்பா னொருவன் புலையன்வீட் டன்னபானாதிக ளைப் பிரதிதினமுமருந்திப் பிரதிதினமும் பரிகாரமுஞற்ற லொக்கு மாகலின் அது வழக்காகாதென்க. இங்ஙனம், சிவதீக்ஷை பெற்று ளோனுக்கு அப்பாடண்டிகள் தீண்டியவெதுவும் அருந்தத்தகாத நஞ்சுபோன்றதா மென்பதூஉம், அருந்தின் ஆசாரமும் பெற்ற தீக்ஷையுஞ் செய்தபுண்ணிய ஜபதபங்களு மிழந்து நோய்கொள்ள நேருமென்பதூஉம், இவை அப்பியாசிக்கேயன்றி ஆரூடனுக்கில்லை யென்பதூஉம், ஆரூடன் உப்பேறாது உப்புநீருறை மீன்போலுள னென்பதூஉம் உணர்வுடையா ருணரற்பாலன. சொற்ற புண்டர தாரிகளைக் காண்டலுந் தோஷமாதலின், அவர்களாற் பூஜிக்கப் படுங் கோவில்கட்கும், முகம் அகம் சுகமெனு மூன்றனையுங் கெடு க்கவந்த மூதேவி புண்டரஞ் சாத்தப்பட்ட விக்ரஹங்க ளவர் பூஜிக்க எங்குள்ளனவாயினும் அங்கும் வைதிகசைவர் செல்லாதிரு த்தல்வேண்டும். சென்று அவற்றை நோக்க நேரிடினும் உடனே வெளிப்போந்து மேற்சொல்லப்பட்ட கழுவாய்களிலியைபுள்ளதைச் செய்தல்வேண்டும். அங்குளார் பிரசாதமென் றேதேனு மளித்தக் கால் அதனை யேற்றல்கூடாது. அக்கோவில் முதலியவற்றிற்கே னும், அவையற்றை யாசரித் திருப்போர்க்கேனும் யாதொரு பொ ருளை மறந்தேயு நல்கொண்ணாது. நல்கின், கொலைத்தொழி லாள ரைப் பரிபாலித்தலிற் குற்றமுண்டாதல்போலச் சிவத்துரோக

சிவதூஷண அகிர்த்திய பரிபாலன தோஷமுண்டாகும். என்னே? அவைகளே வைணவரது மதமாயிருக்கின்றன வாகலின். அவை வருமாறு:—

## கக. தாதச்சுவடிகளிலுள்ள சைவநிந்தைமுதலியன.

தென்கலைக்குருபரம்பரை ப-கரு-ல் "சைவமாயாவாத ந்யாய வைசேஷிக பாட்ட ப்ரபாகராதிகளாகிற குத்ருஷ்டி ஸமயங்களை" என்றும், ப-கரு, கசு-ல் (பரமனார் பார்வதி சமேதராக ஆகாய மார்க்கத்தில் வந்த போது திருவல்லிக்கேணியிற் கிழிந்த துணியைத் தைத்துக்கொண்டிருந்த திருமழிசை யாழ்வானெனும் பஞ்சமன் அந்தப் பரமனார் நிழல் அசுத்தமென்று அது தன்மேற் படாதொதுங்கினனென்றும், பின்னர் அவர்களை யெதிரே நிற்கக்கண்டும் அவமதித்திருந்தா னென்றும், அவன் முன்பு நான் மோக்ஷங் கொடுக்கவும் இன்று சாவாரை நாளைச் சாகும்படி செய்யவும் வல்லேனல்ல னென்று அவ்வுமாபதி சொன்னாரென்றும், அஞ்ஞான்றவன் செய்த பரிகாச நிமித்தஞ் சிவனார் கோபித்து நெற்றிக்கண்ணைத் திறந்தாரென்றும், அக்கனலை யடக்க வப்பஞ்சமன் றனது வலக்காற் பெருவிரலி லொருகண்ணைத் திறந்தா னென்றும், அதினின் றெழுந்த வக்கினி யிறையனாரது நெற்றிக்கண்ணக் கினியை யடக்கி அவரையும் வெதுப்பிற்றென்றும், பின்பு இறையனாரவனைப் புகழ்ந்து சிரசால் வணங்கிச் சென்றாரென்றும்) ஒரு பொய்க்கதை கீறிய விடத்தில் ஆழ்வானைச் சுட்டுகையில் மரியாதைப்பன்மை பொருந்தப் பன் முறை "இவரும்" "இவரும்" என்றும், பரமசிவனைச் சுட்டுகையில் அப் பன்மையின்மையாகப் பன்முறை "அவனும்" "அவனும்" என்றும், ப-கூஉ-ல் (திருமங்கையாழ்வானெனு மொரு மிலேச்சனுக்குந் திருஞானசம்பந்தசுவாமி களுக்குஞ் சீகாழிப்பதிக்கட் கல்வி விடயமான தர்க்கமுண்டாயிற் றென்றும், அங்ஙனம் சுவாமிகளொரு கவியருளிச்செய்தன ரென்றும், அது நன்றாக வில்லையென அவ்வெறும்பாட்டு மிலேச்சன் தூஷித்தானென்றும், பின்றை அவன் "ஒருகுறளா யிருநிலம்" என்றற்றொடக்கத்துப் புன்பனுவற்பத்தைப் புகன்றானென்றும், அதுகேட்ட சுவாமிக ளவனுக்கு உத்தமகவியுரைக்கும் வலியிலரா யவனைப்புகழ்ந்து கும்பிட்டுப்போனாரென்றும்) பிறிதொரு பொய்க் கதை கீறியவிடத்தில் மிலேச்சனைக் குறிக்கையில் "ஆழ்வாரை" என்றும், "இவரும்" என்றும், திருவருட் பெருஞ்செல்வத் திருஞானசம்பந்தசுவாமி களைக் குறிக்கையில் "சம்பந்தன்" என்றும், "அவனும்" என்றும், ப-கூசு-ல் அவனியிற்பிறந்து அவஸ்தைப்பட்டுழன்ற ஆழ்வாரென்பார்க்குப் பிரமனையும் உருத்திரமூர்த்தியையுந் தாழ்ந்தவர்களாக வெண்ணும்படி "அவர்களோடு ஸமரோ இவ்வாழ்வார்க ளென்னில், அன்று" என்றும், "சுத்த ஸத்வ நிஷ்டராகையாலே தெளிவுற்ற சிந்தையரான சேஷபூதரென்கிறது இவர்களை: அவர்கள் ஸத்வகுணங் குலைந்து ராஜஸ தாமஸ ப்ரசுரரானபோது அஹங்கரி த்து" என்றும், "ஆகையாலே ஸமர் என்ன வொண்ணாது" என்றும்,

ப-௭௫-ல் "நாதமுநிகள்கண்டு ஸர்வேச்வரன் ப்ரஹ்மருத்ராதிகள் தலையிலே அடியிட்டு, பெரியதிருவடியை மேற்கொள்ளும்படி இதுவாகாதே! என்று மோஹித்தார் என்று ப்ரஸித்தம்றே" என்றும், ப-௧௦௯-ல் ஸ்ரீகங்காநதியிற் கோவிந்தபட்டன் மூழ்குகையில் அவனங்கையிலேறியிருந்த சிவலிங்கத்தைச் சுடுகாட்டுப் பொருளென்றுகூறி அவனைத் தனது மதத்திற் றிருப்பும்படி பூதூரன் கூறுங் கூற்றாக "இப்போது அவன் தேவதாந்தர பரனாயிரா நின்றான், அவ்வுள்ளங்கை கொணர்ந்த இடத்தே சுருள்நாற்றமெழுப்பி...... மீட்கும் விரகர் ஆரோ" என்றும், ப-௧௧௮-ல் அக் கோவிந்தபட்டன கூற்றாக "விரிதலை யாண்டியை விரும்பினேனே" "பொறிபறக்கும் கண்ணனைப் பூசித்தேனே" "சுடுகாடு காவலனைச்சுற்றி வலம்வந்தேனே" "பெருந் துழாய் வநமிருக்கப் *பேய்ச்சுரைக்கு நீர் வார்த்தேனே" என்றும், ப-௧௩௫-ற் சைவனாயிருந்து மாறின அக்கோவிந்தபட்டனது முன்னிலைமை குறித்துப் பின்னும் பூதூரன் புகன்ற வுரையாக "இவருடைய துர்வாஸனையை" என்றும், ப-௧௩௭-ல் அப்பட்டன் சொல்லாக "காளஹஸ்தியில் கையும் குடமும் கழுத்தில் இலந்தைக்கோட்டை வடமுமாய்க்கொண்டு எளிவரவுபட்டு நின்ற அந்நிலை" என்றும், ப-௧௪௫-ற் பூதூரன் செய்கையாகக் "கொந்தளித்துக் குணலைக் கூத்தடித்துக்கொண்டு சைவரை அடித்தோட்டிவிட்டு" என்றும், ப-௧௫௦-ல் "வேதவிருத்தமான கள்ளப்பொய்ந் நூலாகிய சைவாகமத்தை" என்றும், ப-௧௫௭-ல் "ஐச்வர்ய கைவல்யங்களாகிற (ஈனம்) க்ஷுத்ரபுருஷார்த்தங்களைக் (பூதூரன்) காற்கடைகொண்டு" என்றும், ப-௧௬௨, ௧௮௬-ல் திருநீற்றுச்சோழபூபதிசெய்தி கூறுமிடத்தில் "சோழனுக்குக் கழுத்திலே புண்ணாகிப் புழுத்துப் புரண்டான்" "உடையவர், புழுவன்வ்யாஜேந மேற்கேயெழுந்தருளினபோது" என்றும், ப-௧௬௬-ல் "காளஹஸ்தியாகிற கடுங்காட்டிலே" என்றும், ப-௨௩௦-ல் நஞ்சீயனென்பவன் சொல்லுஞ் சொல்லாகச் "சிவபஞ்சாக்ஷரம் முதலான க்ஷுத்ரமந்த்ரங்கள்" என்றும், ப-௨௩௨-ல் "இந்திரன் வார்த்தையும் நான்முகன் வார்த்தையு மீசனுடன், கந்தன்சொல் வார்த்தையுங் கற்பவ ராரிந்தக் காசினிக்கே, நந்தினம் முத்தெறி நம்பூர் வரதர்தம் மாளிகையில்"

என்றும் வரைந்திருப்பன காண்க. இவற்றுள் ப-௧௫, ௧௬-ல் வரைந்துள்ள நிந்தை வடகலைக்குருபரம்பரையினு முண்டு. இதன் ப-௭௨-ல் "சைவசின்னத்தைமுறித்துக் காற்கடைகொண்டு" எனுநிந்தையுமுளது. ‡ இச்சுவடிகள், தங்களாசாரியர்காளாலெழுதப்பட்ட பெரியசாஸ்திரமென்று வைணவர்கள் நாளும் படிக்கவுள்ளன. இவைகளுமன்றி, லிங்கமதகண்டனமெனுமொரு தாதச்சுவடி

---

* ஸ்ரீவில்வத்தையே பேய்ச்சுரையென்றான். ஸ்ரீருத்ராக்ஷத்தையே இலந்தைக்கொட்டையென்றான். ‡ இன்னும்முள்ள நிந்தைகளை இக்காண்டத்துப் ௧௨-ம் அத்தியாயத்தில் "ப-௨௧௨-ல்" என்றற்றொடக்கத்து எடுத்துக்காட்டிற் காண்க.

யுழை அமலசிவலிங்கத்தை ஆண்குறி பெண்குறிகளென்று தூஷித்தெழுதியதையு, மெழுதப்பட்ட கூரேசவிஜயமெனுங் குருட்டுத் தாதச்சுவடியின் வியாசர் புயத்தம்பக்கக்ஷியில் திருநந்திதேவரைச் சிறிய திருவடியெனும் அனுமானென்பா னுதைத்த வுதையானது அவரது மேல்வாயிற்பட்டு அவணிருந்த பற்களெல்லாம் உதிர்ந்து விட்ட காரணத்தாலேயே மாடுகளுக்கு மேல்வாய்ப்பற்க ளில்லாமற் போயினவென்றும், ஔரையங்காரெழுதிய இராமதத்துவதீபிகை யெனு மொருதாதச்சுவடியுழை அவர்க்குள்ள ஐயமுங் காரும் வெளிப்பட இராமேசுரத்தை உரோமேசுரமென்றும், இராமலிங்கத்தை உரோமலிங்கமென்றும், பாஷண்டமதசபேடிகையெனும் பாஷண்டி யெழுதிய சுவடியுழை "இச சைவக்கழுதைகளை யல்லாத நாலுகாற் கழுதைகளைக்காட்டிலு மேன்மையுடையனவாக" என்றும், திருஞானசம்பந்தசுவாமிகண் முதலிய சைவத் திருமுறையாளரையுஞ் சைவரையுங்குறித்து "அவர்கள்பாட்டைக் கள்ளைக் குடித்துச சுள்ளையிற்புரளும் பண்டாரப்பயல்கள் கொண்டாடுவர்" என்றும், சிவலிங்கத்தைகுறித்து "அதிக்ஷுத்ரர்களான கம்மாளராலே நாட்டப்பட்டதொரு குழவிக்கல்" என்றும், "பஸ்மோத்தூளநமும், தேவடியாளுடைய குஹ்யப்ரதேசங்களிலே" என்றெழுதிய விடத்திலே திருநீறு மயிர்பறிக்கவாகிறதென றும், இலக்குமியைப்பிராட்டியெனப்புகழ்ந்து ஸ்ரீ உமாமஹேச்வரியை யிகழுமிடத்திற் "காளி" என்றும் வரைந்திருப்பன காண்க. இப்படி வாயில்வந்த மோனையில் ஏசியெழுதியுள்ளனவே வைணவச்சுவடியனைத்துமென வறிக. இவ்விடத்தும் மேலிடத்துங் காட்டப்பட்ட நிந்தைகளையும்; ஆழ்வாரெனப்படுவார் யாத்தசெய்யுள் செறிந்த நாலாயிரப்பிரபந்தத்துழை, சிவனையும் மற்று அயன்முதலிய அனைவரையும் ஏனை அசேதனப் பொருள்களையும் பிரளயகாலத்தில் விழுங்கும்பெரியோன் விட்டுணுவென்றும், சிவனணிந்துள்ள கங்கை திரிவிக்கிரமனது கால் கழுவிய நீரென்றும், விட்டுணுவின் மகன் பிரமன் பிரமனுடைய மகன் சிவனென்றும், பிரமனதுதலையைக் கிள்ளியெடுத்த சிவன் பிரமஹத்தியாற் பிடிக்கப்பட்டுக் கபாலமேந்தித்திரிந்தான் அக்கபாலங் கைவிட்டு விலகும்படி யநுக்கிரகித்தவன் விட்டுணுவென்றும், கிருட்டிணன் காலில் அருச்சுனன் சார்த்திய பூமாலை கைலாயத்திற் சிவன்சிரசிலிருந்தமையின் கிருட்டிணனே யுயர்ந்தவனென்றும்,கல்லாலின்கீழிருந்தசிவபிரான்

சனகாதிமுனிவர்க்கு விட்டுணுவை வணங்குஞானமே போதித்தா னென்றும், கிருட்டிணன் றெடுத்த சண்டையில் வாணாசுரனைக் காக்கவென்றுவந்த சிவனும் அவன்புத்திரரும் மற்றையரும் வலி யிழந்தோடிவிட்டனரென்றும், சிவன்முதலாயினார் விட்டுணுவை வணங்குநரென்றும், அற்பர்கள் சிவவழிபா டுடையவராயினா ரெனும் பொருள்பொருந்தச் "சிறியார் சிவப்பட்டார்" என்றும்பல வாறு தூஷித்துள்ள தூஷணங்களையும் யாம் நியாய வாயிலாகத் துவை துவையென்று துவைத்து ஆழ்வார் குழறுபாடுகளையும் வெளிப்படுத்திச் சிவபரத்துவம்நாட்டி யிருத்தலை நாலாயிரப்பிரபந்த விசாரத்திற்காணலாம். வைணவர் நம்மதத்தையும் நந்திராவிடவேத மாகிய நாலாயிரப்பிரபந்தத்தையும் இனி நிலை பெறுத்தல் வேண்டு மேயெனுங் கருத்தால் அவ்விசாரத்தை மறுத்துவிடப் பெருமுயற்சி யெடுத்துத் திரிகின்றனர். அவர்களும் அவர்களுடைய குரு தெய் வங்களுங்கூடி எவ்வித தந்திரம் பண்ணி யெழுதினும் அது சற்று மசைவுறாது வஜ்ரகிரிபோன்றே யிருக்கும். என்னை? அவ்விசாரத் துட் பெரும்பாலும் உதாஹரிக்கப்பட்டவை வேதவாக்கியங்களும், வைணவச்சுவடி வாக்கியங்களுமாகலின். இது நுனித்த மதியுள் ளார்க்கே புலப்படும்.

## கஉ. மேலெடுத்துக்கொண்ட நியாயத்தைமேலும் வலி யுறுத்துவான் உணர்த்துவனவுணர்த்தல்.

இப்படிச் சைவநிந்தகராயுள்ள அதிபாதக வைணவர் சைவப் பெரியார்களைக் கொலைசெய்து மதங்கொண்டாட முயல்பவருமா வர். அச்செய்திகளுட் சில காட்டுதும். இரத்தின கேடபதீக்ஷிதர் முதலிய வைதிகசீலர்க்கெல்லாம் அநுக்ரஹம் புரிந்து சண்டபா ஷண்ட சண்டமாருதமாகி வைஷ்ணவ மதகண்டனமுஞ் சைவமத ஸ்தாபனமுஞ் செய்திருந்த ஸ்ரீமத் - அப்பையதீக்ஷித மூர்த்திகள் நதியினீராடி அங்கு நித்யாநுஷ்டானஞ்செய் திருக்கும்போது அவ ரைக்கொல்லும்படி காஞ்சிபுரம் - தாதாசாரியனென்பான் சிலரை யேவினன். அவர்பாற் குறுகிய அவ்வேவலாட்கள், அவரை யனேக சூலபாணிகள் சூழ்ந்து நிற்குமாற்றல்கண்டு அஞ்சி நிற்பதையறிந்து வரலாறு தெரிந்துகொண்ட அம்மூர்த்திகள், யானணிந்திருக்கின்ற விபூதிருத்ராக்ஷமும் யான் ஜபிக்கின்ற சிவபஞ்சாக்ஷரமும் வேதப் பிரதிபாதிதமாய்மெய்யாயுள்ளனவாயின், என்னை அநியாயமாகக்கொ

ல்லும்படி யிவர்களையேவிஷ்ணுவுக்கு அகாலமரணஞ் சம்பவிக்கலா மேயென்றவுடன் அவனுஞ் சிரசில் வெள்ளிடி வீழப்பெற்றுச் செத் தனன். இத்தாதாசாரியனை மேல் விளக்கப்பட்ட தீக்ஷிதமூர்த்தி கள், மதவாதத்தில் வென்ற விஷயம்—இந்நூ லிறுதிக்கண்ணே சேர்க்கப்படுவதும், வெங்கடநரஸிம்ஹராவ் பி. ஏ. பி. எல். என்ப வரா லெழுதப்பட்டதுமான ஆங்கிலமொழியினு மறியப்படுவதா யிற்று. தஞ்சையில், வைணவரை வாதில்வென்று சைவஸ்தாபனஞ் செய்துகொண்டிருந்த ஸ்ரீமத் - சிவாக்ரயோகிகள் நிஷ்டை கூடி யிருந்த ஒரு மடத்தில் அவரைக் கொல்லும்படி அவ்வைணவர் தீ யிட்டனர். அத்தீ அவரைச் சுடாதெரிந்து முடிந்தது. திருவை யாற்றிற்கணித்தான மாங்குடியில், கலி ௪அஅஅ - ல் மறையவர் குலத்துதித்துச் சைவஸ்தாபனஞ் செய்துகொண்டிருந்த ஸ்ரீமங் மணிய சிவனுரை மாரண ஓமவாயிலாக நரசிங்கத்தை யேவிக்கொல் லும்படி வைணவ பாகவதப்பிரியர்கள் ஒரு கபடஸந்யாஸியைத் தூண்டி நின்றார்கள். அந்நரசிங்கம் அந்த ஸந்யாஸியையே கொ ன்று மறைந்துவிட்டது. மேலே சொல்லுற்ற திருநீற்றுச் சோழ பூபதியைக் கொல்லும்படி பூதூர் - இராமாநுஜனுஞ் சூன்யகர்மஞ் செய்தனனெனுஞ் செய்தி தே - குருபரம்பரையின் ப - கஙு௪ - ற் காணப்படுகின்றது. அக்கர்மம் பன்னிரண்டு வருடத்தின்மேற் பலித்ததென்று அப்பரம்பரை பகர்தல் முயற்கொம்பாதல் வேண் டும்! ஈண்டும் பூதூரன் யோக்கியதை வெளியாயிற்று.

இந்நாளிலும் யாம், ஸ்ரீ சிதம்பரக்ஷேத்திர வெல்லைப்பாட்டி லுள்ள பின்னத்தூரின்கண் அவ்வூர்ச் சைவருட் சிலர் வேண்டுகோ ளங்கீகரித்து வதிந்து அவர்கட்குச் சைவசித்தாந்தத்தைப் போதித் திட்டமை கண்டு பொறாமை தலைமீக்கொண்ட அவ்வூர் நாராயணப் பிள்ளையெனும் பீடபுண்டர வைணவரொருவர் 1904-ம் வரு டிசம் பர் மீ 23உ "அவன்" எனுஞ்சொல்லா லெம்மைச்சுட்டி எம்மை வாதுக்கழைத்ததைத் தெரிந்த யாம் உடனே யதற்கியைந்து எஞ் சீடரோடு வாதிக்கவருகவென் றவரையழைத்தபோது அவர், என்னாலேலாது திருநாங்கூர் ஐயங்காரை வருவிக்கின்றேனென்று சொன்னபடி செய்யாது வாளாவிருந்துகொண்டு பின்னும் வேற் றார் வைணவர் சிலரைத் தூண்டிக் கலகம் விளைத்ததன்மேற் சைவர் வேண்டுகோளின்படி யாம் வைணவச்சுவடிகளாலும், வேத முதலிய பிரமாணங்களாலும் வைதிக சைவ வுண்மை விளங்கப்

பஹ¬யோக்கியமாக நிருமித்தளித்த நாலாயிரப்பிரபந்தவிசாரத்தை அவ்வூர்ச் சைவரும் அச்சிடுவித்து வெளியிட்டவுட னதனைப்பார்த்துப் பொறாமை மீக்கொண்ட அயோக்கிய வைணவர் பல்லோருள்ளுங் காட்டுமன்னார்குடியிலுளாரிற் சிலவர், எம்மைக் கொன்றுவிட வேண்டுமென்று அந் நாராயணப்பிள்ளையுடன்பேசினதும், அங்ஙனமவர் சைவர் துணையுண்மையின் அஃதேலாது என்றதும், பின்னரவ்வூரார் வேறு செய்வினை வழியாகவேனும் ஆளையொழித்துவிட வேண்டும் இன்னுமிருந்தால் நம்மதந் தொலைந்துபோ மென்றதும் அந் நாராயணப்பிள்ளைக்கு அந்தரங்க சினேகராய் அவருடன் அக் காட்டுமன்னார்குடிக்குப் போந்துவந்தவராயுள்ள கருணையுடையாரொருவர் வாயிலாக எஞ்செவிக்கேறின. யாம், எம்பெருமானுகவும் எம்மை யெத்தனையோ இடையூறுகளினின்றும் விலக்கியருளிய கருணாநிதியாகவும் ஆத்மநாயக னுகவும் பிரகாசியாநின்ற சிவஸு¬ப்ரஹ்மண்யத்தின் சந்நிதியில் முந்தைச் செய்தியொன்று சேர்த்து முடிவுரைத்து நின்றவாறே யிந்தச் செய்தியையுஞ் சேர்த்து விட்டிருந்தனம். பின்றைச் சில மாதங்களின்மேல் அக்கலகப் புலி நோயுற்று மரணமாயிற்று. முந்தைச்செய்தி யென்றது:—அந் நாராயணப் பிள்ளையாலும் அவர் மனைவியாலும் மேன்மேலுங் கலகம் விளைதனோக்கி யெமது நெஞ்சம் வருந்தி "ஓ சுவாமீ! என்மீது பிழையின்று: உளதேல் இம்மண் என் வாயில் வீழ்க: அவன் மீது பிழையுளதேல் இஃது அவன் வாயில் வீழ்க: நாசமாகுக: சத்தியமுள்ள தெய்வமாயின் இவ்வாறு செய்க." என்று பலருமறிய முடிவுரைத்து எமது வலக்கரத் தெடுத்திருந்தமண் விடப்பட்டதாகும். அப் பின்னத்தூர்ச் சைவரென்பாருட் பெரும்பாலார் சிறந்த சைவாபிமானமுடைய ரல்லர். அவர்கள் வைணவர் வீட்டிலுமுண்பர்: வைணவர் செய்யும் அபரக்கிரியைகளில் தாமுஞ் சில செய்வர்: வைணவரோடிருந்து முண்பர்: வைணவ வர்க்கத்திற் சம்பந்தமுஞ் செய்வர்: சிவதூஷண சம்பந்தமான நாலாயிரப்பிரபந்தச் செய்யுள்களைத் தோத்திரமாகவும் பாடுவர்: அங்ஙனந் தாளந்தட்டி மத்தளமுமடிப்பர்: சிவதூஷணஞ் செய்யற்குக் கற்பிக்கப்பட்ட பாகவதமுதலிய தாதச்சுவடிகளைச் சிரத்தையோடுங் கேட்பர்: இராமாயணவசனம் படிப்பர்: கந்தபுராண சைவபுராணாதிகள் படியார்: தேவார திருவாசகங்களைப் பாடார்: வைணவர்கூடிச் சிவதூஷணஞ்செய்யிற் செவிகுளிரக் கேட்டுக்கொண்டிருப்பர்: அத்தூஷண

வைணவரது கோவிலிற் சென்று அங்கே கிடைக்குஞ் சோற்றுண் டையுஞ் சுண்டலும் ஏற்றுண்பர்: அவர்கள் விரதம் ஏகாதசியே.

சைவசமயச் செல்வர்காள்! இவர்கள் திருநீறிட்டுக் கொள் வோராய், நீயிர் யாவரென்று யாரேனும் வினவிற் சைவ வேளாள ரென்று கூறுவோரா யிருக்கின்றனர். இவர்க்குப் போதிக்கு நன் மார்க்கம் மகிடத்தின் முதுகில் வீழும் மழைத்தாரைகள் கடுக்கும். அவ்வூரில் நூதனப் பிரதிஷ்டையான கோதண்டராமன் கோவி லொன்றுளது. அருச்சிப்போர் சித்திரோர்த்துவ புண்டரதாரியே. அக்கோவிலில் அதனை நடத்து மனிதர் சம்மதப்படியே சிலவைண வர்கள்கூடி யாதொரு பிரமாணமுமின்றி, இந்நூல் சுூ - ம் பக்கத்திற் கூறப்பட்ட சிவதூஷண மூலப்பிரசங்கத்தைப் பல துர்ப்பாஷை பொருந்தச் செய்தனரென்று கூறுவோரா யிருந்தும், அக்கோவில் விக்கிரகத்திற்கு அபிடேகாதி காரியமுஞாற்றி மேற்சொல்லுற்ற படியு நடப்பவரே யன்னோர். தக்ஷயாகத்திற் சிவநிந்தை கேட்டி ருந்த விஷ்ணுவையும் வீரபத்திரமூர்த்தி ஜயித்துப் பாசத்தாற் கட் டியுருட்டினரெனுஞ் செய்தியைச் சுருதி - பைப்பலாதம் (யோ தக்ஷய ஜ்ஞே ஸுரஸங்காந் விஜித்ய விஷ்ணும் பபந்தோரு பாசேந வீர: ।) "யோ தக்ஷயஜ்ஞே ஸுரஸங்காந் விஜித்ய விஷ்ணும் பபந்தோரு பாசேநவீர: |" என்றுங் கூறுதலானே சிவநிந்தகர் இம்மை மறு மையெனு மிரண்டிலுமெய்து நோய்முதலிய துன்பையும் நரகயாத னையையும் அவர்களு மடைவரென்பது திண்ணமாகலின், அப் பதி தரையும், அவர்களைப் போன்ற பிறரையும், மேலேவிளக்கப்பட்ட பாதகவைணவரையும் நீங்கள் நேசியாதிருத்தல் வேண்டும். அவ் வூரார் கேடுறுவதற்கு அக்கோவிலே முக்கிய காரணமாகலின், அவ் விதக்கோவில்களை யுண்டுபண்ண நீவிர் இடங்கொடாதிருத்தல் வே ண்டும். நுங்கள் கிருகங்களின் அருகிடங்களை எக்காரணத்தாலே னும் வைணவர்க்கு விற்றல்கூடாது. குறைந்த விலைக்காயினுஞ் சை வர்க்கே விற்றல்வேண்டும். அங்ஙனம் வைணவர்க்கு விற்கத்துணி நரையும் அவ்வாறு செய்யாதிருக்க முயலவேண்டும். இஃதொரு பெருந்தருமமாம். மீறிச்செய்வோர் சிவத்துரோககதியாகு நரகமே யடைவர். நுங்களில் அற்பவித்தை யுடையவர் வைணவச்சுவடிகளை வாசியாதிருத்தல்வேண்டும். பண்டிதராயுள்ளோர் வியவஹாரநிமித் தம் அவற்றினைப் பார்த்துவிடக்கடவர். அவற்றுள், சிவோத்கர்ஷங் கூறத்தக்க பாத்மபுராண சரிதைகட்கும் பிறசரிதைகட்கும் நேர்

விரோதமாகு கதைகளையும் அவைதிக கர்மங்களையுங் கூறுமாறு வைணவராற் கற்பிக்கப்பட்டது பாத்மோத்தர மென்பதையும், அக் கற்பனைக்காலம் கி. பி. 15 - அல்லது 16 - ம் நூற்றாண்டாதல் வேண்டுமென்று நூலாராய்ச்சியுடைய டாக்டர் உவில்சன் என்ப வரும் நிர்ணயித்திருக்கின்றன ரென்பதையும் இந்நூலினீற்றிற் சேர்க்கப்படும் ரோமேஷ்சண்டர் டட் என்பாரது பூர்வீகஇந்தியாவெனும் புத்தகத்தின் 664 - ம் பக்கத்து ஆங்கிலமொழிகளி லறியக் கடவர். வைணவர் உபாத்தியாயராயிருக்கின்ற பள்ளிக்கூடங்கட்கு அருமைப்பிள்ளைகளை நீங்களனுப்பாமற் சைவர் உபாத்தியாயரா யிருக்கின்ற அக்கூடங்கட்கே யனுப்புவீர்களாக. பாட்டன் பேரைப் பெறுவோன் 'பேரன்' எனும் வழக்கிருத்தல்பற்றிப் பாட்டன்பெற்றிருந்த வைணவசம்பந்தப் பேரைப் பேரனுக்கிடலொண்ணாது, அதைக் கெட்டவழக்கமென் றொழித்துச் சைவசம்பந்தப் பேரையே யிடல்வேண்டும். என்னை? பெயர் வழியாகவுஞ் சிலர் புத்தி செல்கின்றதாகலின். ஈண்டு—

> " ஒருருவு மோர்பெயரு மிலியென் றேதெம்
> முடையானை யொளிர்சுப்ர மணிய னெல்லாப்
> பாருயிரு மாள்பொருட்டே யவையெண் ணெண்ணுப்
> பலதாங்கி நிற்கின்றான் பார்வா ழன்பீர்
> சீருருவுஞ் சீர்ப்பெயரு மிலாத வீன
> தெய்வப்பேர் வேறுபெயர் தாங்கா தன்றோ
> னேருயரும் பேர்தாங்கி யேத்த நீவி
> ரென்னதவஞ் செய்தீரோ முன்னை நாளில்."

என்னுந் திருவலங்கற்றிரட்டுச் செய்யுளையுங் கருதிக்கொள்க. இங்கே, வைணவருட் கோபீசந்தன தாரணத்தோடு சிவதூஷணஞ் செய்யாதாரு முளரே, அவர் நேயங் கொள்ளி னென்கொலெனின்,—அச் சந்தனத்தைச் சொல்கின்ற உபநிஷத்தே பஸ்மதாரணமுங் கூறிற்றாகலின், அதனையுமவ ரணிகுநராதல் வேண்டும். அன்றெனில், அவரையுஞ் சிவத்துரோக சிந்தையுடையரேயெனக் கழிக்க. சிவநிந்தை செய்யா வைணவரிவரென் றொருவர்க்கிடங் கொடுத்தக்கால், அவர் போல அவர் சந்ததியாரு மிருப்பரென நினைத்தற் கிடனின்று; நாராயணனுக்கும் நாமஞ்சாத்துமவர் நங் கட்கது சாத்தா திரார்ஆகலின் அவ்விடயமுஞ் செயற்பாலதன்று. சைவர்க ளநுட்டிக்கும் விரதகாலங்களிற் சித்திரோர்த்துவ புண்ட

ரந்தீட்டினோன் உணவுக்காகவரின், அவனுக்குத் திருநீறிடுவித்து உணவளிக்கலாம். கூடாதென்னின் உணவளிக்கலாகாது. அவனைப் பார்த்த தோடத்திற்குப் பரிகாரமுஞ் செய்தல்வேண்டும். சிவநிந்தை செய்யாமே விபூதி தாரணத்தோடிருந்து விஷ்ணுபக்தி செய்குநரே விஷ்ணுவி னடியவராவர். இப்படிப்பட்டவர் சிமார்த்தரினுமுளர். இவ்வடியவர் ஆயிரவர்க்குச் செய்யும் பூஜாபலத்தினுஞ் சிவனடியவ ரொருவர்க்குச் செய்யும் பூஜாபல முயர்ந்ததாகு மென்பதை—

"ஈங்கிவரோராயிரவருக்கன்பாலின்புறுபூசனையாற்றுந்
தீங்கறுபலத்தின்மிகுபலனெய்துஞ்சில்லரிச்சிலம்பணிமலர்த்தாட்
பூங்குழலுமையாளோர்புறத்தமர்ந்தபுரிசடையண்ணலேவணங்கி
யோங்கியேயுறையுமொருவனுக்கன்பாற்பூசனைபுரிந்திடினுவந்தே."

எனும் இலிங்கபுராணத் திருவிருத்தத்தி னறிக. சிவனடியார் போலத் திருநீறிடுவோரா யிருக்குமிவரை, நாமெப்படி விஷ்ணுவி னடியரென வறியலாமெனின்,—இராமாயணத்தைப் பஹுப்பிரியத்தோடும் படித்தல், கேட்டல், ஹரி ஹரி ராம ராம வென்பன முதலிய சொற்களைப் பன்முறை பகர்தன்முதலிய குறிப்புக்களா லறியலாமென்க. சித்திரோர்த்துவ புண்டரதாரிகள் பூஜிக்கும் விக்ரஹாலயங்கட்கு வைதிகசைவர் செல்லாதிருத்தல் வேண்டுமென்றல் விஷ்ணுவை வந்திக்கலாமெனு நூல்கட்கு விரோதமாகாதோ வெனின்,—கூறுதும். பஞ்சப்ரஹ்மோபநிஷத்—

"ப்ரஹ்மவிஷ்ண்வாதிபிஸ்ஸேவ்யக்ஸர்வேஷாம்ஜநகம்பரம் ஈசாநம்" என்றும், திருவாசகம்—

" ஆனாலுங் கேளா யயனுந் திருமாலும்
வானாடர் கோவும் வழியடியார் சாழலோ."

என்றும் முழங்குதலின் சிவபெருமானைச் சேவித்துய்யும் அடிமையாயுள்ள விஷ்ணுவை அடியவர் தானத்தில் வைத்துச் சைவர் வணங்கல் கூடுமாயினும், நீசர் பாத்திரத்திலுள்ள நீரானது மேலோ ரருந்தற்கு எப்படி யுபயோகப்படாவில்லையோ அப்படியே அப்புண்டரதாரிகளாற் பூஜிக்கப்படு மவ்விக்கிரகங்களுஞ் சைவர் வணங்கற் குபயோகப்படாதன வாகலின் விரோதமின்று. இதுவேயுமன்றிப் புத்தனும் விஷ்ணுவாவன்; அவனையும், புலையன் பூஜிக்கின்ற விஷ்ணு விக்கிரகத்தையும் அவ்வைணவ ரென்பாரும் வணங்கி ஆலயிற் படைக்கப்படு பண்டங்களையும் பெற்றுண்ணல்

காணப்படாதவாறு, மேற் சொல்லுற்ற விடயத்துஞ் சைவர் விலகுதல் விரோதமின்றென்க. திருமங்கையாழ்வாலும் நாகபட்டினத்தின் கண்ணதாய பௌத்தர்கோவிற் பொன்விக்கிரகத்தைத் திருடியுருக்கி விற்றபணத்தால், திருவரங்கக்கோவிற் கட்டடவேலை நடாத்தினனென்பது அவனது சரிதையன்றோ. சிவாலயத்திற் பரிவார வகுப்பிலும், சைவர் கிருகங்களிற் சிவவடிவ படாதிகளோடும், திரிபுண்டர மிடப்பட்டனவாயுள்ள விஷ்ணு வடிவங்களே சைவர் வணங்கவும் அர்ச்சிக்கவுந் தக்கன. சித்திரோர்த்துவபுண்டரஞ் சாத்தப்படாததாய் விபூதிதாரண முள்ளோரால் அர்ச்சிக்கப் படுவதாயுள்ள அனந்தசயனத்துப் பத்மநாபமூர்த்தமொத்த விஷ்ணு மூர்த்தங்களைச் சைவர் தரிசிக்கலாம். இவ்விடயம்—ஜனன மரண போக பூமிகளிலொன்றாயுள்ள வைகுண்டத்தை விரும்பாது செய்யத்தக்கது. என்னை ?

> " கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினு
> நள்ளே னினதடி யாரொடல் லானர கம்புகினு
> மெள்ளேன் திருவரு ளாலே யிருக்கப் பெறினிறைவா
> வுள்ளேன் பிறதெய்வ முன்னையல் லாதெங்க ளுத்தமனே."

என்று மணிவாசகப்பெருமானார் திருவாசகமும்,

> " சென்றுநாஞ் சிறுதெய்வஞ் சேர்வோ மல்லோஞ்
> சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்."

என்று ஆளுடையஅரசுகள் மறுமாற்றத்தாண்டகமும் பிறவும் முழங்குகின்றன வாகலின். சித்திரோர்த்துவ புண்டரதாரிகள் வயப்பட்ட பூர்வாலய க்ஷேத்திரங்களிற் செல்லநேரிடின் ஆலயத்துட் புகாது விஷ்ணுவை நினைத்து நமஸ்காரமட்டுஞ் சைவர் செய்யலாம். இச்செந்நெறி யுணராராய்த் திருநீறிடுவாராயிருப்பார் வழியாகவும், மற்றை மந்தமதிகள் வழியாகவும் வரூஉம் பொருள்களையே வைணவர் கொன்னும்பெற்றுக் குடியொடுங் குழீஇக் காழுமை யேறவேறப்புசித்துச சிவதூஷணஞ்செய்து திரிதற்கு அக்கோவில்களும் ஆதாரமாயிருத்தலாற் சைவஸமய பரிபாலனமுஞ் சிவபக்தியுஞ் சிறந்துள்ள யாவர்க்கும் அக்கோவில்களெஞ்ஞான்று பாழாகுமோவெனுஞ் சிவபுண்ணிய சித்தமே யிருத்தல் வேண்டும். இதனை ஞாபகப்படுத்தத்தக்க முற்காலச்செய்தியையும் ஈங்கு விளக்குவாம்—

நகரமத்தியிற் சிவாலயம்பெரிதாகவும், (வடபுறத்தில் க்ஷேத்ர பாலக காளிகோவிலொன் றமைத்தல்போலப்) பக்கத்தில் விஷ்ணு கோவிலொன்று சிறிதாகவும் அனேக அநாதிக்ஷேத்திரங்களி லமைக்கப்பட் டிருந்தன. அச்சிறியனவுட் சிலவற்றில் இராமாநுஜ னது துர்மதவாதிகள்—கூரத்தாழ்வானும், அவன்மகன் பட்டனும் கள்ளக்காஷாயந்தரித்து மதவாதம்பேசப் புக்கவாறு சிவசின்னங் களைத்தாங்கித் தொழுவார்போற் புக்கு அங்குளார்க்கும் இரகசிய மாக நாமந்தீட்டி யக்கோவில்களி னாதரவாகவே யிருந்துகொண்டு இப்போதுளார்போன்றே சிவனையுஞ் சைவரையுங் காணொண் ணாது, சிவசப்தம் நஞ்செவியிற் படவொண்ணாதென்று சைவத்திற் கிடையூறு விளைத்தமை நோக்கியே துஷ்டநிக்ரக சிஷ்டபரிபால னர்களாய் விளங்கியிருந்த சோழ மஹாராஜன் முதலிய மன்னர் பலரும் அவ் விஷ்ணுகோவில்களை யிடித்தொழித்தனர். அதனாற் றான் சிலதலங்களில் விஷ்ணுகோவில்களில்லை. அளவுக்கதிகமாக வுயர்த்தப்படுமெல்லாம் இப்படியேயாகும். இதனைப் பாடண்டிக ளுணரகில்லார். ஸ்ரீமத் - வைதிகசைவருட் பெரிய தம்பிரானாராய்ப் பிரகாசித்திருந்த வொருவர் திருக்கழுக்குன்றத்துச் சிவாலயத்தை விளக்கிக் கும்பாபிடேகஞ்செய்து பிரமோற்சவம் நடாத்துங்கால், அங்கே விஷ்ணுகோவி லாதரவிலிருந்த வைஷ்ணவரென்பார்கூடி யிவ்வழியாக வுன்சுவாமி வரலொண்ணாதென்று மண்ணையுங் கல்லை யும் வாரிவாரி யுற்சவமூர்த்திமீ தெறிந்தனர். அதுகண்ணுற்ற தம்பி ரானார் எத்துணை நியாயமெடுத்தெடுத்துரைத்தும் அவர்களது அக் கிரம மடங்கிற்றில்லை. மேல், அவர் இவ் விட்டுணுகோவிலை யொழித் தாற்றா னிக்குறும் பொழியுமென்று சிவசிந்தனைசெய்து அடுத்த கிராமங்களிலுள்ள சைவர்களை ஆயிரக்கணக்காகத் திரட்டிக்கொடு வந்து ஒரு பாதிப்பகலில் அக்கோவிலையிடித்து அவ்விடத்தையு மோர்குளமாக்கி நாற்புறமும் படித்துறைகட்டி முடித்தனர். வை ணவ ரூர்விட்டோடினர். அக்குளம்—சிவாலயத்தின் தேர்நிலை யரு கிலுளது. வைணவரென்பார் ஸ்ரீசிதம்பரக்ஷேத்திரத்தி னொருசாரி ருந்த விஷ்ணு விக்கிரகத்தை ஸ்ரீநடராஜப்பெருமானது கோயிலை யபகரிக்கு நிமித்தம் அச்சந்நிதிக்குள் ஸ்ரீ குமாரக்கடவுளது ஆல யம் வெறுமையாயிருந்த வொருசமயத்தில், அவ்வாலயத்திலேற்றி விட்டனர். பல்பொழுதாயபின்பு சிவபக்தி தலைமீக்கொண்ட தேவ தாஸியொருத்தி யதனைநோக்குபு பாஷண்டக்கொள்கை யிங்கெப்

படி. நுழைந்ததென்று விசாரித்துண்மையுணர்ந்து அங்க ணதிகாரி யாயிருந்த தன்றலைவனைக்கொண்டு அவ்விக்கிரகத்தை வெளியே ற்றி நடுத்தெருவிற் கிடக்கும்படி செய்தனள். "நடுத்தெருநாராய ணன்" எனுஞ் சொல்லும் அதுகாரணமாக வுண்டாயிற்று. உற்சவ விக்கிரகம் திருப்பதியை யடைந்தது. பின்னை அந்நடுத்தெருநாரா யணனைப் பூதூர் - இராமாநுஜன்முதலிய வைணவர்கூடி யெடுத்துக் கொண்டுபோய்க் கீழைத்திருப்பதியெனு மிடத்திற் பிரதிஷ்டை செய்தனர். பிற்றைஞான்று ஸ்ரீ நடராஜப்பெருமானது திருக் கோயிலார் யாதோவொரு காரணத்தாற் பரஸ்பர விரோதிகளாயி னர். இதுதான் தருணமென்று ஒரு வைஷ்ணவ தாஸியானவள் திருவரங்கம்புக்கு அங்கிருந்த வேதாந்த தேசிகனெனும் வேங்கட நாதன்மூலம், கோபணராயனெனும் அதிகாரிக்கு நாராயணனை இப் பொழுது தில்லையிற் பிரதிஷ்டை செய்துவிடலாமெனுஞ் செய்தி யைத் தெரிவித்தனள். அவனும் வைஷ்ணவனாகலின், ஸ்ரீநடராஜ சந்நிதிக்குள் வெறுமையாயிருந்த அவ்வாலயத்துட் சிலாவிக்ரஹ மமைக்க அவகாசமின்மையிற் சுதையுருவினைச் சுருக்கப்போதி லமைத்து விட்டனன். அதுதா னிஞ்ஞான்றுள்ளது. இச்செய்திக ளுள், சிவபக்தி சிறந்த தேவதாஸி தொடக்கமாகவுள்ள யாவும் தே - குருபரம்பரை ப - கசு௫ - லும், வ - குருபரம்பரை ப - அ௦, கஉகூ - லும் வரையப்பட்டனவே. இவ்விடயத்தானும் பூதூரன் கொள்கையை அஞ்ஞான் றங்கீகரித்து நடந்தவர் சிலரே யென்பது திண்ணம். தில்லையம்பதி சித்திரகூடமென்றும், அது விஷ்ணு க்ஷேத் திரமென்றும், அதற்குப புராணச்சுலோகங்க ளுண்டென்றும், அவை சிவனை யிழித்துக் கூறுமென்றும் வைணவர்கூறுப. அங்ஙன மாயின், அவைவைணவர் கற்பனையாதல்வேண்டும். ஆழ்வான் பாட் டுக்குரியது இச்சுதை யுருவுள்ள ஆலயம் அன்று. இவ்வுருவையும் இனி யொருசமயம், உறுதிச்சைவர்க ளுடைத்தொழிக்க நினைப் பவர்களே. ஸ்ரீநடராஜரைத் தரிசிக்கச் சென்றாருட்சிலர் அந்தச் சுதையையுந் தரிசிக்கின்றனர். அங்கேதேனும் பொருளுமளிக்கின் றனர். அது, புத்திரவரத்திற்குப் போந்து புருடனைப் பறிகொடுத் தது பொருவும். இதுநிற்க. மேற்கூறியபடி சிவனையுஞ் சைவரை யுங் காணுண்ணுதெனுந் தீயோர்தீர்வையைத் தே-குருபரம்பரை—

ப - உகஉ - ல், கூரத்தாழ்வான்மகன் பட்டனென்பான் கூறுங் கூற்றாக, "ஸத்வப்ரசுரர் ரஜஸ்தம ஃப்ரசுரரை அநுவர்த்திக்கக்கட

வதோ" என்று வரும் வழிக்காண்க. ஸத்வப்ரசுரரென்றது வைண வரை. தமஃப்ரசுரனென்றது உருத்திரமூர்த்தியை. இம்மூர்த்தியை யே உமாபதி யென்பது வைணவர் தீர்வை. இஃதொன்றுதானோ, ப-உஉக-ல், நம்பிள்ளையெனும் வைஷ்ணவாசாரியன் கூறுங்கூற் றாக, "ஸத்வகுணாத்யந்த விரோதியான தமோகுணப்ராசுர ணைகை யாலே (ருத்ரனை) நித்யாதிகளைப் போலே ஆலயங்களிலும் பகவத் ப்ரகாரபுத்த்யா உபாஸிக்கலாகாது" என வருதலுங் காண்க. இங்ஙனம்—அக்நிஹோத்ராக்நியை யுபாஸித்தல் காட்டி அக்நீந்த் ராதி தேவதைகளை யுபாஸிக்கலாமென்றும், மசாநாக்நியை நிவர்த் தித்தல் காட்டி ருத்ரனை யுபாஸிக்கலாகா தென்றும் அவன் சொ ன்ன முடிவுகளுமுள. பாஷண்டமதசபேடிகை யெனும் பதிதத் தாதச்சுவடியில், "சிவனையுஞ் சைவனையும் புத்தி பூர்வமாகக் கண்ட கண்களைப் பிடுங்கிப் புகடுகை" என்பது மெழுதப்பட்டது.

மாண்புறு வைதிக சைவம் விழைவோர்காள்! அடிப்பட்ட சான்றோருள் எந்தச் சித்தர் முனிவ ரிவ்விதமுடிவைச் செய்த னர்? எவருஞ் செய்யவில்லை யாகலின், சுருதியாதி பிரமாண மெல்லாஞ் சொல்கின்றபடி சிவனாற் படைக்கப்படுஞ் சரீரியா ய்ச் சிவனுக் கடிமையாயுள்ள விஷ்ணுவை அளவுக் கதிகமா யுயர்த்து மாற்றால் அவ் விஷ்ணுவி னுட்கருத்துக்குந் துரோகிக ளாய், அற்பமதியராய், எரிவாய் நிரயத்திற் கேகுவோராயிருந்த இச்சண்டாளர் கொள்கையை ஆசரித்திருக்கும் பாவிகளின் ஜீவனத் திற் கேதுவாயுள்ள கோவில்கள், என்று பாழாகுமோவெனுஞ் சிவ புண்ணிய சிந்தையே நுங்கள்பாற் பல்கவேண்டுமென்பது திறம் பாத்தீர்வையாகும். மாந்தர் பலரையுங் கோறல்புரிந்தோனை அரசன் சிறைச்சாலையில் வைத்து உணவளிப்ப தின்றாதலானும், அச்சாலை யுணவு வேறுகுற்றத்தினர்க்களிப்ப தாதலானும் சிறை யிருப்பார்க் கரசனுணவீந்தாங்கு அப்பாதகவைணவர்க்கும் நீவி ரேதேனுமுதவி செய்யொணாதோவெனப் பிறர் வினாதலும் ஈண்டைக்குச் சாலாது. அக்கொலைப் பாவத்தினுங் கொடிது சிவநிந்தை முதலியவாகலின் அந் நிந்தகரை யரசனானவன் முருக்கி யொழிக்கவேண்டு மென் றலே முதுநூற்றுணிபென்பது—

"கண்டனை ஞயின் முக்கட் கடவுளை நிந்திப் போனைத்
தண்டனை புரிந்து கொல்க வரிதெனிற் சபிக்க நின்று

மண்டனில் வலிய னன்றேல் வார்செவித் துளைகள் பொத்திக்
கொண்டவ் ணகன்று செல்க குலேகுலேர் தமல பத்தன்."

எனுஞ் சித்தாந்தசிகாமணிச் செய்யுளினும் பெறப்படும். இந் நியாயம்.—எச்சமயத்துக்கும் பொதுவா யிப்பொழுதுள்ள அரசிற் கிடைப்பதில்லை யாகலின், அப்பாதகர் ஜீவனார்த்த நிமித்தம் நீங்க ளெவ்வித வுதவியுஞ் செய்யாதிருப்பதுதான் அந்த நியாய பரிபாலனமாகும். அப் பாதகர் சுவடிக ளொழிய மற்றெந்த மத மூலபுத்தகங்களிலுஞ் சிவனை வணங்கலாகா தென்பதையேனும், மேலெடுத்துக் காட்டப்பட்ட சைவநிந்தைகளையேனும் நாங் கண்டில மாகலின், அம்மதத்தவர்க்கெல்லாம் இயன்ற வுதவியை நீங்கள் செய்யலாம். அது பசுபுண்ணியமாகும். அப்பாதகர்களிற் சிலர், தமக்குச் சம்பவித்த யாதானுமோர் துன்பில் நுங்களது உதவி வேண்டிப் பல்லையிழித்துப் பரக்கவிழித்து அடிவயிறு பிசைந்து கடைவாய்நக்கி வேறு திக்கில்லையே யென்றலுங் கூடும். அஞ்ஞான்று நீயிர் திருநீறிட்டுக்கொண்டு க்ஷேமப்படலாமே யெனின், அவ ரியையாமலே நிற்பர். அங்ஙனம் "வஞ்சக நெஞ்சே வைணவர் பாற்று" என வுணர்ந்து நீங்கள் சிறிது மிரங்காதிருத்தல் வேண்டும். ஓ பேசரிய சைவப் பெருமக்காள்! ஒருவன் நமக்கிழைத்த குற்றத்தை நாம் பொறுத்தல் தகுதியாம். சைவாசாரியர்க்கும், சிவபெருமாற்கும் சிவனடியவர்க்குஞ் செய்த குற்றத்தை நாம் பொறுத்தல் தகுதியன்று. அவ்விடயத்தில் உயிர் துறக்கவரினும் அது பதிபுண்ணிய மென்றன்றோ சிவபுண்ணியத்தெளிவு தெரிக்கின்றது. அது—

"குருவி லிங்கசங் கமத்தினைக் குறித்தவற் றிடையூ
றொருவு தற்பொருட் டாற்றம துயிர்விடு முரவோர்
மருவி டும்பல மெமக்குமே யளம்பட வகுப்பா
னருமை யென்றன னனைத்தையு முணர்த்துபே ரறிவோன்."

என்பதே. நியாய மிவ்வாறிருப்ப, சிலர் தெய்வதூஷணஞ் செய்தவனுக்குத் தெய்வங் கூலிகொடுக்கட்டும்: நாமேன் அதனைக் கவனிக்கவேண்டுமென்று புறம்போவர். அன்னோர் தேவாலயத்திற் செயவேண்டிய திருப்பணி முதலிய காரியங்களிலும் அன்னணமே சொல்லி வாளாவிருப்பர் போலும். தம்மையேனுந் தங் குடும்பத்துளாரையேனுந் துன்பப்படுத்திய வொருவனுக்கு உரிய கூலியும், தாம் உண்ணுமுணவும், உடுத்துமுடையும், பிறவுந் தெய்வ

மே கொடுக்கட்டுமென் றிராமற் குருலிங்கசங்கம இடையூற்றின் மட்டும் அவ்விதஞ் கூறியிருக்கு மவரெல்லாங் குமதிகளும், உலோபிகளும், சோம்பர்களும், பொறாமையினர்களும், சிறந்த சிவபக்தியில்லாத சிறியர்களும், பதிதர்சார்பிற் சீவிக்கும் பதிதர்களுமே ஆவர். குரு லிங்க சங்கம நிலையி லுருகுமுள்ளமும், உலக கருமங்களில் வைரமான நெஞ்சுமுள்ளவரெவரோ அவரே சற்கதியுறற் குரியராவர். அதனால் அப்பரமார்த்த இடையூறொழிப்பான் இயன்றதைச் செய்தல் சிவபக்த சிரோமணிகள் கடமையாம். சிவநிந்தை கேட்டு வாளாவிருத்தல் துன்பமாக முடியுமென்றற்குத் தக்ஷயாகத்தில் விஷ்ணுமுதலினோருற்ற துன்பினை மீண்டும் ஞாபகப்படுத்தினேம். சிவபெருமான் மீதுவைத்த விசுவாசமாகச்செய்யுங் கொடுந் தொழிலும் நறுந்தொழிலாகும். இதற்குத் தந் தந்தையான வேதியன் றாளைத்தறித்த ஸ்ரீ சண்டேசநாயனாரது திவ்வியசரிதை சான்றே.

கேண்மின் கேளுடையீர்! சிவாலயங்கட்குஞ் சிவனடியர் மடாலயங்கட்கும் எவ்வித தருமமுஞ் செய்யாதிருக்கின்ற அவ் வைணவப்பதடிகள்.—திருநீறணிவாருள் ஆபத்கால விஷயமாக யாசிப்பார்க்கும், உண்டற்கிடனின்றிப் பசித்திருப்பார்க்கும் ஒன்றுங் கொடாத வன்னெஞ்சராயுள்ளார். இது குறித்து யாங் கண்டவாறொன்று நவிலுதும். யாம் குடும்பியாய் வைணவ நிலைமை தெரியாதிருக்குஞான்று யாமும், எம் அன்பார்ந்த (பிரப்பன்வலசை) தி. உடையநாயகம்பிள்ளையும் நாகபட்டணம் போந்தகாலை, நீடாமங்கலமார்க்கமாகத் தெற்குநோக்கிச் செல்லுங்கால் இராஜமன்னனார் கோவி லெனுமூர் எதிராயிற்று. அங்குள்ள தடாகத்தின் முகங்கழீஇத் திருநீறிட்டுக்கொண்டு எம்பெருமானாகிய சிவஸப்ரஹ்மண்யத்தைத் தியானித்திருந்து, சைவரது கிருகாஹாரம்இங்கேகிடையாது, காசு கொடுத்தக்கால் ஐயங்கார் கிருகாஹாரங் கிடைக்குமென்மனூர் சொல்வழிச்சென்று இரண்டு வீட்டில் அவ்வண்ணங் கேட்டனம். அவர்க ளெங்களைநோக்கி நுங்கட்கு யாங்கள் ஆஹாரமிடோமென்றனர். ஐய! இரண்டுநாள் ஆஹாரமிலாது வாடுகின்றனம், முக்கால் ரூபாயேனு மளிப்போம், இருவர்க்கு மெத்துணை ஆஹாரமேனு முதவல் வேண்டுமென்றனம். அன்னோர், நீங்க ளெதனையோ பூசிக்கொண்டுளீர், அதனை னீங்களெவ்வளவு காசு கொடுப்பினும் நுங்கட்கு ஆஹாரமிடோம், இருக்கவு மிடங்கொடோம்,

போமென்றனர். மேல், வேறு வழியுண்டோவென்றனம். அவர் குளத்து நீருண்டு குடித்துப்போமென்று இல்லுட்புக்சார். நாங்களும் வருந்தி யுடனே யவ்வூரைவிட்டுத் தெற்குநோக்கா நடக்கலுற்றனமால். வைணவர் பெற்றியிற்றெனவுணர்த்து நிமித்தமே இறைவனெம்மை யங்குய்த்தனனென்றிப்போதுணர்கின்றேம். இந்த நீசாசார வன்கண்ணர் தமது தெய்வம் இரக்ஷகத்தொழிலுள தென்றும் நாணமின்றி நவில்வர். இவர் மதத்திற் பிறரைச் சேர்ப்பதற்காக வைத்துக்கொண்ட தந்திரங்கள் பலவற்றுள்ளும் இரண்டே சாமானியமாய்ச் சுலபமாயுள்ளன. அவற்றுள், கோவில்களிற் புளியோரை ததியோதன சர்க்கரைப்பொங்கற் பிரஸாத வீதலொன்றும். மண்ணும் மஞ்சட்பொடியுங் கொண்டு நாமந் தீட்டுதலொன்றும். இவ்விரண்டுஞ் சுருங்குமாறு சைவர்கள் முயற்சி யெடுத்துக்கொள்ளின், அம்மதம் தினே தினே தேய்ந்து நீவினையாளரளவாய் நிற்கும். இதனை, இஞ்ஞான்று நன்கு கவனியாக்குறைவே வைதிக சைவர்மாட்டாகி அனேகர், அப்பதிதப் புறச்சமயத்தாழ்ந்து கெடுமாறுமாயிற்று. ஓராவொருவன் நாமந்தீட்டிக்கொண்டவுடனே அந்த மதாபிமானியாகின்றனன்: பின்னர் அவனுமிதற்காதாரங் கற்பித்தாவது காட்டவேண்டுமென்று முயல்பவனாகின்றனன்: அவன் வமிசமும் அவ்வாறேயாகுமாகலின், இனியேனும் இஃதுய்த்துணர்ந்து விபூதி மார்க்கத்தைப் பரிபாலிக்கச்செய்து இனிதுய்வீர்களாக. விபூதிதாரண பரிபாலனமே சைவசமய விருத்திக்குந் தலையுபாயமாகும். பாஷண்டவைஷ்ணவர் தூஷிக்கின்றனரேயென்று நீவிர் நினைத்துச் சும்மாவிருத்தல் கூடாதென்றற்கான நியாயத்தை மேலே கொன்னும் விளக்கியுள்ளேம். அன்னோரால் நஞ் சமயக்கடவுளுக்கும், நஞ் சமயாசாரியர் முதலியோர்க்கு முண்டான நிந்தைகளை நாமும்பெற்றுச் செய்வனசெய்தல் நாம் பெறும்பேறேயாம். அவர் சைவதூஷணமாக ஒரு சிறு பத்திரிகை வெளியிடினும்.—

"நிறுத்திடவலானமலனானெறியையென்றும்
மறுத்திடவலானமலமார்க்கமயலுற்றே
நிறுத்திலன்மறுத்திலனெனிற்கரிசனேயம்
அறுத்தவனைமாய்க்கைகரிசல்லவறமாமே."

என்ற சிவதருமோத்தரப் பிரமாணப்படி நுங்களிற் பண்டிதராயுள்ளார் அதனைமறுத் தாண்மைநிறுத்திச் சிவதருமத்தைப் பெறல் வேண்டும். எனையோரதற்குரிய பிறவுபகாரங்களைச் செய்து அத்

தருமத்தைப் பெறல்வேண்டும். ஒரு தாதனும், ஒரு பஸ்மதாரியும் யாசகநிமித்தம் ஒருவீட்டிற் சந்திக்க நேர்ந்தபோது அத் தாதன், அவ்வீட்டு மனுஷியை அம்மே! என விளித்து, நுங்கள் பிள்ளை மலங்கழித்தது: சிவபஸ்மங் கொணர்ந்து தூவுதல் வேண்டுமென் றதை யறிந்த அப் பஸ்மதாரி நகைத்துப் பஸ்மம்யாதுக்கு வராகப் பெருமாள் வருவர்: நன்கு சுத்திசெய்து விடுவரென்று நகைச்சுவை பொலிய நவின்றனன் என்பதேய்ப்ப, அம்மறுப்பும் ஒல்லையி லாதல் வேண்டும். உயிர்க்குறுதியான ஞானத்தைப் பயக்கும் வைதிகசைவ ததை யெவ்வாற்றானும் நீங்கள் வளர்க்கவேண்டும். சிவசின்ன தார ணமுஞ் சிவபக்தியுமுள்ளோர் யாவரேயாயினும் அவரைச் சமய வொற்றுமையால் நன்கு தழூவிக் கோடல்வேண்டும். சிவசின்ன தாரண சிவயோகிகளைக்காணின், அவர்களைச் சிவமாகவேபாவித்து அவர்களின் றிருவடிக்கமல சன்னிதானத்தில் வேரற்ற மரம்போல் வீழ்ந்துவணங்கி யெழீஇ ஒருபுடையொதுங்கிநின்று அவர்கள் வே ண்டுவன நல்கி யவர்களாசீர்வாதம் பெற்றுய்தலும் நுங்கள்பால் நனிபெருகவேண்டும். உடல், பொருள், ஆவியெனு மூன்றனையுமே ற்று மேலொன்றனைக்கொடுப்போர் பரமாசாரியரென்பதும் அறிக.

இக் காண்டத்தில் விவரிக்கப்பட்ட இதோபதேசங்களின்படி வைதிகசைவ ரனைவரும் நடக்கக் கடமைப் பட்டவர்களே. அன்ன வருள் எஞ்சிடர்களாய் எம்மைத் தொடர்வோர்களாயுள்ள யாவ ரும், இவர்கள் சந்ததியில்வரும் யாவரும் அப்படியே நடக்கக் கட வர். திருவருண் முன்னின் றருள்புரிக.

இதோபதேச காண்டம் முற்றிற்று.

---

# ஆசாரிய விசாரகாண்டம்.

## க. வைஷ்ணவாசாரியர் பொய்யுரையாடல்.

புட்குழியெனு மூரிலே ஸந்நியாஸியா யிருந்த யாதவப்பிரகாசனுழை வேதாந்தம் படிக்கும் மாணவகர் பல்லோருள்ளும் பூதூர் - இராமாநுஜ னென்பான் சில அர்த்தங்களை வேறுபடுத்தின்மையின், அந்த யாதவப்பிரகாசன் இவனிருத்தல் கூடாது இவனைக் கங்காநதியி லமிழ்த்திக் கொல்வதே காரியமென்று கருதினவனாகி இராமாநுஜனுடன் மற்றைச்சீடர்களையு மழைத்துக்கொண்டு வடக்கே செல்கையில், செல்லுஞ் செய்தியை அக்கூட்டத்து ளொருவனான கோவிந்தபட்ட னுணர்த்தவுணர்ந்த அவ்விராமாநுஜன் பெரிதுங் கலங்கின சித்தமுடையானாய், ஒரு பள்ளத்தின் மறைந்துநின் றொளித்தோடிக் காஞ்சிபுர மடைந்திருக்குஞான்று, கங்காநதியாடி வந்த யாதவப்பிரகாசன் அவனைக்கண்டு, நீ வந்துவிட்ட காரணம் யாதென்று வினவியபோது அவ்விராமாநுஜன், கோவிந்தபட்டன் சொன்ன செய்தியை மறைத்து, ("வழிதப்பி உங்களைக் காணாமல் அகன்றுபோய் வில்லி வ்யாஜேநப்போந்த விர்த்தாந்தத்தை ஸவிஸ்தாரமாகச் சொல்ல" என்றபடி) பொய் கூறினனெனுஞ் செய்தியைத் தே - குருபரம்பரை ப - அஎ - முதல் கூக - வரையிற் படித்தறியலாம். அக்கூட்டத்திலிருந்து தப்பிவந்த இவன் உண்மையையே யுரைக்கலாம்: அஃதின்றிப் பொய்யுரையாடியதை நோக்குழித் தனக்குங் கோவிந்த பட்டனுக்கும் அந்த யாதவப்பிரகாசனது தயவு வேண்டுமென்று அதனை அவாம்பிரயோஜனங் கருதியே அப்படிக் கூறினனென்ற லேற்படுகின்றது. உரைக்குமுரையா லுயிரிழப் புறினும்மெய்யுரையாடுநர் பொய்யுரை யாடார். இவன்பொய் கூறியபடியே அக் கோவிந்தபட்டனும் பொய் கூறியுள்ளான். யாங்ஙனமெனின்,—"அங்கே, யாதவப்ரகாசனும் திரளுமாக இவர்கள் வருமளவும் நிற்க, அவ்வளவிலே கோவிந்தபட்டர் வர, வந்தீரோ, இளையாழ்வார் எங்கே என்றுகேட்க, அவரை நான் கண்டிலேனென்ன" என்றங்ஙன மெழுதியுள்ளதிற் காண்க. இளையாழ்வாரென்றது இராமாநுஜனை. இவையேயுமன்றி திருக்கச்சி நம்பியெனும் வைணவனது உச்சிட்ட இலையைக் கோல்கொடுதள்ளி அவ்

விடத்தையுங்கோமயத்தாற் சுத்திசெய்து தானும்நீராடினதும்; ஒரு தோண்டி நிமித்தம் பெரியநம்பி மனைவியோடு சண்டை யிட்டதுமாகிய இரண்டு குற்றத்தையுஞ் செய்தவளாய இராமாநுஜன் மனைவி, தன் புருடன் ஒரு வைணவனைச் சுட்டி இவருண்பதற்கு ஆஹாரமின்றோவென்று வினவியபோது வீட்டில் ஆஹாரத்தை வைத்துக் கொண்டே அற்பமுமின்றென்று பொய்சொல்லின ளென்பதும் அக் குருபரம்பரை ப - கoஎ - ற் பெறப்படுகின்றது. இப்பொய் கணித்து "நெடுஞ்சொல்லால் மறுத்த நீசையிறேநீ" என்று அவளையிராமாநுஜன் ஏசினனென்பதும் அங்ஙனுளது. இது, ஒரு காது மூளி இருகாது மூளியை யிழித்துரைத்தமை கடுக்கும். ஆசிரியர் பெருமை கூறவந்த சுவடியில் இப்படிப் பொய் வெளிப்படுதலின், அவர் அளவற்ற பொய்யராக விருந்தனரென்பதும் ஸ்தாலீபுலாக நியாயமாக அறியப்படுமன்றே.

## உ. வைஷ்ணவாசாரியர் மஞ்சட்குளிப்பு.

---

பூதூர் - இராமாநுஜன், தான் சரமபுருஷார்த்த மென்பதைப் பெறுநிமித்தம் திருவரங்கப் பெருமாளரைய னென்பானுக்கு ஆறு மாதங்காறும் பாலமுது காய்ச்சிக் கொடுக்கும் வேலையோடு மஞ்சளும் அரைத்தரைத்துக் கொடுக்க, அவ்வரையனும் அம்மஞ்சளை தன்னுடம்பி னன்கு பூசிப்பூசிக் குளித்திருந்தவனுவன். இச்செய்தி தே - குருபரம்பரை ப - கஉரு - ல்—

"அன்றுமுதல் ஆறுமாஸம் அவருக்குகப்பாகப் பாலமுது காய்ச்சி ஸமர்ப்பித்தும், திருவத்யயந காலங்களிலே அரையர் திருமேனிக்கு அநுரூபமாக மஞ்சட்காப்பு அரைத்து ஸமர்ப்பித்தும் அநுவர்த்தித்தும் போருங்காலத்திலே, ஒருநாள் மஞ்சட்காப்பரைத்து நீராடப்பண்ணுகிற காலத்திலே, அவருடைய திருமேனிக்கு அநுரூபமல்லாதிருக்கிறபடியை அவர் திருமுகமண்டல விகாரத்திலே கண்டு, மஞ்சள்பாத்ரத்தைக் கடக்கவைத்து, வேறே பாங்காக மஞ்சட்காப்பரைத்து சாத்தி நீராடப்பண்ணியருள, திருவரங்கப் பெருமாளரையரும் அத்தைக்கண்டு, மிகவுந் திருவுள்ள முகந்தருளி, உடையவரைக் குறித்து, என்னுடைய ஸர்வஸ்வத்தையுங் கொள்ளை கொள்ளவோ நீர்இப்படி செய்ததென்று அருளிச்செய்து"

எனும் வசனங்களில், தெற்றெனப் பெறப்படுதல் காண்க. "வேறே பாங்காக மஞ்சட்காப்பரைத்து" என்றதனால் இராமா

நுஜன் மஞ்சளரைப்பதில் மஹாசமர்த்தனென்பது வைணவர் தீர்வைபோலும். அஃதவனுக்கே சாலும்! சாலும்!! அப்படியரைத்த மஞ்சளுக்கு ஆசைப்பட்டுச் சரமபுருஷார்த்தஞ்சொன்ன அவ்வரையனை ஆளவந்தானுடைய மகனென்று ஆழ்வாராசாரியர்கள் வைபவமெனுஞ் சுவடி ப-கக்க-ற் பகர்கின்றது. ஆசிரியனநுட்டிப்பைச் சீடனுமநுட்டிப்பது நியாயமாகலின், இராமாநுஜனும் அம் மஞ்சட்குளிப்புடையவனே யாவன். இக்காலத்துஞ் சிலவைஷ்ணவ குருக்கள் மஞ்சட்குளிப்ப துண்டென்று பார்த்தோர் பகர்கின்றனர்.

## ௩. வைஷ்ணவாசாரியர் பெண்மைப்பெயர்பெறல்.

வைணவர் ஸிம்ஹாஸநாதிபதிகளெனப்பிதற்றவுள்ள எழுபத்துநால்வரும் புருடர்களேயென்பதைத் தே-குருபரம்பரை ப-கசுசு-ல் "எழுபத்துநாலு ஸிம்ஹாஸநஸ்தரான ஆசார்ய புருஷர்கள்" என்று வரையப்பட்ட வசனத்தானறியலாம். இவர்கள் பெயருள் அம்மங்கியம்மாள், பரித்திக்கொல்லையம்மாள், உக்கலம்மாள், சொட்டையம்மாள், முடும்பையம்மாளென்பன பெண்மைப்பெயராயிருத்தல்காண்க. வ-குருபரம்பரை ப-அ௩-ல் "பிள்ளையுறங்காவல்லிதாஸர் முதலான அம்மைகளும்." என்று வரைந்துளதில், 'தாஸர்' எனும் ஆண்பாற்சொல்லே 'அம்மை' எனும் பெண்பாற்சொல்லாய் நிற்றலுங்காண்க. அன்றியும், அந்த வ-குருபரம்பரை ப-கருசு-ல் "கடிகாசதகம் அம்மாளென்கிற வாத்ஸ்ய வரததேசிகர்" எனவும், ஆழ்வாராசாரியர்கள்வைபவம் ப-உ0எ-ல் "உடையவருக்கு மருமகனாராகி அவரால் ஸ்ரீபாஷ்ய ஸிம்மாசனத்தைப் பெற்றிருக்கின்ற நடாதூர்ஆழ்வானுடைய திருப்பேரனாரான நடாதூரம்மாள்" எனவும், தென்னாசாரியப்பிரபாவகண்டனம் ப-சுரு, சுசு-ல் "நடாதூர் பெரியவம்மாள் திருப்பேரனாரான கடிகாசதகமம்மாள்" எனவும் வரைந்திருத்தலுங் காண்க. மேற்போந்த சொட்டையம்மாளெனும் பெயரிய வைஷ்ணவாசாரியனை மேற்சொற்றபடி மஞ்சட்குளித்துத் திரிந்த திருவரங்கப்பெருமாளரையனுடைய பௌத்திரனெனுஞ் செய்தியும், வ-குருபரம்பரை ப-எச-ல் வரையப்பட்டுளது. இந்த அரையன் ஆளவந்தானுடைய மகனென்பதும் மேலே வந்துளது. இப்படிப் பெண்மைப்பெயர்

பெறலையும், மஞ்சட்குளித்தலையும் பற்றி யோசிக்குங்கால் பாவாடைமுதலிய துணிகளும், வளையன்முதலிய அணிகளுமணிந்து திரிந்தவர்களே யன்னோர்களென்பதும் போதரும். இத்திறமொத்த செய்கை அம்மன் கொண்டாடிகளெனுஞ் சில ஆடவர்பாலிக்காலத்துங் காணப்படுகின்றதன்றே, அவர்கள் வருதல் போதல்பற்றி "அம்மாள் வருகிறாள்" "அம்மாள் போகிறாள்" என்பவை முதலிய சொற்களும் இத்தேயத்தே காணப்படுகின்றன வல்லவோ. இவர்கள் தெய்வம் பெண்ணாகவிருத்தல்போல வைணவர் தெய்வமெனு நாராயணப்பெருமாளும் நாரியாயிருத்தலும், அந்நாரியைச் சிவபெருமானார் கூடித் தமது உருவொத்த ஐம்முகப்பிரமதேவர் ஹரிஹரபுத்திரரெனு மிருபுதல்வர்களைத் தந்தனரென்பதும், விஷ்ணுகுறியெனுஞ் சாலக்கிராமம் தேய்ப்புக்கல்லொத்துப் பெண்குறிவடிவாயிருக்கின்றதென்பதும் ஸம்ஸ்க்ருதவேதமுதலியபிரமாணங்களாலும்; "அரியலாற் றேவியில்லை யையனை யாற னார்க்கே" என்று திருநாவுக்கரசுகளின் றிருவாக்காகிய தமிழ்வேதத்தாலும் அறியப்படு மாற்றானே ஹரிக்குப் பெண்டன்மையுமுண்டெனவொப்பி அப் பெண்மைக்கொள்கையையுங் கொண்டவரே அத் தீயூழ் வைணவரென்பதும் இங்ஙனம் ஏற்புடைத்தே. வைஷ்ணவாசாரியர் மது மாமிசம் உண்டு திரிந்தவரென்பதும் ஈண்டறியற்பாற்று. இதனை, விஷ்ணுதத்வவிளக்கத்தின் ப - கூ௦, கூக - ல்—

"எதிராஜர் திருமலையினின்று கோயிலுக்கு எழுந்தருளின காலத்தில் அத்திகிரிக்குத் தக்ஷணமாக வீரகாஞ்சிபுரத்தில் நீசக்ருஹத்தில் நின்று எம்பெருமானாருக்குத் தங் நீசத்ரவ்யங்க ளிரண்டும் சேகரித்து மோக்ஷப்ரதான ச்ரேஷ்ட த்ரவ்யங்களும் பெரியநம்பி தம் சிஷ்யரான எம்பெருமானருக்கு ப்ரஸாதித்துச் சிலருக்குச் சாதித்துக்கோயிலுக் கெழுந்தருளினபின், ஒருவன் மூர்க்கன், எம்பெருமானார்க்கு சேகரித்த த்ரவ்யங்களெல்லாம் ஸ்வீகரித்ததில்லோமே யென்று நெஞ்சில் அஹங்காரத்தோ டிருந்தான். அவன் நெஞ்சில் தோன்றியிருந்த அஹங்காரத்தை நிரஸிக்கவேணுமென்று முன்னிருந்த திறவு நீசக்ருஹத்தில் தாமிருந்து தங் நீசத்ரவ்யத்துடன் மற்ற த்ரவ்யங்களையும் ப்ரத்யக்ஷமாகக்கொண்டு காட்டுகிறார். பூர்வத்தில் அநுபவித்து, ஸித்தளார முனியான நம்மாழ்வார் திந்திரிணீ மந்திரத்தில் வாஸராய்த் திவ்யப்ரபந்த கோஷ்டத்வயஞ்செய்ய, தத்ஸமயத்தில் ஒருவன் அந்த்யஜனை மனுஷ்யன், தூரத்தில்நின்று நன்றாகக்கேட்டு ஸமீபத்துக்கு வந்தடைந்து ஸேவித்து ஸ்வாமி பக்ஷபாதக பாஜனமாயிருக்கிற எனக்குக்கதி யேதென்று விண்ணப்பஞ்செய்கையாலே ஸஜ்ஞான காரணமான கீதைகள் முதலானவை ச்ரவணஞ்செய்ய எந்தப் பலம் லபிக்குமோ அந்தப்பலம் வாருணீ திருப்தியால் லபித்து ஸேவிக்க

லாயிற்று. இவ்வர்த்தங்களுக்கு யோக்யமான வாருணீமது கொண்டுவந்து அநுபவித்தால் நம்முடைய நித்ய விபூதியடையத் தடையில்லை, என்றருளிச் செய்தாரென்று ஸ்ரீமந் நாதமுனிகள் தநுகைக்காவலப்பனுக்கு ச்லோகரூபமாக வருளிச்செய்தார்."

எனவெழுதி, இவ்வாறு நெல்லூர், பந்தர், தாளூர், ஒட்ரதேசம் முதலியவிடங்களி லிருக்கிற பள்ளமடையரெனும் வைஷ்ணவர்களின் இரகசியக்கிரந்தங்களி லறியலாமென்பதாக வரைந்தவழிக் காண்க. எம்பெருமானாரென்றது பூதூர் - இராமாநுஜனை. தே - குருபரம்பரை ப - ௩௩ - ல், சூடிக்கொடுத்தாள் விஷயமாகப் "புருஷனைப்புருஷன் காமிக்குமதும், ஸ்த்ரீயை ஸ்த்ரீ காமிக்குமதும் மேட்டுமடையாயிருக்கும்; புருஷன் ஸ்த்ரீயைக் காமிக்குமதும், ஸ்த்ரீ புருஷனைக் காமிக்குமதும் பள்ளமடையாகையாலே இது சேர்ந்திருக்குமிறே" எனவெழுதிய செய்தியிற் 'பள்ளமடை' காணப்படுதலின் இத் தென்னாட்டு வைணவரும் பள்ளமடையரே யாகிறார். காமித்தல்—விரும்பல்.

இவனை, வைணவர் நாளடைவிற் சிறிது நாகரிகம் பேணினமையின் இக்காலத்தில் அப்பூர்வக்கொள்கைகள் மறைந்தனவென்க. உலகசிருஷ்டியாங் கிரியையை நடாத்தப்பிரமனைத்தருங் காரணனுயுள்ள உருத்திரமூர்த்தியே பீஜம், அந்தபீஜத்துக்கு யோநி ஜநார்த்தனனெனும் விஷ்ணுவென்று பொருள்படுத்தத்தக்க—

(ருத்ராத்ப்ரவர்த்ததே பீஜம் பீஜயோநிர் ஜநார்த்தந:।)

(கார்யம் விஷ்ணு: க்ரியா ப்ரஹ்மா காரணந்து மஹேச்வர:।)

"ருத்ராத்ப்ரவர்த்ததேபீஜம்பீஜயோநிர்ஜநார்த்தந ঃ |"

"கார்யம்விஷ்ணு ঃ க்ரியாப்ரஹ்மா காரணந்துமஹேச்வர ঃ |"

எனும் யஜுர்வேத ருத்ரஹ்ருதயோபநிஷத் வசனங்களும், சிவபெருமான் பீசமுடைய பீசி, பிரமனாகிய நீ அவனது பீசம், அரியாகிய நான் யோனி, உலகெலாமுண்டாக்குநிமித்தம் அவனது பீசத்தை யெனது நாபிக்கமல யோனியில் வைத்தனனென்று விஷ்ணுகூறிய கூற்றாக—

"மலைமகள் கொழுநன் பீசிநீ பீச மற்றியான் யோனிதன் பீசம்
உலகெலா முன்னந் தோற்றுவிப் பதற்கென் யோனியில் வைத்தனன்"

என வரூஉம் இலிங்கபுராணத்துப் பூர்வகாண்டத்து ௨௰ - ம் அத்தியாயத்தின் ௩௩ - ந் திருவிருத்த வாக்கியங்களும்,

மஹாசாஸ்தா உதிக்குமாறு ஹரியெனும் மோஹினியுஞ் சிவ பிரானும் புணரும்போது அவர்களுருவினின்றுமுண்டாய வியர்வையே கண்டகிநதியாயிற்று : அதனிருமருங்குஞ் சக்கிராகாரமான தாரைகள் விளங்க வச்சிரதந்தியெனுங் கீடங்களுண்டாகின்றன : சிவதாதுவாகிய பொன்னோடு உற்பத்தியாகும் அவை, சாலவிருக்ஷ சம்பந்த இடம்பற்றிச் சாலக்கிராமமெனும் பெயர் பெற்றன,—

எனும்பொருள் தரத்தக்க மஹாஸ்காந்தபுராண வாக்கியங்களும்,பிறவுமே அந்தப்பிரமாணங்களாகும். "தத்புருஷாய வித்மஹே மஹாதேவாய தீமஹி | தந்நோ ருத்ர ꣳ ப்ரசோதயாத்||" எனுஞ் சிவகாயத்திரியிலுள்ள 'புருஷ'சப்தம் விஷ்ணுகாயத்திரியின்றாகலின் அதுவும் சிவனுக்குரிய புருடத்தன்மையை விளக்குவதாயிற்று. இப்படிவேதமுதலியவற்றால் விஷ்ணுவினது பெண்மையுஞ் சின்மையும் வெளிப்பட்டிருப்ப, இக்காலத்துச் சில வெறித்தாதர்கள் அத்தன்மைகளை மறுத்துவிடப் பார்க்கிறார்கள். அது, வேதந்தெரியாப் பேதைகள் செய்கையேயாம். ஹரி ஹரனை நாயகனாக வைத்துக் கொண்டு பிரமனைப்பெற்ற விடயத்தைத் திருமங்கையாழ்வானும்—

"பிறைதங்கு சடையானை வலத்தே வைத்துப் பிரமனைத்தனுந்தியிலே தோற்று வித்துக்—கறைதங்கு வேற்றடங்கண் திருவை மார்பிற் கலந்தவன"

என்றெப்புக்கொண்டுளான். இதனை விரித்துவிளக்கிய நியாயமெல்லாம் நாலாயிரப்பிரபந்தவிசாரத்தின் உ - வது அதிகாரத்திற் காண்க.

## ௬. வைஷ்ணவாசாரியர் நோயுற்றுச்சாதல்.

யமுனைத்துறைவனெனும் ஆளவந்தானேன்பான் முன்னொருமுறை நோயுற்று வருந்தி, அது சிறுவரை நீங்கப்பெற்றிருந்து, பின்னொருமுறை பெருநோயுற்று மரணமாயினன். இச்செய்தியை, தெ - குருபரம்பரை ப - கூடு - ல் "ஆளவந்தார் திருமேனியிலே நோவுசாத்தி யெழுந்தருளியிருக்கச்செய்தே" எனவும், கூள - ல் "ஆளவந்தார் திருமேனியில் நோவாறி ஆரோக்யமுண்டாய் நீராடி" எனவும், கூஅ-ல் "ஆளவந்தார் பின்னையுந் திருமேனியிலே நோவுசாத்தி மிகவுந் தளர்ந்து கண்வளர்ந்தருள" எனவும் வருவனவற்றானறிக.

பூதூர் - ஆஸுரி கேசவப்பெருமா ளென்பானுக்கும் பூமிப் பிராட்டியென்பாளுக்கும் புத்திரனுகப்பிறந்த இராமாநுஜனும் திருவரங்கமெனும் ஊரில் நோயுற் றுயிர்துறந்தனன். இச்செய்தியை, வ - குருபரம்பரை ப - அகூ - அஎ - ல் "பின்பு திருமேனியில் நோவுசாத்தியிருக்கும்போது பிள்ளான் ஆழ்வார்களோபாதி திவ்யமங்கள விக்ரகப்ரதிஷ்டையை நியமித்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, முதலியாண்டானும் இப்படியில்லாவிடில் ஸித்தாந்தங் குலையுமென்று விண்ணப்பஞ்செய்ய" எனவும், "கோயிலுக்கு நேரே பிள்ளான் மடியில் திருமுடியும், கிடாம்பியாச்சான் மடியில் திருவடிகளுமாய்க் கண்வளர்ந்தருள" எனவும், தெ - குருபரம்பரை ப - ககூஉ - ல் "ஆளவந்தாரைப்போலே, உடையவர்க்கு ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்து, பீடயாநமான திவ்ய விமானத்திலே யேறியருளப்பண்ணி" எனவும் வருவனவற்று னறிக. இங்ஙனம் வைணவர் நவீனக்கொள்கையை நிலைபெறுத்தப் பெருமுயற்சி செய்தமையுங்காண்க. பீடயாநம்=பாடை.

இருபத்தெட்டாம் வயதிலே மரணமான (பராசரபட்டன்) பட்டனுக்குச் சீடனுயிருந்த வேதாந்தியெனு நஞ்சீயன் நோயுற்றிறந்தனன். இச்செய்தியை, தெ - குருபரம்பரை ப - உஉச, உஉரு - ல் "நஞ்சீயர் திருமேனியிலே நோவுசாத்திக்கண்வளர்ந்தருள" என்றும், "பட்டர் திருவடிகளைத் தியானித்துக்கொண்டு திருநாட்டுக் கெழுந்தருளினுர்" என்றும் வருவனவற்று னறிக. இவனே, திருவாய்மொழியெனுஞ் சுவடிக்கு கூOOO - படியெனும் வியாக்கியானஞ் செய்தவன். இவனுடைய சீடனுய் வரதராஜனென்பானுயிருந்த நம்பிள்ளை யென்பானும் நோயுற்றுச் செத்தனன். இச்செய்தியை, தெ - குருபரம்பரை ப - உகூO - ல் "நம்பிள்ளை திருமேனி நோவுசாத்தி யிருந்தமைகேட்டு ஒரு ஸ்ரீவைஷ்ணவர்சென்று ஸ்ரீபாதத்திலே ஸேவித்து நோயைக்கண்டு வெறுக்க; பிள்ளையும் அவரைக் குறித்து இச்சரீரத்தில் வந்த வ்யாதியை நல்ல விருந்து வந்ததாகக காணும் நான் நினைத்திருப்ப தென்றருளினுர்" என்றும், "அம்மங்கியம்மாள் பிள்ளைபக்கல் பரிவாலே ஒரு பாத்ரத்தைத் திருக்கையிலே யிட்டுத் தொடப்புக, பிள்ளை திருமேனியை யிழுய்த்தருள" என்றும் வருவனவற்று னறிக. இங்ஙனம், தொடத்தகாத துர்வியாதியே அந் நோயென்பதும் புலப்படுகின்றது. இந் நம்பிள்ளைக்குச் சீடனுகித் திருவாய்மொழியெனுஞ் சுவடிக்கு

உசOOO - படியெனும் வியாக்கியான மெழுதிய பெரியவாச்சான் பிள்ளையும் நோயுற் றெழுந்தனன். இச்செய்தியை, ஆழ்வாராசாரியர்கள் வைபவம் ப - கசுசு - ல் "பின்பு திருமேனியில் நோய்சாத்திக்கொண்டிருக்கிற பெரிய வாச்சான்பிள்ளை" என்றும், கஎ0 - ல் "சிலநாளில் பெரியவாச்சான்பிள்ளை திருநாட்டுக் கெழுந்தருளினார். தூப்புல் பிள்ளையும் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீபாதத்து முதலிகளைக்கொண்டு சரம கைங்கர்யங்களை நன்றாக நடத்தியருளினார்" என்றும் வருவனவற்று னறிக. தூப்புல்பிள்ளையென்றது வேங்கடநாதனை. அந்த நம்பிள்ளையின் மற்றொரு சீடனுந் திருவாய்மொழியெனுஞ் சுவடிக்கு ௩சுOOO - படியெனும் வியாக்கியான மெழுதினவனுமான வடக்குத்திருவீதிப்பிள்ளையின் மூத்தமகனெனும் பிள்ளை லோகாசாரிய னென்பானும் நோயுற்று மாண்டனன். இச்செய்தியை, யதீந்த்ரப்ரவணப்ரபாவமெனுந் தென்கலை வைணவச் சுவடியின் ப - கக, க௩ - ல் "ஜ்யோதிஷ்குடியென்கிற க்ராமத்திலே பெருமாளுடனே யெழுந்தருளி அங்கே திருமேனி நோவுசாத்தி மிகவுந் தளர்ந்து கண்வளர்ந்தருள" என்றும், "திருநாட்டுக் கெழுந்தருளினார். முதலிகள் சோகார்த்தராய் மிகவும் க்லேசித்துத் தேறி......பள்ளிப்படுத்துத் திருவத்யயநத்தைப் பெருக்க நடத்தியருளினார்கள்" என்றும் வருவனவற்றுனறிக. இவனே, ரஹஸ்யத்ரயம், தத்வத்ரயம், ஸாரஸங்க்ரஹம், வசனபூஷணம் முதலிய கஅ-இரகசியமெனுந் தாதச்சுவடிகளைச் செய்தவன். இவனுக்குச் சீடனாய்த் திருமலையாழ்வானெனும் பெயருடையனாய் மதுரைக்கதிபனாயிருந்தவனெனுந் திருவாய்மொழிப்பிள்ளை யென்பானும் நோயுற்று மரித்தனன். இச்செய்தியை, ய - ப்ரணவப்ரபாவமெனுஞ் சுவடியின் ப - ௩க, ௩உ - ல் "திருமேனியிலே நோவுசாத்தி மிகவுந் தளர்ந்து கண்வளர்ந்தருளுகிறவர்" என்றும், "ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரத்தாலே பள்ளிப்படுத்து தீர்த்தங் கொண்டாடி" என்றும் வருவனவற்று னறிக. இவனே, தனக்குச்சீடனான மணவாளமுனியென்பானுக்கு ஸம்ஸ்க்ருத சாஸ்திரங்களைப்பார்க்கவேண்டா: இராமாநுஜ பாஷ்யத்தை யொருமுறை கேட்டுவிட்டுத் திருவாய்மொழிமுதலிய தமிழ்ப்பாடல்களையே யென்றும் படித்துணரவேண்டுமென்றோதி யவ்விதவாக்குத்தத்தமும் வாங்கிக்கொண்டன னென்பதும் மேலிடத்தெழுதப்பட்டுளது. தாதரண்ணனுக்கு மகனான அந்த மணவாளமுனி யென்பானும் திருவரங்க

மெனும் ஊரிலே நோயுற்றொழிந்தனன். இச்செய்தியை, அந்தப் பிரபாவமெனுஞ் சுவடியின் ப - ௧௨௨ - ல் "திருமேனியில் தௗர்ப் பல்யத்தையும் பாராமல் திருவணையிலே சாய்ந்து" என்றும், ௧௨௫ - ல் "திருமேனியிலே நோவுசாத்தி ஸம்சாரக்ஷமரன்றிக்கே மிகவுந் தளர்ந்திருக்க" என்றும், "பின்னும் திருமேனி மிகவுந்தளர்ந்து இட்டகாலிட்டகைகளாய் பரவசகாத்ரராய் நிற்க" என்றும், "அவ்வளவிலே திருமேனியில் நோய் விகல்பமின்றிக்கே சமித்திருக்க" என்றும், ௧௨௯ - ல் "திருக்கண்களைச் செம்பளித்துக் கொண்டிருக்க" என்றும், ௧௩௦ - ல் "நோய்களாலென்னை நலங்காமல் சதிராகவுன் திருத்தாள் தா என்று.........ஜீயர் திருநாட்டுக் கெழுந்தருளினார்" என்றும், ௧௩௨ - ல் "யதிஸம்ஸ்கார விதியடங்கச்செய்து கரித்து வாழும்படி திருப்பள்ளிப்படுத்தார்கள்" என்றும், வருவனவற்றானறிக. இவனைத்தான் 'வரவரமுனி' என்றும், 'பெரியஜீயர்' என்றும், 'முப்பத்தாறாயிரப்பெருக்கர்' என்றும், 'யதீந்த்ரப்ரணவர்' என்றும், தென்கலையாசிரிய ரென்றும் வைணவர் வழங்குப. "தாதரண்ணன்" எனும்பெயரிருத்தலின், வைணவரைத தாதரெனனத் தடையின்றென்பதும் அறியப்படுவதாயிற்று.

இந்நூல் எஅ-ம பக்கத்திற்சொல்லப்பட்ட நடாதூரம்மாளென்பானுக்குச்சீடனான கிடாம்பி அப்புள்ளானும் நோயுற்று மரணமாயினன். இச்செய்தியை, வ - குருபரம்பரை ப - ௯௬, ௯௭ - ல் "சில நாள் கழிந்தபின்பு அப்புள்ளார் நோவுசாத்திக்கொண்டு" என்றும், "திருநாட்டுக் கெழுந்தருளினார்" "சரமகைங்கர்யங்களை நடத்தினார்கள்" என்றும் வருவனவற்றானறிக. இவனுக்குச்சீடனாய் இவனுடைய சகோதரியான தோதாரமம னென்பாளுக்கும் அனந்தஸூரி யென்பானுக்கும் மகனாய்க் காஞ்சிபுரத்திருந்த வேதாந்த தேசிகனெனும் வேங்கடநாதனும் திருவரங்கமெனு மூரில் நோயுற்று வீந்தனன். இச்செய்தியை, வ - குருபரம்பரை ப - ௧௩௭, ௧௩௮, ௧௩௯ - ல் "திருமாளிகையி லெழுந்தருளி திருமேனியில் நோவுசாத்திக்கொண்டிருக்க" என்றும், "நயினாராசார்யர் மடியில் திருமுடியும் ப்ரம்மதந்த்ர ஸ்வதந்த்ரஜீயர் மடியில் திருவடிகளுமாய் அப்புள்ளார்திருவடிகளை த்யானித்துக்கொண்டு திருநாட்டுக்கெழுந்தருளினார்" "அந்தச்சரம திருமேனியை.........தண்டன் ஸமர்ப்பித்து நீராட்டி ஸ்ரீ சூர்ணபரிபாலன முதலாக ப்ரம்ம மேத கைங்கர்யங்களைச்செய்து" என்றும் வருவனவற்றானறிக. இவனைத்

தான் வடகலையாசிரிய னென்று வைணவர் வழங்குப. இவன் சைவத்திற்கு விரோதமாக வெழுதியவெல்லாம் ஸ்ரீமத் - அப்பைய தீக்ஷிதமூர்த்திக ளருளிச்செய்த நூல்களின் வாயிலாகக்கண்டிக்கப் பட்டொழிந்தன. மரணமாதலைத் திருநாட்டுக் கெழுந்தருள லென் பது வைணவர் குழூஉக்குறியாம். பார்ப்பார் குலத்தினர் யாங்க ளெனும் இப்பாஷண்டிகள் வேளாளர்க்குரிய பிள்ளைப்பட்டத்தை யுந் தங்களுக்காக்கிக்கொண்டமை வியக்கற்பாற்றே. ஆளவந்தான் முதலாக விங்ஙனங் காட்டப்பட்டவர்களே வைஷ்ணவாசாரியருட் சிரேஷ்டர்கள். இவர்களே யிப்படிச்செத்தக்கால் இவர்வழி நிற்பா ருறுதுன்பங்களும் அளவிடற் பாலனவோ! பரிதாபம்! பரிதா பம்!! அன்னோர் நோயால் நொந்து செத்தமை, சாமானிய மனித ருள் நோயிலாது மரணமுறுவாருமு அடையற்பாற்றன்றே. அந் நோய்களும், சிவபோகசாரம்—

> "சும்மா தனுவருமோ சும்மா பிணிவருமோ
> சும்மா வருமோ சுகதுக்கம்—நம்மான்முன்
> செய்தவினைக் கீடாய்ச் சிவனருள்செய் விப்பதென்று
> லெய்தவினை நாடி யிரு."

என்று கழறுகின்றபடி கர்மத்திற்கீடாகக கடவுளதாணையால் வருவனவே. அவற்றினுட் சிவத்துரோக சிவநிந்தைகளின் பலனு முளவென்க. மார்க்கண்டேயபுராணம் தருமபக்ஷி ஜைமினி சம வாதம் ௧0 - ம் அத்தியாயத்தில்—

"கெடுதியானவற்றைப் பிறருக்கு வலிந்துபோதிப்போனும் வேதத்தைப் பழிதூறுவோனுமாகிய இவரனைவரும் மரணகாலத்தில் மயக்கத்தோடொழி வர்" என்றும், ௧௬ - ம் அத்தியாயத்தில் "தெய்வ நிந்தை" நரகத்தினின்றும் வந்தவர்களுக்கு அடையாளமாகக் கூறப்பட்டிருக்கிறது."

என்றும் அருத்தமாக வருவசனங்களானே அந் நோயுறீஇச் சாங்கருமமுஞ் சிவநிந்தையுமுள்ள அவர்.—துர்ப்போதகரும், வேத நிந்தகரும், நரகத்தினின்றும் வந்தவருமேயாவர். ஸ்ரீமத் - சைவ ஸமயாசார்யரும் இப்படி நோயுறீஇச் செத்தனரென்றற்கு அவர் புராணங்களில் யாதோரிடத்தும் யாதொருசெய்தி வருவதில்லையே.

## ரு. இராமாநுஜன் பிரதிஞ்ஞைவிரோதம்.

தொண்டனூரிற் புக்கிருந்த பூதூர் - இராமாநுஜனை அவ்வூ ராளும் விட்டலதேவனெனுஞ் சமணன் தனது கிருஹத்திற்கு அழைத்தபோது தே - குருபரம்பரை ப - ௧ருரு - ல் "நாம் ராஜதா

நியை மிதிக்கக்கடவோ மல்லோம்" எனவருமாறு பிரதிஞ்ஞை செய்த அப் பூதூரன்—அவட்போந்தால் நமக்குப் பெரிய வுபகார முண்டாமென்று தொண்டனூர்நம்பி முதலினோர் தெரிவித்துக் கொண்ட ஆசைவசன மங்கீகரித்துப் பின்ன ரங்கேசென்று அச்ச மணன்மகளுக்குப் பேயோட்ட முயன்றனன். அத்தெரிவிப்பையுஞ் சென்றதையும்—

"இவனை, விசேஷ கடாக்ஷம் செய்தருளினல் தர்சநத்துக்குப் பஹு வுபகாரமுண்டென்று பஹுச: வேண்டிக்கொள்ள, உடையவரும் ஸம்மதித்து அவன் அகத்தேற" என்றெழுதப்பட்ட வசனங்களானறிக. இம்மட்டோ, தே - குருபரம்பரை ப - கஙஉ - ல்—

"ஆழ்வார்கள் திருமலைமிதியாமையாலே நாமும் ஏறக்கடவோமல்லோம், திருத்தாழ்வரையிலே யெழுந்தருளியிருக்கிற ஆழ்வார்களை ஸேவித்திருக்கிறோமென் றருளிச்செய்ய; அநந்தாழ்வானும், தேவரீர் ஏறாதபோது அடியோங்களொருவரும் ஏறோம், மற்றுமுள்ளாரொருவரும் ஏறுவதில்லையென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும் அப்படியே செய்கிறோமென்று தத்நுகுணமாகத் திருமேனியை சோதித்துக்கொண்டு எழுந்தருளி"

எனவுள்ள வசனங்களின்படி அப்பூதூரன் பிறிதொரு பிரதிஞ்ஞை விரோதமுஞ் செய்துள்ளான். மேற்சொற்றபடி பொய் யுரையாடு மிவனுக்குப் பிரதிஞ்ஞைபேணும் ஆற்றறுன் எங்ஙனுறும்! உறுதெனல் கட்டுரையே.

## ச. இராமாநுஜன் சிற்றறிவுகொடுபாடியமெழுதல்.

பிரஹ்ம ஸூத்ரத்திற்கும் ஈசாவாஸ்யாதி சில உபநிஷதங்கட்கும் பூதூர் - இராமாநுஜன் செய்யும்(உரை)பாடியத்தை அவனுடைய சீடன் கூரத்தாழ்வா னெழுதிக்கொண்டு வருஞான்று தோன்றிய தவறான அருத்தத்தை, எழுதுவோ னெழுதமாட்டேனெனலும், முனிந்து அவ்வாழ்வானை யுதைத்துத்தள்ளிய அவ்வநுஜன் பின்பு சீடன் சொன்னதே யியைபென வுணர்ந்து அவ்விதமே யெழுதச்செய்து அப்பாடியத்தை முடித்தன னென்பது தே - குருபரம்பரை ப - கஙக, கசO - ல்—

"ஆத்மாவுக்கு சேஷத்வ விதுரமான ஜ்ஞாத்ருத்வம் ப்ரதிபாதித்து ஒரு வாக்ய மருளிச் செய்தருள.........ஆழ்வானும் திருவெழுத்துச் சாத்தாமலிருக்க; உடையவரும் அத்தை நிரூபித்துப்பாராமல், எழுதுமென்ன, இவரும் எழுதாதிருக்க; அதுகண்டு குபிதராய், ஆகில் நீரே பாஷ்யஞ் செய்யு

மென்று அருளிச்செய்கை தவிர்ந்து, ஆழ்வானை உதைத்துப்போகவிட,...... பின்பு உடையவரும், வாக்யார்த்தத்தை நன்றாக ஆலோசித்துக்கொண்டு, ஆழ்வானையழைத்து கோபித்ததற்கு அநுதபித்து, பகவச் சேஷத்வத்தோடே கூடின ஜ்ஞாத்ருத்வ ப்ரதிபாதகமான வாக்ய மருளிச்செய்தருள; ஆழ்வானும் அதிசீக்ரமாகத் திருவெழுத்துச் சாத்த"

எனவுள்ள வசனங்களானறியப்படுதலின் அப்பூதூரனியற்றிய அப்பாடியமும்; வேதாந்ததீபம், வேதாந்தஸாரம், வேதார்த்தஸங்க்ரஹம், கீதாபாஷ்ய மென்பனவும்; சரணாகதிகத்யம், ரங்ககத்யம், வைகுண்டகத்யமெனுங் கத்யத்ரயமும்; நித்யமெனும் ஆராதனப் படியும் சிற்றறிவுகொண்டு தெரிந்தமட்டுங் கிறப்பட்ட தாதச்சுவடிகளேயென்பது தெள்ளிது. இச்சுவடிகள்—இறைவனது திருவாக்கினுண்மையை யினிது விளக்கும் ஆற்றலுடைய யோகஞான பட்டாரகர்களா யெழுந்தருளியிருந்த இருடி முனிவர் திருவாக்குகளினுண்மையை யெவ்வாற்றானும் பொருந்துவன வல்லவே. அப்பாடியத்தி லெடுத்துக் காட்டப்பட்ட "தஸ்யயதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" எனுஞ் சுருதிவசனத்திற்கு யாதுபொருளென வினவிய சரஸ்வதி முன்னிலையில் 'கம்' எனுநீரைக்கிரணங்களாலே குடிக்கின்ற சூரியன் 'கபி' எனப்படுவன். அவனாலே யலர்த்தப் பட்ட தாமரைப் பூப்போலிருக்கும் பரமபுருஷனாகிய நாராயணன் விழிகளென்று "கப்யாஸம்" என்பதற்கு இராமாநுஜன் சொன்ன பொருள் அவளுக்குத் திருப்தியா யிருந்தமையால் அவள் "ஸ்ரீபாஷ்யகாரர்" எனும் பெயரை அவனுக்குக் கொடுத்துப் புகழ்ந்தனளெனுமொரு செய்தியு மவனதுசரித்திரத்தி லெழுதப்பட்டுளது. அவைதிகத்திற்கும், பொய் புரட்டிற்கும் ஆளானவனையா சரஸ்வதிதேவி மதித்தனள் புகழ்ந்தனள்! அசம்பாவிதம்: அசம்பாவிதம். இச் செய்கை, சங்கராசாரியர் ஸரஸ்வதிபீட மேறினரெனும் ஏற்றங்கண்டு 'நுழைந்தான்கீழ் நுழைந்தான்' செய்கை பொருவும். சங்கராசாரியரது தாட்டேசிக்கும் ஈடாகான் அவ்வநுஜனென்றல் கற்றுவல்லார் கணிக்கற்பாற்றே. சங்கராசாரியரது பாடியமும், அவ்வநுஜனது காலத்திற்குப் பிற்பிறந்திருந்தவராகக் காணப்படுகின்ற வித்யாரண்யராற் செய்யப்பட்டு வியாசமுனிவர் முன்னிலையில் வேதங்கள் நாய்களாகவந்து நக்கி வழுக்களைக்களைந் தொப்புக்கொள்ளப்பட்டதெனவுள்ள கoஅ - உபநிடதபாடியமும் பிரமாணமா? அவ்வநுஜனது பாடியம் பிரமாணமா? என்றுய்த் துணர்வார்க்கும்

உண்மை வெளிப்படா திராது. இருதிறத்தார் பாடியங்களும் ஒன்றற்கொன்று முரணாயிருத்தலின், இரண்டும் பிரமாணமென்றலுங் கூடாது. இது கிடக்க.

அவ்வநுஜன், நீலகண்டபாடியமாகிய சைவ பாடியத்தைப் பார்த்தெழுதிய வேறு பிரதியே அவனது பாடியமென்று நிர்மாணிக்கவுள்ளது. அங்ஙனமே கைலாஸமென்றதை வைகுண்டமென்றும், சிவனென்றதை நாராயணனென்றும், பார்வதி யென்றதை இலக்குமியென்றும் மாற்றலும்; சில வாக்கியங்களை நீக்கலும்; பல வாக்கியங்களைச் சேர்த்தலும்; நீலகண்டபாடியத்திலுள்ள விசிஷ்ட சப்தத்தைக்கிரகித்தவாறாகத் தனதுபாடியம் "விசிஷ்டாத்வைதம்" எனும்படி செய்ததுமாகிய இவைகளே அவ்வநுஜனுடைய செய்கையாம். இதனை,—தே - குருபரம்பரை ப - ௧௦௨ - ல் "வ்யாஸஸூத்ரத்திற்கு விசிஷ்டாத்வைதபரமாக வ்யாக்யாந வாஞ்சையும் பலகாலும் அருளிச்செய்யக் கேட்டிருக்கையா யிருக்குமென்ன" என்று ஆளவந்தானுக்கிருந்த ஆசையை அவன் சீடர்கள் பூதூரனுக்கு அறிவித்தனரெனுஞ்செய்தி யெழுதப்பட்டவிடத்தில் அப்படியே செய்யக்கடவேனென்று அப்பூதூரனொப்பினனெனுஞ்செய்தியும் ஆதரிப்பதாயிற்று. ஈண்டு, நீலகண்டபாடிய விசிட்டாத்வைதத்தை ஆளவந்தானுங் கிரகித்திருந்தவனென்றுமாறு காண்க. இப்படி அப்பாடியங்களுள்ளன வென்பது அவ்விரண்டனையும் படித்த பண்டிதரறிந்த விடயமே. இவண், இராமாநுஜபாடியத்தையே கிரகித்து நீலகண்டபாடிய மெழுதப்பட்டதென்றல் அமையாதோ வெனின்,—சங்கராசாரியர் சரித்திரத்தில் அவர்காலத்தே வயோதிகராயிருந்தவர் நீலகண்ட சிவாசாரியரென்பதனானும், அச்சங்கராசாரியர் கலி ௩௦௫௮ - ற் பிறந்திருந்தவரென்பதனானும், பூதூரன் கலி ௪௧௧௮, அல்லது ௪௧௧௯ - ற் பிறந்திருந்தவனென்ன அவன் சரித்திரங் கூறுதலானும் அவ்வாறமையாதென்க. கூறிப்போந்த "கப்யாஸ" வசனச்சுருதி—சாந்தோக்யோபநிஷத்தின் பிரதமப்ரபாடகத்து ௬ - ங் கண்டத்தது. இதற்கு நீலகண்டபாடியம் (கமுதகம் ரச்மிபி: பிபதீதி கபிராதித்ய: | தேநாஸிதம் விகஸிதம் புண்டரீகம் யதாஸ்புரதி ததாபரமேச்வரஸ்ய லோசநத்வயம் | )"கமுதகம் ரச்மிபி: பிபதீதி கபிராதித்ய: | தேநாஸிதம் விகஸிதம் புண்டரீகம் யதாஸ்புரதி ததாபரமேச்வரஸ்ய லோசநத்வயம் |" என்பதாம். பொருள்:— 'நீரைக் கிரணங்களாற் குடிக்கின்றமையிற்

சூரியன் கபியெனப்படுவன். இச்சூரியனால் விகஸிதமாய தாமரை மலர் எவ்வாறு பிரகாசிக்கின்றதோ அவ்வாறு பிரகாசிப்பனவாயின சிவபெருமானுடைய இரண்டுகண்களும்.' எனவாம். இப்பொருளே விஷ்ணுபரமாக இராமாநுஜபாடியமா யிருத்தலானும் பூதூரன் நீலகண்டபாடியத்தைக் கிரகித்தவனென்ப தேற்படுமென்க. உடையவர்சூர்ணவிளக்கம் ப - கOஉ, கOரு - ல்—

"உடையவர் ஜாதியபிமானமுடையவரென்றும், ஆகிறப்ராஹ்மண குலத்திற் பிறந்த ஆண்பெண்பிள்ளைகளுக்கே ஆசார்யக் கியாதிலாப பூஜாதிகள் தகுமென்றும், அவர்களுக்கே தான தருமாதிகள் செய்யவேண்டுமென்றும் இத்யாதி வஞ்சனை நிறைந்த நெஞ்சையுடையவராய், வேதமாதிகளிலுள்ள உண்மையான பொருள்களைமறைத்து இதர பாஷ்யங்களிற் சில க்ரகித்து ஸ்ரீபாஷ்யக்கார ராயினார்."

என்று வெண்மஞ்சட் புண்டரவைணவர் கூறுங்கூற்றுக வரையப்பட்டதும் இதனையுறுதிப்படுத்துதல் காண்க. இவ்விடயத்தில் வைணவரே யிவ்வாறு கூறுதலாற் பிறயோசனை யெற்றுக்கு! சூரியமண்டல மத்தியவர்த்தியாகச் சொல்லப்பட்ட புருஷன் ஜீவனாகிய சூரியனா? பரமேசுவரனா? என்ற விசாரணையிற் பரமேசுவரனது நெற்றிக்கண் மூடப்பட்டும், மற்றிருகண்களுந் தாமரை மலர்போன் மலர்ந்து முள்ளனவாகலிற் சுருதியிற்போந்த இருவிழிப்புருஷன் சிவனே யென்பது நீலகண்டபாடிய மென்பதாகப் பிரமசூத்திரத் திராவிடபாஷியத்தில் வைணவர்வரைந்தவாறும், அச் சாந்தோக்ய வசனத்தொடர்களில் நாராயணசப்த மின்றெனுமாறு மோர்க. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா வெனும் எட்டையுந் தனக்கு மூர்த்தமாகக்கொண்ட சிவனே அந்தச்சூரியாந்தரியாமியாவ னென்பதும், "பர்க்கஸ்த்ர்யம்பகஃ" என்று நிகண்டு - அமரஸிம்ஹ மியம்புமாற்றாற் சிவநாமமாகிய பர்க்க சப்தமானது விளக்கின்பெயர் அதன் தண்டிற்கு மாயவாறு சூரியனுக்குமாயிற் றென்பது மறியப்படுதலிற் காயத்திரிமந்திரப்பொருளுஞ் சிவனே யாயினன். இது—மைத்ராயண்யுபநிஷத்தானும், தைத்திரீயாருணசாகை நாராயணாதி பிரமாணங்களானும் வலியுறும். சூரியவுலகுக்கு மேலே வைகுண்டமுளதெனு மாற்றானே, இப் பூவுலகில் வைகுண்டனுக்குக் கோவிலிருக்குமாறு அச் சூரியமண்டலத்திலு மவனுக்கொரு சிற்றிருக்கை யுளதெனக்கோடலிற் சைவர்க்கோ ராக்ஷேபனையு மின்று. ஈண்டு, சங்கரவிராமாநுஜ பாடியங்க

ளேய்ப்ப அந் நீலகண்டபாடியமும் அதிக வியாபகமில்லாததெ ன்கொ லெனின்,—அவ்வதிபாதக இராமாநுஜன் தனது திருட்டுத் தன்மை வெளிப்படாதிருக்கவும், சைவம் குறைவடைந்தாலன்றி நமது நவீனமார்க்கம் விருத்தியாகாதென் றெண்ணிய தனது கரு தது முற்றுறவுமே அப்பாடியப் பிரதிகளைப் பல்லாற்றானும் வாங்கி வாங்கி நெருப்பிட் டொழித்தமையின் அவை யரிதுபட்டு வியாப கங் குன்றிற்றென்பது விபுலையிலுள்ள செய்தியே. இதனால், அவை திக வைணவத்தை அறக்களைந் தொழித்தலே பேரருள் விழையுஞ் சைவர்க்குப் பின்று வுத்தியோகமாகும். அவ்வாறரிதுபட்ட பாடி யம் பின்றை, அப்பையதீக்ஷித மூர்த்திகளால் ஆதரிக்கப்பட்டுச் சிற் சில பிரதிரூபமா யுலாவிற்று. இஞ்ஞான்று அது பற்பல பிரதிரூப மாக அச்சிடப்பட்டமையின் இனி அதிக வியாபகமாதல் திண்ணம். ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியர் தமது பாடியத்திற் பூர்வாசாரியராற் கலங்குதலுற்ற பிரமசூத்திரார்த்தம இந்த ஸ்ரீகண்டபாடியத்தில் தெளிவுசெய்யப் படுவதாயிற்றெனுமபொருள் போதரக் கூறினமை யின், அப் பூர்வாசாரியரா லியற்றபபட்ட பாடியம யாதுகொலெ னின்,—அது பாஸ்கரீயமெனும் பாடியமென்பதூஉம், அக்கோசமு மிருக்கின்ற தென்பதூஉம் 1886-ம் ஹூ நவம்பர்மீ 30உ பதிக்கப் பட்டதாயுள்ள பிரஹ்மவித்யாவெனும் பத்திரிகையின் ப - 90 - ல்—

"மாயூரந்தாலூக்கா திருவாலங்காட்டில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் வேத வேதாந்தாதிவர்த்தனி என்கிற ஸம்ஸ்கிருத புஸ்தகசாலையிற் கண்டதுண்டு" என வரையப்பட்டதுகொண்டு ஸ்ரீநிவாஸசாஸ்திரியார் பாஸ்கரீயமெனும் பாடியத்தை அச்சாலையிற் கண்ணுற்றனரென்ற லறியப்படுமாற்றானும், அங் ஙனம் "ஸ்ரீமத் - அப்பையதீக்ஷிதாருளிய சிவாத்துவிதநிர்ணயம் என்கிற கிரந்தத்தில் ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் பாஷியம் முன்." "பிந்தியது ஸ்ரீமத ஆசாரியசுவாமிகளதுபாஷியம்."

எனுஞ்செய்தி யெழுதியிருப்பதாக அச்சாஸ்திரியாரே வரை ந்து ப - 91 - ல் நீலகண்டபாஷியத்திற்கு முற்பட்டபாஷியம் பாஸ் கரீயமென நிச்சயித்தெழுதியவாற்றானும் வலியுறுத்தப்படுமே. அப் பாஸ்கரீயம் வைஷ்ணவாத்வைதமெனவுள்ளது. ஆசாரியசுவாமிக ளென்றது ஆதி சங்கராசாரியரை.

மேற் சொல்லப்பட்ட (பகவத்) கீதாபாஷ்யமானது முன்பு இராமாநுஜனொருவனாலேயே செய்யப்பட்டதாகத் தே - குருபரம் பரை ப - கஉகூ - ல் வந்து, பின்பு அடிபிடியோடாக்கப்பட்ட

பாடியமுதலியவற்றோடு செய்யப்பட்டதாகப் ப - கசுO - லும் வரு தலால் அது, முன்முடிபினின்றும் பின்முடிபுக்கிணங்கத் திருத்தப் பட்டதாதல்வேண்டும். அல்லாக்காற் குருபரம்பரையெழுதினவன் குமதி யாதல்வேண்டும்.

பகவத்கீதையானது நெடுநாளைக்குமுன்னர் எவரோவொருவ ரால் இயற்றப்பட்டதென்பதாகவும், அது பீஷ்மபர்வத்ததெனப் பாரதத்தில் நுழைக்கப்பட்டதென்பதாகவும் **மதச்சீர்திருத்தமெ** னும் புத்தகத்து 2 - ம் பாசததின் 21 - ம் பக்கத்தில் வரைந்துள்ளதை இந்நூலினீற்றிற் சேர்க்கப்படும் ஆங்கிலமொழிவயிற் காணலாம். அவ்வாறன்று: வியாஸப்ரோக்தமே யெனக் கொள்வுழியும்.— அதன் கஅ - ம் அத்தியாயத்தில் (ஈஶ்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேऽர்ஜுந திஷ்டதி। ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா॥) "ஈச்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசேர்ஜுநதிஷ்டதி | ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநிமாயயா||" எனவரு சுலோகம்—"ஈச்வ ரஸ் ஸர்வபூதாநாம் ப்ரஹ்மாதிபதிர் ப்ரஹ்மணோதிபதிர் ப்ரஹ்மா சிவோமே அஸ்து ஸதாசிவோம்" எனும் **தைத்திரீயாருணசாகை நாராயண** வசனத்திற்கு வியாபபியமா யிருத்தலானும்; அச்சுலோ கத்தின் பொருள் :— 'அருச்சுன! இயந்திரத்திலேறிய பதார்த் தங்களென எல்லா வுயிர்களையும் மாயாசத்தியாற் சுழற்றிக்கொண் டிருக்கும் ஈசுவரன் எல்லாவுயிர்களினிருதயத்து மிருக்கின்றனன்.' எனும் பொருளைத் தருதலானும்; இதனையடுத்து, (தமேவ ஶரணம் கச்ச ஸர்வபாவேந பாரத। தத்ப்ரஸாதாத் பராம் ஶாந்திம் ஸ்தாநம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம்॥) "தமேவசரணம்கச்ச ஸர்வபாவேநபாரத | தத் ப்ரஸாதாத் பராம்சாந்திம் ஸ்தாநம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம் ||" எனவரு சுலோகம்—'அருச்சுன! அந்த ஈசுவரனையே எல்லாத் தன்மையானுஞ் சரணமாக அடைதி: அந்த ஈசுவரானுக்கிரகத்தி னால் உத்தமமான சாந்தியையும், நித்தியஸ்தானத்தையும் அடை வாயாக.' எனவாதலானும் தனக்குக் கடவுளாக விளங்கும் ஈசுவர னெனும் பெயர்க்குரிய விசுவரூப சிவனையே சரணமடைவாயாக வென்று கிருட்டிணன் கிளத்தினனென்ப தேற்படும். இது ஸோ ஹம்பாவனையோக நீங்கிய ஜீவநிலை நின்று சொற்றதெனல்— அ - ம் அத்தியாயத்தில் அருச்சுனன் (கிம் தத் ப்ரஹ்ம) "கிம்தத்ப்ரஹ்ம"= அந்தப்பிரமம் யாது? என்று கடாவிய கடாவிற்குக் கிருட்டிணன்

(அக்ஷரம் ப்ரஹ்ம பரமம்) " அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் "=அழிவற்ற வுத்தமமானது பிரமம் என்று விடையிறுத்தமையானும் வலியுறும். என்னை ? " அஹமேவ பரம்ப்ரஹ்ம "=நானே உத்தமமானபிரமம் என்று விடையிறுமையின், நானே யெல்லாமெனச் சொற்ற மற் றனைத்தும் அந்த அபேத யோகநிலையினவே யாதல்வேண்டும். ஆகவே பேயுரை பேய்பிடியுண்டானுரை யாகாதவாறு அந்நிலையில் ஆவேசித்துநின்ற பரமேசுர வாக்கியங்களே அவைகளெனவாம். இம்முடிவு—" அவஜாநந்திமாம் மூடாமாநுஷீந் தநுமாச்ரிதம் | பரம் பாவமஜாநந்தோமம பூதமஹேச்வரம் || " எனும் கூ - ம் அத்தியாயச் சுலோகத்தானும், " வ்ருஷ்ணீநாம் வாஸுதேவோஸ்மி பாண்ட வாநாம் தநஞ்ஜய: | " எனும் க௦ - ம் அத்தியாய வசனத்தானும் வலியுறும். முறையே பொருள் :— " எனது பரத்துவமறியாத மூடர்கள் பூதமஹேச்வரனு யிருக்குமென்னை மனிததேகத்தை ஆச்சிரயித் திருப்பவனாக அவமதிக்கிறார்கள்." " யாதவருட் கிருட் டிணனாகவும், பாண்டவருள் அருச்சுனனாகவு மிருக்கின்றேன்." எனவாம். இங்ஙனம் அருச்சுனனது மேன்மையும், கிருட்டிணனது மேன்மையும் மஹேசுவர விபூதியாதல் காண்க. ஸோஹம்பாவனை செய்வார் நாவினின்று நானே யாவும், நானே பிரமமென வெழுஞ் சொற்களானே அப்பாவனை செய்வாரே பரத்துவவஸ்து வாகா ரென்பது (ஏதத்பச்யந்ந்ருஷிர்வாமதேவ: ப்ரதிபேதேஹம் மநுரபவம் ஸூர்யச்சேதி) " ஏதத்பச்யந்ந்ருஷிர்வாமதேவ: ப்ரதிபே தேஹம் மநுரபவக் ஸூர்யச்சேதி " எனும் பிருஹதாரண்யகோப நிஷத்தின் ந - ம் அத்தியாயவசனத்தானும் வலியுறும். பொருள் :— " பிரமமாகிய இதனை யறிந்த வாமதேவ ருஷியென்பார் நான்மநு வானேன் : சூரியனானேன் என்றனர்." எனவாம். சிவரகசியத்து ரிபுகீதையில் இச்செய்தி மிகுதியென்க. இவ்வாறு பொருள் கொள் ளாக்கால் அப்பகவற்கீதை குழறுபாடேயாமென்பது குன்றின்மீ திட்ட விளக்காகும். இப்பொருளை விடுத்தே பூதுரன் பாடியஞ் செய்துளன். ' அந்த ஈசுவரனையே ' எனப் படர்க்கையிடப் பொரு ளைத்தரூஉம் " தமேவ " என்றதற்கு ' என்னையே ' என அவன் தன்மை யிடப்பொருள் வரைந்துகொண்டதும் பண்டிதரவைக்கட் பரிபவப்படுவதே. அப் பகவற்கீதையின் கஅ-ம் அத்தியாயத்தில்—

' சகல தர்மங்களையும் விட்டு என்னையே சரணமாக அடைதி : நானுன் னைச் சகலபாபங்களினின்றும் விடுதலை செய்வேன் : கவலைப்படேல்.' எனும்

பொருளைத்தருவதற்காய (𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌮𑌾𑌮𑍇𑌕𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌵𑍍𑌰𑌜। 𑌅𑌹𑌂 𑌤𑍍𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌮𑌾 𑌶𑍁𑌚𑌃॥) "ஸர்வதர் மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ | அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச꞉ ||"

எனுஞ் சுலோகமுளது. இதனைச் சரமச்லோகமென்றும், இதனோடு திருமந்த்ரம், த்வயமெனு மிரண்டனையுங்கூட்டி "ரஹஸ்ய த்ரயம்" என்றும் வைணவர் வழங்குப. இம்முக்கூற்று இரகசியங்களைக் கொண்டதே யிப்பொழுதுள்ள இராமாநுஜ வைணவமாகலின் இது, பகவற்கீதையி னுற்பத்திக்கு முன்னில்லாத நவீனமென நாட்டப்படுவதேயாம். அவர் திருமந்த்ரமென்பது "ஓம்நமோநாராயணாய" எனும் அ - எழுத்தும், த்வயமென்பது "ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே ஸ்ரீமதே நாராயணாய நம꞉" எனும் உ௫ - எழுத்துமேயாம். இத்துணை நீளவசனங்களோ தத்துவாதீத யோகினர் கொள்ளத்தக்கன! கன்மம்! கன்மம்!!

## எ. இராமாநுஜன்மோசவழியாக நூலபகரித்தல்.

மேலைபாடியமெழுதுவதற்குப் போதாயனவிருத்தியும் விரும்பி வடதிசைக்கட்போந்து மோசவழியாக அதனைப் பெற்றுத் தனதூருக்குக் கொடுபோக யத்தனித்தவனுமாகின்றனன் அவ்வநுஜன். இதனை, ஆழ்வாராசாரியர்கள்வைபவம் ப - கஅ௦ - ல்—

"அது வடக்குத்திசையிலிருப்பதாகக் கேள்விப்பட்டு (கூரத்து) ஆழ்வானுடன் உடையவர் அங்கெழுந்தருளி உபாயத்தினால் அந்த க்ரந்தத்தை வாங்கி........ ..அதனைக் கொண்டுவருகிறதாக யதநித்தபோது அவ்விடத்திற் சிலர் அந்த க்ரந்தத்தை அபஹரித்துக்கொண்டு போக உடையவரும் அதனை யிழந்ததுபற்றி வ்யாகுல முடையவரா யிருக்க."

என்று மாற்றுனறிக. இச்செய்தி வடகலைக்குருபரம்பரையினுமுளது. இதனை யாயுங்காலை, அவ்வநுஜன் தனதுபுதுக்கொள்கையினிமித்தம் பொய் புரட்டுத் திருட்டு முதலிய அகிர்த்தியங்கட்கு அணுத்துணையும் அஞ்சாநெஞ்சனாயிருந்தனனென்பது நன்கு புலப்படுகிற தன்றோ. போதாயனவிருத்தி சிவபரத்துவ போதகமாயுளது. இதனைத் தழீஇ வரையப்பட்டது இராமாநுஜபாஷ்யமெனின், அது மாறுபாடேயாம். தைத்திரீயோபநிஷத்தில் 'விபூதி தாரணத்தினின்றுந் தவறக்கூடாது' எனும் பொருளைத் தருமாறு (𑌹𑍂𑌤𑍈𑌃

𑌨𑌪𑍍𑌰𑌮𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 |) "பூத்யைநப்ரமதிதவ்யம்" என வருவாக்கியத்தை யெடுத்துப் பிரமாணிக்கப்பட்ட வசனம்—

𑌅𑌥𑌾𑌤𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌤𑍀𑌨𑌾𑌂𑌤𑍍𑌰𑌿𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑌧𑌾𑌰𑌣𑌵𑌿𑌧𑌿𑌂𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾
𑌸𑍍𑌯𑌾𑌮𑌃 𑌭𑍂𑌤𑍍𑌯𑍈𑌨𑌪𑍍𑌰𑌮𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌮𑌿𑌤𑌿𑌹𑍍𑌯𑌾𑌮𑍍𑌨𑌾𑌯𑌤𑍇।

"அதாதோத்விஜாதீநாம்த்ரிபுண்ட்ரதாரணவிதிம்வ்யாக்யா
ஸ்யாம: பூத்யைநப்ரமதிதவ்யமிதிஹ்யாம்நாயதே |"

எனப் போதாயந க்ருஹ்யஸூத்ரத்திலுள்ளது. இதற்குவிரோதமாகப் (பூத்யை) 'பூதி:' என்றதற்குச் செல்வமென் றருத்தம்பண்ணிச் 'செல்வத்தினின்றுந்தவறக்கூடாது' எனத் தைத்திரீயோபநிஷத் பாஷ்யத்தில் வரைந்துவைத்த பஸ்மத்துவேஷியாகிய பாஷண்டபுண்டர பூதூரனுரை—போதாயனர் கருத்தைத்தான் யாங்ஙனந்தழுவும்! தழுவாதென்க. பாஸ்கரீயமெனும பாடியத்திற்கும் முற்பட்டதாய், பிரமசூத்திர பாடியமாயுள்ள போதாயன விருத்தியை நீலகண்ட சிவாசாரியருங் கண்ணுற்றவரே யென்றல் சிலரபிப்பிராயமாம். சிற்றுணர்விற் றனக்கு வேண்டியவாறே பொருளெழுதிக் கொடுநோயுற்று வீந்து கொடுநரகாழ்ந்துபோய அவ்வநுஜனது மதம்விரும்புநர், இருட்டறையில்மலடுகறந் தெய்ப்பார்க்கு மிழிந்தோராய்நரகாழ்வாரேயாவரென்றற்குச் சிறுவரையும் ஐயமின்று.

## அ. ஆள்மாறுட்டஞ்செய்யுநிமித்தம் இராமாநுஜன் கல்லாடைநீக்கி வெள்ளாடை யுடுத்தல்.*

மத நிரூபண விஷயமாகத் திருநீற்றுச்சோழபூபதி யெனும வைதிகசைவப் பெருந்தகை அழைத்தமைக் கஞ்சிப் பின்வருமாறு ஆள்மாறுட்டஞ்செய் தொளித்துக்கொள்வான் கட்டியிருந்த கல்லாடை வரைஇ வெள்ளாடையுடீஇக் கலங்கின சிந்தையனே பூதூர்-இராமாநுஜன். (கல்லாடை—காஷாயம். கல்=காவி.) இச்செய்தியை வ - குருபரம்பரை ப - எச, எரு - ல்—

"அரசன் உடையவரை யழைத்து வரும்படி சிலரையனுப்ப, அவர்கள் வரவறிந்து ம‍ட்யான்னிக ஸ்நானார்த்தமாகப்போன முதலியாண்டான் நீராடி சீக்ரத்தில்போய்த் தெரிவிப்போமென்றுபோக, நடாதூராழ்வான நீராடாமல் திரும்பி அதிசீக்ரத்தில் வந்து செய்திசொல்லக்கேட்டு, உடையவர் நீரன்

* இதுமுதல் ௬ - அத்தியாயமும் திருநீற்றுச்சோழபூபதி நிக்ருஹ ஜய சம்பந்தம்.

ரே ப்ரியபாகினேயரென்று மகிழ்ந்து சிந்தித்துக்கொண் டிருக்கையில் கூரத் தாழ்வான் அரசன் வஞ்சகனுனபடியால் தேவரீரெழுந்தருளுவது யுக்தமன்று அடியேன் போய்வருகிறேனென்று உடையவருடைய த்ரிதண்ட காஷாயாதி களைத் தரித்துக்கொண்டு வந்த மனிதருடன் புறப்பட, பெரியநம்பியும் இன் னுஞ்சிலரும் கூடவெழுந்தருளினார்கள். பின்பு உடையவர் ஸகோதரிகளின் புத்ரர்களான முதலியாண்டான், நடாதூராழ்வான், முதலான முதலிகள் தேவரீர் இங்கிருக்க வொண்ணாதென்று உடையவருக்கு வெள்ளை சாத்தி மேல்நாட்டுக் கெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போனார்கள்."

எனவரு வசனங்களிலுங்காண்க. கூரத்தாழ்வான் கட்டி யிருந்த வெள்ளைவஸ்திரத்தையே இராமாநுஜன் கட்டிக்கொண்டன னென்பது தே - குருபரம்பரை. இப்படிக்கட்டியிருந்த காஷாயநீக்கி வெள்வேஷ்டிவீக்கித் தன்னுடைய பிரதானசாரியனையும் பிரதான சீடனையுங் காட்டிக்கொடுத்து ஓடியொளிக்கும் யதிசிரேஷ்டன் எங்குத்தானுளன் ! இலனே. இதுகொண்டுதானே அவ்வநுஜனை "யதிராஜன்" என்று வைணவர் விதந்து கூறுகின்றனர். நன்று, நன்று. இராவணசன்னியாசியும் இவ்விதஞ்செய்யானே ! இப்படிப் பட்ட யதி ஆச்சிரமத்தில் அவனுழைந்தது தானெற்றுக்கோ! மனைவி நல்லாளல்லளாயினும் மற்றொருமனைவிவேட் டில்லறத்திருக்கலா மே. களையப்பட்ட காஷாயமும் மீட்டும் இருமுறை தரிக்கப்பட்ட தெனுஞ்செய்தியை மேலைப்பரம்பரை ப - கருச - ல் "த்ரிதண்ட காஷா யாதிகளையும் ஸம்பாதித்து.........உடையவர் முன்பு போல அவற்றைத் தரித்தருளினார்" என்றும், கருசு - ல் "மீளவும் காஷாயந் தரித்தருளி" என்றும் வருவனவற்றானறிக. இப்படிப் பெயர்த்தும் பெயர்த்துங் களைந்து பெயர்த்தும் பெயர்த்துமுடுத்த வந்த அந்த ஆதிகாஷாயமும் ஒருகாஷாயதாரியிடம் பெற்றதன்றே. என்னை? காஞ்சிபுரத்துப் பெருமாள்சன்னிதியில், தானே வைத் தெடுத்துத் தரித்துக்கொள்ளப்பட்டன அக்காஷாயாதிகளெனுஞ் செய்தி வ - குருபரம்பரை ப - கூக - ற் பெறப்படுதலின். இச்செய்தி கூறும் தே - குருபரம்பரை ப - கoஅ - ல் "த்ரிதண்ட காஷாயாதி களை நீருள்ளதனையுந் தரிக்கக்கடவீர்" என்று அர்ச்சகன் வாயி லிருந்து அரி சொல்லினனென்பதுங் காணப்படுகின்றது. அஃ துண்மையாங்கால், அவற்றினைத் தானுள்ள நாளளவுந் தரியாது அவ்வநுஜன் செய்கை அச்சொற்கும் விரோதமாகும். இத்திற ஏதுக்களால் இராமாநுஜன் வழியான ஸந்யாஸம், தான்றோன்றி யும் அயோக்கியமுமாதல் ஸ்பஷ்டம்.

## ௯. இராமாநுஜன் கரந்துறைதல்.

---

௯-றிப்போந்தவாறு காடாயம் மூடாயமாக ஒளித்தோடும் இராமாநுஜனைப் பிடிக்குமாறு சோழபூபதியின் பரிசனங்கள் பின்றொடர்ந்தார்கள். அங்ஙனம், "பின்னே ஆள் த்வரித்து வருகிறது" என்று தன்னோடு வருவார் மொழிதலைக்கேட்ட இராமாநுஜன் நீங்கள் "மணலையள்ளி" "ஒழுக்கிவாருங்கோள்" என்று ஒருதந்திரஞ் சொன்னபடி அவர்களுஞ் செய்தார்கள். அம்மணலடைவு கண்ட அப்பரிசனங்கள் "போகிறபார்ப்பார் மந்த்ரவாதமபண்ணிப் போனார்கள்" அதனை விதனைக்கடந்து செல்லொண்ணாதென்று திரும்பிவிட்டார்கள். மேல், குதிங்கால் குண்டியிற் றாக்க ஒட்டெடுத்தோடும் இராமாநுஜன் முதலினோர் சில தினங்களின்மேல் "மழையிலே நனைந்து குளிரிலேயிட்டுபட்டு" ஒருமலையடியிலுள்ள "புனத்தில் நெருப்பொளி கண்டு" ஆங்கெய்திக் குளிர்காயமேயினர். திருமலை நல்லானெனும் வைணவனுடைய சீடர்களாய் அப்புனத்திலிருந்த வேடர்கள், அக்குளிர்காய்வார் வருமுன் அன்னோரைத் தேடிக்கொண்டுவந்த ஒரு வைணவனைக்கண்டு இராமாநுஜராகிய எம்பெருமானார், திருவரங்கத்துப் பெரியபெருமாளிவர்கள் திருச்செல்வமெப்படியென்று வினவியபோது அவன்.—"என்ன பெரியபெருமாள், என்ன திருச்செல்வம், எம்பெருமானார் சோழன் வ்யாஜேந வெண்பரிதானந் தரித்தெழுந்தருளினார், இன்னவிடத்தே யெழுந்தருளினாரென்று தெரியாது" எனக் கவன்று கவன்று கரைந்தனன். மேல், அக்குளிர்காய்நரை இன்னோரென வறிந்துகொண்ட அவ்வேடர்க ளளித்தவற்றை யன்னோரு முணவாகவுண்டிருந்து மறுநாட்காலையில் அவ்விடமொரீஇ அவ்வேடர் துணையாக வொரு கிராமத்தையெய்திச் சோறுண்டு வதிந்தனர். அதன்மேல் அவர்கள் சில வூர்களிற் றங்கிச் சிங்கர்கோயிலை யடைந்து சோழனைக் கொல்வோமென்று அபிசார ஓமஞ்செய்து, சமணனாயிருந்த விட்டலதேவ னெனும் ஒரு சிற்றரசனை வைணவனுமாறுசெய்து, அவன துதவிகொண்டு யதுகிரியென்பதிலுள்ள திருநாராயணபுரத்தில், "பன்னிரண்டு ஸம்வத்ஸரம் வாழ்ந்தருளுகிற காலத்திலே" என்றபடி பன்னிரண்டுவருடம் ஒளித்திருந்தார்கள். இச்செய்தியைத்தான் இராமாநுஜன் மேனாட்டிற் கரந்துறைதலென்பது. ஈண்டுச் சொற்றவெல்லாம் தே-குருபரம்பரையிலும் (ப-கஙக-முதல் கஙகூ-வரை

கிரகிக்கலாம். "   " இவ்வித அடையாளத்துட்பட்ட வாக்கியங்கள் அவ்வப் பக்கங்களிலேயே யுள்ளன.

## ௧0. திருநீற்றுச்சோழபூபதி திக்குவிஜயம்.

சிவநெறிநிற்பார் செல்வம் பெருகுமாறு சையகிரியினின்று பெருகிவருங் காவேரிநதியெனும் பொன்னிசூழ் சோணாட்டின் கண்ணதாய கங்கைகொண்ட சோழபுரத்திருந்த ராஜராஜ அநபாய குலோத்துங்கசோழ மஹாராஜ னனவர் சர்வசாஸ்திர சம்பன்னராகி வேதோக்தமாயும் மஹாமகிமைத்தாயும் விளங்காநின்ற திருநீற்றை அனைவருமணிந்து பரம்பர னருள்பெற்றி வாழுமாறு அத் திருநீற்றுச்செல்வத்தைப் பெரிதும்பரிபாலித்து வந்ததுகாரணமாகத் திருநீற்றுச்சோழபூபதியெனுஞ் சிறப்புப்பெயர் பெற்றனர். அங்ஙனமே திக்குவிஜயங்கொண் டெழுந்தருளி இதரமதங்களை வென்று "சிவாத்பரதரம் நாஸ்தி" என்று கையெழுத்துவாங்கி வந்தஞான்று, பூதூர் - இராமாநுஜனென்பான் புதுவைணவ சித்தாந்தியா யிப்பொழுதுளனென்பது செவிக்கொண்ட அப்பூபதி, அவனை யழைத்துவருகவென்று தம் பரிசனங்களிற் சிலரை யனுப்ப லுற்றனர். அவர்களது வரவையும், அரசர்பெருமானது போராற்றலையுங் கேள்விப்பட்டவுடன் இனி, யாமென்செய்துமெனக் கலங்கிய அவ்வநுஜன், இனி யிவ்விடம்விட்டேகு நம்மை இன்றுகாறு மேனும் அன்னோர் பின்றொடராதிருக்குமாறு இன்னோரை யங்கனுப்புவோம், அங்ஙனிவர்களோடு அவ்விடயம ஒழியினுமொழியட்டுமென்று உள்ளுக்குள் யோசித்துத் தன் பிரதானசீடனை கூரத்தாழ்வானையும், பிரதானாசாரியனை பெரியநம்பியையு நோக்கி, அவர்கள்வரின் அவர்களோடு நீங்களிவற்றினைத் தரித்துக்கொண்டு நானேயிராமாநுஜன், நானே கூரத்தாழ்வானெனச்சென்று அரசன் கருத்தியாதென்றறிந்து செய்யத்தக்க யுக்திசெய்து வம்மின்களென்று கட்டியிருந்த காடாயத்தையுரிந்து திரிதண்டத்தோடு கூரத்தாழ்வான் கரத்திற் கொடுத்துப் புதுவஸ்திரம் வாங்கற்கும் அவகாசமின்றி அவ்வாழ்வா னுடுத்திருந்த வெள்ளுடையையே வாங்கித்தரித்து ஆள்மாறுட்டஞ் செய்துகொண்டு மேலுரைத்தவாறு மேனாடு நோக்கா வோடினன்.

அதன்பின் இராஜபரிசனங்கள் திருவரங்கமெனுமூரிலுள்ள இராமாநுஜனது இருப்பிடமணவி இராமாநுஜன் யாவனென வின

தலும், அவ்வேட மிட்டுக்கொண்டிருக்கும் ஆழ்வான் நானேயென் றனன். ஆயின் நீ வருக என்று அவர்க ளழைத்துச்செல்லுங்கால், பெரியநம்பியும் பிற வைணவர்களு முடன்போந்தனர். போந்தயாவ ரும் அந்த இராஜசபையில் ஸ்ரீமத் - வாகீசபாதசேகர சிவாசாரிய சுவாமிகண்முதலிய சதுர்வேத பாரகராகிய பிராஹ்மணோத்தமர் களும், திருநெறித்தமிழ்வேதமுதலியன வுணர்ந்த சிவனடியார்களுஞ் சூழ வீற்றிருக்கும் இராஜாவின் திருவருட்கோலப் பொலிவை நோக்கி யீண்டு நஞ்செய்தி யாதாகமுடியுமோவெனு நிற்குஞான்று, விஷ்ணு பரத்துவத்திற்குப் பிரமாணமென்னை ? நீயிர்தரித்திருக்கும் புண்டரம் வைதிகங்கொல் ? என்று அவர்களை வினவிய அரசர் பெருமானார் சமூகத்தில், இராமாநுஜ வேஷதாரியானவன் விஷ்ணு பரத்துவத்திற்குச் சுருதி மிருதி புராணங்களுண்டெனச் சொல்லிக் கொண்டு பொப்பதேவன் கற்பனைப்பாகவத வசனங்களிற் சிலவற் றையெடுத்துப் பிரமாணித்தலும், அவரும் மந்தஹாஸஞ் செய்த னர். அவ்வசனங்களை ஆயிடையிருந்த வாகீசபாதசேகர சிவாசா ரிய சுவாமிகள் கண்டித்துப் பரத்துக்குப் பரமாவன் பிரஹ்மன், அவனுக்குப் பரமாவன் ஹரி, அவனுக்குப் பரமாவன் ஈசனாகிய சிவனெனும்பொரு டரத்தக்க—

(𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌤𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌤𑍍𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌤𑍋 𑌹𑌰𑌿𑌃 |
𑌤𑌤𑍍𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌤𑍋𑌽𑌪𑍀𑌶𑌃)
"பராத்பரதரம்ப்ரஹ்மதத்பராத்பரதோஹரி: |
தத்பராத்பரதோஹீச:"

எனும் அதர்வணவேத சரபோபநிஷத்து முதலிய சுருதியாதி பிரமாணங்களைப் பல்லாற்றானும் விளக்கி, (நெருப்பிற் காய்ச்சிய இருப்புப்படிகளிலேறிநின்று சிவபரத்வஸ்தாபனஞ் செய்தருளிய) ஸ்ரீமத் - ஹரதத்த சிவாசாரியரது வைஷ்ணவகண்டன நியாயத் தையுங் கூறிச் சிவபரத்வத்தை நாட்டி நும்புண்டரம் அவைதிக மென்று அதனைக்கண்டித்துப் பஸ்மஜாபாலாதி உபநிஷத்துக்களாற் பஸ்ம ருத்ராக்ஷதாரணமே வைதிகமென நிறுவிநின்ற காலையில், அவையற்றை மறுத்தொன்றுஞ் சொல்ல வழியிலாது பேதுறும் அவ்வேஷதாரியையும் பெரிய நம்பியையுஞ் சோழபூபதி நோக்கி, இனி நுமது அபிமத மென்கொலோவென்று கடாவியகாலை, அன் னார் நுங்கள் கருத்தின்படியேசெய்ய இயைந்தோமென்று கையெ ழுத்துப் பத்திரத்தை வாங்கினர்.

## கக. சோழபூபதி வைஷ்ணவாசாரியரைத் தண்டித்தல்.

அவ்வாறு வாங்கிநின்றஅன்னோர், அதனில் "த்ரோணமஸ்தி ததஃபரம்" என்று விபரீதமாக வெழுதி, அதனைச் சபையில் வைத்தனர். அதன்பொருள்:— "சிவாத்பரதரம் நாஸ்தி" என்ற நுங்கள் வசனத்தில் "சிவம்" என்பது குறுணியெனும் ஓரளவை யாகும். அதற்குமேலே 'த்ரோணம்' எனும் பதக்கிருக்கிறது என்ப தே. இவ்விதப்பொருளுற வெழுதலானதிற் சிவமென்பது அவ்வள வைக்கும் கடவுளுக்கும் பெயராக வமைந்தாங்கு துரோணமென்ப தும் பதக்குக்கும் விஷ்ணுவுக்கும் பெயராக வமையாமை கண்டு, இவர் சிவநிந்தை செய்தவராயினமையோடு சொற்றபடி செய்யாது மற்றொன்று செய்தவரு மாயினமையின் (ஶிவநிந்தாகரம் ஹத்வா பீடிதஃ ஸ்வயமேவவா। யஸ்த்யஜேத்து ஸ்த்யஜாந்ப்ராணாந்நஸபூயப்ரஜாயதே॥) 'சிவநிந்தாகரம்ஹத்வாபீடிதஃ ஸ்வயமேவவா | யஸ்த்ய ஜேத்துஸ்த்யஜாந்ப்ராணாந்நஸபூயப்ரஜாயதே||" எனுஞ் சிவபுராணச் சுலோகம்—'சிவநிந்தை செய்வோனைக்கொல்க: இன்றேல் வியசனி த்துத் தன் பிராணனைவிடுக: அங்ஙனஞ் செய்வோனுக்கு மறுபிறப் பில்லை.' எனும்பொருளைத் தருதலானும்; "கண்டனறாயின் முக்கட் கடவுளை நிந்திப் போனைத்—தண்டனை புரிந்து கொல்க" எனு நீதி யிருத்தலானும் இக்குற்றமுடையரைக் கொல்லுமாறு நாம்தீர்மானி க்கலாமேயென்று அரசர்பெருமானார் கூறுதலும்; அவ்வேஷதாரி, மோசம் வந்ததேயென்று முகம்புலர்ந்து, நாவறண்டு, நடுநடுங்கி, நனிபயந்து, இராஜப் பெருந்தகையே! இனி, உண்மை கூறக்கட வேன்: நான் இராமாநுஜரல்லன்: இவர் கூரத்தாழ்வா னல்லர்: நானே கூரத்தாழ்வான்: கூரத்தாழ்வானென வந்த இவர் இராமா நுஜருக்குக் குருவாகிய பெரியநம்பியே: என்னாசிரியராகிய இராமா நுஜர் நும்பேராற்றலுக் கஞ்சி உறைவிடம்விட் டோடினர்: அவர் சம்மதப்படி அவரது மானத்தைக் காக்கவென்று நாங்களிங்குவந்த னம்: சிவத்தைக் குறைகூறுவார் கொல்லப்படுவரெனும் நீதி யிருத் தலையு நாங்களறியோம்: இவ்விடயத்தை யிலேசாக நினைத்துச் செய்துவிட்டனம்: அறியாதுசெய்த குற்றங்களைப்பொறுத்து எங்க ளுக்குப் பிராணபிக்ஷை யளித்தருள வேண்டுமென்று குறைகோள் கூறிக்கூறி நின்றனர். அங்ஙனஞ் சோழபூபதி யிரக்கமுற்று, நுங்க ளைக் கோறல்புரிய இனி யியையேமாயினுஞ் சிவநிந்தகரைத் தண்டி

யாதுவிட விதியில்லை யென்பதுகொண்டு பிறிதொரு தண்டனையை விதிக்கக் கடவேமென்று, தண்டனை நிறைவேற்றுவோரை விளித்து, நீயிர் இவ்விருவரையுங் கண்களைப்பிடுங்கிக் காட்டில்விடுமினோ வென்று விதித்து, நமது கட்டளையின்படி கிரமமாக வராமல் இன்னோரையுந் தன்னையும் ஆள்மாறாட்டஞ் செய்து மறைந்த இராமாநுஜனைப் பிடித்துக்கொணர்கவென்று மேலுமொரு கட்டளை பிறப்பித்தனர். அஞ்ஞான்று தண்டனை நிறைவேற்றுவோராற் பிடர் பிடித்துத் தள்ளப்படுவோரும் ஹரிஹரியென் றலறிவிழும் தாமத ரோக்கிப் பறபறவென் றிழுக்கப்படுவோருமான அப்பாதக ரிருவரும் ஆ! ஆ வென்றலற, அவர்களுடைய விழிகள் ஈரிரண்டு புறு முட்டைகளெடுத்தாலென வெடுக்கெனப் பறிக்கப்பட்டன. உடனே யவ்விருவருங் காட்டுப்புறத்தே விடப்பட்டனர். அவருள், பெரியநம்பி யென்பான் கண்கள் பிடுங்குண்ட வேதனைபொறுளு யுடனே யுயிர் றுறந்தனன். இச்செய்தியைத் தே - குருபரம்பரை ப - கசுO - ல்—

"சோழனும் இவர் இப்படி பரிஹஸித்து ஓலைக் கொப்பமட்டபடி கண்டு, அத்யந்த கோபாக்ராந்த சித்தனாய், ஆழ்வானையும் நம்பியையும், நேத்ரோத் பாடநம் பண்ணச்சொல்ல; ராஜ மநுஷ்யர்களும், அவர்களைப் பிடித்துக் கொண்டுபோய் அவன் சொன்னாற்போலே செய்து படைவீட்டில் நின்றும் புறப்படவிட ; பெரிய நம்பியும், அவ்வேதனை பொறுக்கமாட்டாமல், அங்கே ஒரு சொல்லைத் தலைமாட்டிலே,* ஆழ்வான் மடியிலே திருமுடியும் அத்துழாய் மடியிலே திருவடிகளுமாய் இளைத்துக் கண்வளர்ந்தருள;.........அங்கே திருநாட்டுக் கெழுந்தருளினார்." என்றும், வ - குருபரம்பரை ப - எஅ - ல்—

"அரசன் குபிதனாய் அவருக்கும் பெரியநம்பிகளுக்கும் நேத்ரோத்பாடனம் பண்ணுவித்தான். அதனால் நம்பி கோயில்வழியில் திருநாட்டுக் கெழுந்தருளினார்."

என்றும் வருவனவற்றானுமறிக. இவ்வா றிவ்விடயம் வைணவச்சுவடிகளிலுங் காட்சியளவையாயிருப்ப, இதில், அருவருப்புற்ற சில அயோக்கியத்தாதர்கள் சைவரைப் பார்த்தகண்களாகாவென அவ்விருவருந் தாமே தங்கண்களைப்பிடுங்கிச் சோழன்மீதெறிந்து விட்டன ரென்கின்றனர். இதுபொருந்த, பாஷண்டமத சபேடிகை யென்றொரு புன்சுவடியெழுதிய பாஷண்டத்தாதனும் ப - அO - ல் "சிவனையும் சைவனையும் புத்திபூர்வகமாகக்கண்ட கண்களைப் பிடுங்கிப் புகடுகை யென்றல்லவோ மாயாகேசவனு மாசரித்

துக் காட்டினது." என ஊளையிட்டுளன். இவ் வயோக்கியச்செய்தியை அவரொத்த புளியோரைப் புஷ்டிவிக்ரஹங்களும், ததியோதனத் தடிவிக்ரஹங்களுமே யுண்மையென்றொப்புக்கொள்ளும். இவ் விக்ரஹங்கள்.—முன்னர்ச் சைவனாயிருந்த கோவிந்த பட்டனையும் மற்றைச்சைவரையும் பெரியதிருமலை நம்பியெனும் வைணவன் எப்புத்திகொண்டு பார்த்தனன்? பார்த்த கண்களை யேன் பறித்தெறிந்திலன்? என்று கடவுவார்முன்னும் மூகமே சாதித்திருக்கும்போலும்! இது கிடக்க. கூரத்தாழ்வானும் பெரியநம்பியும் "ஹரிஹரி" என்றலறிவிழுந்த காலத்தும் அவர்கட் கோருதவியும் அந்த ஹரி புரிந்திலன். அங்ஙனமவன் தக்ஷப்பிஜாபதி யாகச்செய்தி முதலியவற்றை நினைத்துக்கொண்டே வாளாவிருந்துவிட்டனன்போலும். தன்னடியவரை எத்திறஇடையூற்றினின்றுங் காத்தருள்வது சிவனருளொன்றேயா மென்பது ஈண்டறியற்பாற்று. என்னை? சமணராஜனாகிய பல்லவன் திருநாவுக்கரசுசுவாமிகளைக் கொல்லும்படி எழுநாள் காறும் நீற்றறையிலிட்டபோதும், அவர்க்குப் பாலில் விஷங்கலந்தூட்டியபோதும் சுவாமிகள் யாதொரு துன்பு மிலாதிருந்ததூஉம்; மேல் அப்பல்லவன் சுவாமிகளை மிதித்துக்கொல்லும்படி யானையை யேவினகாலத்தில் அவ்யானை, சுவாமிகளை வணங்கித் தன் மீதேறியிருந்த பாகனையுஞ் சமணரையுங் கொன்று சென்றதூஉம்; மேல் அவன், சுவாமிகளைக் கற்றூணிற் பிணித்துக் கருங்கடலிற் றள்ளியகாலை அத்தூண் தெப்பமாக மிதப்ப அதன்மிசை யவர் வீற்றிருந்து கெடிநெதிக்கரையைச் சேர்ந்து திருப்பாதிரிப்புலியூர்க் கெழுந்தருளினதூஉம் அவரது புராணத்துள்ளன வாகலின். இன்னனபலவுள. ஒருமுறை ஒருறுப்புக்கொய் தண்டனையை மாற்றும் அருளுறுத வைஷ்ணவாசாரியர் ஒற்கமும், பன்முறை மரணதண்டனையையும் மாற்றும் அருளுற்ற வைதிக சைவாசாரியர் ஊற்றமும் ஈண்டுய்த்துணர வுள்ளன.

சோழபூபதி தன்னையழைப்பது இன்ன காரியத்திற்கென நன்கு தெரியு முன்னரும் அங்குச்செல்லுந் தன்மனிதர்க்கு இன்னது சம்பவிக்குமென்பதை அறியுமுன்னரும் இராமாநுஜன் அவ்வரசப்பெருந்தகையைக் கொல்லவெனச் சூனியகருமஞ் செய்ததும்; ஆள்மாறாட்டம் பண்ணியதும் முழு வஞ்சகமாயிருப்ப, அப்பெருந்தகையை "வஞ்சகன்" என்று அச்சுவடியிலெழுதியது அவ்வஞ்சகர் வழிபோற்று மகிமையே யாகும். அப்பூபதி வஞ்சகரா

யின் வைணவரனைவரையும் பிடித்தபிடியினன்றோ வதைத்துப் பேய்க்கும் நாய்க்கும் பெருவிருந்திடுமாறு செய்திருப்பர். அவர்க்கஃ தரியதுமாமே. கூர்த்தபுத்திகொண்டுணர்க. ஈண்டுக் கையெழுத்துப் பத்திரிகையில் விபரீதமாக வெழுதினமை, அச்சபையை மதியாத திடமாகாதோவெனின்,—ஒரு பிரபுவின் புதுவரவுகண்ட நாய் மாட்டு அவரை மதியாது வள்வள்ளெனக் குரைக்குந்திட மெத் துணையுளதோ அத்துணைத்திட மவர்மாட்டு மாகலாமென்க. அவ் வேழைமதி யினைத்தெனை அவ்வாழ்வான் வாயிலேயே வெளியாயிற் றென்பதும் மேலே விளக்கப்பட்டது. பெரிய இராஜசபையிற் கிரு ஷ்ணனைப் பலவாறிழித்துக் கூறிய சிசுபாலனென்பான் அக் கிருஷ் ணனின் மிக்காறுயினனல்ல னென்பதையும் இம்பர்க்கருதிக் கொ ள்க. தே - குருபரம்பரை ப - க௱O - ல்—

"ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகளாலே பஹுப்ரகாரமாக ஸ்ரீமந் நாராயணனே ஸர்வஸ்மாத்பரன், ஜகத்காரணபூதன், த்யேயனனவனுமவனே, ஸர்க்கஸ்த்திதி ஸம்ஹாரகர்த்தாவு மவனே, ப்ரஹ்மருத்ராதிகள் அவனுக்குப் புத்ரபௌத்ராதிகளாய் அவன் நியமநத்திலே யிருக்குமவர்கள்; அவ்வளவு மன்றியே (ஏகஸ்ப்ராஸிஸரத்பாதமந்யஸ் ப்ரக்ஷாளயந்முதா | அபரோதி தரந் மூர்த்நாகோதிகஸதேஷு கண்யதாம்||) திருவடிகளை நீட்டினவனொருவன் கமண்டலோதகத்தாலேபக்திபுரஸ்ஸரமாகத்திருவடிகளைவிளக்கினனொருவன், தத்தீர்த்தத்தை ப்ரீதியோடே சிரஸாவஹித்தவனொருவன், இவர்களில்பெரிய வன் ஆரென்று நீயேவிசாரித்துக் காணாய். இம்மாத்ரமேயோ (யச்சௌச நிஸ்ஸ்ருத ஸரித் ப்ரவரோதகேந தீர்த்தேந மூர்த்நி வித்ருதேந சிவச்சிவோ பூத்) த்ரிவிக்ரம பாதஜலஸங்கத்தாலே காபாலித்வம்போய் சிவத்வமுண்டான வனிறே சிவன்."

எனவரைந்தவசனங்களே மேலைச்சபையிற் கூரத்தாழ்வாலுற் கூறப்பட்டனவாக வுள்ளன. இச்செய்திக்கு முரணாக உரு - கக்ஷி களுக்கு அவனுத்தரங்கூறித் தனதுமதந் தாபித்தனனென்றும்; அதுவே கூரேசவிஜயமென்றும் வைணவர் பிதற்றுதல் வழக்குரை யாகாத சழக்குரையே யாமென்க. ஸ்ரீமத் - ஹரதத்தசிவாசார்ய ருடைய கக்ஷிகளையும் அச்சபைக்கட் கேட்டுளோன் குருடனா அக் கூரத்தாழ்வானாகலிற் பிற்றை அன்னான் அக் கக்ஷிகளைத் தன் னினத்தாரிடமியம்பி, மழலைகள் குழறுபடைபோன்ற சிலசமா தானங்களையுஞ்சொற்று, அவற்றினை வரைந்துவைக்குமாறுசெய்த தே அச்சுவடியாதல்வேண்டும். என்னை? அதனிற் பிரமாணிக்கப் பட்டவைகள் முடிச்சூர்-அப்பாவுமுதலியெனுமொரு வைணவனாற்

காட்டப்பட்டனவென்றல் விய ௵ பங்குனி மீ" சென்னை : வெள்ளையநாடார் அச்சியந்திரசாலையென்பதில் ௬௫ - பக்கங்களிற் பதிப்பிக்கலான அதனிற் காணப்படுகின்ற தாகலின். அக்காட்டுகளிற் சிலகற்பனையும், சில தன்கருத்திற்கிசையத் திருத்தப்பட்டனவும், சில கற்பனைச்சுவடிகளிலிருந்து பொறுக்கப்பட்டனவுமாக வுள்ளன. அவை யெல்லாந் துவையுண்ட நீர்மையை நாலாயிரப்பிரபந்த விசார முணர்ந்தோ ரறிந்திருப்பர். கூரேசவிஜயபங்கமெனுமொரு நூலுமுளது. எப்படித்துவைக்கினும் அக்கதிகெட்டவைணவர் மேன்மேலும் அதனையேயெடுத் தாள்பவராவர். என்னை ? வசனவடிவாயிருந்த அப்புன்சுவடியையே சிலவிடயம் பெருக மாறச் செய்யுளுருமுறையுமாக்கி யிஞ்ஞான்று வெளியிட்டுளாராகலின். இதுநிற்க. "த்ரிவிக்ரம பாதஜல ஸங்கத்தாலே காபாலித்வம்போய் சிவத்வமுண்டானவனிறே சிவன்" என்ற வசனம்,—அக் கபால நீக்கத்தின்பொருட்டு அதனிற்றனது இரத்தத்தை விஷ்ணு வடித்தவனுவனெனும் அருத்தமுறத் திருமழிசையாழ்வான் "வேறிசைந்த செக்கர்மேனி நீறணிந்த புன்சடைக்—கீறுதிங்கள் வைத்தவன்கை வைத்தவன் கபான்மிசை—யூறுசெங்குருதியா னிறைத்தகாரணம்" என்றும், பொய்கையாழ்வான் "புண்புரிந்தவாகத்தான்" என்றும் வரைந்த செய்திகட்கும் மாறுகோளாதல் காண்க. இங்குவந்த பாதஜலவிஷயம், கபாலநீக்க விஷயம் முதலியவற்றை நாலாயிரப்பிரபந்தவிசாரத்தில் நனி துவைத்து ஞாயம் விளக்கியுள்ளாம். மேலே சொற்றவாறு வைணவர்பாகவதம் பொப்பதேவனது கற்பனையென்பதை இந்நூலினிறுதிக்கண்ணே சேர்க்கப்படும். 1904-ம் வருஷத்து இண்டியன் ரிவியூவெனும்பத்திரிகையின் 596 - ம் பக்கத்து ஆங்கிலமொழிகளு மறிவிக்கின்றன. இனி, அம் மஹாராஜசபையில் நிகழ்ந்ததை நிகழ்த்தி மேலுங் கூறவேண்டியவற்றைக் கூறுவாம். அவ்வரசப் பெருந்தகையாவார் இவ் வைஷ்ணவபாஷண்டிகளை வைதிகர்கள்பார்ப்பதுந் தோஷமாக வேற்படுதலின், இனி இக்கொள்கையை வேட்போரெவரும் ஊருக்குப்புறம்பான விடங்களிலே நீசரினுநீசரெனச் சஞ்சரிக்கவேண்டும்: ஊரிற் சஞ்சரிப்பவர் தண்டிக்கப்படுவரெனுந் தீர்மானத்தைப் பிரகாசப்படுத்தினர். உடனே வைணவ பாடண்ட வேடதாரிகளிற்பலர் தங்களறியாமை கணித்து வியசனித்து, உள்ளபடி திருநீறணிந்து சைவராயினர். சிலர் "கூரத்தாழ்வான் குடியைக்கெடுத்தான்" என்று திருநீற்றுக்குறியின்

மறைந்து இரகசிய வைணவரா யிருந்தனர். சிலர் இராமாநுஜன் முதலானோர் செல்லுமிடந்தேடி யோடினர். மேல், இராஜாவின் உத்தரவுப்படி சபையிலிருந்த திருநீற்றுச்செல்வர்யாவரும் தத்தம் இருக்கை புக்குப் பாடண்டிகளைப்பார்த்த தோடந்தீரப் பரிகாரமு முஞற்றினர். இராமாநுஜன் (சோழநாட்டில்) இராமாநுஷ்யனு மாறு இராஜகட்டளை பெற்றுச்சென்றோர் மேற்சொற்றபடி அவன் செய்த தந்திரவழியஞ்சித் திருமிவந்து, அவனகப்பட்டிலனென்று இராஜசமூகத்தி லறிவித்தகன்றனர்.

## கஉ. கூரத்தாழ்வானைவைணவர்இரவிற்றூக்கிக்கொண் டோடுதலுந் துயருழத்தலும்.

பெரிய நம்பியின் மரணத்தை நோக்கிய அவன்மகள் அத்துழாயென்பாள், பதறினாள்: கதறினாள்: ஐயோ ஐயோவென் றலறினாள்: மார்மேலடித்துக்கொண்டு மண்ணில் வீழ்ந்து புரண் டுருண்டழுதாள்: வைணவர் தெய்வமுந் தெய்வமா! இவ்வாபத்துக் குதவாதுபோயிற்றே யினி யென்செய்வேனென்று வயிற்றைப் பிசைந்துகொண் டெழுந்தாள்: அப்பா! இப்படி யவச்சாவாகச் சாகத்தானோ பாதகனுக்கு நீ பரமகுருவாயினை! அவனுங்களைக் காட்டிக்கொடுத் தோடிவிட்டனனேயென்றும், இன்னும் பலபடியாகவும் புலம்பிக் கலுழ்ந்து கலுழ்ந்து சோர்ந்து, இன்னும் ஏது துயர்வருமோவென் றஞ்சின நெஞ்சினளாய் உடனே அவ்விடம் விட்டேகினள். அற்றை யிரவு இரகசியமாகக் கூரத்தாழ்வானை யொருதொட்டிலிற் கிடத்தித் தூக்கிக்கொண்டோடும் வைணவர் திருவரங்கமெனுமூரிற் றங்கினர். இசசெய்தி—

"ஆழ்வானை ஒரு கட்டணத்திலே எழுந்தருளுவித்துக்கொண்டு, ராத்ரியிலே ஒருவருங் காணமல் கோயிலிலே வந்து புகுந்தார்கள். கூரத்தாழ்வானும், பெரிய நம்பியைப்போலே அடியேனுக்கும் இசசரீரம் போய்த்தில்லையே! என்றுகொண்டு முறையோ அரவணைமேல் பள்ளிகொண்ட முகில்வண்ணனே என்று போர க்லேசித்தருளினார்."

என்று தே - குருபரம்பரை ப - கசுக - லும் வருதல் காண்க. அப்படித் தங்கியவுடனே விழியிழந்தோன் மனைவி ஆண்டாளென்பாள் ஓடிவந்து பார்த்துப் பிழைக்கவந்த விடத்திற் பெருமோசம் வந்ததேயென்று அவன்முன் வீழ்ந்தழுதனள். அவனும் பலவாறு

வியசனித் தழுதனன். அவ்வழுகுரலைக்கேட் டங்குற்று நிகழ்ந்தவா றெல்லாந்தெரிந்த சிலருள் ஒருத்தி இம்மதம்வேண்டா, கூலிவேலை செய்தாவது பிழைக்கலா மென்று முன்னேயே சொன்னேனே யென்றனள். ஒருத்தி இப்படிக் கேடுவிளைத்த இம்மண்ணுங்கட்டிக் குறியைச் சுடுவென்றனள். ஒருத்தி இவர்கள் இராஜசபையில் அப் படிக் கையெழுத்திட்டது தப்பென்றனள். ஒருத்தி பெரியோர் தரி க்குங் காஷாயத்தை ஆள்மாருட்ட நிமித்தந் தரித்துச்சென்ற தோ ஷமே யிவரை யிப்படி யாக்கிற்றென்றனள். ஒருத்தி அவன்மனைவி யைநோக்கி நீ அங்கே இவரைப் போகவேண்டாவென்று தடாதிரு ந்தனையோ வென்றனள். ஒருத்தி ஒருகண்ணோடாவது விட்டனரா வென்றனள். ஒருத்தி நியாயப்படிதானே செய்வார்களென்றனள். ஒருத்தி இவரிப்படி நொள்ளைசாத்தத்தான் இராமாநுஜன் வெள்ளை சாத்தினனென்றனள். ஒருவர் இவர்கள் சிவநிந்தை செய்துசெய்து என்னென்னவோ எழுதிக்கொண் டிருந்தார்கள், அது சும்மாபோ மாவென்றனர். இன்னுஞ்சிலர் பலவாறு பல பகராலுற்றனர். உட னே கூரத்தாழ்வான் முதலாயினோர் இங்கிருத்தல் கூடாதென்று பாவத்தின்மூத்த பாஷண்ட ராமாநுஜன் சென்ற பாதையையே விசாரித்துக்கொண்டு போதுகின்ற காலையில், இராமாநுஜனோ லனுப் பப்பட்ட மனிதனைக் கண்டு அவனோடு அவ்வநுஜ னிருக்குமிடத் தை யடைந்தனர். அவர் சொல்வழியே நிகழ்ந்தனவெல்லா மறிந்து கொண்ட விராமாநுஜன் கூரத்தாழ்வானை நோக்கி ஐயோ! இது கண்ணபிரான்செய்த காரியமோவென்று கள்ளக்கண்ணீர் வடித்து, நான் வரும்பொழுது உங்களையு முடன்கூட்டி வந்திருப்பேனாயின் நீங்க ளவ்விதகாரியஞ் செய்யவாவது இவ்விததுக்க மெய்தவாவது இடமுண்டாகாது. என்னவோ என்புத்தி அங்ஙனம் வேறாய்விட் டது. இனிக் கவலைப்படுவதிற் காரியமின்று. ஆழ்வான்! இனி நீ யஞ்சற்க. உனது குடும்பத்தை நானே போஷித்து வருவேன். இந் நாட்டு அரசன் முதலானோர்க்குந் திருமண்ணி தீட்டிவிட்டேன். அச்சோழ னிருக்குமளவும் நாமிங்கே சுகமாக வசிக்கலாமென்று கூறி அவர்களோ டிருந்தனன்.

## கஙு. சோழபூபதி முத்தியடைதல்.

பின்பு சோழபூபதி பன்னிரண்டுவருடங் கோடாச்செங்கோ லோச்சிச் சிவநேயச் செல்வர்களோடு பெரிதும் வாழ்ந்துவருநா

ணில், ஒருநாள் சிவபெருமானின் றிருவடிசேருந் தகையினராய் அளப்பருஞ் சிவஸ்தோத்ரஞ் செய்வார்களோ டெழுந்தருளியிருந்து, நின்மல நிஜானந்த பரிபூரண பரமசிவத்தின் றிருவடி நீழலை இதோ யானடைகிறேனென்று சிரசிற் கைகூப்பியவண்ணம் அக்கதியை யடைந்தனர். அங்கிருந்த யாவரும் ஹர ஹர எனுஞ் சப்தமும், சர்வமங்கள வாத்தியமும் கடலியொலியென முழங்கின. அரசர்பெருமான்பெற்ற பேற்றைக்கண் டதிசயமுற்ற யாவரும் திருவருளை வியந்து பாடின ராடினர் பரமானந்தங்கொண் டாடினர்.

இப்படிச் சோழமஹாராஜா மோக்ஷசாம்பிராச்சிய மடைந்தனரென்பதையும், அவர்சபை இப்பொழுது சுருங்கிற்றென்பதையும் விசாரித் தறிந்துகொண்ட இராமாநுஜன் முதலாயினோர், நமக்கு நல்லகாலம் பிறந்ததென்று சின்னாள்களின்மேல் மேனாடுவிட்டுச் சோணாடு செல்லுமாறு ஆங்காங்கு வதிந்து நடந்து, திருவரங்கமெனுமூரை யடைந்திருந்து, நாளடைவிற் குறுநரிகள் வெளிப்படுமாறு வெளிப்பட்டுத் தம்மதம் போதிக்கத் தொடங்கினகாலத்தும், அஞ்ஞான்றிருந்த சோழபூபதியின் றிருக்கூட்டத்தினராற் பன்முறை பரிபவப்பட்டனர். பின்னர்ச் சில மந்தமதிகளுக்கும், ஒட்டர் வேடர்முதலிய சில கீழ்மக்களுக்கும், குருபரம்பரை கூறுகின்றபடி குமுதவல்லியெனுமொரு பெண்ணைப் புணரு நிமித்தம் திருமங்கையாழ்வானென்பான் இராமாநுஜமதத்திற்கு முற்பட்ட வைணவமதஸ்தரைற்போல ஆகச் சம்மதிப்பார்க்கும் மண்மஞ்சட்குறிதீட்டி அன்னோர் உதவிகொண்டு பிழைக்கும் இராமாநுஜன், குருட்டாழ்வானை நோக்கி ஹே ஆழ்வான்! சிலர் கூறுங்குறைதீர உன்கண்களைக் கண்ணன் தரமாட்டானோ? பேரருளாளனைத் துதியென்றனன். அவனும் அன்னணந் துதித்துநின்று ஏதும் பலிக்கவில்லையேயென்றனன். அதுகேட்ட அநுஜன் நானும் இதோபிரார்த்தித்துள்ளேன், நீ யின்னு மொருமுறை அத்துதியைச் சொல்லென்றனன். அப்படியு மவன்செய்து ஒன்றும் பசையில்லை, இப்படிக்கண்ணிழந்தலைய நான்செய்த பாவம் முன்னையதோ பின்னையதோ அறிகிலேனென்றனன். அங்ஙனமிராமாநுஜன், இஃதடியேனுடைய துஷ்கர்மமேயென்றனன். இங்குரைத்த இருவர்மாற்றத்தையும் உடையவர்சூர்ணவிளக்கம் ப-௩௬-ல்—

"யாரொருவரிட்டுக் கொண்டிருக்கிற திருமண்ணைப்பழித்தேனோ அவ்வபராதத்தாலன்றோ நானிருநயநமற்றேனென்றாரிறே.........கூரத்தாழ்வான்"

என்றும், தே - குருபரம்பரை ப - ககூ - ல் "அடியேன் துஷ்கர்மமன்றோ உமக்கிப்படி வருகைக்கடி"

என்றும் வருவசனங்களும் ஆதரித்தல் காண்க. இவண், குரு சீடனென்பாரிருவரும் பாபகர்மவயப்பட்ட பசுக்களென நாட்டின வாறும் நன்குணர்க. இவ்வாறு பாபிகளாயிருக்கு மிருவரையும் மேன்மைப்படுத்துமாறு அக்குருபரம்பரைக்காரன், முதலிற்செய்த துதியில் வைகுண்டங்காணும் ஞானக்கண் பெற்றேனென்று கூரத்தாழ்வான் கூறினனென்றும், "உடையவரும் அங்ஙன்று அங்கேறப்போவோம் வாரும்" என்றெழுதியபடி அது திருத்தியில்லாமே காஞ்சிபுரம்போந்து மறுபடியும் அத்துதியைச் செய்யும்படி செய்தஞான்று பெருமாள்.—"நம்மையும் உம்மையும் காணுமிடத்து கட்கண்ணாலே காணக்கடவர்" என்றனரென்றும், பெருமாள் உரு அணியென்பவற்றை ஆழ்வான் சுட்டிக்காட்டின னென்றுமெழுதி யுள்ளான். இவ்விடயம் பொய்யெனற்கு.— ஞானக்கண் பெற்றேனெனுஞ் செய்தியில் இராமாநுஜன் திருத்தியில்லாது காஞ்சிக்கழைத்துச்சென்றன னென்பதாகவெழுதிய மூடமும், அங்ஙனம்பெருமாளும், இராமாநுஜனுமே அவனூனக்கண்ணுக்குத் தெரிபவராவரென்பதாக முகத்தில் விழிமணியேயில்லா வெறுங்தொள்ளையுளான் விடயத் தெழுதிய பேயுக்தியும், "இருநயனமற்றேன்" என்று ஆழ்வான் கூறியதாகவுள்ள அச் சூர்ணவிளக்க வாக்கியமும் பிறவுஞ் சாலுஞ் சாலும். பின்னர்க் கண்ணளிக்கும் பெருமாள் முன்னர்க்கண்ணழியாவண்ணங் காவாதிருந்தமை சோழபூபதியின் நியாயத்திற்கும் வன்மைக்கும் அஞ்சியிருந்தமையென்பது ஈண்டமைதிபோலும். சோழமஹாராஜாவின் திக்குவிஜயத்திற் பொறாமை கொண்ட இக் குருபரம்பரைக்காரன், அவரை யிழித்துரைக்கும் வாக்கியங்களோடு தனக்கு வேண்டியபடி சிலவிடயங்களை மறைத்தும் மாற்றியுமெழுதியுள்ளான். இவ்விதச்செய்கை வைணவரென்பார்க்குச் சகஜமென்பது மேலே பெருவரவாக வந்துளது. இது கிடக்க. கண்பெறமுயன்றும் அது சித்தியாமை நோக்கிய எம்பாரென்பான், கண்ணிடந்தப்பிய கண்ணப்பனுக்குக் கண்கொடுத்த காளத்திநாதனை யிகழ்ந்துவிட்டு நாம் இந்த அற்பாதிகாரிகளோடு கூடினமை நந் தலைவிதியேயாகும்; இனி யென்செய்வதென்று வியசனித்திருந்தனன். திருவொற்றியூ ரெல்லையைக் கடப்பதில்லையென்று சபதஞ்செய் தங்கிருந்த ஸ்ரீமத் - சுந்தரமூர்த்திசுவாமிகள்,

திருவாரூர் வீதிவிடங்கப்பெருமானைத் தரிசிக்கவேண்டுமெனும் பேரவாவானே அவ்வெல்லை கடத்தலுஞ் சிவனாரது திருவாணையி னிருபார்வையு மழிந்தமையுணர்ந்த அச்சுவாமிகள், திருவெண்பாக் கத்தையடைந்து, "பிழையுளனபொறுத்திடுவர்" எனுந்திருப்பதி கம்பாடித் திருக்காஞ்சி - ஏகாம்பரநாதரைவணங்கி ஒருகண்ணும், திருவாரூர் - வன்மீகநாதரை யிறைஞ்சி மற்றொருகண்ணும் பெற் றுப் பல அற்புத தேவாரங்களை யருளிச்செய்து இந்நூல் ௬௬ - ம் பக்கத்தி னவின்றபடி திருமால்முதலிய தேவர்யாவரும் தம்மை யெதிர்கொண்டழைக்க வெள்ளையானை மீதாரோகணித்துத் திருக் கைலைக் கெழுந்தருளிய பெருமையும்; இவ்வைணவர், குருபரம் பரை குருட்டுப்பரம்பரையாக இழந்தகண்பெறமாட்டா தன்றே சாதலும், திரிதந்து சாதலுமான சிறுமையும் பொய்யில்புகழும் புத்திநுட்பமு முளோருணர வுள்ளன. இம்மட்டில், திருநீற்றுச் சோழபூபதி திக்குவிஜயசம்பந்த விருத்தாந்தங்களைச் சுருங்கச் சொற்றனம்.

## ௧௪. வைஷ்ணவாசாரிய வைபவபங்கம்.

### இராமாநுஜன்முதலாயினோர்விடயம்.

தெ - குருபரம்பரையில், காஞ்சிப்பதியரசனுடைய பெண்பிள் ளையைப் பிடித்திருந்த பிரமராக்ஷஸு யாதவப்பிரகாசனாலும் போக் கப்படாததா யிருந்தது. அதன் றலைமிசைப் பூதூர் - இராமாநுஜன் றன்காலை வைத்தவுடன் அது போய்விட்டதென்பதும், அது போ முன் பூதூரனை நித்யஸூரிகளிற் றலைவரெனச் சொல்லிற்றென் பது மெழுதப்பட்டுள்ளன. இவை.—வ - குருபரம்பரை ப - ௩௩, ௩௬ - ல் " நித்யஸூரிகளிற் றலைவர் " எனும்வசன மில்லாமைக் கும், " போகக்கடவை யென்றருளிச்செய்ய அப்படியே போய் விட்டது " எனும்வசன மிருத்தற்கும் விரோதமாம். போவெனுஞ் சொற்கேட்டுப் பிரமரக்ஷஸு போயதுண்மையாயினும், அன்ன ணமே கேட்டுப்போதல் பூசாரிமுதலாயினோர் முன்னிலையி லிக்காலத் தூங் காணப்படுதலின் அஃதொரு பெரியோர்வைபவ மாவதன்று. சமணனாயிருந்த விட்டலதேவராயன்மகளைப் பிடித்திருந்தபேய், அப் பூதூரனது பாததீர்த்த புரோக்ஷணத்தாலே ஒழிஇற்றென்பது தெ - குருபரம்பரை ப - ௧௩௫ - ல் உளது. இதுவு முண்மையாயின் மேலெழியாயப்படி பெரியோர்வைபவ மாவதன்று. பேய்முகத்தெறி நீரே பாததீர்த்தமென் றுயர்த்தப்பட்டதென்ற லீண்டியையு. இப்

பேயோட்டிய மகிமை காணா அந்த ராயன், பூதூரானுக்குச் சீடனு யினனென்பது மிங்ஙனுளது. அஃது இப்பக்கத்திற்கு முற்பட்ட கஙஉ - ம் பக்கத்தில் "திருப்பதியிலே யெழுந்தருளி யிருந்து, விட்டலதேவனையும் சிஷ்யனாக்கிக்கொண்டு" என்றதற்கு மாறுகோளாகின்றது. திருப்பதியெனுந் திருவேங்கடத்தில் விட்டலதேவனென்பானொருவன் சீடனானசெய்தி வ-குருபரம்பரையினு மில்லை. இங்குச்சொற்ற பிரமராக்ஷஸ விலகுசெய்தியும், பேய் நீங்குசெய்தியும், சமணர்விடயத்தும் விக்கிரகமழைக்கும் விடயத்துமாக வருமிரண்டுசெய்தியுமே பூதூரான் மகிமையென வரையப்பட்டிருப்பன வன்றி வேறின்று. விக்கிரகவிடயமாவது :—டில்லியிலே துருக்க மன்னன் மகள் விளையாட்டில் வைத்துக்கொண்டிருந்த திருநாராயணபுரத்து இராமப்பிரியனெனும் உற்சவவிக்கிரகத்தை, இராமாநுஜன் ஆங்குச்சென்றிருந்து வருக வருகவென் றழைத்தவுடன் அஃதவன் மடியில் வந்திருந்ததெனுஞ் செய்தி, வ - குருபரம்பரை ப - எஅ - ல் எழுதப்பட்டுளது. அஃதழைக்கப்படாமலே யப்படி வந்திருந்த தென்பதோடு அவ்வரலாறு பல்பேதப்படத் தே - குருபரம்பரை ப - கரு அ - ல்,தெரிக்கப்பட்டுளது.அழைத்தபடி வந்தது மெய்யாங்காலத்தும் க்ஷுத்ரதேவதாசித்தியுள்ளோரும் பல்பொருளழைத்தலின், அது பெரியோர்வைபவ மாவதன்று. மேலைக்காட்டுகளாற் பெரியோர் நீர்மை இராமாநுஜனுழை யிருத்தற்கும் நியாயமின்று. அவ் விட்டலதேவனுக்கு ஆசாரியரான "கஉOOO - க்ஷபணர் ஏக காலத்திலேவந்து" வாதித்தகாலை, பூதூரான் ஒருமண்டபத்திற் றிரைக்குள் கOOO - பணமண்டலமுடைய ஆதிசேடனாயிருந்து பிரத்தியுத்தரஞ்சொல்லி வென்றனனென்பதே அச்சமணர்விடயம். இப்பெற்றி, பூதூரானுக் குளதாயின் அவன், அன்றே சோழபூபதி சபை புக்கு ஒரு கேடுமிலாது வரலாமே. அவ்வாறு செய்யாமையானும், அப்பெருந்திரட்சமணர் ஒருமண்டபத்திற் கூடவும் அவர் செவியெல்லாங்கேட்க ஏககாலத்தில் ஒருவனுரைக்கவு மொல்லாதெனு நியாயத்தானும், தே - குருபரம்பரை ப - கஉஎ,கஉஅ - ல் "அவனை ஜயிக்கப்போகாமல்" "அவனுடைய யுக்தி ப்ரபலமாக, இவரும் அதுக்கு மேலொன்றுந் தோற்றாதபடி நிற்க" என்று வரைந்துள்ள செய்தியின்படி, யஜ்ஞமூர்த்தியெனும் பெயரிய வித்துவானோடு வாதித்து அவனை வெல்லமாட்டாமே நின்ற அப்பூதூரான், பின்பு தன்சுவாமி கனவிற் சொற்றபடி ஆளவந்தான்செய்த மாயா

வாத கண்டனத்தைச்சொல்லி வென்றனனென்ப தேற்படுதலானும், ப - கஙக - ல் "வழிதப்பித் திகைத்துநிற்க......எற்றமிறைப் பானைக் கண்டு.........அவனைத் தண்டனிட" என்று பொறித்தபடி அவன் திருவேங்கடஞ் செல்கையில் வழிவிட்டுத்திகைத்து வழிகாட்டினவனைக் கும்பிட்டமையானும் அவ்வாதிசேடப்பெற்றி வடிகட்டின படிறேயாம். இப்படிற்றிடை, கசுOOO - திருக்கூட்டத்தினர் பரவ நின்ற திருஞானசம்பந்தசுவாமிகள் அOOO - க்ஷபண முனிவரை வென்றன ரென்னுந் திருவருட்செய்தியில் அருமைகொண்டு சOOO - மீக்கொள்ளுமாறு கஉOOO - க்ஷபணரென்றது ஓந்தி தலையெடுப்பை யொக்கும். மேல்விளக்குற்றபடி பொய்யுரையாடல், பிரதிஞ்ஞைவிரோதம் புரிதல், மோசவழியாக நூலபகரித்தல், சிற்றறிவுகொடு பாடியமெழுதல், ஆள்மாறுட்டஞ் செய்தன் முதலிய அகிர்த்திய அஞ்ஞான விலாசங்களும்; தனக்குற்ற இடுக்கணுக்கு ஹேது, துஷ்கர்மமென்றதும்; நோயுற்றுச் செத்ததும் அப்பூதூரனை அனந்தனாகிய சேஷாவதாரமெனும் பொய்வாய்க்குப் பூட்டுமாம். என்னை ? தே - குருபரம்பரை ப - ச - ல் "நித்யாஸங்குசித ஜ்ஞாநராயிருந்துள்ள அநந்த கருட விஷ்வக்ஸேந ப்ரமுகரான நித்யஸூரிகள்" என் றெழுதிக்கொண்டமையின். பூரணாவதார மன்று அமிசமெனின்,—அதுவும் பொருந்தாது. என்னை ? பொற்கட்டியில்வெட்டப்பட்டவையுள் பொன்னேயாகவும், மட்கட்டியிற்பெயர்க்கப்பட்டவையுள் மண்ணேயாகவுங்காணப்படுதலின்: காரணமெப்படியோ காரியமு மப்படியேயென்று அளவைநூல் அளவறுத்திடுதலின். அந்த ஆதிசேடன் வருவனேல், அவனெண்ணப்படி நடக்கு நன்மனைவியன்றோ வந்திருப்பள்: பூதூரனுக்குப் பொருந்தா மனைவி போந்தவாறென்னையெனுங் கடாவுக்கு விடையிறுக்க அச்சுவடியி லொருவரலாறு மின்று. ஈண்டிதுவு முய்த்துணரத்தக்கதே. இவ்வித ஹேதுக்களாற் பூதூரனைச் சேஷாவதாரமென்று எங்கெங்கே யுக்திபண்ணியெழுதப்பட்டசெய்திகளுளவோ அவையெல்லாங் கற்பனைகௌரவமேயென்று களைந்து, அவனைச் சாமானிய ஏழைமனிதனெனவும், பாஷண்ட சிரேஷ்டனெனவு நிறுவி, டடடட டடடட டடடட டம் டம், டடடட டடடட டடடட டம் டம் என்று பறை முழக்கும்படி செய்க.

இம்பர், இராமாநுஜனுக்குள்ள தன்மையே சேஷனுக்குமுள்ளது : அதனா லவன் சேஷனாவனெனின்,— அவன் தீர்வையும்

அவனது ஆசாரியத்துவமுங் கீழ்மையுறுமென்றும், மேற் சொல் லுற்ற தே - குருபரம்பரை ச - ம் பக்கத்தில் அச்சேஷனை வியந் துரைத்தது தவறுமென்றுங் கிண்கிண் கணகண கணில், கிண்கிண் கணகண கணில் எனத் தாளந்தட்டுக.

"லோகத்தைத் திருத்துவதாக எம்பெருமானேடே மார்தட்டி "நின் கண் வேட்கை யெழுவிப்பனே" என்றவா தாமே ஏ! பாவம் பரமே! என்று க்லேசித்து........ ஈச்வர னவதரித்துத் திருத்த வொண்ணாத லோகத்தை நாமோ திருத்தக்கடவோமென்று கையாங்கி.........தாமும் தம்திருவுள்ள முமேயாய், த்ரிகாலஜ்ஞராகையாலே "கலியுங்கெடுங் கண்டுகொண்மின்" என்று உடையவர் திருவவதாரத்தைக் குறித்து அருளிச் செய்கையாலும்"

என்று தே - குருபரம்பரை ப - களஅ - ல் வரையப்பட்ட சொற்கள் இராமாநுஜ னவதரிப்பான் அஞ்ஞான்று கலியிரு ணீங்கு மென்று திரிகாலஞானியாகிய சடகோபன் சொல்லினனெனும் பொருள் பயப்பன வாயின. இச்செய்தியும் அவலமென மேலே நியாயங்கொண்டு களைக. அக் கலிமொழி, திருவாய்மொழியெனுஞ் சுவடியிற் "பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம்—நலியு நரகமு நைந்து நமனுக்கிங் கியாதொன்று மில்லைக்— கலியுங் கெடுங்கண்டு கொண்மின் கடல்வண்ணன் பூதங்கண் மண் மேன்—மலியப் புகுந்திசை பாடியாடி யுழிதரக் கண்டோம்." எனும் யாப்பின்கணுளது. இதனிற் பூதாரன் செய்திகாண ஈஷத்தேனு மிடனின்று. நாமநுபவிக்கவேண்டிய மேலோர் சாபமும் போயிற்று: இக்கலிகாலமும் நம்மை வருத்தாது கெடுமென்று தன்னினத்தார்க் குரைத்தன னென்பதே அம்மொழிக் கேற்புடைப்பொருள். இது, தஹராகாச வஸ்துவென்பது குறிக்குங் குஹனெனுந் திருப்பெயர்க் குரிய எம்பிரானுரைது. திருவடியையன்றி மற்றொன்று விழைந்து பாடா மாண்புவாய்ந்த ஸ்ரீமத் - அருணகிரிநாதசுவாமிகள்—

"நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே."

என்று திருவாய்மலர்ந்தருளிய அமுதவாக்கின் பொருளையே பொருந்துவதாகும். இது விடுத்து 'மற்றொன்று விரித்தல்' எனுங் குற்றத்தின்கண் அப்பொருள் கொண்டமை காண்க. இதனால், நூதனமார்க்க ஸ்தாபனர்த்தம் இக்குற்றமும், 'மாறுகொளக்கூறல்

முதலிய பல்குற்றங்களும் ஆங்கதற்குப்பொருந்த அச் சுவடிக்குப் படிக்கணக்காக வைணவர் உரையெழுதியுளரென்பது மோர்க. ஆழ்வார்செய்யுள் ௪000-ல், திருவாய்மொழி யென்பதையே விசேடமாகக்கொண்டு அப்படிப் பலவுரைகளெழுதுவதற்கும், அதைச் செய்தவனையே மற்றை யாழ்வாரினு முயர்வுளனெனக் கோடற்குங் காரணமென்னையெனின்,—அச்சடகோபனென்பான் நாரணனாலுந் தன்னாலும் இயலாத காரியத்தை இராமாநுஜன் செய்வனென் றருத்தமாமாறு அக் "கலியுங்கெடும்" என்றனனென்பதை வற்புறுத்திக்கொண்டே நாம் பெரியவராய் விடலாமென்று அவ்விராமாநுஜனே முடிவுசெய்த காரியமென்க. இவ்வாசைதான் அவன்கண் மிக்கிருந்ததென்பதை மேலைப்பக்கம் ௧௭அ-ல், திருக்குறுங்குடி நாரணன் "இவ் வாத்மாக்களெல்லாரும் உமக்ககப்பட்டவிரகை நமக்குச் சொல்லவேணும்" என்றபோது "கேட்கும் க்ரமத்திலே கேட்கில் சொல்லுகிறேன்" என்று இராமாநுஜன் இயம்பினனென்ற லெழுதியவிடத்தில், சீடனென அந் நாரணன் செவியில் ஹிதமென்பதை யுபதேசித்த குரு இராமாநுஜனெனல் காணப்படுதலும்; ப-க௬௩-ல் "அவ்விக்ரஹத்தை அவர்களுக்குத் திருவாராதநமாக இரங்கியருளி" எனவரைந்தவாறு பூதூரன், திருநாராயணபுரத்திற் றன்சீடர்க்குத் தனனைப்போலக் கல்லுருச் செய்வித்தீந்து அதனை வணங்கும்படி செய்ததும்; வ-குரு பரம்பரை ப-அ௭-ல் "உடையவர் நியமனப்படி" என வரைந்த செய்தியானே திருவரங்கம், பூதூர், காஞ்சி, கீழைத்திருப்பதி, திருமலை, திருமலைமத்திமுதலிய தலங்களிலும்பூதூரனுடைய உருப்பிரதிஷ்டை யமைத்தமை யவனது வேண்டுகோளே யென்றலும் நிலைபெறுத்தும். இத்திறப் பேராசையுள்ள பூதூரனே தனக்கு நாரணனுஞ் சீடனுயினனென்று படிறு பகர்ந்தனனென்றலும் ஈண்டைக் கேற்புடைத்தாம். இவ்விடயத்தை விரிக்கின் விபரீதம் விஞ்சும். நிற்க. அக் குருபரம்பரைக்காரன்—நம்மா லுலகு திருந்தாதென்பதை யேற்கனவே தெரிந்துகொள்ளும் ஞானமில்லாமே, திருத்துவலென்று தீரம்பேசி வந்தவன் சடகோபனென் றருத்தமாக முதலிற் சிலமொழிகளை யெழுதிக்கொண்டு பின்னர் அவனைத் திரிகாலஞானியென்று தெரித்த பேதைமை சால நகைக்கற் பாற்றே. அச் சடகோபன், ஞானமிலி குழறுபா டுடையோனென்பதை "அடியேன் சிறியஞானத்தன்" "மடவன்னெஞ்சங் காதல்கூற வல்

வினையே னயர்ப்பாய்த் தடவுகின்றேன்" என்பனமுதலிய அவன் சொற்கள் கொண்டே வெள்ளிடைமலையெனத் தெள்ளிதிற் புலப் படுத்திய பொற்பு நாலாயிரப்பிரபந்தவிசாரத்து ௩-ம் அதிகாரம் முதலியனவுட் காண்க. திருக்கோட்டியூர்நம்பி ஒருவர்க்குஞ் சொல லற்கவென் றுபதேசித்த அஷ்டாக்ஷர ரஹஸ்யார்த்தத்தை அடுத்த நாளிற்றானே யாவர்க்குஞ் சொன்னவன் இராமாநுஜனாதலின், அவன் கருணையுடையோனென்பது வைணவர்கூற்று. அது கருணை யன்று; யாவர்க்கும் நாமாசாரியனாக வேண்டுமெனும் ஆசையே யென்பதை அவன் அந்தியகாலத்திற் கூறியகூற்றாக வ-குருபரம் பரை ப-அசா-ல் "இச்சித்தாந்த முங்கள் முகமாக நிலைநிற்கும் படி பெரிய பெருமாள் திருவுள்ளம்பற்றி யிருப்பதால் அதற் கநு குணமாக ஸத்பாத்ரத்தில் விநியோகித்துப்போருங்கள்" என்றதில் ஸத்பாத்ரமென்று வேறுபிரித்த வசனமே காட்டும். இவ்விராமாநு ஜன் பத்மகிரியிலிருந்த பௌத்தர்களை வாதில் வென்று "கற்காணங் [illegible]ணில் அரைப்பித்து" மகிழ்ந்தன னென்பதும் தே-குருபரம் பரை ப-கறுகூ-ற் காணப்படுகின்றது. "அப்படிச்செய்யவேண் டாமென்று" அவர்களைச் "சிஷ்யராக்கி யருளினார்" என்பதே வ-குருபரம்பரை ப-எஈ-ல் உளது. அதனானே நாலைந்து பௌத் தர்களோடு அச்சாமானிய ராமாநுஜன் பேசிப்பார்த்திருப்ப னெனல் ஈண்டமைவுடைமை யாகும். தே-குருபரம்பரை ப-கசo-ல் "திக்விஜயம்பண்ணி" எனுஞ்சொல்—இராமாநுஜன் எல்லாமதங் களையும் வென்று தன்மதந் தாபித்தன னென்பதைக் காட்டுகின் றது. இச்செய்திக்குப் பின்னே சோழபூபதி யழைத்தலுக்கஞ்சிப் பன்னிரண்டு வருடம் மேனாட்டி லிருந்தனனென் றெழுதிக்கொண் டதே யதனைப்பங்கப்படுத்தும். இதற்குப்பின்னே, ஸ்ரீசிதம்பரத்தி லுள்ள வைதிக சைவர்களால் நடுத்தெருவிற் கிடத்தப்பட்ட நா ரண விக்கிரகத்தைப் பெயர்த்தும் அவ்விடத்திற் சேர்ப்பிக்கும் வலியிலாது திருப்பதிக்குத் தூக்கிக்கொண் டோடும் இழவுடையான் இராமாநுஜ னென்பதாகப் ப-கசுரு-ல் "அந்த விழவெல்லாந் தீரும்படி திருப்பதிக் கெழுந்தருளி ஸ்ரீகோவிந்தராஜனை மூலபேர ஸஹிதமாக திருப்ரதிஷ்டையும் பண்ணிவைத்து" என்றெழுதின தும் அதனை யகைத்து முருக்கும். மேலும், அவ் வநுஜனுக்கு அடிமைத்தொழில்புரிந்து சீடனாயிருக்கும் வடுகநம்பியின் பூர்வாஸ்ர மபந்துக்களிற் சிலர்வந்து சிறுபோது தங்கவுற்ற தனதில்லிடையிருந்த

பாண்டங்களை யவனுடைத்தெறிந்துவிட்டு அவ்விடத்தையும் மெழு கினனென்பது ப-௧௭௧-ல் வெளிப்படுதலால், தன்னைச்சார்ந்தா னுறவினரையுந் தன்மதத்தவராகச்செய்யும் மதுகையிலியாயிருந் தோன் அவ் வறுஜனெனினும் ஸ்புடமன்றே. இதுவும், டில்லித் துருக்க மன்னனை வைணவனாக்கவில்லை யெனினும், விண்டுவுக் குத் தக்க தலமான அனந்தசயனத்துக்கோவில் அன்றுதொட் டின்றுகாறும் அவ்வறுஜனது மார்க்கஸம்பந்த மிலாதிருத்தலும், இராமன் பூஜித்த இராமலிங்கம் எஞ்ஞான்றும் நனி மிளிர்ந்து கொண்டிருத்தலும், பிற வேதுக்களும் அந்தத் திக்குவிஜயத்தைப் பொக்குவிஜய மாக்குமன்றே. ஈண்டு, அனைவரு மொருவர்சொ ல்லை யங்கீகரியார்; அதனால் அவ்விஜயமின்றெனல் கூடாதென்ப வெனின்,—நன்றுநவின்றனை. கேட்டி! அற்றேல், ஆடுமாடு மேய்த் துழிதருவோனுந் தன் வாய்க்கடங்கினவரோடு தர்க்கித்துத் தன் மதஸ்தாபனஞ்செய்வுழி யதுவுமொரு திக்குவிஜயமாகும். அவ்வித மிராமாநுஜ திக்குவிஜயமுமாவதி லாக்ஷேபமின்றெனக் கொண் டைக்கோல்பிடித்து, தாதா தெய்தெய் தாதெய் தெய், தாதா தெய் தெய் தாதெய் தெய்தெய் என்று கூத்தாடுக.

ஈண்டுப் பன்மத மிருத்தலிற் றிருநீற்றுச் சோழபூபதி திக்கு விஜயமு மத்தன்மைத்தாம் பிறவெனின்,— அவருடைய காலத்திற் கரந்துகிடந்து பிற்றை வெளிப்பட்டன வவையெனுமாற்று னஃதத் தன்மைத் தாகாதென்க. அன்னணமே யிராமாநுஜ திக்குவிஜயமு மாகாதோவெனுங் கடா மேலெழுந்தக்கால்,—அவ்வடுகநம்பி யுற வினரும், துருக்கமன்னனும், சிதம்பரம் அனந்தசயனம் முதலிய கோவில்களு மவ்வநுஜமார்க்கத்தினே முன்னிருந்தசெய்திகுருபரம் பரையிலின்றென் றதனைப்பங்கப்படுத்தி,பம் பம் பம்மெனப் பரூஉச் சங்க மூதுக. பொய்யின்மூத்துப் புரட்டின்மூத்துச் சிவநிந்தை முத லியவற்றின்மூத்திருந்த இவ்விராமாநுஜனை யதிராஜனென்றும், எம் பெருமானாரென்றும், உடையவரென்றும் வைணவர் கூறுதன் மானச் சைவருங் கூறுதல் கூடாது. எழுதும் விடயத்தும் அற்றே. என்னை? சிவபிரானார் திருப்பெயர் யதிநாதனெனும் மஹரிஷியென் றும், பெருமானென்றும், அவரை வழிபடுதல் உடையவர் பூஜை யென்றும் வழங்கப்படுதலின். தே-குருபரம்பரை ப-௧௧௯-ல் "சங்க சக்ராம்சங்கள் முதலியாண்டான் கூரத்தாழ்வான்" என வுரைந்த நிரலின்படி கூரத்தாழ்வான் சக்ராம்சமென வாவன்.

இதற்கு முரணாக ஆழ்வாராசாரியர்கள்வைபம் ப-கஉக-ல் அவனை "ராமாம்சம்" என்கின்றது. இச்சுவடி ப-கககு-ற் பெரியநம்பியைக் "குமுதாக்ஷாம்சம்" என்கின்றது. இந்த அமிசமும், சக்கரமோ? இராமனோ? அந்த அமிசமுஞ் சிவனடியவராற் றண்டிக்கப்பட்டுக் குவளையிழந்துயிரிழந்ததும், விழியிழந் திடருழந்தது முண்மையின், அமிசங்கூறுதலிற் சிறிதும் வெள்கினாரல்லரே பாஷண்டத்தை நிலைபெறுத்த ஆசைப்பட்டவைணவர்! இவ்விராமன், அவ்விராமாநுஜனெனுஞ் சேடனுக்குச் சீடனாயினனென்றலும் ஆபாஸமன்றே. இவ்வாறு பல சாமானியரை அமிசம் அமிசமென்று தாதச்சுவடிகள் சாற்றும். குருபரம்பரை கூறுமாறு கூரத்தாழ்வானுக்குச் சிஷ்யனாயிருந்த வீரசுந்தரப்பிரமராயனென்பான், பெருமாளுக்குக் கட்டுவிக்கும் மதிலொழுங்கி லகப்பட்ட அவ்வாழ்வானுடைய சிஷ்யனை பிள்ளைப்பிள்ளையாள்வான் வீட்டையிடிக்கும்போழ்து அப்படிச் செய்யற்கவென்று தடுத்து வாதித்தது காரணமாகத் திருவரங்கத்தி லிராவண்ணம் அந்த ராயனாற் றுரத்தப்பட்டுத் திருக்கோட்டியூ ரடைந்திருந்தவனும், அவ்வாழ்வானுக்கு மகனும், எம்பாரென்பானுக்குச் சீடனுமான பராசரபட்டனை அவ்வரங்கத்துப் பெருமாளுக்கு ஸ்வீகாரபுத்ரனென்றும், அவன் மரணதினத்தில் அப்பெருமாளும் நாய்ச்சிமாரும் "இப்போது நமக்குச் செவ்வாய் வக்ரமாய்த்தென்று திருவுள்ளம் நொந்து நம் புத்ரனை யிழந்தோமே! என்று சுருளமுதும் அமுது செய்யாமல் முசித்து" இருந்தார்களென்றும் தே - குருபரம்பரையி லெழுதினமை ஆபாஸத்தினுமாபாஸமாம். இவ்வெழுத்தைக் குருடனுக்கொரு விசேடங் கூறுபாக்கு வற்பட்டதென நிச்சயிக்கவேண்டும். அப்பட்டன்செய்த ஸஹஸ்ரநாமபாஷ்யாதி தாதச்சுவடிகளில் மந்த்ர வ்யாக்யாநமெனும் அஷ்டச்லோகியே "எல்லாருஞ் செய்த மந்த்ர வ்யாக்யானங்களுக்கு முதனூலாயிருக்கும்" என்பது ஆழ்வாராசாரியர்கள்வைபவத்தி லெழுதப்பட்டதாகலின் அவ் வியாக்கியானமெல்லாம் விசேடம் அன்மைகாண்க.

## வேங்கடநாதன் விடயம்.

திருவேங்கடத்துக்கோவிற் பூஜைமணி, அனந்தஸூரியென்பான் மனைவி கர்ப்பத்தையடைந்து பன்னிரண்டு வருடத்தின் மீது பிள்ளையாகப்பிறந்தது. அதுவே வேங்கடநாதனெனும் வேதாந்த தேசிகனென்றும், அதுமுதற் றிருவேங்கடத்திற் கைம்மணி ஸே

விப்பதில்லையென்றும் வ - குருபரம்பரை கூறுகின்றது. ஆதோளி, "அந்த ஸ்ரீ வைஷ்ணவப்பிள்ளை" "திருமணியை அவர் கையில் கொடுக்க, அதை அவர் வாங்கித் தம் தேவியார் கையில் கொடுக்க, அவர் அதை விழுங்கி விட்டார். இப்படியாகக்கண்ட ஸ்வப்னத்தை" என்றபடி திருவேங்கடப் பெருமாள் ஒருசிறுவனைப்போல வந்து அனந்தஸூரியென்பான் கரத்தளித்த மணியை அவன் றன்மனை விக்களிக்க, அவளதை விழுங்கிவிட்டனளென்று அவ்வனந்தஸூரி கனுக்கண்டனனென்பதூஉம் வெளிப்படுகின்றது. இவ்விடயத்தை விசாரிப்பாம். பன்னிருவருட கருப்பம் இக்கலிகால வியற்கைக்கு விரோதமாம். ஆகவே, கனுக்கண்டு வருடம் பன்னொன்றிற்கு மேலே அவள் கருப்பிணியாயினளென்றலே யேயும். அந்தமணி, ஓவியனுற் செய்யப்பட்ட வுயிரில் பொருளேயாகுமாகலின், அஃது உயிருள் பொருளாகாது. ஆகுமெனிற் காரணகாரிய விரோதம்மாம். உயிர் வேறெனின்,—அவ்விவர மாண்டு விளக்கப்படவில்லை. கனுவி லேனும் அவள் காணுப்பொருளை, அவள் விழுங்கினளென்பதூஉம் அசங்கதமாம். சங்கதமாகவெனின்,—மணியை விழுங்கக்கண்ட வுயிர் ஆடூஉ வெனுது மகடூஉ வெனல்வேண்டும். இந்நியாயங்களாற் கண்டாவதார மென்பது சாலாது. இவ்விடய மிவ்வாறிருப்ப, ப - க௦அ - ல் "வித்யாரண்யரும் அதைப்பார்த்து விஷ்ணு கண்டாவதாரத்தை நாம்வெல்ல வல்லேமோவென்று ஈடுபட்டுத் தேசிகரிடத்தில் ப்ரணவராயிருநதார்." என்றெழுதிக்கொண்டது வீண் ஆடம்பரமாம். மஹாவித்வானுகிய வித்யாரண்யர், இப்பாஷண்ட வேங்கடநாதனை மதித்திருக்க நியாயமில்லை. ப - கஉஉ - ல் "முன்பு உடையவரும், பட்டரும் அங்கிருந்த சிலருடைய உபத்ரவத்தினு லே கோயிலைவிட்டுத் தேசாந்தரத்தி லெழுந்தருளினுற் போலே தேசிகரும் குடும்பத்தோடு முதலிகளையுங் கூட்டிக்கொண்டு கோயிலினின்றும் புறப்பட்டு மேனுட்டிலெழுந்தருளி" எனறு வரைந்தபடி கந்தாடை லக்ஷ்மணுசார்யனுடைய சீடக் குழாங்களான சாத்தாதவர்களால் அவமானப் படுத்தப்பட்டு அரங்கம்விட்டோடி மேனுட்டை யடைந்திருந்தவனும், மற்றொருசமயம் ப - கஉச, கஉரு - ஆள்ளபடி திருச்சிராப்பள்ளியிலே துருக்கர்சேனை வந்து வளைந்து "ஸ்ரீ வைஷ்ணவர்களை ஹிம்ஸித்துக்" கொல்கையில் அரங்கத்துக்கோவில் விக்கிரகங்களைப் பெட்டியிலடக்கிக்கொண்டு காட்டு மார்க்கமாகப் போவாரோடு போந்த பராசரபட்டன் பௌத்திர

ஞன சுதரிசனபட்டன் தன்னைக்கண்டு "பெருமாளைக்கூடத் தொடர்ந்து ஸம்ரக்ஷிக்குமதைக் காட்டிலும்" நானெழுதிய "இந்த ச்ருதப்ரகாசிகையைச் சோதித்து ப்ரவர்த்திப்பிக்குமது முக்ய கைங்கர்யம்" என்றும், என் குமாரரான இவ்விரு சிறுவரையு மிரக்ஷித்துக் கொள்ளுமென்றுஞ் சொன்னபடி தானும் அச் சுவடியைப் பெற்று அதனை மண்ணிற்புதைத்துவிட்டு அச்சிறுவர்களோடு சவத்திரளினடுவி லொளித்திருந்து அஸ்தமித்தவுடனே புதைத்த சுவடியையு மெடுத்துக்கொண்டு அச்சிறுவர்களுடன் திரும்பித் திரும்பிப் பார்த்தவண்ணங் காட்டின் வழியாகச்சென்று மேனாடுபுக்குச் சத்தியமங்கலம் முதலிய விடங்களில் வசித்திருந்தவனும் அவ்வேங்கடநாதனே யெனுமாற்றான் அவனும் பண்டிதர்களி லொருவனேயாவன். இவன் விடயமாக வ - குருபரம்பரையி லெழுதப்பட்ட சில அற்பச்சிறப்புகள் நம்பத்தக்கனவல்ல. இவனைத் தென்கலை வைணவரு மிழித்துக்கூறுதல் பின்னேவிளக்கப்படும். மேற்போந்த சுதரிசனபட்டன் விடயமேதும் பின்னே காணப்படாமையால் அவன் துருக்கராற் கொல்லப்பட்டவனே யாதல்வேண்டும்.

## மணவாளமுனி விடயம்.

உலகைத் திருத்தும்படி நாரணனு லேவப்பட்ட அனந்தனெனு மாதிசேடன், ஆழ்வார் திருநகரியில் தாதரண்ணனெனும் பார்ப்பான் மனைவி கர்ப்பத்தை யடைந்து பிள்ளையாகப் பிறந்தனன். அவனே மணவாளமுனி. அவன் சிக்கில்கிடாரத்திலுள்ள தன் மாதுலன்வீட்டில் வளர்ந்து குடும்பியாயிருந்து பின்றைத் திருவரங்கமெனு மூரையடைந்து சடகோபஜீயன் முன்னிலையிற் சன்னியசித்துக்கொண்டு வானமாமலைஜீயன், திருவேங்கடஜீயன், பட்டர்பிரான், கந்தாடையண்ணன், எறும்பியப்பை, அப்பிள்ளை, அப்பிள்ளான், பிரதிவாதி பயங்கரமண்ணனெனும் அஷ்டதிக் கஜங்களுக்கும், தோழப்பன் ரொடக்கமானார்க்குங் குருவா யிருந்தனனெனுஞ் செய்தியை யதீந்த்ரப்ரணவப்ரபாவமெனுந் தென்கலை வைணவச்சுவடி தெரிக்கின்றது. இம்முனியையும் ஆதிசேடனென்பது.— தே - குருபரம்பரை ப - அசு - ல், "அநந்தஃ ப்ரதமம்ரூபம் லக்ஷ்மணச்ச ததஃபரம் |" என்பதாக வரைந்த வசனத்திற்கு அனந்தனுடைய ச - ம் அவதாரங் கலியுகத்தி லொன்றுண்டாகும்: அதுதான் இராமாநுஜனென்று வ-குருபரம்பரையி லெழுதப்பட்ட பொருளுக்கு முரணுக நி - வது அவதாரமாகின்றது. ஈண்டு, ச - வதே

று - வதாயிற்றெனின்,—அனந்தனே இலக்குமணன், இலக்குமண னே பலபத்திரனென்ற ுக்கப்படும்வழி உ, ௩ - பிரிவினைகூறிக் கொண்டது குற்றமாகுமாதலி னதுபொருந்தாதென்க. இவற்றிற்கு வேறாக அனந்தன், திருக்குருகூரிலே திருப்புளியாழ்வாரா யவத ரித்திருந்தன னென்பதென்னை ? கலியுகத்தில் இராமாநுஜாவதார முண்டாகுமென்றது ஒன்றுண்டாகு மென்றதுதானென்னை ? மம் மரே. இராமாநுஜனை அவதாரமென்பதே அபராதமா யிருப்ப, இம்மணவாளனுக்கு அஃதமைவ தியாண்டையதென்க. அவ்வநு ஜன் அந்தியகாலத்திற் சொற்ற கைங்கர்யம் ஆறினுள் "ஸ்ரீபாஷ் யத்தை வாசித்தும் வாசிப்பித்தும் போருகை; அதற்கு யோக்ய தையில்லாவிடில், அருளிச்செயலை ஓதியும் ஓதுவித்தும் போருகை" என்றதற்கு மாறாகப பாஷ்யத்தை யொருமுறைகேட்டுவிட்டு ஆழ் வாரருளிச்செயல்களையே சதா படித்துணர வேண்டுமென்று போ தித்த வொருவனது போதகத்தின்படி நடந்த இம் மணவாளன்ற னெப்படி யவ்வநுஜனுவன்? ஆவனெனின்,—முன்மாற்றம்போலப் பின்மாற்றமும் பயன்படா தொழியுமால். ய - ப்ரபாவம் ப-௪௪-ற் கிடாம்பிநாயனு ரெனபானுக்கு இரகசியமாக மணவாளன் றனது சேடவடிவு காட்டினனென்ப தெழுதப்பட்டது. அது மித்தை யென்பதை, அவனுழை யிவன் பாடியம் படித்திருந்தன னென்ப தும், பிற்கூறப்படு செய்திகளுமே காட்டும். ப - ௬௩ - ற் சிலர் அர் த்தராத்ரியிற் றிருநகரி மடத்திலே தீயிட்டபோது அங்கணிருந்த அம் மணவாளன் யாவருங்காணப் பாம்புருக்கொண்டு புறப்பட்ட னெனுஞ் செய்தியும், ப - எ௫ -ல் மற்றொரு காலத்தில் அவன் சட கோபக்கொற்றியென்பாளை நோக்கி நீ பார்த்தவெனது ஸர்ப்ப ரூபத்தை யொருவர்க்குஞ் சொல்லவேண்டாவென்று கூறினனெ னுஞ் செய்தியு மெழுதப்பட்டன. இவ்விரண்டினுள் முன்னே பல ருங்காணப் பாம்புருவோடு வெளிப்பட்டவனே, பின்னே யவ்வுரு வை யொருவர்க்குஞ் சொல்லற்கவென மறைத்தன னென்றது பொருந்தாமை காண்க. ஆதிசேடப்பெற்றி யவற்குளதாயின், தீ யெரியு மிடத்திற்றானை யொரு தீங்குமின்றி ஸ்ரீமத் - சிவாக்ரயோ கிக ளிருந்தபடி யிருக்கலாமன்றே. அவ்வாறன்மையின் அதுவும் பொருந்தாது. தீச்செய்திமெய்யாங்கானே, ஓலைவேய்ந்த வம்மடத்தி லிருந்து அவனும் வெளிப்பட் டோடினன் : ஒருபாம்பும் வெளிப் பட் டோடிற்றென்பதே பொருந்தும். இப்பசுமை யறியாது பாம்

பாக வெளிப்பட்டன னென்பார்சொற் கேட்டிருந்த அக்கொற்றி யின் மயக்குமனமே அவனைப் பாம்புபோற் காட்டிற்றென்பதூஉம் அச்செய்தி மெய்யாங்காற்பொருந்தும். இஃதனைய செய்தியொன்று ப-உ-ல் வடக்குத் திருவீதிப்பிள்ளை கண்ணுக்கு அவன்மனைவி, ஆடும் பாம்பாகத் தோன்றினளென வருமாற்றானுங் காண்க. ப-ககஅ-ல் அம்மணவாளன் திருப்புல்லாணிக் கேகும்வழியிற் றனக்கு நிழல் வழங்கிய வொரு புளியமரத்தை நோக்குப் யாம் பெற்றபேற்றை நீயும் பெறக்கடவாயென வதனைத்தொட்டபின்பு "அம்மரம் உலர்ந்து" நிற்க உடனிருந்த முதலிகள் கண்டனரென வவனுக்கொரு மகிமை யெழுதப்பட்டது. இத்திறமுடையன நோயான் ஞொள்கிமாளுவன்! அசம்பாவிதம். கொற்றவன்குடி ஸ்ரீமத்-உமாபதிசிவாசாரியர் ; பெற்றான்சாம்பா னென்பார்க்கும், ஒருமுள்ளிச்செடிக்குந் தமது திருவருட்பார்வைகொடு பார்த்தவுடன் அவ்வுயிருடம்பு சாம்பரானபடி அம்மரமு மாயினன்றே அதற்கு முத்தி கொடுத்தென்ற லுண்மையாகும். இவ்விடயத்தை யூகித்துணர்வார், மாலைக்காலத்தில் வாகை மரம்போல இலைகள் சோர மூடிக்கோடல் புளியமரத்தியற்கை யென்பதை யறியாதாரே யம்முதலிகளென்று வஞ்ஞ, அவன்றீண்டியதும் மரம்புலர்ந்ததும் காகதாலீயநியாயமாதல் வேண்டுமென்றுவஞ்ஞ தீர்மானிப்பர் அவ்விடய முண்மையாங்கால்.

ப-ருரு-ல் அம்மணவாளனது நவீனமார்க்கத்திற் சேர்வதற் காகச் சில பிராந்தர்கள் வரூஉம் வரவை விரோதமாகவெண்ணிய ஒருவைணவன் "ஸ்வாமீ! சீக்ரமாக உள்ளே யெழுந்தருள, கந்தாடை அய்யங்கார்கள் கூடிவருகிறார்களாம்" என்ற செய்தியும், அதனை வைணவர்கூட்டத்திலே யிருந்துகேட்ட அந்த மணவாளன் துண்ணெனவெழுந்தோடிப் புறக்கடையி லொளித்தசெய்தியும், ப-எகூ-ல் வைணவனுகவிருந்து பௌத்தனான வொருவன் அரங்கத்தில் வந்து வைணவரை வாதுக்கழைத்தபோது அதற்குப்போகாதிருந்த அம்மணவாளன், வேடலப்பையென்பானைத் தருவித்து அவனைக்கொண்டு வாதியாமலே வாளா போமாறு அவனுக்குச் சொல்லுவித்த செய்தியும், ப-எச-ல் "வெள்ளிப்பெருமலைக் குட்டரான ஜீயருடையபாலின் நீர்மைபோலிருக்கிற விக்ரஹவைலக்ஷண்யத்தைக்கண்டு, பாபவாஸனையாலே அந்யதா சங்கைபண்ணி, ஜீயரை நெடும்போதிருக்கவேண்டா" என்று அரங்கத்துக்கோயிலில் ஆலவட்டஞ் சேவித்துக்கொண்டு நின்ற உத்தமநம்பி சொன்ன

வுடனே அம்மணவாளனு மெழுந்துபோய செய்தியும், இச்செய்தி அம்மணவாளனை வெண்குட்டவுடம்பனெனத் தீர்மானித்தலுங் காணப்படுதலானும்; ஒருபோதேனும் ஆதிசேடமுக மாயிரத்தோ டிருந்து மணவாளன் தன்மதபோதகஞ்செய்தனனென்றல், மேலைச் சுவடியி லில்லாமையானும்; இந்நூல் அச-ம் பக்கத்தில் விளக்கிய படி மிக்க துன்பப்பட்டே அவன் மரித்தமையானும் அவனை, ஆதி சேடனல்லாத பாபாத்மாவேயென்று விழுத்தகுசீரோர் தீர்வை செய்வர். இத் தீர்வையைத் தென்னுசாரியப்பிரபாவ கண்டன வைணவரும், தெ-பிரபாவம் ப-அங-ற் சேஷன் பரமபதத்திற் கருட விஷ்வக் ஸேனுதிகளுக்குங் குருவாகும்போது அச்சேஷாவ தார வரவரமுனிவ ரிந்த விபூதியிலுள்ளவர்கட்குக் குருவாகமாட் டாரோ என்றதைக் கண்டிக்குமிடமான ப-கஅள-ல் "மண வாள மாமுனியானவர் நித்திய சூரிகளுக்கும் குருஎன்பது நிலைத்த போது பேசுவோம்." என்று நன்கு ஒப்புக்கொண்டுளார். இதற்கு யாரென்செய்யலாம்! மணவாளன் அதிட்டமே யிவ்வாறாயிற்று!! இங்ஙீரவனை யதீந்த்ரப்ரணவரென்றும், பெரியஜீயரென்றும், நாயனு ரென்றும் புகறல்கேட்டு மூங்கில்டி மூதேவிதான் மகிழும். வெண் குட்டத்தை மாற்றுவான் மேலைய ப-எச-ல் "திருவநந்தாழ் வானைத் தொட்டுக்காட்டி இவர்கிடீர் ஜீயராகவந் தவதரித்தருளி னுர், அவருடைய நிறம் வெளுப்பு" என்றுபெருமாள் அவ்வுத்தம நம்பிக்குக் கனவிற் சொல்லினனென்று ஒருதந்திரமுமெழுதப்பட் டுளது. அவதாரமென்பது குறித்து அச்சுவடிக்கண் வேறு கனவுச் செய்திமுதலியனவு மெழுதப்பட்டுள்ளன. அவையனைத்தையும் மேலை நியாயத்தானே பொய்யெனக் களைக. அன்றியும், இவன் வெண்ணிறமாகப் பிறந்தனனென்றல், பூதூரன் செந்நிறமாகப் பிறந்தனனென்று தெ-குருபரம்பரை ப-கூஉ-ல் வரைந்ததற்கு முரணு மென்றும் மறுக்க. "ஐயங்கார்" எனுஞ் சொல்லுற்பத்தி யும் மணவாளன் காலத்ததே போலும். அடைமொழியில்லாத "ஆழ்வார்" எனுஞ் சொல்லுற்பத்தி நாதமுனி அல்லது பூதூரன் காலத்ததாகும். ஆழ்தல்=அமிழ்தலென்றுமாற்றுல் நரகாழ்வா ரென்பதூஉம் போதரும். அது, சிவநிந்தகர் நாவில் நலந்தரு சொற் போ லெழுமாறு தெய்வநீதியே யுய்த்ததாதல் வேண்டும். இவனை, ஆள்வார்-ஆழ்வாரென விகாரமாயிற் றெனின்,—வைணவருடைய தமிழ்ப் புத்தகங்களிற் பழமை பாராட்டவுள்ள நாலாயிரப்பிரபந்த

மென்பதில் அச்சொல்லிருப்பின், அது செய்யுள் வழக்கில் வந்ததெனலாம்; இன்மையின் அதுசாலாதென்க. இனைய தமிழ்ச்சொல்லை வான்மீக வியாஸப்ரோக்தங்களிலுள்ள பரதன், அனந்தன், கருடன், பிரகலாதன் முதலிய சொற்களோடு புணர்த்தலும் மாபன்மை காண்க.

## பெரியாழ்வான் விடயம்.

மதுரையில் வல்லபதேவனெனுமொரு பாண்டியன் பரத்துவநிச்சயார்த்த நிமித்தம் வித்யாசுல்கமாகப் பஹு திரவியத்தைத் தோரணத்திலே கிழியாகக் கட்டிவைத்தன னென்பதும், வில்லிபுத்தூர்ப் பெரியாழ்வா னென்பான் சுருதிமுதலிய பிரமாணங்களாலே விஷ்ணுபரத்வ ஸ்தாபனஞ் செய்தவுடன் வளைந்துவந்த அக்கிழியை யறுத்துக்கொண்டன னென்பதும் தே - குருபரம்பரையில் அவ்வாழ்வான் சரித்திரத்திலெழுதப்பட்டன. இவ்வித பரத்வம்—விட்டுணு செய்த ஜைன பௌத்தமத போதனையின் மயங்கி அம்மதத்தாழ்ந்துளோர்மான அப்பாண்டியனு மாயினமையாலோ? விட்டுணுவைப் பசுவென்றும், சிவனைப் பசுபதியென்றுஞ் சுருதியாதி பிரமாணங்கள் பஹுவாகத் தீர்மானிக்கின்றதை யறிந்தவரங்ஙனில்லாமையாலோ சித்திப்பதாயிற்று! அப் பாண்டியனுக்கு விட்டுணுபரத்துவ முடம்பாடாயிற் சிவபெருமா னெழுந்தருளியுள்ள திருவாலவாய்ப் பெருங்கோயில்போல விட்டுணு கோயிலன்றோ ஆண்டமைந்திருக்கும். அவ்வாறமையாமையானும்; செவிநுழை செய்திகளையும், மெய்யும் பொய்யும் விராய விடயங்களோடுள்ள விச்செய்தியையு மியம்புஞ் சுவடிகள், அருள்பெறுக் காலத்தே வியாஸர் விட்டுணுவுக்குப் பரத்துவங்கூறி யவமானப்பட்டனரெனுங் காசிகாண்டத்தை மீறிக்கூறல் கூடாமையானும் மேல் விடயம் பிரமாணமாவதன்று. இதுவேயுமன்றி, வளைந்துவர அறுத்துக்கொண்டனனென்ற செய்தி—வ - குருபரம்பரை ப - கக - ல் அறுதிகூறுதலும் "பொற்கிழி அறுந்து ஆழ்வார்திருவடிக்குச் சமீபத்தில் விழுந்தது" எனவுளது. இப்படி அவ்விடய மிருவகைச் சுவடியினும் பல்பேதமுறுதலின் அஃதொரு வரம்புடையதுமன்று. அன்றி, அஞ்ஞான்று தன் கணங்களோ டாகாயத்திற்றோன்றிய நாரணனை யவ்வாழ்வான் றரிசித்து இப்படி வெளிப்பட்ட "ஸ்ரீமந் நாராயணனுக்கு என்ன தீங்குவருகிறதோ" என்று வியாகுலப்பட்டு அவ்வா றேனும் வாராவண்ணம் பல்லாண்டு பாடினனெனும்

விடயம் உபய குருபரம்பரையினுமுளது. இவ்விடயத்தானே தீங்கி னுட்படு தேவர்களி லொருவனே நாரணனென்பது போதரநாட்டி னவன் அவ்வாழ்வானெனலு மேற்பட்டது. இதனானும் அப் பரத் துவவாசகம் பறந்துபோயிற்றென்க. ஆழ்வாராசாரியர்கள்வைபவ மெனுஞ் சுவடியெழுதினவர்—தீங்கு வாராவண்ணம் பல்லாண்டு பாடினனென்பதி லருவருப்புற் றதனைமறைத்துவிட்டுக் கிழியறுத் தலைக் கண்ணுறுமாறு பிரமேந்திராதி தேவர்கள் ஆகாயத்தில் வந் திருந்தனரென்றும்; அவர்களிற் றேவகுருவானவர் ஆழ்வான் மகி மையை வெளிப்படுத்துமாறு பிராமணனைப்போல வந்துநின்று சில தர்க்கம்புரிந்து பிரமனைச் சர்வவல்லமையுள்ளோ னென்றனன்: ஆழ்வான்—பிரமசிரச்சேதங்கூறிநின்றனன்: மேல், பிராமணன்— ஆவதேற் சிவன் வல்லானென்றனன்: ஆழ்வான்—அச்சிரச்சேதப் பிரஹ்மஹத்தியைக்கூறிநின்றனன்: மேல், பிராமணன்—அது கால தத்துவத்தா னேரிட்ட தென்றனன்: ஆழ்வான்—அத்தத்துவஞ் சடமாகலிற் றானேயியங்கா தென்றனன்: மேல், பிராமணன்— அதனை விளக்குஞ்சூரியன் வல்லானென்றனன்: ஆழ்வான்—அச் சூரியன் நாராயணனுடைய நேத்திரங்களி லொன்றென்றனன்: மேல், பிராமணனொன்றுங்கூற வறியாதிருந்துவிட்டனனென்றும்; பின்றை யவ்வாழ்வான் அச்சபையிலிருந்த சைவர், சமணர், புத்தர், மாயாவாதிகள் முதலியோரையும் வென்றுவிளங்கி விசிஷ்டாத்வை தந் தாபிக்கவே பொற்கிழியறுபட்டு வீழ்ந்ததென்றும் பிதற்றியுள் ளார். இப்படிப் பிதற்றிவிட்டால் வைணவத்தை யாவரும் நம்புவ ரென்பது அவர் கருத்துப்போலும். இது சிறு மகார்க்குஞ் சிரிப் பினை நிகழ்த்துவதொன்றாம். உபய குருபரம்பரையினு மில்லாத இக்கற்பனையோடு பலவுங் கற்பித்தெழுதினவர்; ஆழ்வாராசாரி யர்கள் வைபவச்சுருக்கமே யிப்புத்தகமெனும்படி தலைப்பிற் கீறிக் கொண்டதும், ஆக்ஷேபத்திற் கிடமாயுள்ள பலவற்றுள்ளுஞ் சில வற்றை யொழித்துவிட்ட சூழ்ச்சியுஞ் சால நகைக்கற் பாலன. இவர் தேவகுருவை மூடனாக்கிய குற்றத்திற்கும், ஈற்றிலாழ்வான் காலில் அக்குரு வீழ்ந்து கும்பிட்டுப் போயினரென்ற பாவத்திற் கும், சிவநிந்தைசெய்த அதிபாதகத்திற்குந் தகுதண்டனை பெறு பவரே. இவருடைய அயோக்கியங்களி லொன்றைக் காட்டுதும். சடகோபன் விஷயமாக மதுரைத் தமிழ்ச் சங்கத்தலைவன்—

"ஈயாடுவதோகருடற்கெதிரேயிரவிக்கெதிர்மின்மினியாடுவதோ
நாயோடுவதோவுருமிப்புலிமுன் நரிகேசரிமுன்னடையாடுவதோ
பேயாடுவதோவழகூர்வசிமுன்பெருமானடிசேர்வகுளாபரணன்
ஓராயிரமாமறையின்தமிழிலொருசொற்பொருமோவுலகிற்கவியே."

என்றுரைத்தனனென்பது தே-குருபரம்பரை ப - சுo- லுளது மேலைச்செய்யுட்கண் நரி சிங்கத்தின்முன்னர்ச் செல்லல் கூடுமோ வெனும் பொருள்பயக்கும் உ - ம் அடி மொழிகளை, நரசிங்கத்தின் முன்னே சரபஞ்செல்லுமோவெனும் பொருள்பயக்க "நாயாடுவதோ புலிமுன் சரபம் நரகே சரிமுன் னுறுமோ வீம" என்று அவர் புரட்டிக் கீறினமை காண்க. வைணவமும் வாய்மையோர் கொள்ளும் மதமா! பதிதம், பதிதம்.

'பிரமனை உண்டுபண்ணி அவனுக்கு வேதங்களைக் கொடுத்தருளினவரும், பிரமனாகிய எனக்கும் விஷ்ணுவுக்கும் பிதாவானவரும், திருவடிகளால் ஹரியை ஹரிக்கின்றவரும், விஷ்ணுவை வதஞ்செய்யாமல் உமது பராக்கிரமத்தை மாத்திரங் காட்டியருளுமென்று சர்வ தேவர்களானும் மஹாராத்திரியிற் பின்றொடர்ந்து பிரார்த்திக்கப்பட்டவரும், கிருபையினால் நரசிங்கத்தினது தோலை நகங்களாற் கிழித்துரித்தெடுத்து வஸ்திரமாகத் தரித்துக்கொண்டவரும், மஹாபலமுள்ள வீரபத்ரரானவரும், ஏக ருத்ரராயிருப்பவரும், சர்வாத்மாக்களுஞ் சர்வசித்தியின்பொருட்டுத் தியானிக்கத்தக்கவரும், சந்திர சூரியாக்கினிகளென்னு நேத்திரமுள்ளவரும், சர்வதேவதைகளும் பசுக்களாதலிற் றாம்பசுபதியாய் விளங்குவோருமான அந்த வுருத்திரருக்கு நமஸ்காரம்.' எனும்பொருள் தரத்தக்க—

([illegible] )

"யோப்ரஹ்மாணம் விததாதிதஸ்மை வேதாம்ச்ச ஸர்வாந் ப்ரஹிணோதி சாக்ர்யம் ......மமாபி விஷ்ணோர்ஜநகம்......ஹரிக்ஹரந்தம் பாதாப்யா மநு யாந்திஸுரேச்வராஃ | மாவதீஃ புருஷம் விஷ்ணும் விக்ரமஸ்வ மஹாநிசி | க்ருபயாபகவாந்விஷ்ணும் விததாரநகைஃ கரைஃ | சர்மாம்பரோ மஹாவீரோ

வீரபத்ரோபபூவஹ | ஸ ஏகோ ருத்ரோ த்யேயஸ் ஸர்வேஷாம் ஸர்வஸித்தயே | ......ஸோமஸூர்யாக்நிநேத்ரஃ ......ஸர்வேதேவாஃ பசுதாம வாபுஃ ஸ்வயம் தஸ்மாத் பசுபதிர்பூவ | தஸ்மை ருத்ராய நமோஅஸ்து | ”

எனும் அதர்வணவேத சரபோபநிஷத் வசனங்களை யெடாக் காட்டி அக்கற்பனைச்செய்யுளை யிப்படிப் புரட்டிக் கீறிக்கோடலால் நரசிங்கம் சரபத்திற்கு மேலாதல் யாங்ஙனம்? அப்படியொரு சுருதியில்லையென்று சிவபரத்வமுஞ் சரபோத்கர்ஷமும் இனிது நாட்டி, ஏ! ஏழைமத வைணவர்காள்! இனி யிவ்வித அயோக்கியஞ் செய்யன்மின் செய்யன்மினென்று அன்னார்க்குப் புத்தியும் புகட்டிக் காசியம்பதி விசேடமொன்றுங் கழறுக. அஃதாவது:— காசிப் பதிக்கட் சைவப்பிரசாரகராயிருந்த ஸ்ரீ மஞ்சிதேவரைக் கௌதமாதி மாமுனிவர்களிட்ட சாபங்களிற்பட்டுத் திரிதரு வைணவருட் சிலவர், பரத்துவவாதத்திற் கழைத்தபொழுது அவர் இங்கே நந் தெய்வமா யிருக்கும் விஷ்ணு விக்கிரகத்தையே யிப்பொழுது எழீஇப் போந்து, எம்பிரானாரான விசுவநாதரை வணங்கும்படி செய்வேமென் றுறுதிமொழி முழக்கி, அனைவருங் கண்ணுற வவ் வண்ணமே யதனை வீதிவழி நடக்கச்செய்து தமது பக்ஷத்தைத் தாபித்தருளின ரென்பதே. இவ் விவரத்தினை வசவபுராணம்—

“நீயருச் சிப்போ னெங்க ணித்தனே யாவ னாயி
னீயலர்க் கரங்கொ ளஃக நிமலனா தாமே யாயி
னீயளித் திடுந்தொ ழிற்கென் னெஞ்சிறை கத்தா வாயி
னீயரன் விசுவ நாத னிலயமுன் பணிவா னென்றார்.

தரையினை ரதிச யிப்பச் சங்கர னன்ப ராஞோ
ரரகர வெனக்க ளிப்ப வகந்தைசேர் வாதர் வெள்கி
வெருவியுண் மருண்டு நிற்ப மெய்த்தவர் மஞ்சி தேவர்
வருதியென் றுரைத்த சொல்லை மாதவன் றலைமேற் கொண்டே

அஞ்சியுங் கோயில் விட்டங் கடிபெயர்த் தகன்ற வீதி
விஞ்சிய வெளியிற் சென்று மேதினி மதித்துச் செல்ல
மஞ்சையர் முதலா நல்லோர் மகிழ்ந்துமுன் விரைந்து செல்ல
வஞ்சக சமய வாதர் மயங்கினர் பின்னே செல்ல.

வந்துகோ யிலுட்புகுந்து மாதவன் விசுவ நாதன்
கந்தமார் மலர்த்தாண் முன்னங் காதலிற் பணிந்தங் கின்ன
மிந்தமா நிலத்தோர் காணக் கிடப்பதை யெழுப்ப மாட்டா
ரந்தமால் சமயத் தோர்க ளாதலா லரனே மேலோன்.”

என்று கூறுதலிற்காண்க. மேலுமொரு விசாரணை செய்வாம். கலியுகந்தோன்றிய சஙரு - ம் நாளிற் சூத்திரனைகப் பிறந்த சடகோபன் கரு - வருடங்காறும் பேசாதிருந்து பின்னைப்பேசித் தமிழ்ச் செய்யுள்களைச்செய்து ஙரு - ம் வருடம் வைகுண்டம் புக்கானென்று வ - குருபரம்பரை கூறுகின்றது. அப்படிப் புக்கபின்பு அவனது திருவாய்மொழியெனுஞ்சுவடியிலுள்ள "கண்ணன்கழலிணை" என்ப தெழுதப்பட்ட ஓரோலைத்துண்டு— மதுரைச் சங்கத்தாரும் மூன்னூறு தமிழ்ப்புலவருமேறிய சங்கப்பலகை மீது வைக்கப் பட்டவுடனே அப்பலகை யவரனைவரையுங் கீழே தள்ளிவிட்டு அத்துண்டினைமட்டு மிருக்கும்படி செய்தது. அது கணித்துத்தான் அச் சங்கத்தலைவன் மேற்போந்த "ஈயாடுவதோ" என்றற்றொடக் கத்துச் செய்யுளைக் கூறினனென்றும் தே - குருபரம்பரை கூறுகின்றது. அங்ஙனமாயின், அம்மொழிச் சுவடியும், அம்மொழியிலுள்ள கண்ணனுமே சிரேஷ்டமென்று சங்கத்தா ரொப்பினவராவர். அக் கலி ஙரு - ம் வருடத்திற்குப் பின்பு நிகழ்ந்ததாக வேற்படு மிவ் விடயம்.—வ - குருபரம்பரை கூறுமாறு கலி சஎ - ம் வருடத்திற் பிறந்த பெரியாழ்வான் காலத்தை யொட்டிநிற்றலின் அவ் வல்லப தேவனெனும் பாண்டியனும் அக்காலத்தவனே யாதல்வேண்டும். ஆகவேஅவனும், அஞ்ஞான்றவன் தந்தைசந்ததிகளுளரேல் அவர்களும் அச்சடகோபன் மொழிவழி யேற்பட்ட விட்டுணு பரத்துவத்தை யொப்பினவ ராதல்வேண்டும். அதுவிடுத்து அவன் பரத்துவ நிச்சயார்த்தமாகப் பொற்கிழி கட்டினனென்றுமா றெழுதியது வைணவரது பொய்யையே காட்டிற்று. அப்பெரியாழ்வான், "அலம்பாவெருட்டா" என்றற் றொடக்கத்துப் பதிகத்திலே "கொன்னவில் கூர்வேற் கோனெடு மாறன்றென் கூடற்கோன்—தென்னன் கொண்டாடுந் தென்றிரு மாலிருஞ் சோலையே" என்றெழுதியிருத்தல்கொண்டு அவன் நெடுமாறனெனும் பாண்டியன் காலத்தவனுவனென்பது "தென்னன் கொண்டாடும்" என நிகழ்காலங் குறிக்கப்பட்டதனுனும் வலியுறுமெனச்சில ஐயங்கார்க ளபிப்பிராயப் படுகின்றனர். பாண்டியன் கொண்டாடிய திருமா லிருஞ்சோலையென இறந்தகாலத்தை அஃதேன் குறியாதென்றும்; ஸ்ரீ அருணகிரிநாதசுவாமிகள் "ஆடும் பரிவே லணிசே வலெனப்—பாடும் பணியே பணியா யருள்வாய்—தேடுங் கயமா முகனைச் செருவிற்—சாடுந் தனியா னைசகோ தரனே." எனுந் திருச்செய்யுட்கண், "கயமா முக

ணைச் சாடுந் தனியானை" என வருளிச்செய்தது—கஜமுகாசுரனைக் கஜமுகக் கடவுளான கணபதி கோறல்புரியு ஞான்றே கந்தக்கடவுளைத் துதிக்கும் அந்தச்சுவாமிக ளிருந்தனரென நிகழ்காலங் காட்டுதலுண்டோ? இன்றேயென்றும்; சிவத்துரோக விராமாநுஜ பாடண்டவைணவம் ஏற்படுமுன்னர், அக்கொண்டாடுதல் சைவராய பாண்டியர்க்குமாமென்றும்; அவ்விருஞ்சோலை, குறிஞ்சி நாதனாகிய ஸ்ரீ குமாரபரப்பிரமத்தின் படைவீடுகளி லொன்றாதலின் அதனைத் தரிசித்தற்கு ஆண்டுச்செல்லும் பாண்டியபூபதி யங்குள்ள திருமாலையுங் கொண்டாடுதல் கூடுமென்றும் அவ்வையங்கார்கட்கு அறிவுறுத்துக. நின்றசீர் நெடுமாறநாயனாராகிய அப் பாண்டிய பூபதி, திருஞானசம்பந்த சுவாமிகளின் திருவருட் பெருஞ்செல்வ சிவஞானமுளோ ராகலின் அவர், தெய்வநிச்சயந் தெரிந்துகொள்ளப் பொற்கிழிகட்டிய வல்லபதேவ னெனவாதற் கிடனின்றெனவும்; அந் நெடுமாறனார் காலம் பெரியாழ்வான் காலமாவதின்று, பெரியாழ்வான் காலத்திற்கு முற்காலமேயா மெனவுமோர்க. பாவினங்களிற் சில செய்யுள்களை யெழுதிவைத்த அப்பெரியாழ்வான் அரு-ம் வயதில் மரணமாயின னென்பது வ-குருபரம்பரை ப-உஙு-ல் உளது. இத்திற வேதுக்களானே ஆழ்வான் விஷ்ணு பரத்வங்கூறிக் கிழியறுத்தா னென்பது கிழியுண்டுபோயது காண்க.

## சடகோபன் விடயம்.

இனி, அக் "கண்ணன் கழலிணை" என்பது சங்கப்பலகையேறிற்றென்பதையும் விசாரிப்பாம். இச்செய்தி வ-குருபரம்பரையிலில்லாமையானும், கடைச்சங்கத் தலைவரான நக்கீரனார்—முதலிடைகடையெனு முச்சங்கவிவரமும், பாண்டியர் விவரமுதலியனவும் விளங்க வருளிச்செய்த இறையனாரகப்பொருளுரையிலும் மதுரைத் திருவிளையாடற்புராணத்திலும் அவ்வல்லபதேவன்பெயரில்லாமையானும், அதுவைணவத்திற்கு மாண்பேற்படுமாறு வரைந்த பொய்யென்பது ஸ்புடமாம். இப்படியே குருகூரிலொருபுளியமரத்தடியிலிருந்த சடகோபனுடைய தேஜஸானது, யாத்திரைநிமித்தம் அயோத்தியிலிருந்த மதுரகவியென்பான் விழிக்குப் புலப்பட்டது: அதனை யவனோக்கிக்கொண்டேவந்து சடகோபனைக் கண்டனனெனுமொரு பொய்ச்செய்தியு மவனதுசரித்திரத்தி லெழுதப்பட்டது. அத்தேஜஸ் மதுரகவி கண்ணுக்குமட்டும் இராக்காலந்தோறும் புலப்பட்டதென்பதூஉம், இந்நூல் கககஉ-ம் பக்கத்தி லெடாக்காட்

டப்பட்ட குருபரம்பரைக் கூற்றுனுஞ் சடகோபன் அஞ்ஞானியா யுளனென்பதூஉம் மேல்விடயத்தைப் பொய்ப்படுத்தும். கடைச் சங்கத்தார் காலம் கி. பி. 2 - ம் நூற்றுண்டென்பது சிலப்பதிகார முதலிய சாதனங்கள்கொண்டு முன்னரே பல வித்துவான்களால் வரையறுக்கப்பட்டுள்ளது என்றும்; நம்மாழ்வார், மதுரகவியாழ் வார்காலம் கி. பி. 7 - ம் நூற்றுண்டெனவும், பெரியாழ்வார், அவர் மகள் ஆண்டாள் காலம் அந்த 7 - ம் நூற்றுண்டின் பிற்பகுதியும், 8 - ம் நூற்றுண்டின் முற்பகுதியுமாமெனவும் உய்த்துணர்ந்துகொ ள்க என்றும் மதுரைச் செந்தமிழ்ப்பத்திரிகை 2 - ந் தொகுதியின் க00 - ம் பக்கத்திலும், க0ரு - ம் பக்கத்திலும் மு. இராகவையங்கா ரென்பா ரெழுதியவாற்றுனும் அக் கடைச்சங்கமிருந்து கழிந்த ச00 - வருடங்கட்குப் பிற்பட்டவராகின்றனர் அந்த ஆழ்வார்க ளென்பது மறிக.

## திருமழிசையாழ்வான் விடயம்.

திருவாளனெனும் வேடன்வீட்டில் வளர்ந்த திருமழிசை யாழ்வானது கடாக்ஷத்தாலே ஒருகிழவி குமரியாயினு ளென்பது தே - குருபரம்பரையி லெழுதப்பட்டது. இது, வ - குருபரம்பரையில் அவ்வாழ்வா னுண்டுமீந்த வுணவை யுண்டுகொண்டுவந்தஒருசூத்திர ற்கும் அவனில்லாளுக்கும் பிள்ளையாய்ப்பிறந்த கணிகண்ணனென் பான் பெருமாளுக்கு நித்தியகைங்கரியம் பண்ணுமொரு கிழவி யைக் குமரியாகும்படி யொரு பாட்டாலே யநுக்கிரகித்தருளின னென வேறுபட்டு வருகின்றது. அப் பாட்டுச்செய்தி தெரிந்த பல்லவராயன் " தனக்கும் நித்திய யௌவனம் வரும்படி ஒருகவி சொல்லவேண்டும் " என்ற செவ்வி அக்கணிகண்ணன் " மானிடம் பாடேன் " என்றனனென்பதும் அங்ஙனுளது. இது, மாநுடக் கிழவி விடயமாக முன்னர்க் கவிபாடினனென்றதற்கு முரணுகின் றது. அப்படிப் பாடேனென்றது காரணமாகப் பல்லவன் றனது இராஜ்ஜியத்தைவிட்டுப் போமாறறிவித்தபடி போகத்துணிந்த அக் கணிகண்ணனோடு போகவியைந்த அந்த ஆழ்வான் " கணிகண் ணன் போகின்றான் காமருபூங் கச்சி—மணிவண்ணா நீயிங் கிராதே—துணிவுடனே—செந்நாப் புலவன்யான் செல்கின்றே னீயுமுன் றன்—பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்." எனும் வெண்பாவை யேற்றிப் போங்காலே, அக் கச்சிவெஃகா விஷ்ணுவும் அவன் செல் வழிச்சென்று, பின்னர்ப் பல்லவன் வேண்டுகோளங்கீகரித் தவ்

விருவரும் 'வருஞ்செவ்வி வெஃகாவில் வந்து படுத்துக்கொண்டன னென்பதும் வ - குருபரம்பரையிலுள்ளது. அவ்வெண்பா, அவ்வாழ் வானியற்றியனவாகவுள்ள கூசு - வெண்பாக்களுள்ளுமில்லை. இந்தப் பல்லவன் சைவனென்றும், " இவன் விஷ்ணுவெனில் நாவறுப் பன்" என்றும், இவன் திருமழிசையாழ்வாரை வெருட்ட, அவருங் கும்பகோணஞ் சேர்ந்தாரென்றும் ம - ஸ்ரீநிவாஸையங்காரென்பார் மதுரைச் செந்தமிழ்ப்பத்திரிகை உ - ந் தொகுதியின் களகூ - ம் பக் கத்தில் வரைந்துள்ளாராகலின், அவர்கள் பல்லவன் வேண்டுகோ ளங்கீகரித்துக் கச்சி புக்காரென்றதும், பிறவும் பொய்யாதல் காண்க. வியாக்கிரமூர்ந்துவந்த வொரு கேசரனுக்கு அம்மழிசை யாழ்வான் தன்பெருமையை யுணர்த்துமாறு ஓரிரத்தினச்சட்டை யைச் சிருட்டித்தும், தானணிந்திருந்த துளஸீ பத்மாக்ஷமாலையை நவரத்ந ஹாரமாக்கியுங் காட்டினனென்றும்; மற்றொருகால் அவன் தன்னுடலழுக்கையுங் காதுக்குறும்பியையுங் குளிகையாயுருட்டி, இது கோடாகோடியைப பேதிக்குமென்று கொங்கண ஸித்த ரென்பார் கரத்தளித்தனனென்றும; அதுவுமவ்வண்ணமே செய்த தென்றும் தே - குருபரம்பரை தெரிக்கின்றது. இச்செய்திகள் வ - குருபரம்பரையி லில்லை. அழுக்குங் குறுமபியு மாழ்வான்மாட் டதிகமென்பது அதனையெழுதினவ னெண்ணம் போலும். இவன், அவ் வாழ்வானுக்கு விசேஷ ஞானமிருந்த தென்பதாகச் சில சொற்களையும் பொறித்துளன். அவைகளை, ப - கஅ - ல் "மண் வேண்டி, கல்லி சோதித்தவிடத்தில், திருமண் அகப்படாமல் முசித் துக்கிடக்க" என்று அவ்வாழ்வான்மாட் டஞ்ஞானமேற்றி யெழு திக்கொண்டதே யெற்றுமெற்றும். ப - உஉ - ற் பெரும்புலியூர் யாகசாலைக்க ணிருந்தவர்கள் காணுமாறு அவ்வாழ்வான் தான் பெற்ற விஷ்ணு "ஸாரூப்யத்தைக்" காட்டினனென்பதெழுதப் பட்டது. இவ்விதம் வ - குருபரம்பரையி லின்று. "மார்பிலே தே ஜோமயமான" சக்கிராயுதத்தைக் காண்பித்தனனென்பதே யுண்டு. சக்கிராமிசமெனும் அவ்வாழ்வான் சரிதை இன்னும்பல் பேதப் படுகின்றது. மேல் விடயங்கள் அவனெழுதிவைத்த யாப்புக்களி லும்வெளிப்பட்டில. இவ்விதஹேதுக்களானே மழிசையான்விடய வைபவங்க ளுறுதியாமாறில்லை. சிலவர் இவனைச் சிவவாக்கியரென்ப. அவ்வாறுணர்த்தும் வாக்கியம் உபய குருபரம்பரையினு மின்று. இவன், ஸ்ரீமத் - சிவவாக்கியசுவாமிக ளல்லனென்பதற்காகு கியா

யத்தை நாலாயிரப்பிரபந்தவிசாரத்து அ - வது அதிகாரத்தில்விளக்கி யுள்ளாம். ஆவயிற் காண்க.

அவ்வாழ்வான், துவாபரயுகம் அகூஉகூ௦க - வதான சித்தார்த்தி ஞூ பிறந்து சஎ௦உ - வருடம் இப்பூமியிலிருந்து கும்பகோணத்திற் காலஞ்சென்றன னென்று வ - குருபரம்பரை வழங்குகின்றது. ஆவதேல், அந்த சஎ௦உ - ல், துவாபரயுகத்தைச் சேரவேண்டிய வருடம் க௦கூகூ - நீங்கலாக எஞ்சிடுவருடம் ௲கூ௦௲ - ம் கலியுகத்தவாகும். ஆகவே, திருக்கோளூரிற் பார்ப்பார்குலத்திற் றுவாபரயுகம் அகூ௲அஎகூ - ற் சனனமாகித் தனக்கு கஉக - ம் வயசாகுங் கலியுகத்து ச௲ - வது நாளிற் பிறந்து கசு - வயசாயிருக்குஞ் சடகோபனைத் தரிசித்து அவனைக் குருவாகக்கொண்டவ னெனப்படு மதுரகவியும்; அச் சடகோபனும்; கலி உஅ, சஎ, உஅகூ, ௲ச௲, ௲கூஅ எனும் வருடங்களின் முறையே பிறந்திருந்தவரெனப்படு குலசேகரன், பெரியான், தொண்டரடிப்பொடி, திருப்பாணன், திருமங்கையானெனு மாழ்வார்களுள் யாவனொருவன் அம்மழிசையாழ்வானையேனும், அவ்வாழ்வான் அவர்களு ளொவனையேனுங் கண்டிருக்கவேண்டுமென்பது போதரும். அவ்வகைச்செய்தி யாதுமிலது. அம் மங்கையான் அரங்கத்திற் பன்னாள் மதில்முதலியன கட்டுவோனும், (தெ - குருபரம்பரை " திருமொழியருளிச்செய்து கொண்டு திவ்யதேசங்கள்தோறும் ஸேவித்துக்கொண்டு " என்றபடி) விட்டுணுகோவி லிருக்குமிடந்தோறுஞ் சென்றுவந்தோனுமாவனென்ப தேறப்படுமாற்றான் அவன் அம் மழிசையானைக் கண்டு பேசாதிருக்க நியாயமேயின்று. இம்மங்கையான் ஆயுள் க௦௫-என்றுமாற்றான் அம்மழிசையான், இவனுக்குப்பின்னே ௲க௦௦ - வருடமிருந்தனனென்பது மேற்படுகிறது. இம்மழிசையானும் பாவினத்து ளொன்றாகிய விருத்தம் கஉ௦ - செய்துள்ளான். ஈண்டு விரிக்கப்பட்ட செய்தியொன்றே மழிசையான் சஎ௦உ - வருடமிருந்தன னென்பதையும், அவன் விடயமாயெழுதிய புதுமைகளையும் பொய்ப்படுத்தி வைணவத்தையும் புதைகுழியிற்போட்டுப் புதைத்துவிடுமென்பது புத்திசாலிகட்குப் புலப்படாது போவதன்று. கச்சியெனுங் காஞ்சிப்பதியிலிருந்த பல்லவ அரசர்கள் காலம் கி. பி. 4 - வது நூற்றாண்டிற்கு மேலில்லை யெனுஞ்செய்தி—இந்நூலினிறுதிக்கீட் சேர்க்கப்படும் தென்னாறுகாடு - கெஜட்டியர் 1 - ம் புத்தகம் 2 - ம் அதிகாரம் 31 - ம் பக்கத்து ஆங்கிலமொழியி னறியலாம்.

அவ்வாற்றானும் மழிசையான் கலியுகத்தும் ௲௫௱௲ - வருடமிருந் தனனென்பதற்காய தீர்வை பெரிதும் பழுதுபட்டழிவதாகும். வைணவர்க்கநுகூலமாக நாரணன் குயிற்றியவிடயங்களாகச்சிலவும், கனவிற்கூறிய விடயங்களாகச்சிலவும், அர்ச்சகர்கள் சொன்னசொற்களை அர்ச்சாவதார நாரணன் சொற்களெனக்கொண்ட விடயஞ் சிலவும் உபய குருபரம்பரையிலு முள. அவையற்றையும் மெய்யுணர்வோர் மெய்யெனவங்கீகரியார். அங்கீகரித்தலானும் அவை—இந்நூல் ௫௪ - ம் பக்கத்திற் சொற்ற நியாயத்தை மருவுமன்றி மேலவாகா. குருபரம்பரைகளில் அற்புதங்களென வெழுதப்பட்டவெல்லாம் மேலே வந்துள்ளன. அவற்றுள் ஸ்ரீமத் - சைவசமயாசாரியர்கள் இறந்தாரையெழுப்பும் பெருந்திருவருட் பேரற்புதமன்னவொன்றேனும் வரவில்லை. இதனானும் அவைதிக வைணவத்தின் சிறுமையையும், வைதிக சைவத்தின் பெருமையையு முணரலாம். அவ்வற்புதங்களாவன :—

திருஞானசம்பந்தசுவாமிகள், திருமருகலெனுந் தலத்தி லுயிர் துறந்த வொருவணிகனை யுயிர்த்தெழும்படி "சடையாயெனுமால்" எனுந் திருப்பதிகமும், திருமயிலையி லெரிந்துமீந்த என்பையுஞ் சாம்பரையும் பெண்ணாகும்படி "மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலை" எனுந் திருப்பதிகமும் பாடி யருளினர். திருநாவுக்கரசு சுவாமிகள், திங்களூரின் மரணமான மூத்ததிருநாவுக்கரசெனும்பெயரிய வொருசிறுவனை "ஒன்றுகொ லாமவர் சிந்தை" எனுந் திருப்பதிகம்பாடி யுயிர்ப்பித்தருளினர். ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள், திருப்புக்கொளியூரிற் சில வருடங்களுக்கு முன்னே முதலையால் விழுங்கப்பட்டுப்போய ௫ - வயதுள்ள ஒரு பிராமணச்சிறுவனை யவன் றந்தை தாயர்க் களிப்பான் "எற்றான் மறக்கேன்" எனும் அவிநாசித்திருப்பதிகம்பாடி அம்முதலை வாயினின்றும் அவனை வரச்செய்தருளினர். இச்செய்தி, அத்திருப்பதிகத்து ௪ - ந் திருப்பாட்டில் "கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே" எனவருதலுங்காண்க. இம்மட்டில் வைஷ்ணவாசாரிய வைபவ பங்கமெனும் இவ்வத்தியாயத்தைப் பூர்த்தி செய்தனம்.

## ௧௫. காலப்புரட்டுப்படிமக்கலம்.

மேற்போந்த மழிசையாழ்வான் பிறந்த சித்தார்த்திவருடமான துவாபரயுகம் ௮௬௨௲௱௨ - ற் பொய்கை, பூதன், பேயனெனு

முதலாழ்வார் மூவரும் பிறந்தனரென்றும், இவர்களும் அம்மழிசை யானு மொன்றுகூடி வார்த்தையாடினரென்றும் வ - குருபரம்பரை கூறுகின்றது. இவர்கள் பிறப்பு—துவாபரயுகம் அசுOகூOO - ஆன சித்தார்த்தி வருட மென்பதாகக் கூரேசவிஜயமெனும் பாடண்டச் சுவடி "துவாபரமெண்ணூற் றறுபதாயிரத் தொன்பதி னூறெய்து சித்தார்த்தி" என்று பாயிரத்திற் பகர்கின்றது. இதன்படியாயின், அசுசOOO - வருடங்கொண்ட துவாபரயுகாந்தத்திற் பிறந்திருந்து கலியுகாரம்பத்தில் உத்தரதிசை நோக்கிச்சென்று நற்கதிபுக்க உதிட்டிர சோதரனை அருச்சுனனுற் றகனஞ் செய்யப்பட்ட சரீரபூதனை கிருட்டிணன் முடிவுகாலத்திற்கு கூOகூகூ - வருடங் கட்குமுன்னே யவ்வாழ்வார் பிறந்துள்ளவராவர். குருபரம்பரைப் படியாயின், அவர் கOகூஅ - வருடங்கட்குமுன்னே பிறந்துள்ளவ ராவர். இப்படிப் பல்லாயிரக்கணக்கான புரட்டி லெப்படியாயினும், அவர் தஞ்செய்யுட்கண் அக்கிருட்டிணன் செய்கைகளே வருவித் துத் துதிக்கமாட்டார். துதித்தமையானும், கிருட்டிணனுக்குப் பின் றைத் திருவல்லிக்கேணியி லேற்பட்ட பார்த்தசாரதிகோவில் குறி த்து "ஒருவல்லித் தாமரையா ளொன்றியசீர் மார்பன்—றிருவல் லிக் கேணியான் சென்று" என்று அப் பேயாழ்வான் சொற்றமை யானும், கலியுகத்திலேயே பார்த்தசாரதிஆலய முண்டாயிற்றென் றல் திருஅல்லிக்கேணிமஹாத்மியசங்கிரக மெனுஞ் சுவடியின் கஎ - ம் பக்கத்துழையும் வரைந் திருக்கின்றமையானும், தே - குரு பரம்பரை ப - சு - ல்—

"நாமேபோய் இவர்களை வாரிப் பிடியாகப் பிடித்துக்கொண்டு வரவேணு மென்று, ராமக்ர்ஷ்ணுத்யவதாரமாக அவதரித்துப் படாதனபட்டுத் திருத்தப் பார்த்தவிடத்திலும்" "அவஜ்ஞைபண்ணி எதிரம்புகோப்பாராய்" "அதமமான கதிகளிலே விழுகிற படியைக்கண்டு" "விஸஜாதீயரான நமக்கு இது ஸாத்ய மன்றென்று பார்த்து" "மநுஷ்ய ஸஜாதீயரான ஆழ்வார்களை யிடுவித்து லோகத் தைத் திருத்தியருளவேணுமென்று பார்த்தருளி, ஸ்ரீவத்ஸ கௌஸ்துப வைஜ யந்தீவநமாலைகளையும், ஸ்ரீபூமிநீளைகளையும், ஸ்ரீபஞ்சாயுதாழ்வார்களையும், அநந்த கருட விஷ்வக்ஸேந ப்ரப்ர்திகளையும் பார்த்து நீங்கள்போய் லீலாவிபூதியிலே நாநாவர்ணங்களிலும் அவதரித்து அகிலாத்மோத்தாரணம் பண்ணுங்கோள்"

என்று நாரணன் கூறியபடி அவர்களும் "த்ரமிடபூபாகத்தி லே" பிறந்தார்களெனுஞ்செய்தி காணப்படுகின்றமையானும் அவ் வலியிலாக் கிருட்டிணனுக்குப் பின்னே கலியுகத்தில் அத் திருவல் லிக்கேணி யாலயமேற்பட்ட பிற்றைஞான்றே ஆழ்வாரனைவரும்

பிறந்தனரென்ப தேற்படுதலாற் பெரியாழ்வான் கிழியறுப்புக் கிழியுண்டபடி, இத் துவாபரயுகவுயர்வுந் துவையுண்டபடி காண்க. இப்படிக் காலத்தை யுயர்த்தியெழுதி யவமானப்படச் செய்தது—ஸ்ரீதேவார திருவாசகப் பேராசிரியர்க்கு ஆழ்வாரை முற்பட்டவராகச் செய்யவேண்டுமென்னும் பேராசையேயாகும். இதனை, மதுரைச் சேந்தமிழ்ச்சங்கத்துச் சோபகிருது வருடத்துப் பத்திரிகைத் தொகுதி - உ, பகுதி - ௩ - ல்—

"கர்ணபரம்பரைச் செய்திகளைக் கொண்டு எழுதப்பட்ட சிலநூல்களில் ஆழ்வார்கட்குப் பின்வருமாறு காலநிர்ணயஞ் செய்யப்பட்டுள்ளன." "இங்கே காட்டிய காலவளவுகள், நவீனமுறையிற் சரிதவாராய்ச்சி செய்வார்க்கு, பின்னோர் அதிகமாகப் புனைந்த கற்பனைகளாகத் தோன்றுகின்றன."

என்று மு. இராகவையங்காரா லெழுதப்பட்டது கொண்டு மறிக. அந்தத் தே - குருபரம்பரையில் ஆழ்வார் சரிதைகட் காதாரமாகத் "திவ்யஸூரிசரிதை, திவ்யஸூரிசரிதை" எனச் சில கற்பனை வடமொழிகள் வரையப்பட்டன. அவற்றுள்ளும் அந்த யுக வருடங்களில்லை. ஆழ்வாராசாரியர்கள்வைபவம் ப - கசச - ற் பூதூரன் கஉ0 - ம் வயதான "சகஹு ௲௯ - வதான பிங்களஹு" வைகுண்டம் புக்கன னெனுஞ்செய்தி யெழுதப்பட்டது. இவனுடைய ஜனனகாலம் சகஹு ௯௪0 - ற் பிங்களவருடமென் றுரைப்பியபடியாயின் மேல்வரு பிங்களவரை வயது ௬0 - ஆதல்வேண்டும். அப்போது சகஹு க000 - ஆமேயன்றி க00௯ - ஆகாது. க00௯ - ஆயின் அக்ஷயவருட மாதல்வேண்டும். இங்ஙனம் கஉ0 - வயதிற் கிடனேயில்லை. ௪௭0உ - என மேலேவந்துள்ள மழிசையான் வயது இவ்வைபவம் ப - கஅ - ல் ௪௭00 - என வந்துளது. சடகோபன் ஜனனகாலம் "கலியுகம்பிறந்த ௪௩ - வது நாளான பிரமாதி வருஷம்" என்பது வ - குருபரம்பரை. "கலியுகம் பிறந்த நாற்பத்து மூன்றுநாளான வர்த்தமான பஹுதாந்ய வருஷம்" என்பது தே-குருபரம்பரை. இந்நூலின் கஅ - ம் பக்கத்திலெடாக் காட்டப்பட்டபடி வெண்மண் கண்டகாலம் சகவர்ஷம் க0உக - என்னும் வ - குருபரம்பரை. "சகவர்ஷம் ஆயிரத்திற்குமேல் பன்னிரண்டு" என்னும் தே - குருபரம்பரை—(ப - கருள). இந்நூலின் ககக - ம் பக்கத்தில் விளக்கப்பட்டபடி துருக்கருக்கஞ்சி யோடியொளிக்கும் வைணவராற் றாக்கிக்கொண்டு போகப்பட்ட விக்கிரகங்கள் "சகாப்தம் ஆயிரத்திருநூறு சென்ற வர்த்தமாந பரீதாபிநாம ஸம்வத்ஸரம்

வைசாகமாஸம்" அரங்கத்துக் கோவிலை யடைந்தனவெனுஞ் செய்தி ய - ப்ரபாவம் ப - உள - ல் எழுதப்பட்டது. ஆயின், கஉ0க - ஆன இச் சகாத்தம் பரிதாபிவருடமாகாது: பஹுதான்யவருடமாகும். இது,கலியுகவருடம் சஙஅ0 - ஆம். ஆகவே கலி சஙஎக - ஆன சுக்கிலவருடத்திற்பிறந்து கலி சசகஅ - ஆன நளவருடத்தில் வரதனெனுமொருபுதல்வனைப்பெற்றபின்பு அவ்விக்கிரகங்களோடுஅரங்கத்துக்கோவிலைவிட்டுச் சென்றோன் வேங்கடநாதனெனும் வ-குரு பரம்பரைக்கு இது விரோதமாம். அவ்விரோதம் ஙஅ - வருடத்திற் கதிகமான வித்தியாசமாகும். இங்ஙனம்—இருவகைச் சுவடியில் யாதேனுமொன்று வழுவாகத் தகையின்று. மேலும், மணவாள முனியென்பான் " கலியுகம்பிறந்து நாலாயிரத்து முந்நூற்று எழுபத்தொரு வருஷத்திற்குப்பின்பு ஸாதாரணவருஷம் ஐப்பசிமாஸம்" பிறந்தனனென்பதும், இவனது விவாஹ ஸமீபகாலத்திற்றான் அவ்விக்கிரகங்க ளரங்கத்துக்கோவிலை யடைந்தனவென்பதும் ய - ப்ரபாவம் ப - உரு, உள - ல் எழுதப்பட்டமையின், இவன் அவ் வேங்கடநாதன் காலத்தானேயாதல்வேண்டும். அவ்விதசரிதையோ இல்லை. விக்கிரகங்க ளரங்கமடைந்தனவென்பதாக வெழுதிய காலத்திற்கியையவே ஜனனகாலத்தைக் கலி சஙஎஉ - ம் வருடமென வெழுதிக்கொண்ட பேயுக்தியும் ஈண்டுப்புலப்படுகின்றது. என்னை? ஜனனம் அவ்வருடமென வேற்படவில்லையாகலின். விவரம்:—வாக்கியபஞ்சாங்கப்படி நிகழும் கலி ரு00அ - ஆன இப்பராபவ வருடத்திலிருந்து அந்த சஙஎஉ - ம் வருடங்காறுங் கழித்துப்பார்க்க அச் சாதாரண(ஆ) ஏற்படாது பிரமோதூத (ஆ) ஏற்படுகின்றது. சாதாரணவருடங்காறுங் கழித்துப்பார்க்க சஙஎஉ - ஏற்படாது சசஎஉ - ஏற்படுகின்றது. இஃதாவதேல், விக்கிரகங்க ளரங்கத்தையடைந்து ககக - வருடங்கட்குப்பின் மணவாளன் ஜனனவருடம் ஏற்படுதலின் எண்வடிவிலா தெழுத்துவடிவிற் றெளிவாக வெழுதப்பட்ட அச் சனன விவாஹஸமயம் பழுதுபட்டொழியும். இவ்வா றலக்கணுறு காலத்திற்றான் பெரியபெருமா ளுத்தரவின்படி அனந்தன் மணவாளமுனியாக வவதரித்தனன்! பரிதாபம்! பரிதாபம்!! அவ்வக் காலங்களி னேழிலறிந்தாராற் றீட்டப்படு மெய்ச்செய்திகள் மதிக்கப்படுமாறு சிற்சில வெழுதப்பட்டனவாகி, ஆயுங்காலைப் பற்பல வழுக்க ளுள்ளனவாகியொழியு மிச்சுவடிகளைப்படித்துச் சன்மார்க்கசைவத்தைத் தூஷித்துழிதரும் மந்தமதிகளை யெந்த மேதாவியர்

மதிப்பர்! மதியார், மதியார். நுனித்தமதிச் சிறுராலும் அல்லவை யெனக் கடாசி விடப்படுவன வக் கறைச்சுவடிக ளென்க.

## கசு. தென்கலையாரென்பார் வடகலைவைணவ முடியையும், வடகலையாரென்பார் தென்கலை வைணவமுடியையும் பொய்யெனல்.

---

ஆழ்வாராசாரியர்கள்வைபவம் ப - கசுரு - முதல் கசுக - வரை—பெரியவாச்சான்பிள்ளை யென்பான் அரங்கத்துப்பெருமாள் சந்நிதியில் வேங்கடநாதராகிய "தூப்பில் பிள்ளையென்பவர் பூர்வாசார்ய ஸம்ப்ரதாயத்துக்கு விரோதமாக நூதனவழி யேற்படுத்திக் கொண்டு இதனை உபாஸனையால் பெற்றேனென்று செருக்கி அபசாரப்பட்டு அதனையே ப்ரவர்த்திப்பித்துக் கொண்டிருக்கின்றார். தேவரீரதனைத் தவிர்ப்பித்தருளவேண்டும்" என்று தெரிவித்துக் கொண்டதை யங்கீகரித்த பெருமாளும் தனதுகோவிலிற் புகுவாரோடு புகப்போந்த வேங்கடநாதனை நீ புகலொண்ணுதென்று கனவிற்றடுத்தது கருதி வியசனித்த வவ்வேங்கடநாதன், அவ்வாச்சான்பிள்ளை பாடே கண்ட கனவைச் சொல்லினனென்பதூஉம்; அதுகேட்ட வன்னோன் "இதரமத நிரஸனமும் பூர்வாசார்ய ஸம்ப்ரதாயபரிபாலனமும் ப்ரயோஜன மாக்காமல் பூர்வாசார்ய ஸம்ப்ரதாய ஸித்தமான அர்த்தங்களைக்கண்டித்து நூதனமாக ப்ரத்யர்த்தங்களை ப்ரவர்த்திப்பிக்கின்றீர். இது மஹா அபசார மாதலால் பெரியபெருமாள் திருவுள்ளத்துக்கு உகப்பில்லாமலிருக்கின்றது" என்றனனென்பதூஉம்; அதுகேட்ட வேங்கடநாதன், சில செப்பியவற்றொன்றுஞ் சால்பிற்றுகாமை நோக்குபு "வ்யாக்யானங்களையெல்லாம் ஆழ்வாருடைய ப்ரத்யக்ஷமாகவந்த உபதேச பரம்பரையென்று அறியாமற் போய்விட்டேன்" இப்பொழுது "உண்மையறிந்தேனென்று" தான் "பண்ணின நூதனவழியான க்ரந்தங்களை" அவ்வாச்சான்பிள்ளை முன்னேவைத்து "அங்குள்ளவர்களை நோக்கி இனியிந்தக்ரந்தங்களை யாவரும் ப்ரவர்த்திப்பிக்கவேண்டாமென்று திருவாணையிட்டு அது வரையில் தேசாந்தரங்களில் வழங்கிய ரஹஸ்யார்த்தங்களைக் குறித்துத்" தன்னைத்தானே "நொந்துகொண்டு பெரியவாச்சான் பிள்ளையை ஆச்ரயித்" தான் என்பதூஉ மெழுதப்பட்டன. இதற்கு விரோதமாக—

வ - குருபரம்பரை ப - கoஎ, கoஅ - ல், பெரியவாச்சான் பிள்ளை சீடராதுபக்ஷத்தைக் கண்டித்துத் தனதுபக்ஷத்தை நாட்டிய வேங்கடநாதனை வணங்கும் அவ்வாச்சான்பிள்ளை அம்முடிபுகேட்டு "உகந்தருளி தம் சிஷ்யர்களைப் பார்த்து தூப்புற்பிள்ளை ப்ரபாவத்தைக் கண்டீர்களோவென்ன, அவர்களும் ஆச்சரியப்பட்டு க்ஷாமணம் பண்ணிக்கொண்டு" வேங்கடநாதன் பாதத்திலே "ப்ரணவராயிருந்தார்கள்" எனுஞ்செய்தி யெழுதப்பட்டது.

ஆழ்வாராசாரியர்கள் வைபவம் ப - களஉ, களங - ற் பிள்ளை லோகாசாரிய னெழுதிய வசனபூஷண ஸ்தாபனார்த்தமாக அவனுடையதம்பி அழகிய மணவாளப்பெருமாள் நயினாரெழுதிய ஆசார்ய ஹ்ருதயமெனுஞ் சுவடி விஷயத்தில் அந்நயினார்க்கும் வேங்கடநாதனுக்குந் தர்க்கமுண்டாயகாலை அரங்கத்துப் பெருமாள் அச் சுவடியையே யங்கீகரித்தமையால் வேங்கடநாதன் தோல்வித்தானமுற்றுத் தான் "ப்ரதிஜ்ஞை பண்ணினபடி நம்பெருமாள் ஸேவையை விட்டுத் தேசாந்தரம்" சென்றனனென்ப தெழுதப்பட்டது. இச் செய்தி—ய - ப்ரபாவம் ப - அ, கூ, கO - ல் முப்பத்தாறாயிரப்படியினர்த்தத்தைக் கூட்டிப் பெருக்கிக்கூறும் அச்சுவடி குற்றமுடைத்தென்பதாக வதனையொழிக்கும்படி சிலர் பெருமாளுக் குரைத்தனர்: "அத்தைக்கேட்ட பெருமாளுஞ் சீறி" அதுசெய்தானை யர்ச்சகன் வாயிலாக நோக்கி அப்படிச் செய்ததென்னென்று கடாவியபோது அவனுமதனைப் படித்துக்காட்டின னென்றும்; அதுசெவிக்கொண்ட (அவ்வஞ்ஞானப்) பெருமாள் "இதுவும் நாம் செய்ததொன்றன்றோ என்று கோள் சொன்னவர்களை வாரியடித்துத் தள்ளிவிட்டு" அந்நயினாரை நன்கு மதித்தனுப்பினனென்று மெழுதப்பட்டுளது. இதற்கு நேர் விரோதமாக—

வ - குருபரம்பரை ப - ககஎ, ககஅ - ற் பொறாமையினால் தானெழுதிய ஆசார்யஹ்ருதயமென்பதே பூர்வாசார்யர் கருத்தென்று வாதிக்க வந்தவனே அந்நயினாரென்பா னென்பதூஉம்; நாராயணனது "நிர்ஹேதுக க்ருபை"யினா லுண்டாகும் பரமபுருஷார்த்தத்திற்குப் பிரபத்தி யுபாயமன்றென்பதை யச்சுவடியிலிருந்தெடுத்து, அதனை "வெகுவாய் உபந்யஸித்து" நின்றன னென்பதூஉம்; அது கேட்டவேங்கடநாதன் அக்கிருபை "ஸஹேதுகம்" என்று "பரக்க உபந்யஸித்" தன னென்பதூஉம்; அதுகேட்ட நயினாரென்பான் "மேலொன்றுஞ் சொல்ல விரகில்லாமையாலே தலையிறங்கி" நின்றன

னென்பதூஉம்; பிள்ளைலோகாசாரியனும் வேங்கடநாதன் றீர்வை யை யொப்பின னென்பதூஉம்; பின்றை அச்சுவடிக்காரன் முதலி ஞோர் வேங்கடநாதன் பாதத்திலே "ஒருபடி ப்ரணவராயிருந்தார் கள்" என்பதூஉ மெழுதப்பட்டுள்ளன. ப - கஙக, கஙஉ - ல், அரங்கநாயகன் "நம்மிராமாநுஜ ஸித்தாந்தமாகிற பயிரைக் களை யெடுத்து விளைப்பித்த நம் வேதாந்ததேசிகர் விஷயமான 'ராமாநுஜ தயாபாத்ரம்' என்கிற ச்லோகத்தை யநுஸந்தித்து 'லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்' முதலாக ப்ரபந்தாநுஸந்தானம் பண்ணக்கடவ தென்று அர்ச்சகமுகமாயருளிச் செய்தான்" அது தருமென்று அர்ச்சகமுகமாய்ச் சொற்ற அரங்கநாயகி சம்மதப்படி யவள் சந் நிதிமுன்னர் வேங்கடநாதன் காலக்ஷேபஞ் செய்துகொண்டிருந்தன னெனுஞ் செய்தியு மெழுதப்பட்டுளது. இப்படியொழிந்த அந்த வசனபூஷணத்திற்கு மணவாளமுனி யென்பானும் வியாக்கியானஞ் செய்துள்ளான். அப்பூஷணமே தென்கலை வைணவர்க்கு இரகசிய முக்கியமாயுள்ளது.

ய - ப்ரபாவம் ப - கூடு, கூசு, கூஎ - ல், அரங்கத்துமால் நமக்குத் "த்ராவிடவேதமான நாலாயிரம் திவ்யப்ரபந்த வ்யாக்யாநங்களைக் கேட்டருள அபிநிவேசமாயிருக்கிறது" என்று மணவாள முனி யென்பானை யழைப்பித்துத் தான்சீடனு யமர்ந்து, அவன் சொல் லுந் திருவாய்மொழிப்பொருளான ஈடு முப்பத்தாறுயிரப்படியை ஒருவருடங்காறுங் கேட்டு மகிழ்ந்தனனென்பதும்; ப - கOசு-ல்—

"அர்ச்சகபுத்ரராய் ரங்கநாயகமென்கிற பெயருடையரான அஞ்சுவய ஸுள்ளவர் மேலே பெருமாள் ஆவேசித்து அருளிச்செய்தபடியையும், அந்தப் பிள்ளையைக்கொண்டு வாழித்திருநாம மவதரிப்பித்தபடியையும், ப்ரபந்தா நுஸந்தாநகாலத்திலே ஆதியிலே இத்தனியனையும் ப்ரபந்தம் சாற்றினுல் இந்த வாழித்திருநாமத்தையும் அநுஸந்திக்கும்படி"

என்றும், ப - கூஅ - ல் அந்தப்பிள்ளை "தமிழிலே அதிசதுர ராகையாலே" என்றும் எழுதியபடி அங்ஙனம் அம்மால், ரு - வய துள்ள சிறுவன் மீதாவேசித்திருந்து "ஸ்ரீ சைலேச தயாபாத்ரம்" எனுந்தனியனை அம்மணவாளன் விஷயமாக வருளிச்செய்த பின்னர் வாழித்திருநாமமாக "வாழி திருவாய் மொழிப்பிள்ளை" என்றற் றொடக்கத்து வெண்பாவையும், "செய்ய தாமரைத் தாளிணை வாழி யே" என்றற்றொடக்கத்துச் செய்யுளையும், "அடியார்கள் வாழ வரங்க நகர்வாழச்—சடகோபன் றண்டமிழ்நூல் வாழக்—கடல்

சூழ்ந்த—மன்னுலகம் வாழ மணவாள மாமுனியே—இன்னமொரு நூற்றாண் டிரும்." எனும் வெண்பாவையுஞ் சொன்னனென்பது மெழுதப்பட்டுள்ளன. இச்செய்திகட்கு விரோதமாக—

வ - குருபரம்பரை ப - கசஎ, கசஅ, கசகூ - ல் மணவாளமுனி யென்பான் "சிஷ்யர்களோடே முப்பத்தாறாயிரப்படி காலக்ஷேபம் பண்ணிக்கொண்டிருக்க" அப்பொழுது "அங்கங்கேவரும் பாஷ்ய விஷயங்கள்" "நன்றாய்த் தெரியாமல்" மயங்கின அவர்களை அவ் னேக்கித் தூப்புற்பிள்ளைகுமாரரான வரதாசாரியருடைய சீடரா யிருக்கும் "ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் ஸந்நிதியில் (நீங்கள் விரும்பும் பாஷ்யத்தை) அதிகரியுங்கள்" என்ற நியமனப் படி அவர்களுஞ் செய்துகொண்ட பின்பு, எறும்பியப்பா வென் பான் தன்குருவான மணவாளமுனி செய்யு மருத்தத்தைப் புகழ் ந்து வரதாசாரியன் செய்யுமருத்தத்தை யிகழவும், அப்பயங்கர மண்ணன் தன்னுசாரிய னருத்தத்தைப் புகழ்ந்து மணவாள னருத் தத்தை யிகழவுநேர்ந்த கலகநிவாரணார்த்தம், அப்பயங்கரமண்ணன் அரங்கத்துமால் சந்நிதியினின்று "அடியேன் சொல்லுகிற அர்த் தம் பொய்யாகில் பெருமாள் அடியேனைச் சிக்ஷிக்கக்கடவர் இல்லா விடில் க்ருபைசெய் தருளக்கடவர்" என்றலும், "அதைப் பெரிய பெருமாள்கேட்டு உகந்து அந்தத்தூஷகர் முன்பாகவே யதார்த்தத் தை யறுதியிட்ட அண்ணனுக்குத் திருமாலை முதலான வரிசைகளை ப்ரஸாதித்தருளி"னதை அம்மணவாளனுந் தெரிந்து "எறும்பியப் பாவை மிகவும் நொந்து தேசிகர் ஸந்நிதியில்போய் அபராதக்ஷாப ணம்செய்து" கொண்டனனென்ப தெழுதப்பட்டுள்ளது. இதனால், அந்தத் தனியனென்பதைப் பதரிகாச்ரம நாராயணன் அயோத்தி இராமாநுஜனுக்குக் கனவிற் சொல்லினனென்றும், நாரணன் மற் றொருவனுக்குங் கனவி லோதினனென்றும், அழகர்மலை நாரண னங்கீகரித்தனனென்றும் பிதற்றுதல் தொலைந்தபடி பிள்ளைலோ காசாரி யென்பான் பிதா வடக்குத்திருவீதிப்பிள்ளை வரைந்துவை த்த முப்பத்தாறாயிரப்படியுந் தொலைந்தபடி காண்க. அன்றியும்—

அம் மணவாளன் விஷயமாக அரங்கத்துமால் ஆவேசித்துச் சொல்லியனவாக வெழுதப்பட்ட அப்பாட்டுக்களில் 'அடியார்கள் வாழ' என்பதை முதற்கட்கொண்டுள்ள "மணவாளமாமுனியே— இன்னமொரு நூற்றாண் டிரும்" என்றதுதானே, வேங்கடநாதன்

விடயமாக வேறுபட்ட வாழித்திருநாம மென்பதில் "வேதாந்த தேசிகனே யின்னமொரு நூற்றாண் டிரும்" என்று பெயர்மாறுற வ - குருபரம்பரை ப - கநஉ - ல் வருவதையும், அம்மணவாளன் பெயர்கொண்டு ஈண்டுமுளைத்த 'அடியார்கள்வாழ' என்றற்றொடக்கத்து வெண்பாவையே, இதன்முன் அவன் ஸங்யவிக்து மடம்புக்கது கணித்து அவணின்ற வைணவர்கள்சொற்று மங்களாசாஸநம் பண்ணி, அவனை வந்தித்தனரென்று ய - ப்ரபாவம் ப - சசு - ல் எழுதி யிருப்பதையும் உய்த்துணர்வார்க்கு அத்தனியனென்பது முதலியன பெருமாள் வாக்கல்லவென்பது புலப்படுவதே. அன்றியும், அவ்வெண்பாவில் 'இன்னமொரு நூற்றாண் டிரும்' என்பது இன்றுவரை க00 - வருடமிருந்த நீர் இதன்மேலும் க00 - வருடமிருப்பீராகவென் றாசீர்வதித்ததைக் காட்டுமாற்றானும் அப்பொய் வலியுறுத்தப்படுகின்றது. என்னை? ப - கங0 - ல்—

"ஆசிலாதமணவாளமாமுனியண்ணல்பூமியுறுவைப்பசியிற்றிருமூலம்
தேசநாளதுவந்தந்தருள்செய்தநந்திருவாய்மொழிப்பிள்ளைதா
ஸ்ரீசஞகியெழுபத்துமூவாண்டெவ்வுயிர்களையுமுய்வித்துவாழ்ந்தனன்
மாசிமால்பக்கத்துவாதசிமாமணிமண்டபத்தெய்தினன்வாழியே."

என்று வரையப்பட்ட வழூஉச்செய்யுளின்படி அம்மணவாளன் ஆயுள் எங - வருடமாமாற்றா னென்க. இங்ஙன், முன்னேயொரு க00 - வருட மிருந்தனனெனல் அச்செய்யுளின் கருத்தன்றெனக் கலுழ்ந்தாலும், பின்னுரைத்த க00 - வருடங்காறும் அவனிராமையானே பெருமா ளாசீர்வதித்ததென்றது வாளா போயிற்றெனல் வர்ஜிக்கப்படாததாம். என்னை? ப - க0சு, க0எ - ல் "நல்லதோர் பரிதாபி வருடந் தன்னில்" என்றும், "ஆனந்த வருடத்திற் கீழ்மை யாண்டில்" என்றுங் கீட்டப்பட்ட செய்யுட்கிளவிகளின்படி அவ்வியாக்கியானங்கேட்ட வொருவருடம், இவ்விரண்டுவருடங்களினிடையி லுள்ளதாகும்: இது—அம்மணவாளனது ஜனனம் சாதாரணவருடமெனல்மெய்யாங்கால் சுஉ - ம்வயதின் மேற்பட்டதாதல் வேண்டும்: ஆகவே எங - வருடமிருந்தவவன், அவ்வாசீர்வாதத்தின் பின் ஏறக்குறையப் க0-வருடந்தாணிருந்தனனென்பது பெறப்படுமாகலின். அற்றேல், அவ் வாவேசக்கூற் றென்னையோவெனின்,— அம்மணவாளன்சீடர்க ளேற்கனவேஉண்டுபண்ணிய அத்தனியனென்பது முதலியவற்றை யன்னோர் சூழ்ச்சிப்படி பாடஞ்செய்துகொண்ட அவ் வர்ச்சகன்மகன் அவ் வியாக்கியானமுடிவில் ஆவேசங்

கொண்டான்போ லாடிச் சொற்றது அதுவென்பதே மலைவற்ற தென்க. இங்ஙடு—ஆழ்வாராசாரியர்கள்வைபவம் ப-கககூக-ல் "சாத்து முறைக்குமுந்தியதினம் கந்தாடையண்ணனும் வானமாமலை ஜீயரும் பரவஸ்துபட்டர்பிரான் ஜீயரும் தம்முட்கலந்துகொண்டு பெரிய ஜீயர்விஷயமாக இருவரிரண்டடியும் ஒருவரிரண்டடியுமாக மூவரும் நாலடியான ஓர்தனியனைச் செய்து அதிரஹஸ்யமாக மனதில்வை த்து" என்று கூறப்பட்ட கிளவிகளினுங் கிரகிக்கப்படும். செய்யுண் மூன்றில் முன்னையது மடத்துப்பிள்ளான் செய்ததென்றும், பின்னையவை பிரதிவாதிபயங்கரமண்ணன் செய்தவை யென்றும் நாலாயிரப்பிரபந்தத்தில் வைக்கப்பட்ட சாற்றுமுறை யென்பதி லெழுதியவாறுங் காண்க. அர்ச்சகன்மகனைத் 'தமிழில் அதிசதுரர்' என்றெழுதிக்கொண்டமையானே அவன், ஐயாட்டைச் சிறுவ னல்லாத மீக்கொள் பிராயமுடையனே யாவன். ஆவேசக்கூற்றுத் தமதுபக்க நிச்சயத்திற்கோ ரிழுக்காமென்றெண்ணிய ஆழ்வா ராசாரியவைபவக்காரர்—அங்ஙனம் நாரணனேயொரு சிறுவனைப் போல வந்து தனியனைக்கூறி மறைந்துபோயின னென்பதாக வெ ழுதியுள்ளார். இவர், ஒருபொய்யை மெய்யாக்கப் பலபொய்களைப் புனைபவரென்பது மேலே காட்டப்பட்டது.

இவ்வாற்றானே, சிவத்துரோகமாகவு மமைக்கப்பட்ட பாட ண்டவைணவம் பல்பேதப்பட்டு,அவை ஒன்றையொன்று மறுத்துக் கொண்டு கிடக்கவு முணர்வாருணர்ந் தொழிக்கவுஞ் செய்வித்த தரு மதேவதையைப் புகழ்ந்து, வடகலை தென்கலையெனும் இருகூற்று வைணவசித்தாந்தமும் முழுப்பொய்யென்று முளையடிக்கும் வீறு பாடுறல் சதாசார சைவப்பெருந் தகையினர் கடப்பாடேயாம். " " இவ்விதவடையாள மிடப்பெற்றவற்று ளடங்கிய சொற்கள் அவ்வச் சுவடிக்கண்ணவே யுள. போந்த குருபரம்பரை முதலியன வும், யதீந்த்ரப்ரணவப்ரபாவ மென்பதும் இருங்கலைசாலா இளை ஞர்களா லெழுதப்பட்டனவென்பதை, இந்நூற்புலம் உதாஹரிக்கப் பட்ட கூற்றுக்களே காட்டும். இப்படித் தென்மொழி யிலக்கணப் பயிற்சியில்லா வைணவரைத் தென்கலையாரென்றும், தென்னுசா ரியரென்றுங் கூறிக்கோடல் காராட்டை வெள்ளாடென்பது கடு க்குமென்ப; கற்றுவல்லார். தே - குருபரம்பரைக் குறிப்புக்களிற் சிலசொற்களின் பாடபேதமு மெழுதப்பட்டிருத்தலின் அவை— பல் சுவடியாய்ந் துள்ளபடி யச்சிடப்பட்ட திதுவென்பதைக் காட்டு

கின்றன.' அப்பாடபேதத்தொன்றேனும் யாமுதாஹரித்தவற்றுள்ளும் வந்ததன்று. வைணவர் கூறுமாறு இப்பரம்பரையெழுதிய பின்பழகிய பெருமாள்ஜீயனென்பானை இந்நூலின் அஉ - ம் பக்கத்திற் போந்த நம்பிள்ளையென்பானுடைய சீடனென்பதும், கி. பி. 13-ம் நூற்றாண்டின் றொடக்கத்தி லிருந்தவனென்பதும் போதர மதுரைச் செந்தமிழ்ப்பத்திரிகை 2 - ந் தொகுதியின் சஙூ - ம் பக்கத்தில் மு. இராகவையங்காரென்பாரு மெழுதியுள்ளாராகலின், பூதூரனது ஜனனகாலமாகச் சொல்லப்படும் கி. பி. 1017 - ற்கு 258 - வருடங்கட்குப்பின்னே இப்பரம்பரைச்சுவடி யெழுதப்பட்டதென்பதும், இதற்குப் பின்னர்த்தான் வைணவ குருபரம்பரை பல்வேறு சுவடியாகப் பல்கிற்றென்பதும் இங்ஙனந் துணியப்படும். வெப்புநோய்க்காற்றாதான் பிய்த்துப் பிதற்றல்போல அம்மூல குருபரம்பரையிலுள்ள ஆபாஸங்களினின்றுந் தம்மதக்கோட்பாட்டை விலக்கிக்கொள்பாக்குச் சிலவைணவர், இப்புத்தகம் பிழையெனத் துணிகின்றனர். அங்ஙனமாயின், யாவும்பிழையென்பதேபோதரும். யாமெடுத்துக்காட்டும் ஆபாஸங்கள் திருத்தப்படினும், அப்படித் திருத்தப்பட்டதிலிருந்தே பெயர்த்துமெடுத்துக்காட்ட வியையும் ஆபாஸங்களையும் விலக்கிக்கொள்பாக்கு அதுவும் பிழையெனத் துணிபவரே கற்பிதம் பல கற்பித்துத்திரியும் அக்கதியற்ற வைணவராகலின், அவர் மதமுமொரு வரம்பிற்றாமோ? ஓராறு எழுத்துப்பிழை திருத்தப்படினும் விடயம் திருத்தப்படுவது வாய்மை கொல்லோ? உய்த்துணர்க. சித்ரகூடம், கந்தாடை - திருவேங்கடாசாரியரால் பரிசோதிக்கப்பட்டுப் பதிக்கலானதே இக் குருபரம்பரை. இவரால் பரிசோதிக்கப்படுவதே நன்றென வைணவரங்கீகரித்து வருதலைநோக்கிய சென்னை: ஊ - புஷ்பரதசெட்டியாரும் தமதச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்ட நாலாயிரப்பிரபந்தத்தையும் அவரைக்கொண்டே பரிசோதிக்கும்படி செய்துள்ளார். இச்செய்தி அனேகரறிந்துளதே. கூறிப்போந்த பாடபேத லிகிதத்தையும் ஈண்டுக்கருதிக்கொள்க. இந்நூற்கட் காட்டப்பட்ட இந்தத்தென்கலைக் குருபரம்பரைப் பிரதிகளிலொன்றே பின்னத்தூர் வைணவராலும் பிரதிதினமும் அவாவிப் படிக்கப்படுவ தாயிற்று.

## கஎ. திருவாசக தேவாரங்களை ஆழ்வார் பார்த்துப் பார்த்துக்கொண்டே சுவடிகள்செய்தல்.

---

திருவாசகத்துத் திருச்சதகத்தில்—

"தாராய்விடையாயடியேற்குன்றாளிணையன்பு
போராவுலகம்புக்காரடியார்புறமேபோந்தேன்யா
னூராமிலைக்கக்குருட்டாமிலைத்திங்குன்றாளிணையன்புக்
காராயடியேனயலேமயல்கொண்டழுகேனே."

எனவருந் திருச்செய்யுளையே சடகோபன் தானெழுதிவைத்த திருவிருத்தமெனுஞ் சுவடியில்—

"மைப்படி மேனியுஞ் செந்தா மரைக்கண்ணும் வைதிகரே
மெய்ப்படி யாலுன் றிருவடிச் சூடுந் தகைமையினா
ரெப்படி யூரா மிலைக்கக் குருட்டா மிலைக்குமென்னு
மப்படி யானுஞ்சொன் னேனடி யேன்மற்றி யாதென்பனே."

எனும் கூச-ஞ் செய்யுட்கு மேற்கோளாகக் கொண்டுளான். இதனிற் றிருவாசகத்தா ரெப்படி யுண்மையைக் கூறினரோ அப்படியே யானுங் கூறினேன்: அதனையன்றி வேறு நன்மார்க்கம் யானறியேனென்றதும், திருவாசகத்தில் "ஊரா மிலைக்கக் குருட்டாமிலைத்து" என்ற சொற்களே இச்செய்யுட்கண் "ஊரா மிலைக்கக் குருட்டா மிலைக்கும்" எனவேயமைந்து நிற்றலுங்காண்க. மேலைத் திருவாசகத்துக் கோயிற்றிருப்பதிகத்தில்—

"இன்றெனக்கருளியிருள்கடிந்துள்ளத்தெழுகின்றஞாயிறேபோன்று
நின்றநின்றன்மைநினைப்பறநினைந்தேனீயலாற்பிறிதுமற்றின்மை [வனே
சென்றுசென்றணுவாய்த்தேய்ந்துதேய்ந்தொன்றாந்திருப்பெருந்துறையுறைசி
யொன்றுநீயல்லையன்றியொன்றில்லையாருன்னையறியகிற்பாரே."

எனுந் திருச்செய்யுளுள்ளது. திருவாய்மொழியெனுஞ் சுவடியிற் கண்களென்றற் றொடக்கத்துப்பத்தில்—

"நின்றவொன்றையுணர்ந்தேனுக்கதனுண்ணுர்மையதுவிதுவென்
றொன்றுமொருவர்க்குணரலாகாவுணர்ந்தமேலுங்காண்பரிது
சென்றுசென்றுபரம்பரமாயாதுமின்றித்தேய்ந்தற்று
நன்றுதீதென்றறிவரிதாய்நன்றாய்ஞானங்கடந்ததே."

எனுஞ் செய்யுளுள்ளது. இது மேலைத்திருவாசகத்துத் திருச்செய்யுளின் பொருளமைதி சொல்லமைதியெனு மிரண்டினையும் பெற்றிருத்தலுங் காண்க. திருவாசகத்து அச்சப்பத்தில்—

"வெளிய நீறாடு மேனி வேதியன்"

எனவுளதைத் தழுவியே திருவாய்மொழியெனுஞ் சுவடியுழை வீற்றிருந்தே ழென்றற் றொடக்கத்துப்பத்தில்—

" கரிய மேனிமிசை வெளிய நீறுசிறி தேயிடும்
பெரிய கோலத் தடங்கண்ணன் "

என்பது மெழுதப்பட்டதாகும். இவ்வேதுக்களானே திருவாசகத்தைப் பார்த்துப் பார்த்துக்கொண்டே சடகோபன் பாட்டெழுதின னென்பதூஉம்; அவனெழுதிய மற்றொரு சுவடிக்குத் திருவாசகமெனும் பெயரைத்தானே சிறிது பேதப்படுத்தித் " திருவாய்மொழி " எனப் பெயரிட்டனனென்பதூஉம்; திருவாசகத்தார் சென்றவழியிலேயே அவன்சென்று வைகுண்டத்தை யடையக் கருதினவனென்பதூஉம் ஏற்பட்டன. ஆழ்வார்களுள் இவனைப் பிரதானனென்பது தே - குருபரம்பரை ப - கஅ௬ - ல் " ஆழ்வார்களெல்லாரு மொத்திருக்க நம்மாழ்வாருக்கு ப்ராதாந்ய முண்டானாப் போலேயும் " என்றெழுதியவாற்ரு னறியலாம். ஆகவே, எல்லா ஆழ்வார்கூற்றுந் திருவாசகத்தாரது திருநெறியின்கீ ழடங்குகின்ற தன்மமும் பெறுதும். நாலாயிரப்பிரபந்தமென்பதில் அச் சடகோபனெழுதிய திருவாய்மொழியெனுஞ் சுவடியே பிரதானமென்பது ய - ப்ரபாவம் ப - ௬௬ - ல் " திருவாய்மொழிக்கு அங்கோபாங்கங்களான மற்ற அருளிச்செயல்" என்றதிற்பெறப்படுதலானும், அக்குருபரம்பரை ப - கஅ௬ - ல் "அவாவற்று வீடுபெற்ற என்றுதம் வாக்காலே அருளிச்செய்கையாலே அவர் பெற்றது ஸித்தம்" என்று அத் திருவாய்மொழி யென்பதன் ஈற்றுமுடிவு விதந்துகூறப்படுதலானும், இந்நூல் சா௬, சச - ம் பக்கங்களில் விளக்கியபடி அம்முடிவில் அரனுரைத் துதித்துநிற்றல் காணப்படுதலானும் அந்த ச000 - செய்யுளுந் திருவாசகத்தில் விளங்குகின்ற அரனாது துதியின்கீ ழடங்கினவாறும் பெறுதும். இந்நியாயத்தை யுள்ளூன்றி யுணராமே ஆழ்வாருடைய சில செய்யுள்களிற் சிவஸ்துதி காணப்படினும் " முடிவப்படியாமா? " எனும் வைணவரது காதைப்பிடித்தாட்டுங் கதழ்வுடையார் சைவரென்பதும் ஈண்டுப்பெறுதும்.

அந்தச் சடகோபனது காலத்தின் பிற்பட்டவளான சூடிக்கொடுத்தாளென்பாள், திருவாசகத்தில் நான்கடித்தா விரண்டு கொண்டுமுடிகின்ற இயற்றரவிணைக்கொச்சககலிப்பாவி லருளிச்செய்யப்பட்ட திருவெம்பாவையைப் பார்த்துத் திருப்பாவை யென்பதைச் செய்துள்ளாள். திருவெம்பாவைத் திருச்செய்யுடோறு மீற்றில் " ஏலோரெம்பாவாய் " என வந்தமொழியே அத்திருப்பாவைச்செய்யு ளீறுதோறும் வந்தவாறும்; திருவெம்பாவை அ - ல்

*"கேட்டிலையோ" என்றும், "ஊழிமுதல்வன்" என்றும் வந்த மொழிகளே அத்திருப்பாவை ள - லும், ச - லும் வந்தவாறும்; திருவெம்பாவை உ௦ - வதில் வந்த "போற்றி" எனு மொழிகளே திருப்பாவை உச - வதிலும் வந்தவாறுங் காண்க. இன்னுமவள், திருவாசகத்துக் குயிற்பத்தைப் பார்த்துத் தானுமொரு குயிற்பத்துச் செய்துள்ளாள். அதனில், திருவாசகத்துக் குயிற்பத்தில் "வரக்கூவாய்" எனவுள்ளமொழியே புக்கது. இவள் காலத்தின் பிற்பட்ட தொண்டரடிப்பொடி யென்பான் திருவாசகத்துத் திருப்பள்ளியெழுச்சி யெனுந் திருப்பதிகத்தைப் பார்த்துத் தானுமொரு திருப்பள்ளியெழுச்சியெனும் பதிகஞ் செய்துள்ளான். திருவாசகத்துத் திருப்பள்ளியெழுச்சியில் "எம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே" என்றதன் ஈற்றுமொழிகளே, அவனது பள்ளியெழுச்சியில் "அரங்கத்தம் மாபள்ளி யெழுந்தருளாயே" என்ற சொற்றொடர்தோறும் புக்குநிற்றல் காண்க. இவன் காலத்தின் பிற்பட்ட கள்ளத்திருமங்கையான், திருவாசகத்துத் திருச்சாழலைப் பார்த்துத் தானுமொரு திருச்சாழல் செய்துள்ளான். அச்செய்கையை—

"கானார் புலித்தோ லுடைதலையூண் காடுபதி
யானா லவனுக்கிங் காட்படுவா ராரேடீ
யானாலுங் கேளா யயனுந் திருமாலும்
வானாடர் கோவும் வழியடியார் சாழலோ." என்பதனானும்,

"மானமரு மென்னோக்கி வைதேவி யின்றுணையாக்
கானமருங் கல்லதர்போய்க் காடுறைந்தான் காணேடி
கானமருங் கல்லதர்போய்க் காடுறைந்த பொன்னடிகள்
வானவர்தஞ் சென்னி மலர்கண்டாய் சாழலே."

என்பதனானு முணர்க. ஸ்ரீமந் மாணிக்கவாசகனார் ஊமைப் பெண்ணைப் பேசுவிக்கு மற்புத நிகழ்ச்சியின் அப்பெண்ணினது நாவினின்றும் வெளிப்பட்ட சிவபாரதத்துவமுள்ள அற்புதத்திருச்சாழல், அறிவாராற் போற்றப்படுமாறு போற்றப்படுவதோ பிறிதொரு வெறுஞ்சாழல்! மேலும் அத் திருமங்கையான், திருவாசகத்துத் திருக்கோத்தும்பியைப் பார்த்துக்கொண்டே கண்ணபுரப் பதிகஞ் செய்துள்ளான். அச்செய்கையை—

"இனைத்தனையுள்ளதேர்ப்பூவினிற்றேனுண்ணாதே
நினைத்தொறுங்காண்டொறும்பேசுந்தொறுமெப்போதும்
அனைத்தெலும்புண்ணெக்கவானந்தத்தேன்சொரியுங்
குனிப்புடையானுக்கேசென்றூதாய்கோத்தும்பீ." என்பதனானும்,

*"நீலமலர்கணெடுநீர்வயன்மருங்கிற்*
*சாலமலரெல்லாமூதாதேவாளரக்கர்*
*காலன்கண்ணபுரத்தெம்பெருமான்கதிர்முடிமேற்*
*கோலநறுந்துழாய்கொண்டூதாய்கோத்தும்பி."*

என்பதனுனு முணர்க. அம்மாணிக்கவாசகனார் நிமித்தஞ் சிவ பெருமான் நரியைப் பரியாக்கியருளிய திருவிளையாடலை நாவுக்கரசு கள் திருவாரூர்த் தேவாரத்தில் "நரியைக் குதிரை செய்வானு நரக ரைத் தேவு செய்வானும்" என்றருளிச்செய்தலின், அவ் வரசுகளுக் கும், அவரோ டெழுந்தருளியிருந்த ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகளுக் கும் முற்பட்ட காலத்தேயுள்ளார் அம்மாணிக்கவாசகனா ரென்க. இம் மூவர்க்கும் பின்வந்த ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிக ளருளிச்செய்த திருக்கச்சி மேற்றளித்தேவாரத்தைப் பார்த்துக்கொண்டே அத்திரு மங்கையான் நறையூர்ப்பதிகமுஞ் செய்துள்ளான். அச்செய்கை—

"எம்மானெம்மனையென்றவரிட்டிறந்தொழிந்தார்
மெய்ம்மாலாயினதீர்த்தருள்செய்யுமொய்ப்பொருளே
கைம்மாவீருரியாய்கனமேற்றளியுறையும்
பெம்மானுன்னையல்லாற்பெரிதேத்தமாட்டேனே." என்பதனுனும்,

*"எம்மானுமெம்மனையுமென்னைப்பெற்றொழிந்ததற்பின்*
*அம்மானுமம்மனையுமடியேனுக்காகிநின்ற*
*நம்மானவொண்சுடரேநறையூர்நின்றநம்பியுன்*
*மைம்மானவண்ணமல்லான்மகிழ்ந்தேத்தமாட்டேனே."*

என்பதனுனுஞ் செய்யுளமைதி, சொல்லமைதி, பொருளமை தியாகியமூன்றும் ஒருங்குற்றவா றுணரப்படுதலின், அவன் அந்தச் சுவாமிகள் திருக்கைலைக் கெழுந்தருளினதற்குப் பின்னே பிறந்தவ னுவன். இவனை, ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள் காலத்தினனெனும்படி, வைணவர் குருபரம்பரையி லெழுதினமை அவரது குருட்டுப்பரம் பரையையே காட்டிற்று. ஸ்ரீ ஞானசம்பந்தசுவாமிகளை, ஸ்ரீ உமாம ஹேச்வரியின் திருமுலைப்பாலுண்டு மெய்ஞ்ஞானம் பெற்றவரெ ன்று சங்கராசாரியர் விதந்துகூறியசெய்தி (𑌤𑌵 𑌸𑍍𑌤𑌨𑍍𑌯𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌧𑌰𑌣𑌿𑌧𑌰𑌕𑌨𑍍𑌯𑍇 𑌹𑍃𑌦𑌯𑌤𑌃 𑌪𑌯𑌃𑌪𑌾𑌰𑌾𑌵𑌾𑌰𑌃 𑌪𑌰𑌿𑌵𑌹𑌤𑌿 𑌸𑌾𑌰𑌸𑍍𑌵𑌤𑌮𑌿𑌤𑌿। 𑌦𑌯𑌾𑌵𑌤𑍍𑌯𑌾 𑌦𑌤𑍍𑌤𑌂 𑌦𑍍𑌰𑌵𑌿𑌡𑌶𑌿𑌶𑍁𑌰𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌯 𑌤𑌵 𑌯𑌤𑍍 𑌕𑌵𑍀𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑍌𑌢𑌾𑌨𑌾𑌮𑌜𑌨𑌿 𑌕𑌮𑌨𑍀𑌯𑌃 𑌕𑌵𑌯𑌿𑌤𑌾॥) "தவஸ்தந்யம் மந்யேதரணிதர கந்யேஹ்ருதயத: பய: பாராவாரம் பரிவஹதி ஸாரஸ்வதமிதி | தயாவத்

யாதத்தம் *த்ரவிடசிசுராஸ்வாத்யதவயத் கவீநாம் ப்ரௌடாநாமஜ நிகமநீய ஃ கவயிதா||" எனுஞ் சௌந்தரியலஹரி வாக்கியத்திற் காணப்படுதலானும், அவ்வாசாரியர் கலியுகஙூ ௩0ருஅ - ற் பிறந் திருந்தவரெனுஞ் சரிதப்படி அவ்வருஷம் கிறிஸ்து பிறத்தற்கு 44 - வருஷங்கட்கு முன்னதென வேற்படுதலானும், இந்நூலினீற் றிற்சேர்க்கப்படு திருவல்லிக்கேணியாலயத்தின்பூர்வீகஸ்திதி யெ னும் ஆங்கில இலிகிதத்தில் திருமங்கையாழ்வான் காலம் கிறிஸ்து பிறந்த 775 - ம்ஙூ முதல் 800 - ம்ஙூ வரையாமென நிச்சயிக்கப் படுதலானும் அச்சுவாமிகளும்ஆழ்வானும் ஒருகாலத்தினரல்லரென லேற்பட்டது. அவ்வாங்கில இலிகிதத்திலுள்ள ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகள் காலத்தைக் கிறிஸ்துபிறந்த 7 - ம் நூற்றாண்டெனக் கொள்ளுமிடத்தும் அது, அந்த ஆழ்வான் காலத்திற்கு (க00) நூற்றுக்கதிகமான வருஷங்கட்கு முற்பட்டதேயாகும். இந்நூலின் கஉள - ம் பக்கத்திற் காட்டப்பட்ட மு. இராகவையங்கார் சம்மதப் படி பெரியாழ்வான்காலம் கி. பி. 7 - ம் நூற்றாண்டின் பிற்பகுதி யும், 8 - ம் நூற்றாண்டின் முற்பகுதியுமாமாறு அவ்வாழ்வானுக்கும் பிற்பட்ட திருமங்கையாழ்வான் காலம் அதிகமும் பின்னே போத லுங் காண்க. இன்னும் இம்மங்கையான், அந் நாவுக்கரசுக ளருளிச் செய்த திருவங்கமாலையைப் பார்த்துக்கொண்டே "திருத்தாய்செம் போத்தே" என்றற் றொடக்கத்தொரு பதிகமுஞ் செய்துள்ளான். இச்செய்கையை—

"செவிகாள் கேண்மின்களோ சிவ னெம்பிறை செம்பவள
மெரிபோன்மேனிப்பிரான்றிறமெப்போதுஞ்செவிகாள்கேண்மின்களோ."

"கரையாய் காக்கைப் பிள்ளாய் கரு மாமுகில் போனிறத்தன்
உரையார்தொல்புகழுத்தமனைவரக் கரையாய் காக்கைப்பிள்ளாய்."

எனும் இருதிறச்செய்யுள்களானுமறிக. இன்னன பல்ல. விரிக் கிற் பெருகும். இச்செய்கை.—மயிலாடுவதுகண்டு வான்கோழியு மாடுவது கடுக்குமென்பதினு மிழுக்கும். இனைய சாமானிய ரெழுத் தைத் திராவிடவேதமெனத் திரட்டிவைத்துக்கொண்டு அவரைப் புகழ்தலும், அருட்டிருவாக்கான தேவார திருவாசகங்களை நீத்து அவ்வாசாரியர்களையுஞ் சிவப்பிரபுவையு மிகழ்தலும் வாயிற் புழுப் புழுத்துவழியச்செத்து மாநரகுமுறற்குப் பேணும்பெருங்கருடிமே

* த்ரவிடசிசு—௩ - வயதில், தமிழ்வேதமருளிச்செய்த ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகள்.

யாம். திருவருள் விழைவாரிதனை யுணரக்கடவர். பிரமன் முதலா ஞோர் முகத்தில் வெளிப்பட்ட கீர்வாணவேதம் பரமசிவனெனும் பதிவாக்கென வறிந்தபடி, திருஞானசம்பந்தர் முதலிய சைவசமயா சாரியர் முகத்தில் வெளிப்பட்ட தமிழ்வேதமும் அந்தப் பதிவாக் கென வறிந்துகொள்ளும் விவேகிகள்—வேததெய்வம் வேதாரண் யத்திற் சிவாராதனை செய்து, (யானையைக்கட்டி யிழுத்தன் முதலிய பன்முயற்சிகளைச் செய்யும்போதுந் திறவாதிருக்குமாறு) தன்னு லடைக்கப்பட்ட திருக்கோவிற் கதவைத் திருநாவுக்கரசுகளின் றிருவாக்காக நின்று திறக்கவும், திருஞானசம்பந்தரின் றிருவாக் காக நின்று அடைக்கவுந் திறக்கவுமாகச் செய்தமையின், அது தனது வியாபகத்தை வெளிப்படுத்திற் றென்பதையும் அறிவர். இத்திற மகிமை வியாபகம் ஆழ்வார்செய்யுள்கட் கில்லையென வறிவதோடு அந்த ஆழ்வாரையும், அவர் செய்யுளையும் மத்துவ வைணவர் சிறிதும் மதித்ததில்லையென்பது மறியவுள்ளது.

ஆசாரிய விசாரகாண்டம் முற்றிற்று.



# கைவல்லிய காண்டம்.

## க. விபூதிவைபவம்.

பஸ்மாவெனும் விபூதிவைபவத்தை,—யஜுர்வேத காலாக்நிருத்ரம், தைத்திரீயம், யோகதத்வம், ஸாமவேத ஜாபாலி, ஸந்ந்யாஸம், வாஸுதேவம், அதர்வவேத பஸ்மஜாபாலம், ஜாபாலமெனும் பிருஹஜ்ஜாபாலம், நாரதபரிவ்ராஜம், ராமரஹஸ்யம், சாண்டில்யம், திரிபுராதாபிநி, அதர்வசிரம் முதலியவுபநிஷத்துக்களும்; யஜுர்வேதம் முதலியனவும் மொழியவுள்ளன. யஜுர்வேத ஈசாவாஸ்யோபநிஷத்தும், பிருஹதாரண்யகோபநிஷத்தும் ([illegible]) "பஸ்மாந்தக் சரீரம்" எனும் வசனங்களானே பஸ்மமெனும் விபூதியையே விளக்குகின்றனவென்ப மெய்யுணர்ந்தோர். இவற்றுட் காலாக்நிருத்ரம், ஜாபாலி, பஸ்மஜாபாலம், பிருகஜ்ஜாபாலமெனு நான்கும் விபூதிவைபவத்தைத் தாரணவிதியோடு விரித்துக்கூறும். ஈண்டுச் சில வசனங்களை யெடுத்துக் காட்டுகின்றேம். பஸ்மஜாபாலோபநிஷத்—

([illegible])

"ஏவம் பஸ்மதாரண மக்ருத்வா நாச்நீ யாதாபோஂந மங்யத்வாப்ரமாதாத்த்யக்த்வா பஸ்மதாரணம் நகாயத்ரீம் ஜபேந்நஜுஹுயாதக்நௌதர்பயேத் தேவாந் ருஷீந் பித்ராதீநயமேவ தர்மஸ்ஸநாதநஸ் ஸர்வபாபநாசகோமோக்ஷஹேதுர் நித்யோயம் தர்மோப்ராஹ்மணாநாம் ப்ரஹ்மசாரிக்ருஹி வாநப்ரஸ்தயதீநாமேத தகரணே ப்ரத்யவைதி ப்ராஹ்மண: அக்ருத்வா ப்ரமாதேநைததஷ்டோத்தரசதம் ஜலமத்யேஸ்தித்வா காயத்ரீம் ஜப்த்வோ போஷணே

ஸநேகோ சுத்தோபவதி | யதிர்பஸ்மதாரணம் த்யக்த்வா ஏகதாஉபோஷ்ய த்வா தச ஸஹஸ்ரப்ரணவம் ஜப்த்வா சுத்தோபவதி | "

எனக் கூறுகின்றது. பொருள் :—'பஸ்மதாரணமின்றி நீரை யேனும், அன்னத்தையேனும், மற்றெதையேனும் ஆஹாரமாகக் கொள்ளொண்ணுது. அசட்டையாற் பஸ்மதாரணமின்றிக் காயத்திரி ஜபித்தல்கூடாது. தேவரும், முனிவரும், பிதிரர்முதலியோருஞ் செய்து கொள்ளத்தக்க பஸ்மதாரணமே பூர்வீகமான தருமம். இது சருவபாவத்தையு நசிப்பிப்பதும் மோக்ஷத்தைக்கொடுப்பதும் நித்தியமுமாகும். இத்தருமம் பிரஹ்மசாரி, கிருஹஸ்தன், வானப்பிரஸ்தன், ஸந்நியாஸியாகிய நான்காச்சிரமிகட்கும்முக்கியம். இதனைச் செய்யாக்காற் பிரத்தியவாயமெனுந் தோஷமுண்டு. பிராஹ்மணன் அசட்டையாலே யிதனைச்செய்யாக்கால் அதற்குப்பரிகாரமாக நீர் மத்தியிலிருந்துகொண்டு ௧௦௮ - காயத்திரிஜபித்து ஒருபவாச மிருந்தக்காற் சுத்தனுவன். ஸந்நியாஸி ஒருவேளை பஸ்மதாரணஞ் செய்யத் தவறுவனேல் அவனும் உபவாஸமிருந்து பிரணவஜபம் ௧௨000 - செய்தக்கால் அத்தோஷநீங்கிச் சுத்தனுவன்.' எனவாம்.

காலாக்நிருத்ரோபநிஷத் : (பகவானுனகாலாக்நிருத்ரர் ஸநத்குமாரருக்கு உபதேசித்த திருவாக்கு)—

(𑌏𑌵𑌂 𑌤𑍍𑌰𑌿𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑌂 𑌭𑌸𑍍𑌮𑌨𑌾 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌯𑍋 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍.........
𑌮𑌹𑌾𑌪𑌾𑌤𑌕𑍋𑌪𑌪𑌾𑌤𑌕𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑍂𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌸 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁
𑌤𑍀𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌸𑍍𑌨𑌾𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌸 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌵𑍇𑌦𑌾𑌨𑌧𑍀𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 ।
𑌸 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌜𑍍𑌞𑌾𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌸 𑌸𑌤𑌤𑌂 𑌸𑌕𑌲𑌰𑍁𑌦𑍍𑌰𑌮𑌨𑍍𑌤𑍍𑌰
𑌜𑌾𑌪𑍀 𑌭𑌵𑌤𑌿 । 𑌸 𑌸𑌕𑌲𑌾𑌨𑍍 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 𑌦𑍇𑌹𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌶𑌿𑌵𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯
𑌮𑍇𑌤𑌿 𑌨 𑌸 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌤𑍇)

"ஏவம் த்ரிபுண்ட்ரம் பஸ்மநாகரோதியோவித்வாந்......மஹா பாதகோப பாதகேப்ய: பூதோபவதி | ஸஸர்வேஷு தீர்த்தேஷுஸ்நாதோபதி | ஸஸர்வாந்வேதாநதீதோபவதி | ஸஸர்வாந்தேவாந் ஜ்ஞாதோபவதி | ஸஸததம் ஸகல ருத்ரமந்த்ரஜாபீபவதி | ஸஸகலபோகாந் புங்க்தே தேஹந்த்யக்த்வா சிவஸாயுஜ்யமேதி நஸபுநரா வர்த்ததே"

எனக் கூறுகின்றது. பொருள் :—'பஸ்மங்கொண்டு திரிபுண்டரத்தைத்தரிக்கும் வித்துவான் மஹாபாதக உபபாதகங்களினின்றும் நீங்கிச் சுத்தனுகிறுன். சகல்புண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்தவனுகிறுன். இஷ்டதேவதையைத் தியானித்தவனுகி

ருன். சருவசிவமந்திரங்களையும் ஜபித்தவனாகிருன். இஹத்திலே சகலபோகங்களையு மநுபவித்து இறுதியிலே தேஹத்தைவிட்டுச் சிவசாயுஜ்யமடைகிருன். இக் கருமபூமியின் மீண்டுமொருபிறப்பினை யடையான்.' எனவாம்.

பஸ்மமானது ஐசுவரியத்தைக் கொடுக்குந் தன்மைத்தால் விபூதி, பூதியெனும்பெயர்பெற்றதாக "ஐச்வர்யகாரணாத் பூதி:" என்னும் பிருஹஜ்ஜாபாலோபநிஷத்—

([illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] । )

"தேநாதீதம்ச்ருதந்தேந தேந ஸர்வ மநுஷ்டிதம் |
யேந விப்ரேணசிரஸி த்ரிபுண்ட்ரம் பஸ்மநாத்ருதம் |
த்யக்தவர்ணாச்ரமாசாரோ லுப்தஸர்வக்ரியோபிய: |
ஸக்ருத்திர்யக்த்ரிபுண்ட் ராங்கதாரணாத்ஸோபிபூஜ்யதே |
யேபஸ்ம தாரணம்த்யக்த்வா கர்மகுர்வந்திமாநவா: |
தேஷாம் நாஸ்திவிநிர்மோக்ஷஸ்ஸம்ஸாராஜ்ஜந்மகோடிபி: |"

எனக்கூறுகின்றது. பொருள்:—'எந்தப்பிராமணனற் சிரசில் விபூதித் திரிபுண்டரதாரணஞ் செய்யப்பட்டதோ அவனல் வேத மெல்லாம் அத்யயனம் பண்ணப்பட்டனவாயின. சற்கருமமனைத் தும் அநுஷ்டிக்கப்பட்டனவாயின. தனது வருணத்திற்குரிய நல்லா சாரத்தை யிழந்தவனேனும், சற்கருமங்களை விட்டவனேனும் பஸ் மங்கொண்டு திரிபுண்டரந் தரித்துக்கொண்டவன் பூஜிக்கப்படு வோனய் விடுவன். எவர்கள் பஸ்மதாரணத்தைத் தள்ளிக் கருமங் களைச் செய்கிருர்களோ அவர்களுக்குக் கோடிஜன்மமாயினுஞ் சமு சார துக்கமில்லாத மோக்ஷவழி கிட்டாது.'

எனவாம். ஈண்டுக் கோடிஜன்மமாயினும் மோக்ஷவழிகிட்டா தென்றதன்கருத்து.—சிவவழிபாடில்லாமற் பரமுத்தியில்லையென் ரும், இவ்வாறு பஸ்மவைபவத்தை வேதம் விளக்குதலினுற்ருன் "தமிழ்வேதம்" அருளிச்செய்யவந்த ஆசாரியர்களி லொருவரான ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகளும்—

"வேதத்தி னுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு"

என்று திருவாய்மலர்ந்தருளினர். வைணவரது சித்திரோர்த்துவபுண்டர மண்ணும் மஞ்சளும் வேதத்திலேனும், ஸ்மிருதியிலேனும், புராணத்திலேனும், பாஞ்சராத்திர தந்திரத்திலேனு முள்ளனவாயின், தேவார திருவாசகங்களைப் பார்த்துப் பார்த்துப் பாட்டெழுதிய ஆழ்வார்களி லெவரேனும்—

'வேதத்தி னுள்ளது வெண்மண் வெந்துயர் தீர்ப்பது மஞ்சள்' என்றுவது,
'மிருதியி னுள்ளது வெண்மண் வெந்துயர் தீர்ப்பது மஞ்சள்' என்றுவது,
'புராணத்தி னுள்ளது வெண்மண் பொருதுயர் தீர்ப்பது மஞ்சள்' என்றுவது,
'தந்திரத் துள்ளது வெண்மண் சமயத்தி னுள்ளது மஞ்சள்'

என்றுவது எழுதிவையா தொழிந்ததென்னை? இல்லாமையாலும், அவரணியாமையாலு மென்க. இன்னும் அந்தப் பிருஹஜ்ஜாபால வசனங்களிற் சிலவற்றை யெடுத்து விளக்குதும்—

(മഹാപാതകയുക്താനാം പൂർവജന്മാർജിതാമസാം ।
ത്രിപുണ്ഡ്രോദ്ധൂലനദ്വേഷോ ജായതേ സുദൃഢം ധ്രുവം ॥
യേഷാം കോപോ ഭവേദ്ബ്രഹ്മൻ ലലാടേ ഭസ്മദർശനാത് ।
തേഷാമുത്പത്തിസാങ്കര്യമനുമേയം വിപശ്ചിതാ ॥)

"மஹாபாதகயுக்தாநாம்பூர்வஜந்மார்ஜிதாகஸாம் |
த்ரிபுண்ட்ரோத்தூளநத்வேஷோஜாயதேஸுத்ருடம்புதா: |
யேஷாங்கோபோபவேத்ப்ரஹ்மந்லலாடேபஸ்மதர்சநாத் |
தேஷாமுத்பத்திஸாங்கர்யமநுமேயம்விபச்சிதா |"

எனும் வசனங்களின் பொருள்:— 'இப்பிறப்பில் மஹா பாதகங்களோடு கூடினோர்க்கும், முற்பிறப்பிற் பாவஞ்செய்தோர்க்குமே திரிபுண்டரத்திலும், உத்தூளனத்திலும் பலமான துவேஷமுண்டாகும். வித்தையுடையீர்! அறிமின். ஒருவரது நெற்றியிற் பஸ்மத்தைப் பார்த்தமட்டில் எவர்க்குக் கோபமுண்டாகிறதோ அவர் பலபெயர்க்குப் பிறந்தோராவ ரென்பது பண்டித ரறியத்தக்கது.'

எனவாம். இந்த அருத்தத்தில், பஸ்மதாரணஞ் செய்கலாதார் வேதபாஷ்யரே யாயினும், துன்பத்திலே தவமுடையார்பா லதனையிரண்டு கையானுமேற்றுத் தரித்தல், அதிற்பலமான துவேஷபுத்தி செய்யாமலும் அதனைத் தூஷியாமலு மிருத்தல், அதனை யணிந்துளோரைக் கண்டு கோபியாதிருத்தன் முதலிய குணங்களால் அவ

ரெல்லாம் பலபெயர்க்குப் பிறந்தவராகா ரென்பதும் ; அக்குணங்களிலாதாரே அப்படிப் பிறந்தவராவரென்பதும் வகுத்துக்கொளல் வேண்டும். வேதம் பொய்சொல்லாதாகலின், வேதோக்தமான பஸ்மத்தைச் சுடுகாட்டுச்சாம்பலென்றும், சூத்ரர்களணிவதென்றும், அணிந்தாரையுங் காணக்கூடாதென்றுங் கதறித்திரிகுநர் கதியையுணர்வுடையார் ஈண்டுய்த்துணரக்கடவர். சுடுகாட்டுச் சாம்பலெனுமவர், ருக்வேத நிர்வாணோபநிஷத்—([illegible]) "மாயாமமதாஹங்காரதஹநம் ச்மசாநே |" என்றவழிச் சுடுகாட்டுண்மையும் இற்றெனவுணரு முணர்வுளராவரோ ! சித்திரோர்த்துவ புண்டரதாரிகள், தம் புண்டரவிடயமாக கoஅ-உபநிடதப் பிருந்தத்தெதிலேனும் இப்படியொரு வசனத்திற்குக் கதியற்று, பஸ்மதாரணமானது அதிலுளது, இதிலுளது, ஸ்ம்ருதியிலுளதென் றாளேயிட்டாவதென்னைகொலோ ! சுருதிக்கு விரோதமாக வெப்பெரியரும் விளம்பார். விளம்பினரெனின்,—அவ்வித வசனங்கள் சுருதிக்கிணையாகவாவது மேலாகவாவது ஆகாத அப்பிரமாண மாதலோடு அவரும் மேலைப்பிரமாணப்படி பாவமுடையரும், பல பெயர்க்குப் பிறந்தவருமாவரெனு முடிபுண்டாமாகலின் அது பொருந்தாதென்க. ([illegible]) "நபஸ்ம கேச துஷகரீஷ கபாலாமேத்யாந யதிதிஷ்டேத்" எனும் வசனம் கௌதமதர்மசாஸ்த்ரத்தின் கூ-ம் அத்தியாயத்துளதென்பது பிரதிகடோறுமுளதாயின், அது 'பஸ்மம், மயிர், உமி, எரு, ஓடு, அமேத்தியம் இவைகளின் மீது இராதிருப்பாயாக' எனும் பொருளைத் தருமலது 'இவைகளைத் தீண்டேல்' எனும்பொருளைத் தராது. என்னை ? அக்கினிஹோத்திரத்திற்குரிய உமியையும், எருவையுந் தீண்டுதலிற் றோடமில்லையாகலின். பஸ்மம்முதலியவெல்லாம் அமேத்தியமெனும் அசுத்தமெனப் பொருள்கொள்ளுமிடத்தும், குப்பையொடு தள்ளப்பட்ட அடுப்புச் சாம்பல் அந்தப் பஸ்மமாவதன்றி வைதிகத் திருநீறாகாதென்பதே ஏற்புடைப் பொருளாம். இவ்வாறு பொருள்கொள்ளாக்கால் நூலிற்கும், நூலாசிரியர்க்கும் மேற்போந்த குற்றங்களெல்லாம் பொருந்தும். 'பஸ்மதாரணஞ் செய்யாக்காற் பிரத்தியவாயமெனுந் தோஷமுண்டு' என்பதற்கான சுருதியும் இந்நூலின் கசஎ-ம் பக்கத்தில் வந்துளது. உய்த்துணர்க. நமரங்காள் ! இனி, அப்பிரமாண பாஞ்சராத்திரப் பததிகளி லெவனேனும்

பஸ்மத்தை நிந்திக்கவருவனேல், அவன்முகம் புலரும்படி ஈண்டுக் காட்டப்பட்ட சுருதியை யெடுத்துக்காட்ட நீங்கள் மறவி கூரா திருப்பீர்களாக. விபூதி வைபவத்தைப் பெரிதும் பிரதிபாதிக் கின்ற அந்த ஜாபாலோபநிஷத்தையும், பஸ்ம ஜாபாலோபநிஷத் தையும் உபப்ரம்ஹணமான மஹா ஸ்காந்தாந்தர்க்கத ஸூதஸம் ஹிதை "அக்நிரித்யாதிபிர் மந்த்ரைர் ஜாபாலோக்தைச்ச ஸப் தபிஃ | த்ரிபுண்ட்ரதாரணம் யத்தத்வதம்த்யத்யாச்ரமம்புதா ||" என்று ஞாபகப்படுத்துகின்றது. இதன்பொருள் :— 'ஜாபாலச் சுருதியிற் சொல்லப்பட்ட அக்நியாதி ஏழுமந்திரஞ்சொல்லி யெடுத் துக்கொள்ளத்தக்க பஸ்மத்திரிபுண்டரத்தைத் தரிப்பது அத்தி யாச்சிரமமென்மனுரறிஞர்' எனவாம். அத்தியாச்சிரமமென்பதை அத்யாச்ரமோபநிஷத்தான சுவேதாச்வதரம் "அத்யாச்ரமிப்யஃ பரமம் பவித்ரம்" என்று கூறும்வழிக் காண்க. பின்னர் விளக்கப் படும் கைவல்யோபநிஷத்தினுங் கூறப்படு மிந்த அத்தியாச்சிரம மானது பாசுபதவிரதமெனப் படுமென்பதை அதர்வசிரம் "வ்ர தமே தத்பாசுபதம் | அக்நிரிதிபஸ்ம |" என்று கூறிச் சேறலிற் காண்க. உபப்ரம்ஹணமான வாயுசங்கிதையு மினிது விளக்கும். இந்த அதர்வசிரமானது பாவத்தைப் போக்குவதற்கு நன்கு ஜபிக் கத்தக்க மந்திரங்களுள் ஒன்றெனக் கௌதமதர்மசாஸ்த்ரத்து ௰௯-ம் அத்தியாயத்திற் கணக்கிடப்பட்டுளது. இதனை, "அதர்வசிரோ ருத்ராஃ புருஷஸூக்தம்" எனும் அவ்வத்தியாய வசனங்களில் ருத்ர புருஷ ஸூக்தங்களுக்கு முன்னே அதர்வசிரம் வருதலி னறிக. அத்யாச்ரம மென்பதை மேலான நிலையெனக் கொள்க. பிரஹ்மசாரியாதி நான்காச்ரமிகளு மணியத்தக்கது பஸ்மமென்ப தற்கான சுருதியும் மேலே வந்துளது. (அமெ்ஹஸ-ஹாஸி) (ஹஷ நாஹிவாஸயதி) "அக்னேர்பஸ்மாஸி" "பஸ்மநாபிவாஸயதி" எனும் யஜுர்வேதமந்த்ரப்ரமாணங்களிலும், பஸ்மத்தின் பரிசுத்த மகிமை காணப்படுகின்றது. இன்னும் அந்த யஜுர்வேதத்தில்—

(ஹஷடநாவஷஉவெிவவதிஸாஜ்ரா) "பஸ்மநாபதமபிவபதிசாந்த்யா"

என்பதனுற் காருகபத்தியத்திற்கும், ஆகவநீயத்திற்கும் இடை யில் நாய் தாண்டிச்செல்லின், அந்தத் தோடசாந்தியி னிமித்தம் அவ்விடத்திற் பஸ்மத்தைத் தெளித்தல் விதிக்கப்பட்டுளது. பஸ்ம தாரணமின்றி வைதிககர்மம் யாதும் செய்யொணுது, ஓமமாகிய

யாகஞ்செய்தலும் பலிதமாகாதென்று சுருதியும், ஸ்மிருதியுங் கூறுங் கூற்றுக்கள் இந்நூலின் ருஎ, ருஅ - ம் பக்கங்களில் வந்துள்ளன. அந்த யாகம் கலியுகத்துஞ் செய்யத்தக்கதென்பதைக் கலியுகத்திற்கு விசேஷ தர்மசாஸ்த்ரமான பராசரஸ்ம்ருதியி னறியலாம்.

" அக்நிகார்யபரிப்ரஷ்டாஸ் ஸந்த்யோபாஸநவர்ஜிதா: |
வேதம்சைவாநதீயநாஸ் ஸர்வேதேவ்ரஷலாஸ்ஸ்ம்ருதா: ||"

எனும் அந்த ஸ்மிருதியின் பிராயச்சித்தகாண்டவசனம்— 'அக்கினி காரியத்தைவிட்டு நீங்கினவர்களும், சந்தியாவந்தனத்தை விட்டவர்களும், வேதமோதாதவர்களுமான சகலரும் சூத்திரராகின்றனர்.'

எனும் பொருளைப் பயத்தலின், பஸ்மதாரணத்தையும், யாகத்தையும், வேதமோதுதலையும் ஒழித்த வைணவரெல்லாம் எப்படி மேல்வருணத்தினராவர்! நிற்க. மஹாபாரத சாந்திபர்வம்—

(ஆயுஷ்காமோ யதா ராஜந் பூதிகாமோ யதா நர: |
நித்யம் வை தாரயேத்பஸ்ம மோக்ஷகாமீ ச வை த்விஜ: ||)

" ஆயுஷ்காமோதவாராஜந் பூதிகாமோதவாநர: |
நித்யம்வைதாரயேத்பஸ்ம மோக்ஷகாமீசவை த்விஜ: ||"

என்று கூறுகின்றது. பொருள் :— 'தருமராஜனே! ஆயுள் விருத்தியை யவாவுவோரும், செல்வத்தை யிச்சிப்போரும், வீடுபேற்றை விரும்புவோருமான துவிஜர் நாடோறும் பஸ்மதாரணஞ் செய்யவேண்டும்.' எனவாம். மேலைய பிருஹஜ்ஜாபாலம்—

(திக் பஸ்மரஹிதம் பாலம் திக் க்ராமமசிவாலயம் |
திக் அநீசார்சநம் ஜந்ம திக் வித்யாமசிவாச்ரயாம் |)

" திக்பஸ்மரஹிதம்பாலம் திக்க்ராமமசிவாலயம் |
திகநீசார்சநம்ஜந்ம திக்வித்யாமசிவாச்ரயாம் | "

எனக் கூறுகின்றது. பொருள்:—'பஸ்மமணியாத நெற்றியைச் சுடு : சிவாலயமில்லாத கிராமத்தைக் கொளுத்து : சிவார்ச்சனை யில்லாதவனது ஜன்மத்திலே தீயை வை : சிவனை யாச்சிரயிக்காத சாஸ்திரத்தை யெரித்துவிடு.'

எனவாம். இச்சுருதி வசனமே— உபப்ரம்ஹணமான கூர்ம புராணத்திலும் வந்துளது. மேலும் இந்த ஜாபாலோபநிஷத்தே—

(𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌗𑍍𑌨𑍇𑌰𑍍𑌯𑌤𑍍𑌪𑌰𑌂 𑌵𑍀𑌰𑍍𑌯𑌂 𑌤𑌦𑍍𑌭𑌸𑍍𑌮 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍𑌭𑌸𑍍𑌮𑌸𑌂𑌯𑍁𑌤𑌃।
𑌭𑌸𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌸𑍍𑌯 𑌦𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌦𑍋𑌷𑌾𑌭𑌸𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑌿𑌸𑌙𑍍𑌗𑌮𑌾𑌤𑍍।
𑌭𑌸𑍍𑌮𑌸𑍍𑌨𑌾𑌨𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑌸𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃।
𑌭𑌸𑍍𑌮𑌸𑌨𑍍𑌦𑌿𑌗𑍍𑌧𑌸𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑍋 𑌭𑌸𑍍𑌮𑌦𑍀𑌪𑍍𑌤𑌤𑍍𑌰𑌿𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑌕𑌃।
𑌭𑌸𑍍𑌮𑌶𑌾𑌯𑍀 𑌚 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌭𑌸𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃॥)

"ருத்ராக்நேர்யத்பரம்வீர்யம் தத்பஸ்மபரிகீர்த்திதம் |
தஸ்மாத்ஸர்வேஷுகாலேஷு வீர்யவாந்பஸ்மஸம்யுத: |
பஸ்மநிஷ்டஸ்யதஹ்யந்தே தோஷாபஸ்மாக்நிஸங்கமாத் |
பஸ்மஸ்நாநவிசுத்தாத்மா பஸ்மநிஷ்ட இதிஸ்ம்ருத: |
பஸ்மஸந்திக்தஸர்வாங்கோ பஸ்மதீப்தத்ரிபுண்ட்ரக: |
பஸ்மசாயீசபுருஷோ பஸ்மநிஷ்ட இதிஸ்ம்ருத: ||

எனக் கூறுகின்றது. பொருள் :— 'உருத்திராக்கினியின் சிரேஷ்டவீரியமே பஸ்மமென்று சொல்லப்பட்டது. அதனால் எஞ்ஞான்றும் பஸ்மதாரண முடையவனே வீரியமுள்ளவனாவன். தோஷமெல்லாம் பஸ்மாக்கினியா லெரிக்கப்பட்டுப் பஸ்மநிஷ்டனைவிட்டு நீங்கும். பஸ்மஸ்நாநத்தால் விசுத்தாத்மாவானவனே பஸ்மநிஷ்டனென் றெண்ணப்படுகின்றனன். பஸ்மம்பூசிய ஸர்வாங்கமும், பிரகாசிக்கின்ற திரிபுண்டரமும், பஸ்ம சயனமுமுள்ள புருஷனே பஸ்மநிஷ்டனென் றெண்ணப்படுகின்றனன்.'

எனவாம். விபூதியானது அக்கினியின் வீரியபதார்த்தமெனலால், இவ்வக்கினிக்கு மேலாய வாயு, ஆகாயமென்பன ஸ்நாநத்திற்கு அமையாத ஒதுக்கப்பொருளாதலானும், அமைந்த ஜலத்திற்கும் அதன்கீழான மண்ணிற்கும் மேம்பட்டது அக்கினியாதலானும் பஸ்மஸ்நாநம் ஜலஸ்நாநத்தினு முயர்வுடைத்தென்பதும்; ஜலத்தாற் சுத்தியானது பஸ்மத்தானுஞ் சுத்தியாமாயின், அது விசேஷசுத்தியை யடைந்ததாகுமென்பதுஞ் சித்திக்கின்றன. 'பஸ்மஸ்நாநம் ஜலஸ்நாநத்தினுங் கோடிபங் கதிக புண்ணியமுள்ளது : ஸந்யாஸி வடக்குமுகநோக்கி உத்தூளன ஸ்நாநஞ் செய்யக்கடவன்' எனும் பொருளுற,

" பஸ்மஸ்நாநம் ஜலஸ்நாநாத் கோடிபுண்யகுணம்பவேத் |
யதிருத்தூளநேநைவஸ் நாயாந்நித்யமுதங்முக: ||"

என்று காமிகாகமமுங் கழறிற்று. இங்ஙியாயத்தாற் கடைப்பட்ட மண்ணைப்பூசிக்கொண்டு, அதன்மேம்பட்ட ஜலம் விட்டுணுவுக்குரியதென நினைத்து, விட்டுணுகோவில்களிலே தீர்த்தமென்று கொடுக்கப்படு மதற்கு மேம்பட்டதோர் வஸ்து, சிவாலயங்களிற் கொடுக்கப்படுந் திருநீறென்பது மறிக. திருநீறளிக்கும் மகிமையில்லாத ஆலயமுஞ் சிவாலய மாகா தென்பதும், முஹம்மது மதஸ்தரும் வேறுசிலரும் பிசாசோட்டவும் பிணிதீர்க்கவுங் கொள்ளும் பொருள் திருநீறேயல்லாமன் மண்ணும் மஞ்சளு மல்ல வென்றலுங் கண்கூடென்பது முணர்க. கிறிஸ்தவருட் கத்தோலிக் கிறிஸ்தவரென்பாரும் (Ash Wednesday) சாம்பரடிப்பெருநாளென்னும் விசேடதினத்திற் பஸ்மதாரணஞ் செய்வதை இக்காலத்துங் காணலாம். முகம்மதுமதஸ்தரும் நாகூரிலுள்ள அவர்களது ஆலயத்திற் பஸ்மப்பிரசாதம் வழங்கிவருகின்றனர். மத்துவமத வைணவரும் பஸ்மதாரணத்தை அங்கீகரித்தவரேயென்பது—

“பிராமணனுக்கு ஔபாசனம் முதலிய ஹோமஞ்செய்தல் அவசியகருமமாதலால் அவைகளிலுண்டாகும் ஹோமபஸ்மத்தைத் தாங்கள் வைஷ்ணவராயிருப்பினும் நெற்றியின் மாத்திரந் தரித்துக்கோடல் அவசியந்தான்.”

என்பதாக, ஜயவருஷத்து மத்வசித்தாந்தோங்நாகிநிஸபாசரித்ரமென்பதிற் பிரமாணத்தோடு வரையலான இலிகிதத்தி லறியப்படுகின்றது. நிற்க.

இந்நூலின் கரு - ம் பக்கத்திற் சொல்லப்பட்ட பஸ்மத்திரவியமாகிய “கோமயம் சுபம்” என்பதை மேலைய பிருஹஜ்ஜாபாலத்தினறிவதோடு மெழுகுதற்கும் உரியஅது யோகதத்வோபநிஷத்தில் “ஸம்லிப்தம் கோமயேந” என்ற விடத்தில் வருதலையுமறிக. பரமேச்வரனது ஜடாமகுடத்தினின்று வந்தது கங்கையாதலினதனைச் சடைச்சாறென்றும், சிவஜ்ஞான செல்வராய அகஸ்த்ய மஹாமுனிவர் தமதங்கையில் வாங்கி யாசமனஞ்செய்து சிசனவழி விடப்பட்டது ஸமுத்ரமாதலி னதனை உப்புச்சாறென்று மோதி, அவற்றின் சூழ்காதுழலும் இக்காலத்துக் குரூரவைணவர், இக் கோமயஞ்சேர்ந்த பஞ்சகௌவியத்தையுஞ் சாணிச்சாறென் றுண்ணுதொழிந்தமை பாதகத்தின் படர்ச்சியேயாம். அகஸ்த்யஸம்பந்தமாகாதென்பார் அவரது தமிழை யவாவியவாறென்னை! “செந்திறத்தமி ழென்கையாலே ஆகஸ்த்யமுமநாதி” என்பது ஆசார்ய ஹ்ருதயமெனுஞ் சுவடிக்கண்ணு மெழுதப்பட்டுளதாலோ!! இவர்

தெய்வமென்றுகும்பிடும் நாராயணனும் ஏனைத்தேவரும் சிவனடியவராகிய பஸ்மதாரிகளென்பதையும் வேதவாயிலாகவே விளக்குவாம். மேலைப் பிருஹஜ்ஜாபாலம்—

( [illegible] )

"ஸ்ரீ கௌதமவிவாககாலே தாமஹல்யாம் த்ருஷ்ட்வாஸர்வே தேவா: காமாதுரா அபவந்ததா நஷ்டஜ்ஞாநா தூர்வாஸஸம்கத்வாபப்ரச்சுஸ்தத்தோஷம் சமயிஷ்யாமீத்யுவாச ததச்சதருத்ரேண மந்த்ரிதம்மந்த்ரேண பஸ்மனைவபுராமயபித்த்தம் ப்ரஹ்மஹத்யாதிசாந்தம் | இத்யேவமுக்த்வா தூர்வாஸாதத்தவாந்'ப்ஸ்மசோத்தமம் | ஜாதாமத்வசநாத் ஸர்வேயா யந்தேதிகதேஜஸ: | சதருத்ரேண மந்த்ரேண பஸ்மோத்தூளிதவிக்ரஹா: | நிர்தூதரஜஸஸ்ஸர்வே தத்க்ஷணச்சவயம்முநே | ஆச்சர்யமேதஜ்ஜாநீமோ பஸ்மஸாமர்த்யமீத்ருசம் | அஸ்யபஸ்மநச் சக்திமந்யாம்ச்ருணு | ஏததேவஹரி சங்கரயோர்ஜ்ஞாநப்ரதம் | ப்ரஹ்மஹத்யாதி பாபநாசகம் | மஹாவிபூதிதமிதி சிவவக்ஷஸிஸ்திதம் நகேநாதாய ப்ரணவேநாபிமந்த்ர்ய காயத்ர்யா பஞ்சாக்ஷரேணாபி மந்த்ர்யஹரிர்மஸ்தக காத்ரேஷு ஸ்மர்பயேத் ததாஹ்ருதி த்யாயஸ்வேதி ஹரிமுக்த்வாஹர: ஸ்வஹ்ருதித்யாத்வா த்ருஷ்டோத்ருஷ்ட இதிசிவமாஹததோ பஸ்ம

பக்ஷயேதி ஹரிமாஹஹரஸ்தத: | பக்ஷஇஷ்யே சிவம்பஸ்மஸ்நாத்வாஹம் பஸ்மநாபுரா | ப்ருஷ்டவேச்வரம் பக்திகம்யம் பஸ்மபக்ஷயதச்யுத: | தத்ராச்சர்ய மதீவாஸீத் ப்ரதிபிம்பஸமத்யுதி: | வாஸுதேவச் சுத்தமுக்தா பலவர்ணேபவத் க்ஷணாத் |"

எனமுழங்குகின்றது. பொருள்:—'கௌதமமுனிவரநுவிவாக காலத்தில் அகலியைக்கண்டு தேவரனைவருங் காமாதுரராரனார்கள். அப்படியான வவர்கள் அறிவிழந்தவர்களாகித் தூர்வாஸமுனிவரை யடைந்து தங்கட்குண்டான தோஷத்தை நிவிர்த்திசெய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். உடனே அவ்வாறே செய்வேன்; சதருத்ரீய மந்த்ரங்கொண்டு மந்திரிக்கப்பட்ட பஸ்மாவை முந்தைநாள் நான் பலருக்குங்கொடுத்துப் பிரஹ்மஹத்தி முதலிய பாவங்களை நீக்கியுள்ளேனென்று தூர்வாஸமுனிவர் சொற்றுப் பஸ்மாவைமந்திரித்து அவர்கட்களித்தனர். அவர்களும் அந்தப்பஸ்மாவினாலுடனே தோஷத்தினின்று நீங்கி முன்னையதேஜஸைப் பெற்றார்கள். அவ்வாறு சதருத்ரீய மந்த்ரங்கொண்டு மந்திரிக்கப்பட்ட பஸ்மாவை யுடம்புமுழுதும் பூசிக்கொண்டு பாவம்போக்கு மவர்கள், பாவங்களினின்றும் விலகினோம்: பஸ்மாவினது ஸாமர்த்யம் அதிசயிக்கத் தக்கதென்று அம்முனிவர்பாற் றெரிவித்துக்கொள்ள; மீண்டும் தூர்வாஸர் அத்தேவர்கட்குரைக்க மேயினர்,—இப்பஸ்மத்தின் மற்றொரு சக்தியைக்கேண்மின்! இதுதான் ஹரி சங்கரர்கட்கு ஞானத்தை நல்கியது. இது பிரஹ்மஹத்தி முதலிய பாவங்களைப் போக்கும். மஹா செல்வத்தைக் கொடுக்கும். சிவபிரான் றனது மார்பிலிருந்த பஸ்மத்தை நகத்தாலெடுத்துப் பிரணவம், காயத்திரி, பஞ்சாக்ஷரமிவற்றானே யபிமந்திரித்து விஷ்ணுவின் சிரசுமுதலிய அங்கங்களிற்பூசி இதுமுதல் நினது ஹிருதயத்தில் ஈசுவரத் தியானஞ்செய்யென் றருளியபடியே விஷ்ணுவுந் தியானஞ்செய்து சிவத்தைக்கண்டேன் கண்டேனென்று சிவனையணுகி யானந்தமாயினன். பின்பு ஈசன் பஸ்மாவை நாவிலிட்டுக்கோள்ளென் றருளிச்செய்ய; அப்படியேயென்று பஸ்மத்தை முதலி லுடம்பெங்கும்பூசிக்கொண்ட அச்சுதன் ஈசனுத்தரவின்படி யதனை யுட்கொண்டனன். கொள்ளவே ஆச்சரியமாகப் பரமசிவப் பிரதிபிம்பமெனக் காந்தியைப்பெற்றுத் தூய முத்தொத்த வெண்ணிறத்தனாயினன் அவ்வச்சுதனாகிய வாஸுதேவன்.' (சங்கரன்=குணருத்ரன்.)

எனவாம். வடமொழிவேதம் இவ்விதம்முழங்குதலினாற்றான் தென்மொழிவேதத்திலும் ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள், "மந்திர

மாவது நீறு வானவர் மேலது நீறு" என்றருளிச்செய்தனர். சர்வ தேவருமெனும்பொருளுள்ள "ஸர்வேதேவா:" என்றதில் விஷ்ணுவுஞ் சேர்ந்தவனேயென்பது— "விஷ்ண்வாதிகாங்ஸுராந்" எனுஞ் சரபோபநிஷத் வசனத்தாலும், "விஷ்ண்வாதி ஸுரைராஜஸ்ரம்" எனுந் தேஜோபிந்தூபநிஷத் வசனத்தாலும் வலியுறுத்தப்படும். வைணவத்திற்கு நமனாகவிருக்கின்ற இப் பிருஹஜ்ஜாபாலம்—

"பரமஹம்ஸாநாம ஸம்வர்த்தகாருணி ச்வேதகேது தூர்வாஸ ரிபு நிதாக ஜடபரத தத்தாத்ரேய ரைவதக புஸுண்ட ப்ரப்ருதயோ விபூதி தாரணு தேவமுக்தாஸ்ஸ்யுஸ் ஸஹஸ்பஸ்ம ஜ்யோதிரிதிவை யாஜ்ஞவல்க்ய: |"

என்று ஸப்தமபராஹ்மணத்திற் கூறுதலின், முந்தைப் பரமஹம்ஸர்களான ஸம்வர்த்தகாருணி, சுவேதகேது, தூர்வாஸர், ரிபு, நிதாகர், ஜடபரதர், தத்தாத்ரேயர், ரைவதகர், புஸுண்டரெனுமிவர்களும்; யாஜ்ஞவல்க்ய முனிவரும் பஸ்மதாரிகளென்ப தறியப்படுதலுங் காண்க. மேற்போந்த தத்தாத்ரேயரை, விஷ்ணுவின் பூர்ண தராவதாரமூர்த்திகளி லொருவரென வைணவர் கூறுவர். இம்மூர்த்தி பஸ்மதாரி யென்பதை, "தத்தாத்ரேயம்.........பஸ்மோத்தூளித ஸர்வாங்கம் ஜடாஜூடதரம் விபும்" எனுஞ் சாண்டில்யோபநிஷத் வசனங்களும விளக்குகின்றன. பஸ்மஜாபாலோபநிஷத்—

"பஸ்மதிக்தாங்கா ருத்ராக்ஷாபரணாஃ க்ருதாஞ்ஜலயோ நித்யமபித்யாயந்தி | தத்ரபூர்வஸ்யாம்திசி ப்ரஹ்மாக்ருதாஞ்ஜலிரஹர்நிசம் மாமுபாஸ்தே | தக்ஷிணஸ்யாம்திசி விஷ்ணுஃ க்ருத்வைவமூர்த்தாஞ்ஜலிம் மாமுபாஸ்தே | ப்ரதீச்யாமிந்த்ரஸ்ஸந்தாங்க உபாஸ்தே |"

எனுமாற்றானே விபூதிதாரணமும், ருத்ராக்ஷாபரண தாரணமுமுள்ள பிரமனும், விஷ்ணுவும், இந்திரனும் காசியிலே பரமசிவனையுபாசித்துக்கொண்டிருக்கின்றன ரென்பதறியப்படுதலின் இந்த உபநிஷத்தும்—அக்கினி இந்திராதி தேவதைகளை யுபாஸிக்கலாம் சிவனை யுபாஸிக்கலாகாதென்று படைத்துமொழியும் இழவு வைணவத்தின்றலையிற் குமுறிவீழுங் கோடையிடியாகவே யுளது. இராமன் விபூதியணிந்ததற் காதாரமாகிய—

"த்யாத்வாரகுபதிம்க்ருத்தம் காலாநலமிவாபரம் |
பீதக்ருஷ்ணஜிநதரம் பஸ்மோத்தூளிதவிக்ரஹம் ||"

எனும் இராமாயணச்சுலோகத்தைச் சிலபிரதிகளிலில்லாதொழிய வைணவ ரெடுத்துவிட்டனராயினும், அவ்விபூதியணிந்த

செய்தி (க்ருதாபிஷேகஸ்ஸராஜ ராமஸ்ஸீதா த்வீதீயஸ் ஸஹலக்ஷ்மணேந। க்ருதாபிஷேகோ கிரிராஜபுத்ர்யா ருத்ரஸ் ஸநந்தீ பகவாநிவேஶ:॥)
"க்ருதாபிஷேகஸ் ஸர ராஜராமஸ்ஸீதா த்விதீயஸ் ஸஹலக்ஷ்மணேந | க்ருதாபிஷேகோ கிரிராஜபுத்ர்யாருத்ரஸ் ஸநந்தீபகவாநிவேச ஃ ||" என்று இராமாயண ஆரண்யகாண்டம் கசு - ம் ஸர்க்கத்தில் வருதலிற் பெறப்படும். அர்த்தம் :—'பகவானும் ஈசருமானவுருத்திரர் பார்வதியாரோடு ஸ்நானம்பண்ணி நந்திதேவருடன் விளங்கினதுபோல இராமன் ஸீதையோடு கோதாவரியின் மூழ்கி இலக்குமணனுடன் விளங்கினன்' என்றும். இதிற் சிலர், (ருத்ரஸ்ஸவிஷ்ணுர் பகவாநிவேஶ:) "ருத்ரஸ்ஸவிஷ்ணுபகவாநிவேச ஃ" என்று பாடபேதமோதி 'விஷ்ணுவுடன் கூடிய வுருத்திரரைப்போல' என்றர்த்தம் பண்ணினும்; இலக்குமணஸாம்யம் விஷ்ணுவுக்கும், இராமஸாம்யம் பஸ்மாலங்கார உருத்திர பகவானுக்கு மாகும். ஆகவே இராமன் பஸ்மதாரியென்பதேறபடும். உருத்திரபகவான் முதலானவர்களின் உயர்வுடைமை கருதியே இராமாயணமுனிவர் அவர்களை யுயர்த்தியுவமித்தனரென்றலும் இங்ஙனஞ் சித்திக்கின்றது. இப்படி இராமாயணமும் மூர்க்கவைணவரை மோசஞ் செய்வதாயிற்று. 'சிவன் உமையென்பார் வடிவாயிருக்கும் இராமசந்திரன் இங்கே தேவதையாகச் சொல்லப்படுகின்றனன்' எனும் பொருளைப்பயக்கும் (ஶிவோமா ராமசந்த்ரோऽத்ர தேவதா பரிகீர்த்திதா: ।) "சிவோமா ராமசந்த்ரோத்ர தேவதா பரிகீர்த்தித ஃ |" எனும் ராமரஹஸ்யோபநிஷத் வசனமும் மேலைய ராமாயணக் கூற்றினை வலியுறுத்தும்.

(ராமம் த்ரிணேத்ரம் ஸோமார்த்ததாரிணம் ஶூலினம் பரம் ।
பஸ்மோத்தூளிதஸர்வாங்கம் கபர்த்திநமுபாஸ்மஹே॥)

"ராமம்த்ரிணேத்ரக்ஸோமார்த்ததாரிணம்சூலிநம்பரம் |
பஸ்மோத்தூளிதஸர்வாங்கம் கபர்த்திந முபாஸ்மஹே||"

எனும் அந்த ராமரஹஸ்யோபநிஷத் வசனமும், அந்த இராமனுடம்பெங்கும் பஸ்மத்தை நன்கு பூசுதலுங்காண்க. விஷ்ணுவும், விஷ்ணுவி னவதாரமூர்த்திகளுந் திருநீறணிந்து சிவபூஜைசெய்த பலப்பல சரிதங்கள் புராணேதிகாசங்களி லுளவேனும் இங்கே முக்கியமானசுருதியும், அவர்படிக்கும் இராமாயணமுமே காட்டப்பட்டன. சடகோபனது திருவாய்மொழியெனுஞ் சுவடியினும்—

"கரியமேனிமிசைவெளியநீறுசிறிதேயிடும்
பெரியகோலத்தடங்கண்ணன்" என்றும்,

"நீறுசெவ்வேயிடக்காணினெடுமாலடியாரென்றோடும்" என்றும்;

பெரியாழ்வானது திருமொழியெனுஞ் சுவடியிற் "காப்பிட வாராய்" "காப்பிடவாராய்" என்றுந் திருநீறணிகை கூறப்பட்டது. 'நீறு' என்பது திருநீற்றிற்குப் பெயராயவாறு நீற்றப்படு சுண்ணத்திற்கும், பராகமெனும் பொடி=புழுதிக்கும் பெயராகுமென்பது நிகண்டுகளிற் காணப்படினும், அங்ஙனம் வெண்மண்ணிற்கும் அது பெயராகாமையின் அச்சொற்களால் வைணவரடையும் பயனொன்றுமின்று. ஆழ்வார் கூற்றிலும் விவரமின்று. மதுரைக் காஞ்சி அடி கஅச-ல் "பலபுரவி நீறுகைப்ப" என்றதற்கும், சிறுபாணாற்றுப்படை அடி உ00, உ0க-ல் "அண்ணல் யானை யருவி துகளவிப்ப—நீறடங்கு தெருவினவன் சாறயர் மூதூர்" என்றதற்கும் நச்சினார்க்கினியர் செய்தவுரை முறையே— 'பல குதிரைத்திரள் ஓடுகின்ற விசையாற் றுகள்களை யெழுப்ப' எனவும், 'தலைமையை யுடையவாகிய யானைகளின் மத அருவி எழுந்த துகளை அவிக்கையினாலே புழுதியடங்கின தெருவினையுடைய அவனுடைய விழா நடக்கின்ற பழையவூர்' எனவுங் காணப்படுதலால் மேலுரைத்தபடி நுண்டுகளான தூசி நீறெனப்பட்டதேயன்றி மண் நீறெனப்பட்டதன்று. இதுவேயுமன்றி, பஸ்மத்திற்கு மண்ணெனும்பெயருளதென வொப்பினன்றோ மண்ணிற்கு நீறெனும்பெயருளதென வொப்பலாம். இங்ஙனம் ஒப்பும்பண்டிதரொருவருமிலரால். இன்னும் இதுபற்றிய சங்கைநிவிர்த்திகளை நாலாயிரப்பிரபந்தவிசாரத்து சு-ம் அதிகாரத்தி னறிக. அன்றியும், "பூதிர்பஸிதபஸ்மநீக்ஷாரோரக்ஷா" என்று நிகண்டு-அமரஸிம்ஹத்திற்கூறப்பட்ட பஸ்மமானது "பூதி யோமப் பொடிவிபூதி காப்புப்—புண்ணிய சாந்தம் வெண் டாதுதிரு நீறே" என்று பிங்கலந்தையிலும், "திருநீறே பற்பம் பொடியொடு விபூதி காப்பாம்" என்று சூடாமணியிலும், "காப்பும் பொடியும் பற்பமும் விபூதியுந்—திருநீ றதனைச் செப்புங் கிளவி" என்று சேந்தன்றிவாகரத்திலும், பிற நூல்களிலுங் கூறப்பட்டதாகலின், நீறு, பொடி, காப்பு முதலிய சொற்கள் திருநீறெனப்படுமன்றி மண், மஞ்சளெனப்படாவென்பதும் ஓர்க. திருமண், மண்காப்பு, மண்மஞ்சட்காப்பெனுஞ் சொற்களும் நிகண்டுகளி லில்லாமையால், நிகண்டுகளுக்குப் பின்னர்த்தான் சித்தி

ரோர்த்துவபுண்டரம் இத் தென்னாட்டின்கண்ணதாய சிலகிராமங் களில் நடைபெற்றதென்பது மேற்புடைத்தே. மநுஸ்ம்ருதி—

“ த்ரிபுண்ட்ரதாரணம்க்ருத்வாஸந்த்யாவந்தனமாசரேத் |
த்ரிபுண்ட்ரம்பரமம்புண்யம்ப்ரஹ்மவிஷ்ணுசிவாத்மகம்|| ”

எனக் கூறிற்று. இதன்பொருள் :—‘திரிபுண்டரம் திரிமூர்த்தி ஸ்வரூபம்: அதனை யணிதலானே மிக்க புண்ணியமுண்டாகும்: திரிபுண்டரதாரணஞ் செய்துகொண்டே ஸந்தியாவந்தனஞ்செய்ய வேண்டும்.’ எனவாம. கூர்மபுராணம்—

[illegible]
[illegible]
[illegible]

“ ஸ்ரஷ்டாஸ்ருஷ்டிச்சலேநாஹத்ரிபுண்ட்ரஸ்ய ப்ரசஸ்ததாம் |
ஸஸர்ஜஸலலாடம்ஹிதிர்யங்நோர்த்வம் நவர்த்துலம் |
ததாபிமாநவாமூர்க்கா நகுர்வந்தித்ரிபுண்ட்ரகம் | ”

எனக் கூறிற்று. இதன்பொருள்:—‘பிரமதேவர் சிருஷ்டிசெய் கையிலேயே பஸ்மமாஹாத்ம்யத்தைக்கூறி, அதனையணிந்து கோ டற்காகவே நெற்றியைக் குறுக்காகப் படைத்தார். மேனோக்காக வும், வட்டமாகவும் படைத்தாரல்லர். அப்படிச்செய்திருந்தும் மூர் க்கர் சிலர் நெற்றியிலே திரிபுண்டர மணிவதில்லை.’

எனவாம். இதனானே மேனோக்கமாகு புண்டரம் வைதிகசாஸ் திரங்களில் விதிக்கப்படுவதன்றென்பதுஞ் சித்திக்கின்றது. இந்நீதி கருதியே நல்வழியில் “ நீறிலா நெற்றிபாழ் ” என ஔவையாருங் கூறியருளினர். இவ்வாறு பெரிதும் பிரதிபாதிக்கப்படுகின்ற திரு நீற்றுத்திரிபுண்டரத்தை மஹாஸ்காந்தபுராணம் கரு - இடங்களி லணியவேண்டுமென்பதாக, “ க்ருதம் பஞ்சதரஸ்தாநே தரிபுண்ட் ரம் ” என்று விதித்து அவ்விடங்கள்—சிரம், நெற்றி, கழுத்து, மார்பு, நாபி, இருபாரிசங்கள், இருதோள்கள், இருகரமத்தியவிடங் கள், இருமணிக்கட்டுகள், முதுகு, பிடரென்றும் விளக்குகின்றது. பரிசுத்தமான பஸ்மதாரணம் பாலுண் குழவிமுதல் மூப்புளோர் வரை யாவருங்கொள்ளத்தக்கதாகலின், அமங்கலி சுமங்கலியெனும் பெண்பாலாரும் நாடோறுமணியவேண்டும். குங்குமம்,சூ | ர் பன விபூதியைப்போல விசேஷபதார்த்தமாகா. அவறயேத் || ”

பிரிய முளோர் விபூதியிட்டதன்மீதிடக்கடவர். இவ்விபூதிகுறித்த செய்திகள் இந்நூலின் கச, கரு, கசு, கஎ, ருஉ, ருங, ருரு, ருசு, ருஎ, சுங, சுச-ம் பக்கங்களிலும் வந்துள்ளன: அவற்றையும் இவ்வத்தியாயம் படிப்பார்க்கு ஞாபகப்படுத்தினோம்.

## உ. உருத்திராக்ஷ வைபவம்.

உருத்திராக்ஷத்தை யுரைப்பன மேலைய பஸ்மஜாபாலம், பிருஹஜ்ஜாபாலம், ராமரஹஸ்யம், ருக்வேத அக்ஷமாலிகை, யஜுர்வேத தக்ஷிணாமூர்த்தி, ஸாமவேத ருத்ராக்ஷஜாபாலமென இத்தொடக்கத்து உபநிஷத்துக்களும்; ருக்வேத ஸ்ரீருத்ரநமகமு மாம். இவற்றுள், ருத்ராக்ஷஜாபாலத்தில் உருத்திராக்ஷமணிகளி னுற்பத்தி, அளவு, முகம், தாரணமந்திரம், தாரணபலாதிவிவரமும்; அக்ஷமாலிகையில் அந்த மணிகளின் நிறம், அந்த மாலைகளின் பேதம், மகிமைமுதலிய விவரமும்; பிருஹஜ்ஜாபாலத்தில் உருத் திராக்ஷோற்பத்தி, தாரணபலாதி விவரமும் அருளிச்செய்யப்பட் டன. ருத்ராக்ஷஜாபாலம்: (பகவானான காலாக்நிருத்ரர் புஸுண்ட ருக்கு உபதேசித்த திருவாக்கு)—

([Grantha text — illegible])

"ருத்ராக்ஷாஜாதாஸ் ஸர்வாநுக்ரஹார்த்தாய தேஷாம் நாமோச்சாரண மாத்ரேண தசகோப்ரதாநபலம் தர்சநஸ் பர்சநாப்யாம் த்விகுணபலம்"

என்று கூறுகின்றது. பொருள் :—'அனைவர்க்கும் அநுக்கிர கஞ்செய்யும்பொருட்டு உருத்திராக்ஷங்க ளுண்டாயின: அவற்றின் பெயரைச்சொன்ன மாத்திரத்திலேயே பத்துக்கோதான பலனும், அவற்றைக் காண்டல் தீண்டல்களுக்கு மேலும்மேலும் இரட்டிப் பாகு பலனும்.'

எனவாம். ஆகவே தாரணபலனும், மந்திரத்தோடுங் கூடிய விசேடதாரண பலனும் மிகுதியினு மிகுதியென்பது போதருமாக விரா்ப்பாவயிண்டு விளக்கப்படவில்லை. சிவபெருமானுடைய திருக் லாமையால்றும் வெளிப்பட்ட நீர்த்துளிகளே விருக்ஷமாகி அவற் விளையு முருத்திராக்ஷம் மாபுண்ணிய மகிமைத்தென்

பது கூறிப்போந்த வேதத்தா னறியப்படுதலின் இவ்வேத வசன மும்—சிவபிரான்மாட் டசுத்தங்கற்பித்த சண்டாளவைணவத்தின் றலையிலே தாடனஞ்செய்வதாயிற்று. விட்டுணு வுருத்திராக்கமணி ந்து சிவத்தியானஞ் செய்தலுணர்த்துஞ் சுருதியும் முன் னத்தியாய த்தில் வந்துளதால். பராசரபுராணம்—

([illegible]
[illegible]||)

"மஹாதேவச்சவிஷ்ணுச்சப்ரஹ்மாதேஷாம்விபூதய: |
தேவாச்சாந்யேஸதாபக்த்யாகலுருத்ராக்ஷதாரிண: || "

([illegible]
[illegible]||)

"பாபிஷ்டாநாம்மநுஷ்யாணாம்ருத்ராக்ஷாணாஞ்சதாரணே |
ச்ரத்தாநஜாயதேஸாக்ஷாத்வேதஸித்தேவிமுக்திதே || "

என்று கூறுதலுங் காண்க. பொருள்:—'மஹாதேவன் (குண ருத்திரன்), விட்டுணு, பிரமன், மற்றைத் தேவர்கள் யாவரும் எஞ் ஞான்றும் உருத்திராக்கத்தைப் பத்தியுடன் றரிக்கின்றனர்.' 'பாவி களான மனிதர்கட்கு, வேதத்திலுற் சித்தித்ததும், முத்தியைக் கொடுப்பதுமான உருத்திராக்க தாரணத்திற் சிரத்தை யுண்டாவ தில்லை.' எனவாம்.

" உடையார்ந்தவாடையன்கண்டிகையனுடைநாணினன்........
நடையாவுடைத்திருநாரணன் "

என்று திருவாய்மொழியெனுஞ் சுவடியி லெழுதப்பட்டதும் "கண்டிகை" எனும் உருத்திராக்கமாலையை நாரணனணிந்துளோ னென்பது காட்டுமென்பதை நாலாயிரப்பிரபந்தவிசாரத்து சு - ம் அதிகாரத்தி னறிக. "சங்கசக்கராதி ஆயுதங்க ளில்லாமல் அக்ஷ மாலை மாத்திரம் உள்ளதாயும் மிகவுஞ் சாந்தமாயும் அந்த ஸ்வரூப த்தை= (விஷ்ணுவின்வடிவத்தை)ச் சிந்திக்கவேண்டும்" எனும் விஷ்ணுபுராணத்து சு - ம் அமிசத்தின் எ - ம் அத்தியாய வசனத் தானும் உருத்திராக்கமாலை தாங்கியுளோன் நாரணனென்பதறி யப்படும்.

"ப்ராஹ்மணோபிப்ருயாச்ச்வேதாந்ரக்தாந்ராஜாதுதாரயேத் |
பீதாந்வைச்யஸ்துபிப்ருயாத்க்ருஷ்ணாஞ்சசூத்ரஸ்துதாரயேத் || "

என்று கூறும் வழியால், பிராமணர்முத ஞன்குவருணத்தாரும் அணியத்தக்க திருக்கண்மணி வைபவத்தை விளக்காநின்ற இந்த ருத்ராக்ஷஜாபாலமே—(𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑌪𑌿𑌵𑌰𑍍𑌣𑍈𑌸𑍍𑌸𑌦𑌾𑌕𑌾𑌲𑌂 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌂𑌧𑌾𑌰𑌯𑍇𑌨𑍍𑌨𑌰𑌃 ।) "ஸர்வைரபிவர்ணைஸ்ஸதாகாலம் ருத்ராக்ஷம்தாரயேந்நர: |" எனுமாற்ருனே அக்கண்மணி சதாகாலமு மணியத்தக்கதென்பது மேற்படுகின்றது. "பிராமணர்க்குத் தாமரைமணியும், சூத்திரர்க்கு உருத்திராக்கமும் ஆகும்" என ஸ்ம்ருதி கூறுகின்றதென்னுஞ் சித்திரோர்த்துவ புண்டரிகள் கூற்று—இந்தச் சுருதியாதி பிரமாணங்களின் முன்னே தலைதூக்குமாறுமுண்டோ! உருத்திராக்க மகிமைகூற உபநிஷத்துக்க ளிருத்தல்போல அத்தாமரைமணி மகிமைகூற உபநிஷத்துக்களு மிருக்கின்றனவோ!! இங்ஙனம், வெறுவாயைச் சப்புவோன் மதுரமாயிருக்கின்றதென்பதையன்றே அவர்கூற்றுப் பொருந்துகின்றது. சுருதிகூறுமாறு உருத்திராக்க மணிகளுள்ள விட்டுணுவையுஞ் சூத்திரனுக்குதலே அவர் முயற்சியாதலும் கண்டறியற்பாற்றே.

'எவனுடைய நெற்றியில் விபூதியில்லையோ, உடம்பில் உருத்திராக்கமணித லில்லையோ, எவனுடைய கிருகத்திற் சிவபூஜையில்லையோ அந்த விப்பிரன் நாய்மாம்சத்தைத் தின்கிறவனிலுங் கீழ்ப்பட்டோனுவன்.' 'மாம்சத்தை யுண்பவனுயினும், மதுவைக் குடிப்பவனுயினும், நீசஸ்த்ரீயைப் புணர்பவனுயினும் அவனது தலையில் உருத்திராக்கமிருப்பின் பாவத்தினின்று விடுபடுவென்.' எனும்பொருள்களைத் தரத்தக்க—

(𑌨𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌰𑍍𑌯𑌸𑍍𑌯𑌭𑌾𑌲𑍇𑌨𑌾𑌙𑍍𑌗𑍇𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌧𑌾𑌰𑌣𑌂 ।
𑌨𑌶𑌂𑌭𑍋𑌰𑍍𑌭𑌵𑌨𑍇𑌪𑍂𑌜𑌾𑌸𑌵𑌿𑌪𑍍𑌰𑌶𑍍𑌶𑍍𑌵𑌪𑌚𑌾𑌧𑌮𑌃 ॥

𑌖𑌾𑌦𑌨𑍍𑌮𑌾𑌂𑌸𑌂𑌪𑌿𑌬𑌨𑍍𑌮𑌦𑍍𑌯𑌂 𑌸𑌙𑍍𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌨𑌨𑍍𑌤𑍍𑌯𑌜𑌾𑌮𑌪𑌿 ।
𑌪𑌾𑌤𑌕𑍇𑌭𑍍𑌯𑍋𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑍇𑌤 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑍇𑌶𑌿𑌰𑌸𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑍇 ॥

"நவிபூதிர்யஸ்யபாலேநாங்கே ருத்ராக்ஷதாரணம் |
நசம்போர்பவநேபூஜாஸவிப்ரச்ச்வபசாதம: ||

காதந்மாம்ஸம்பிபந்மத்யம் ஸங்கச்சந்நந்த்யஜாமபி |
பாதகேப்யோவிமுச்யேத ருத்ராக்ஷேஸிரஸிஸ்திதே ||"

எனும் மஹாஸ்காந்தபுராணச் சுலோகங்களையும் அவர் உய்த்துணர்வாராக. மேலைய ருத்ராக்ஷஜாபாலோபநிஷத்தில்—

([illegible])

"ஸ்மாஸ்ஸ்நிக்தாத்ருடாஸ்ஸ்தூலாஃகண்டகைஸ்ஸம்யுதாச்சுபா",

எனவருவசனம் 'அழகுள்ளதும், உறுதியானதும், பருத்து இருப்பதும், முட்களோடுகூடியதுமான உருத்திராக்கங்கள் உயர்ந்தன.' எனும்பொருளையும்;

([illegible] | )

"ஸ்வயமேவக்ருதத்வாரம் ருத்ராக்ஷம் ஸ்யாதிஹோத்தமம் |"

எனவருவசனம் 'உற்பத்தியிற்றானே துவாரமுள்ள உருத்திராக்கம் உத்தமம்.' எனும்பொருளையும்;

([illegible] |
[illegible])

"நிகஷேஹேமரேகாபா யஸ்யரேகாப்ரக்ருச்யதே |
ததக்ஷமுத்தமம்வித்யாத்"

எனவரு வசனம் 'உரைகல்லில் உரைக்கும்போது பொன்னிறங் காட்டுவதை உத்தமமான உருத்திராக்கமெனஅறியவேண்டும்.' எனும்பொருளையுந் தருவனவாயின. உற்பத்தியிற்றானே துவாரமுள்ளதெனும் விசேடம் கேட்கப்படுதலால், ஆன்மகோடிகளணிந்தும், ஜபமணியாக்கி யுருட்டியும் உய்வதற்காகவே உருத்திராக்கம் உண்டுபண்ணப் பட்டதென்பதுஞ் சித்திக்கின்றதன்றோ. இந்த உபநிஷத்தை,—

([illegible] |
[illegible]||)

"ருத்ராக்ஷம்தாரயக்பாபம்குர்வந்நபிஸுதுஷ்கரம் |
ஸர்வம்தரதிபாப்மாநம்ஜாபாலச்ருதிராஹஹி ||"

என மாநவபுராணம் பிரமாணப்படுத்திக்கொண்டு உருத்திராக்க மகிமையையுமுரைப்பதாயிற்று. அருத்தம்:— 'மிக்ககொடும் பாவத்தைச் செய்கிறவனேனும், உருத்திராக்கத்தை யணிவோன் எல்லாப் பாவத்தையுங்கடந்து செல்வோனாவனென்று ஜாபாலச் சுருதி சொல்கின்றதன்றோ.' எனவாம்.

𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌕𑍍𑌰𑌮𑌾𑌚𑍍𑌛𑍍𑌵𑍇𑌤𑌂 𑌰𑌕𑍍𑌤𑌂 𑌪𑍀𑌤𑌮𑌥𑌾𑌸𑌿𑌤𑌮𑍍 ।
𑌤𑌦𑌲𑌾𑌭𑍇 𑌯𑌥𑌾𑌲𑌾𑌭𑌂 𑌧𑌾𑌰𑌣𑍀𑌯𑌮𑌦𑍂𑌷𑌿𑌤𑌮𑍍 ॥)

*(ப்ராஹீநாம்க்ரமாச்ச்வேதம் ரக்தம்பீதமதாஸிதம் |*
*ததாலாபேயதாலாபம்தாரணீயமதூஷிதம் ||"*

எனுஞ் சிவபுராணத்து வாயுசம்ஹிதைச்லோகம் 'பிராமணர் முதலியவர்கட்கு முறையே வெண்மை, செம்மை, பொன்மை, கருமைநிற வுருத்திராக்கங்கள் அணியத்தக்கன. இன்னவாறாகக் கிடையாவிடின், கிடைத்ததைத் தூஷியாது அணியலாம்.' எனும்பொருளைத் தருகின்றது. ஆயிரமுருத்திராக்ஷங்களை யணிபவரெவரோ அவரைத் தேவர்யாவரும் வணங்குவரென்றும்; புஜமொன்றற்குப் பதினாறாக இரண்டு புஜத்திற்கும் ௩௨ - ம், சிகைக்கு ௧ - ம், கையொன்றற்குப் பன்னிரண்டாக இரண்டு கைக்கும் ௨௪ - ம், கழுத்திற்கு ௩௨ - ம், காதொன்றற்கு ஆறாக இரண்டு காதிற்கும் ௧௨ - மாக அக்ஷமணி யணிபவரெவரோ அவர் உருத்திரராகவே பூஜிக்கப்படுவரென்றும்; அனேகபுண்ணியங்களைத் தரத்தக்க அக்ஷமணிகளிலொன்றையேனும் எவனணியவில்லையோ அவனது ஜன்மமானது திரிபுண்டரதாரண மிலாதவனது ஜன்மம்போலப் பயனற்றதாகுமென்றும்; உருத்திராக்ஷத்தில் உதகத்தை அபிஷேகிப்போர் சிவலிங்க அபிஷேகபலனை யெய்துதல் நிச்சயமென்றும்; ௧, ௫, ௧௧, ௧௪ - முகமாகிய அக்ஷமணிகளைப் பக்தியோடு பூஜிக்கும் மக்கள் தரித்திரநீங்கிச் சம்பத்தை யடைவரென்றும் மஹாஸ்காந்தபுராணத்து உபதேசகாண்டத்தின் ௩௩ - ம் அத்தியாயம் பகர்கின்றது. ஒரே திறமான வுருத்திராக்கம் நூற்றெட்டுப் பொருந்தியமாலை ஜபத்திற்காகும். மேலைய ௩௩ - ம் அத்தியாயம் ஜபமாலைகளில் உருத்திராக்கமாலையே மிக்கபலனைத் தருந்தகைத்தென்னும். இவ்வுருத்திராக்ஷமும், முன்னத்தியாயத்திற்போந்த பஸ்மமுமாகிய விருதிறச் சிவசின்னமும் அநேகோபநிஷதோக்தமாக வுள்ளமையின் சைவசமயம் வைதிகமென்பது நன்கு சித்தித்தது. ஸ்ரீநீலகண்டசிவாசாரியர்—

"வேதத்திலுஞ் சிவாகமத்திலுஞ் சிவபஞ்சாக்ஷரியாதி மந்திரங்களும், பதிபசுபாச பதார்த்தங்களும், பஸ்மோத்தூளனம் திரிபுண்டரதாரணம் உருத்திராக்ஷதாரணம் சிவலிங்கபூஜனம் முதலிய ஆசாரங்களும் வேறுபாடின்றிக் கூறப்பட்டனவாகலின் ஒன்றற்கொன்று விரோதமல்லை."

என்று ௨ - ம் அத்தியாயத்து ௨ - ம் பாதத்திற்செய்த பாஷ்யமுமதுவன்றோ. இது வைணவர் வெளியிட்ட பிரமசூத்திரத்திராவிடபா

ஷிய மென்பதினு முளது. இப்பெற்றிநோக்கியே பண்டிறச் சைவ ருேம், வைணவர்கொண்ட மாறுபட்டகொள்கைபோலத் தங்கொள் கையு மாகாமே அணிவது திருநீறும், புனைவது அக்கமணியும், அரு ச்சிப்பது சிவவுருவுமாகக் கொண்டனர். இத்திற வைதிகசைவ சின் னங்களைத் தாரணஞ்செய்துகொண்டு வாழ்குநர் பூர்வஜன்மங்களிற் செய்த புண்ணியமே புண்ணியம். அவைதிக சண்டாளபுண்டர துளஸீகாஷ்டங்களைத் தாரணஞ்செய்துகொண்டு பாஷண்டிகளா யுழலுநர் பூர்வஜன்மங்களிற்செய்த பாவமே பாவம். சித்திரோர்த் துவபுண்டர தாரணத்திற் கெப்படி ஒருபநிஷத்தில்லையோ அப் படியே துளஸீகாஷ்டதாரணத்திற்கும் ஒருபநிஷத்தில்லை. உபநிட தம் நூற்றெட்டினுள் ஒருவாசகியமுமில்லை. ராமரஹஸ்யோபநிஷத் தில் "பத்மாக்ஷ துலஸீகாஷ்ட ருத்ராக்ஷ வ்ருதமாலயா |" என வரும ஏகதேச வசனத்திலுள்ள 'துலஸீகாஷ்டம்' ஜபமாலையே யன்றி அணிமாலையன்று. அங்ஙனம் உருத்திராக்ஷமாலையு மிருத்தல் காண்க. அணிமாலையாயின் உரியமந்திராதிவிவரமு மங்ஙனிருத்தல் வேண்டும. யாதுமின்று. அங்ஙனம் "ஸ்ரீவ்ருக்ஷம்" எனும் வில்வ மரத்தடியிலிருந்து ஜபிக்கும்படி விதித்தலு முளது. மஹாநாராய ணோபநிஷதம் "கௌஸ்துப வநமாலா" என்றதிலுள்ள 'வநமாலா' துளஸித்தழை மாலையாகும். துளஸி யுற்பத்தியிடம் பிருந்தை யென்பா ளுடலெரிந்த மயானச்சாம்பரின் மத்தியென்று மஹா ஸ்காந்தபுராணம் வழங்குகின்றது. சிவார்ச்சனைக்கு முக்கியமான பில்வம்— பஸ்மஜாபாலம், ஸௌபாக்யலக்ஷ்மீ முதலிய உபநிஷத் துக்களிற் கூறப்பட்டுளது. பில்வபத்ரம்போலத் துளஸித்தழை சிறந்ததன்று. வேதமானது பல தேவோபாசனைகளை விளம்பினது போல விஷ்ணு உபாசனையையும் விளம்பிற்றேயன்றி அணி சின்னங் களோடு விஷ்ணுமதமென வொன்று விசேடமாக விளங்க விதித்த தில்லை. அப்படி விதிக்கப்பட்டது சிவமதமொன்றே யெனற்குச் சிவசின்ன உபநிடதங்களே சான்றாகும். (𑌤𑍍𑌰𑌿𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑌂 𑌯𑍇 𑌵𑌿𑌨𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌨𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌶𑌿𑌵𑌮𑍇𑌵 𑌤𑍇। 𑌧𑌾𑌰𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌯𑍇 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌧𑌾𑌰𑌯𑌨𑍍𑌤𑌿 𑌶𑌿𑌵𑌂 𑌚 𑌤𑍇॥) "த்ரிபுண்ட்ரம்யேவிநிந்தந்தி நிந்தந்திசிவமேவதே | தாரயந்திசயே பக்த்யா தாரயந்திசிவஞ்சதே||" எனும் பிருஹஜ்ஜாபாலோபநிஷத் வசனம்— 'திரிபுண்டரத்தை நிந்திக்கின்றவரெவரோ அவர் சிவ னையே நிந்திக்கின்றவராவர். அதனை யெவர்தரிக்கின்றனரோ அவர் சிவனையே தரிக்கின்றவராவர்.' எனும்பொருளைத் தருதலானே

விபூதிதாரணம் சிவசின்னமேயன்றிப் பிறதேவ சின்னமன்றென்பதும், உருத்திராக்ஷமென்பது அதன் பெயராலேயே சிவசின்னமாமென்பதும், இவற்றைத் தாரணஞ்செய்துகொண்ட விஷ்ணுமுதலிய தேவர்களுஞ் சிவமதஸ்தரே யென்பதும், சிவமதத்திலுள்ள யாதொரு தேவதைகணித்து யாதொருமதங் கொண்டாடினும் அது— சீதளாதேவியெனும் மாரியம்மை வழிபாடுபோலச் சிவமதத்தி னுட்பட்டதாய்ச் சிவசின்னமே யுடையதாய் நிகழத்தக்கதென்பது முணர்ந்துகொள்க. இப்படிச் சிவமதமொன்றையே யுயர்வாக விதித்து நிலவுதல், தேவர்களிற் சிரேஷ்டரான திரிமூர்த்திகளும் வந்திக்கும் நான்காவது பொருள் சிவமென்று ஒருதெய்வத்திற்கே பரத்துவம்பகர்கின்ற அவ்வேதத்திற்குஞ் சால்பிற்றேயாம். வேறுகூறல் பொருந்தாது. என்னை? அஹங்காரத்தால் இந்நடுவு நிலைவிடுத்த தக்ஷப்பிரஜாபதியும், அவனது கொள்கைக் கியைந்திருந்த விஷ்ணுமுதலிய சருவதேவர்களுஞ் சிவபெருமானாற் றண்டிக்கப்பட்டுள்ளாராகலின். இச் சிவமதமுடிவே ஜனனமரணரஹிதசிவப்பேறென்பதும் ஈண்டறியற்பாற்று. ஈண்டு, வாஸுதேவோபநிஷத்திற் சொல்லப்பட்ட சந்தநோர்த்துவபுண்டரம் மதத்தை விளக்காதோவெனின்,— அங்ஙனம் பஸ்மதாரணமும் விதிக்கப்பட்டமையானே, கிருஷ்ணன் காலத்தினுட்பட்ட அப்புண்டரமே தனிநின்றொரு சமயம் விளக்காதென்க. துளஸீகாஷ்டதாரணமுங் கூறிற்றிலையென்க.

## ௩. சித்திரோர்த்துவபுண்டரவைணவம்புறச்சமயமே.

---

வேதசம்பந்தமானது உட்சமயமென்றும், அச் சம்பந்தமிலாதது புறச்சமயமென்றுஞ் சமயப்பாகுபா டேற்பட்டிருத்தலில் வைணவம் புறச்சமயமேயாம். இதுவே வேதபாஹ்ய சமயமென்றும், பாஷண்டமென்றும், பதிதமென்றும் பகரப்படும். இந்நூலாரம்பத்திற் காட்டப்பட்டபடி வைணவத்திற்கு முக்கியப்பிரமாணம் பாஞ்சராத்திரமென்று இருகூற்று வைணவரு மொப்புக்கோடலும் இதனை வலியுறுத்தும். அன்றி, தென்னாசாரியப்பிரபாவம் ப - கூ - ல்—

“ திருவாய்மொழியைச் சுருதி ஸ்ரீபாஞ்சராத்திரங்களினும் புராணங்களினும் அநாதியென்று சொல்லுகையால் வடமொழியென்றது தென்மொழியை

நினைத்திறேயென்று ஆசாரியஹ்ருதயத்தில் அழகியமணவாள நைநாசாரியர் அருளிச்செய்தார்."

என்று வடமொழிவேதத்தை யிகழ்ந்து, ஆழ்வான் தென்மொழியி லெழுதிவைத்த சுவடியைப் புகழ்ந்தெழுதிய வசனமும் வைணவம் வேதபாஹ்யமென்பதை நிலைபெறுத்தும். அவ்வாசாரிய ஹ்ருதயமெனுஞ் சுவடியின் கூ-ம் பக்கத்தில் "வடமொழி மறையென்றது தென்மொழிமறையை நினைத்திறே" எனவிருக்கவே எம் கண்கள் கண்ணுறலாயின. "நாலு வேதங்களிலும் பரமபுருஷார்த்த மின்னதென்று அகப்படாமல் பின்பு இப் பாஞ்சராத்திரத்தைக் கற்றான்" என்று அப் பாஞ்சராத்திரமே கூறுகிறதெனக் குயில்வரென்பதாகப் பூதாரனெழுதிய செய்தியை, இந்நூலாரம்பத்திற்றானே காட்டினோமாகலின், வேதத்திற்கும் வைணவத்திற்குந் தூரம் அதிகமென்பது தேற்றம். இங்ஙனம் திரிமூர்த்திகளி லொருவனை விட்டுணுவையே பெரியதெய்வமென் றறுதியிட் டுரைக்குமுறை— பாஞ்சராத்திரத்தினன்றி வேதத்திலில்லையென்பது 'விட்டுணுபரத்துவம் வேதோக்தம்' எனும் வாயை மூடுமூடென் றெழுவதாயுளதன்றோ. இவற்றை யொருசிறிதுமுணரா மதாந்தகார வைணவரே தஞ்சமயம் வைதிகமான வட்சமயமென் றுபிதற்றுவர். முதலில் அவரணியுஞ் சின்னங்கள் வைதிகமாயினன்றோ பின்பு அச் சமயமும் வைதிகமெனற் கிடனுண்டாம். முகத்திலில்லாத ஸ்ரீதேவி புறத்திலுளதாங் கொல்லோ! உய்த்துணர்க. பாஞ்சராத்திர யோக்கியதை இந்நூலாரம்பத்திலேயே வந்துளது. அங்ஙனஞ் சூதசங்கிதையும், கூர்மபுராணமும் அவ்விருட்டுப்புத்தகத்தை வேதபாஹ்யமென்றல் விளக்கப்பட்டமையானும்; இந்நூலின் ருசு-ம் பக்கத்திற் கூறியவாறு, பிரமசூத்திரத்து உ-ம் அத்தியாய பரமத நிராகரணத்திற் பாஞ்சராத்திரமதம் படிக்கப்பட் டொழிந்தமையானும்; ஸ்ரீநீலகண்டசிவாசாரியர்—

"வேதவிரோதமான தப்தமுத்ராதாரணங் கூறுதலும் அப்பாஞ்சராத்ரத்தி லுள்ளமையால் அது பிரமாணமாகாது: பௌத்தம்போலப் பாஞ்சராத்ரமுமாம்."

என்றுரைத்தது உ-ம் அத்தியாயத்து உ-ம் பாதபாஷ்யமென்பதை வைணவர் வெளியிட்ட பிரமசூத்திரத்திராவிடபாஷியமென்பதி லுள்ளமையானும்; திருக்கைலாயபரம்பரைச் சந்தானகுரவரு ளொருவராகிய ஸ்ரீ அருணந்திசிவாசாரியர் சிவஞானசித்தி

யாரில் உலகாயதன் மதமுதலிய புறச்சமயங்களைக்கூறி மறுக்கும் பரபக்கத்திலே பாஞ்சராத்திரிமதத்தையுங்கூறி மறுத்தமையானும்; சிவப்பிரகாசத்திற் "புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்" என்றும், நெஞ்சுவிடுதூதில்—

"உற்றதிரு நீறுஞ் சிவாலயமு முள்ளத்துச்
செற்ற புலையர்பாற் செல்லாதே—நற்றவஞ்சேர்
வேடமுடன் பூசையருண் மெய்ஞ்ஞான மில்லாத
மூடருடன் கூடி முயங்காதே—நீட
வழித்துப் பிறப்ப தறியா தரனைப்
பழித்துத் திரிபவரைப் பாராதே"

என்றும் மேலைக் குரவருளொருவராகிய ஸ்ரீ உமாபதிசிவாசாரிய ரருளிச்செய்தமையானும் புறச்சமய வைணவத்தைப் புத்தமதத்தோடுசேர்த்தொதுக்கி, இலிங்கபுராணத்து உத்தரகாண்டத்து அ-ம் அத்தியாயத்தில் "வைதிகசைவத்தின் வழிநின்ற வல்லோர்" எனவும், ஸ்ரீதாயுமானார்பாடலில் "வைதிகசைவ மழகு" எனவும் வருமாறு உட்சமயமாகிய வைதிகசைவத்தை யினிது பேணிநிற்றலே மதுகை யருட்சைவர்கட்கு மாண்பாம். ஈண்டு, சித்திரோர்த்துவ புண்டராதிகளைச் சித்து வேதத்தில் விதிக்கப்பட்ட விஷ்ணுவை வழிபடுதல் வைதிகமாகாதோவெனின்,—இந்நூல் நுக-ம் பக்கத்திற் காட்டப்பட்ட சூதசங்கிதைத் திருவிருத்தத்தில் "அஞ்சன் கரியோ னுருத்திரன்மற் றொருவர்க் கொருவ ரதிகரென—விஞ்ச நினையா ரபேதமென நினைத்துப் பேசும் வீணர்களும்" எனவுள்ள வாக்கியங்களின்படி பிரமனுக்கதிகன் விஷ்ணு விஷ்ணுவுக்கதிகன் உருத்திரனென நினையாதாரும், இம்மூவரையுஞ் சமமென நினைத்து அவ்வாறு பிதற்றும் அபலர்களும் பாடண்டிகளாகின்றமையின், இம்மூவர் மேலாந் தெய்வமாகிய சிவபெருமானோடு விஷ்ணுவைச் சமம்பண்ணுமல் அடிமைத்தானத்தில் வைத்துச் சிவசின்னமபுனைந்து வழிபடுதல் வைதிகமாகும். அல்லாக்கால் அவைதிகமுந் தோடமுமாம். இவ்வாறு விஷ்ணுவை வழிபடுதலைத்தான், சித்திரோர்த்துவ புண்டரோற்பத்திக்கு முன்னிருந்தவரும், சூதசங்கிதையைப் படித்துப் பிரமஸூத்ரபாஷ்யஞ் செய்தவருமான ஆதிசங்கராசாரியரும் சைவமுதலிய ஷண்மதங்கூறி அவற்றுள் வைஷ்ணவமு மொன்றென்றனரென்ற லேற்புடைத்து. பின்பு கிறிஸ்துமதகுருவாய் இத்தேயத்து மதஆராய்ச்சியுடையோரா யிருந்த வீர

மாமுனியென்பாரும் பாடண்ட பாஞ்சராத்திரிகளை நோக்கி இவர் வேதபாஹ்யரே யென்றுணர்ந்து தமது *சதுரகராதிக்கண் உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பாட்டாசாரியமெனும் ஆறும் புறச்சமயமென வரைந்தனரென்றலுமியைபு. மீமாஞ்சையென்றது கருமமீமாஞ்சைமதத்தை. சில சிமார்த்தர், அந்தச் சங்கராசாரியராற் பதினெட்டுமுறை படித்துணரு மேம்பாடுபெற்றுள்ள சூதசங்கிதையைப் படியாமே வேறுபுத்தகம் படித்தலும், சித்திரோர்த்துவபுண்டரதாரிகள் வீட்டிலுண்டலுங் கலிவிருத்தியின் கதழ்வுபோலும்.

## ச. வைகுண்டம் நித்தியமோக்ஷஸ்தானமன்று.

கிருஷ்ணோபநிஷத் "வைகுண்டம் ஸ்வர்க்கவாஸிநாம்" என்றபடி வைகுண்டமானது ஊர்த்துவலோக சுவர்க்கங்களிலொன்றேயாம். அதனை, 'ஸ்வர்க்க' சப்தத்தானே "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்கம்" எனும் முக்திகோபநிஷத் வசனம் சோதிட்டோமாதி கரும அநித்திய பலனோடு கூட்டுகின்றது. "ஸர்வஸங்கல்பரஹிதஸ் ஸர்வாநந்தமயச்சிவ: |" என்ற தேஜோபிந்தூபநிஷத்தும் ஸச்சிதாநந்தவஸ்துவாகிய அந்தச்சிவமொன்றே யாண்டுமுளதென்பதை நிறுவுமாற்றானே (𑌨𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑍋𑌵𑍈𑌕𑍁𑌣𑍍𑌠𑌂 𑌨𑌕𑍈𑌲𑌾𑌸𑌂𑌨𑌚𑌾𑌨𑍍𑌯𑌤𑌃।) "நப்ரஹ்மலோகோ வைகுண்டம் நகைலாஸம் நசாந்யத: |" என்று வைகுண்டத்தைப் பிரகிருதிசம்பந்தமாக்கித் தள்ளிற்று. அங்ஙனங் கைலாசமு மிருக்கின்றதேயெனின்,— அது பிரகிருதி சம்பந்தமானதேயன்றி அப்பிராகிருத கைலாசமன்றென்க. இப்படி வைகுண்டத்தையுங் கூறுதல் கூடாதோவெனின்,—கூடாதென்க. என்னை? வேதமானது, பிரகிருதியின் முக்குணமூர்த்திகளி லொருவனே விஷ்ணு அவன் பிரகிருதிவாஸ ஜீவனெனும் பசுவென்று தீர்மானித்தற்கும், வைகுண்டம் ஸ்வர்க்கமென்ற சுருதிக்கும் பிற நியாயங்கட்கும் விரோதமுண்டாமாகலின். ருக்வேத நாதபிந்தூபநிஷத்—

---

* தமிழ்கற்கிற மாணுக்கர் முதலானவர்களுக்கு உபயோகமாகத் துரைத்தன வித்தியாவிசாரணைத்தலைவர் உத்தரவின்படி பரிசோதிப்பித்துச் சென்னையில் 1860-ம் ௵ ௫௦௬ - பக்கங்களிற் பதிப்பிக்கலான பிரதியின் ௩௩௨ - ம் பக்கத்தி லுண்டு.

(𑌷𑌷𑍍𑌠𑍍𑌯𑌾𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌂𑌸𑌪𑍍𑌤𑌮𑍍𑌯𑌾𑌂𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌂𑌪𑌦𑌮𑍍।
𑌅𑌷𑍍𑌟𑌮𑍍𑌯𑌾𑌂𑌵𑍍𑌰𑌜𑌤𑍇𑌰𑍁𑌦𑍍𑌰𑌂𑌪𑌶𑍂𑌨𑌾𑌂𑌚𑌪𑌤𑌿𑌂𑌤𑌥𑌾 ।
𑌨𑌵𑌮𑍍𑌯𑌾𑌂𑌤𑍁𑌮𑌹𑌰𑍍𑌲𑍋𑌕𑌂𑌦𑌶𑌮𑍍𑌯𑌾𑌂𑌤𑍁𑌜𑌨𑌂𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 ।
𑌏𑌕𑌾𑌦𑌶𑍍𑌯𑌾𑌂𑌤𑌪𑍋𑌲𑍋𑌕𑌂𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑍍𑌯𑌾𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌮𑍍 ।
𑌤𑌤𑌃𑌪𑌰𑌤𑌰𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌂𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌂𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌂𑌪𑌰𑌮𑍍 ।
𑌸𑌦𑍋𑌦𑌿𑌤𑌂𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌮𑍁𑌦𑌯𑍋𑌯𑌤𑌃 ।
𑌅𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑌂𑌮𑌨𑍋𑌲𑍀𑌨𑌂𑌯𑌦𑌾𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌅𑌨𑍁𑌪𑌮𑌂𑌶𑌿𑌵𑌮𑍍)

"ஷஷ்ட்யாமிந்த்ரஸ்யஸாயுஜ்யம் ஸப்தம்யாம்வைஷ்ணவம்பதம் |
அஷ்டம்யாம்வ்ரஜதேருத்ரம் பசூநாம்சபதிம்ததா |
நவம்யாந்துமஹர்லோகம் தசம்யாந்துஜநம்வ்ரஜேத் |
ஏகாதச்யாந்தபோலோகம் த்வாதச்யாம்ப்ரஹ்மசாச்வதம் |
தத꞉ பரதரம்சுத்தம் வ்யாபகம்நிர்மலம்பரம் |
ஸதோதிதம்பரம்ப்ரஹ்ம ஜ்யோதிஷாமுதயோயத꞉ |
ஆதிந்த்ரியகுணாதீதம் மநோலீநம்யதாபவேத் |
அநுபமம்சிவம்"

என்று கூறுமாற்றுனே சு - வதான இந்திரசாயுச்சியத்தின் மேலே எ - வதாகவுளது வைகுண்டமெனும் விஷ்ணுபத மென்ப தூஉம், அ - வதாகவுளது கைலாஸமெனும் உருத்திரபதமென்ப தூஉம் வெளியாயினமையின், அந்த வைகுண்ட கைலாஸங்கள் பிர கிருதிசம்பந்தமெனல் வலியுறுத்தப்படுவதாயிற்று. அவை, ஜம்புத் தீவின் மத்தியி னிலைபெற்றதாய்த் திக்பாலக ரெண்மரிருக்கும் எட் டுச் சிகரங்களையுமுடைத்தாய் விளங்கும் மேருவிலுள்ளனவாம். விஷ்ணுபதத்திற்கு மேலான அவ்வுருத்திரபதத்தின்மேலே கூ - வது மஹர்லோகம், கO - வது ஜநலோகம், கக - வது தபோலோகம், க௨ - வது பிரஹ்மசாச்வதமென்பதூஉம்; அதன்மேலே எல்லாச் சிறப்புமுள்ளதாய் விசேஷமனோலயத்தில் வெளிப்படுவதாயுள்ள சிவம் ஒருபடித்தாயுள்ளது : அது சிவபதமென்பதூஉம் மேலைச் சுருதியி னறியப்படுதலானே எல்லாவுலகுமான பிரகிருதிநீங்கிய வெல்லையிலேயே சிவகதியென்பது தெள்ளிது. "அநேககோடி ப்ரஹ்மாண்டம் ஸர்வமித்யேதிநிச்சிநு |" என்று மேலைத் தேஜோ பிந்தூபநிஷத்துரைத்தலும் அது. சு - வது இந்த்ரசாயுஜ்யமென்ற மேலைச்சுருதி, மேருவின் கண்ணதாய அதன்மேம்பட்ட பிரமபதத்

னைக் கூறுமல் அதனை விஷ்ணுபதத்திலடக்கிக் கூறியபடி, மேலே விரஜாநதி யெம்பக்கமான வைகுண்டபதத்தையுந் தபோலோகத்தின் மேலாய பிரஹ்மசாச்வதத்தி லடக்கிக் கூறிற்றென்பது சண்டைக் கையாம். நிற்க. வைகுண்டம் "பரமபதம்" எனும் பெயருடைத்து: அதனாலது எல்லாக்கதிகளினு முயர்ந்ததாகுமென்று வைணவர் கூறுவரேல், யஜுர்வேத மண்டலப்ராஹ்மணோபநிஷத்—

([illegible])

"தன்மனோ விலயம்யாதி தத்விஷ்ணோ பரமம்பதம் | தல்லயாச்சுத்தாத்வைதஸித்திஃ | பேதாபாவாத் | ஏததேவ பரம தத்வம் |"

என்று கூறுதலானே அச்சொற் பயன்படுமாறின்று. அருத்தம்:— 'மனோலயமுண்டாய போது விஷ்ணு பரமபதமெய்தும்: அப்பதம் லயமாயபோது சுத்தாத்வைதஸித்தியுண்டாம்: பேதமின்மையே பரமதத்வம்' எனவாம். இந்த அத்வைத சப்தம் "ஸோஹம்பாவோ நமஸ்காரஃ |" எனுமிவ்வுபநிஷத்தில் "சுத்தாத்வைதப்ரஹ்மாஹம்" எனவும், "சுத்தாத்வைதாஜாட்ய எனவும் மேலிரண்டிடத்தில் வந்துளதால் விபரீத வைஷ்ணவ விசிஷ்டாத்வைதமும் ஒழிந்தவா றுணர்க. எம்முடிவினும் மேற்றாயது சுத்தாத்வைத சைவசித்தாந்தம். இதனை, "பொய்கண்டார் காணாப் புனிதமெனு மத்துவித—மெய்கண்ட நாதனருண் மேவுநா ளெந்நாளோ" எனும் ஸ்ரீ தாயுமானசுவாமிகள்பாடலானுமறிக. புனிதம்=சுத்தம். விசிஷ்டாத்வைத சப்தம் வேதத்திலில்லாததுபோலச் சுத்தாத்வைதசப்தமு மில்லையென்பார் மாற்றமெல்லா மிங்ஙன் அவலமேயாயின. விசிஷ்டாத்வைதத்திற்குப் பூதூரன் பொருள் கொள்ள விதித்தவகை:— விசிஷ்டமென்பதை யிருமுறை அநுசந்தித்துக்கொள்ளவேண்டும்: அவற்றுளொன்று ஸூக்ஷ்ம சித்சித்விசிஷ்ட காரணப்ரஹ்மும், ஒன்று ஸ்தூல சிதசித் விசிஷ்ட காரியப்ரஹ்மமுமாம்: இவ்வித ப்ரஹ்மமானது அத்வைதம்= பேதமில்லாத அபேதம், ஒன்றே. சித்தெனப்படுவது ஈச்வரனுக்குச் சேஷபூதமாய் நித்யமாயிருக்கிற ஜீவன். அசித்தெனப் படுவது ப்ரக்ருதி, மஹத், அஹங்காரம், பஞ்சதன்மாத்ரையாதி உ௪ - தத்வமாகிய பரிணாம ஜடபதார்த்தம். ஈச்வரனாகிய நாராயணனே ப்ரஹ்மம். சொற்ற ஜீவனானது பிரமன்முதல் எறும்புவரை பத்த

ரென வொருவகையும், கர்மஜ்ஞான பக்திகளை யநுஷ்டித்துப் பகவத்கருணையாற் பந்தநீங்கி நித்யவிபூதியிலிருக்கிற சுக வாமதேவர் முதலிய முக்தரெனவொருவகையும், ஈச்வரனுடைய நித்யசங்கல்பத்தின லெப்போதும் ஸம்ஸாரமற்றவர்களாய்ப் பரமபதத்திலிருக்கும் அநந்த கருட விஷ்வக்ஸேநாதி நித்யரெனவொருவகையுமாம் என்று இந்நூல் ௧௬௬ - ம் பக்கத்திற் காட்டப்பட்ட பிரமசூத்திரத் திராவிடபாஷிய மென்பதி லெழுதப்பட்டுள்ளன. இவ்வருத்தத்தானே நாராயணனுக்கு மூத்தமகனான பிரமதேவனே வைஷ்ணவ சித்தாந்தத்தை யொப்பாதுளனென்பது நன்குசித்தித்தது. அதனை யேனையோர்கோடல் தீயூழ்வீக்கமேயாம். என்னை? நரகெலாம் புகுவோர் நவீன நாரணமதமே பற்றுவராகலின். "ஈச்வரனுடைய நித்யசங்கல்பத்தின லெப்போதும் ஸம்ஸாரமற்றவர்களாய்ப் பரமபதத்திலிருக்கும் அநந்த கருட விஷ்வக்ஸேநாதிநித்யர்" என்றதை, அவர்க ளிப்பூமியிற் பிறந்தார்கள் ஸம்ஸாரிகளாகவு மிருந்தார்களெனுங் குருபரம்பரைக்கூற்றுக்கள் பொய்ப்படுத்துவன வாயின. ஈண்டு, அவர்களுடைய அமிசங்களே யப்படிப் பிறந்தனவென்று சமாதானஞ் சாற்றுழியும், அமிசங்கள் அவரின் வேறுகாவெனு நியாயத்தால் அது தள்ளுண்டுபோம். மஹாஸ்காந்தபுராணத்துத் தக்ஷகாண்டத்தின் ௧௬ - ம் அத்தியாயம்—

"ரூரோததாங்கணபோ விஷ்வக்ஸேநோ திநிஷ்டுர꞉ |
தமேநம்பைரவச்சீக்ரம் ஸந்தாட்யசகபோலயோ ||
ப்ரோதயித்வாஸ்வசூலாக்ரே விஷ்ணோ꞉ப்யாசமாயயௌ |
ததாஸஸம்ப்ரமம்விஷ்ணுர் போகசாயீமஹாபயாத் ||"

என்றுரைக்குமாற்றானே ஸ்ரீபைரவமூர்த்தி வைகுண்டம்புக்கபோது அங்கேயெதிர்த்த விஷ்ணுவடிவம்பெற்ற விஷ்வக்ஸேநனை, அவர் கன்னத்திலடித்துச் சூலத்திற் கோத்துக்கொடு வருதலைக் கண்டு பயந்தெழுந்தவிஷ்ணு, தன்னுடைய இரத்தமெல்லா மவரது கர கபாலத்தில்வடித் துயிர்சோர்ந்ததும், பின்னை யவரது கிருபா கடாக்ஷத்தா லவ்விருவருமுயிர்பெற்றெழுந்தது மறியப்படுதலானே அவ் வைகுண்டவாழ்க்கையும், நித்யரது யோக்கியதையும் வெளியாயின. "விஷ்வக்ஸேநோஜநார்த்தந꞉" என்று அமரஸிம்ஹ மியம்புதலின் விஷ்ணுவும் விஷ்வக்ஸேநனே. பல்லசுரர்களாற் பன்முறை கவரப்பட்ட வைகுண்டத்திலிருக்கும் விஷ்ணுவையும் ஏனைத் தேவரையுந் தன தாணைக்குட்படுத்து அனேகபிரமாண்டாதிபதியா

யிணையின்றியிருந்த சூரபதுமனை வென்றிவேல்கொடு பிளந்தருளிய வீரனும், அகண்டாநந்தஸ்வரூபனும், எம்பெருமானுமாய் விளங்கும் ஸ்ரீ குமாரபரப்ரஹ்மத்தின் திருவடிதாங்குசெல்வம் வாய்ந்த திணிமயிலானுங் கொடியாகிய கோழியானுஞ் சூரனுதி நான்கு பூதங்களானும் விஷ்ணுலோகமுதலிய தேவலோகங்கள் அழிக்கப்பட்டபோது கோறல்புரியப்பட்டுப் பின்னர் அந்தப்பிரஹ்மத்தினது திருவாக்குமகிமையா லுயிர்பெற்றுலாவிய அக்கருடனுக்கு நித்தியத்தன்மை நிகழ்த்தியதும் இற்றெனவறியற்பாற்றே. விரிப்பிற் பெருகும். இனி, பரமபதமென்பதன் பொருடா னென்னையோ வெனின்,—சுவர்க்கங்கள் பலவுள்ளு முயர்வுடைத்தென்று மென்க. அசித்தாகிய பிரகிருதியின் சுவரூபமானது சுத்தசத்துவம், மிசிரசத்துவம், சத்துவசூனியமென மூன்றும். அவற்றுள் சுத்தசத்துவமே பரமபதம், மிசிரசத்துவமே இலீலாவிபூதியான இப்பிரபஞ்சம், சூனியமே நிலையிலாக்காலத்ததென்பது இராமாநுஜமத சித்தாந்தமாகலானும், இராஜத [illegible]சத்தோடு சேர்ந்த அந்தச்சத்துவமும் "அஸத்வ மரஜஸ்க மதமஸ்க மமாய மபயம்" என்று நிருஸிம்ஹதாபிந்யுபநிஷத்திலும், "பாவாதீதம் த்ரிகுணரஹிதம்" என்று சுகரஹஸ்யோபநிஷத்திலும் பிறவற்றிலுங் கழிக்கப்பட்டபடி மாயையின்குணமாகவே யிருத்தலானும் அப்பரமபதம் சுவர்க்கபூமியென்பதும், அப்ராகிருதம் அன்றென்பதும் வஜ்ரலேபமாக நாட்டப்படுமென்க. மேலும், பல்லாயிரகோடி அண்டங்களும் நாலிலொருகூறென்றும், பரமபதமென்கிற வைகுண்டம் மற்ற மூன்றுகூறென்றும், அதனலது "திரிபாத்விபூதி" என்றும் வைணவர் கூறும்வழியாகவும்—அந்த அண்டங்கள் பிரகிருதியின் நாலிலொருகூறனபடி ஏனைய மூன்றுகூறுமாகின்றமையின் வைகுண்டம் பிரகிருதி மாயா காரியமென்பது சித்திக்கும். அப்பதமும், ருக்வேதஸம்ஹிதா—

([Grantha verse, illegible]।
[Grantha verse, illegible]।)

" தவச்ரியேமருதோமர்ஜயந்தேருத்ரயத்தேஜநிமசாருசித்ரம் | பதம்யத் விஷ்ணோருபமந்யதாயிதேநபாஸிகுஹ்யம் | நாமகோநாம் | "

என்று கூறுமாற்றனே தேவர்யாவருஞ் சிவலிங்காராதனையால் எல்லா ஐசுவரியமு மெய்தினர். இலக்குமியோடுகூடிய விஷ்ணுவும் பரமபதவாழ்வடைந்தன னெனுஞ்செய்தி காணப்படுதலிற்

சிவபிரானாற் கொடுக்கப்பட்டதேயாம். இச்செய்தி—சூதசங்கிதை யின் பிரசாதக்கிரம அத்தியாயத்தினுமுளது. இதனை—

"நம்பி நான்முகன் சத்திய வுலகநண் ணியதும்
வெம்பு நேமியான் வைகுந்த நகரமே வியது
மும்பர் மற்றையோர் தத்தம துறையுள்வாழ் வதுவுந்
தம்பி ரான்பிர சாதமென் றேமறை சாற்றும்."

எனுந் தமிழ்மொழிபெயர்ப்பாகவுள்ள அவ்வத்தியாயச்செய் யுளானுமறிக. இப்படி வாழ்வுகொடுத்தருளிய பெருமானை ஆழ் வார்க்குங் கீழானவனென நிந்திக்குமாறு குருபரம்பரையெனுங் குருட்டுப்பரம்பரை யெழுதினேனும் நமனாற்சவட்டப்படுபவனன் றோ. இப் பரமபதமல்லாத நித்யாநந்த சிவகதியும் உபநிஷத்துக் களிற் பரமபதமெனப்படும். விகுண்டையெனும் பெயரிய வொருத் திக்கு மகனானகாரணத்தால் விஷ்ணு 'வைகுண்டன்' எனப்பட் டான் : அவன் வாஸஸ்தானமும் வைகுண்டமெனப்பட்டதெனற்கு (விகுண்டாயாம் மாதரி ஜாதத்வாத்வைகுண்டம்) "விகுண்டாயாம் மாதரி ஜாதத்வாத்வைகுண்டஃ" என்பது பிரமாணமென்பதை லிங்கா பட்டீயத்திற் காண்க. இவ்வித ஸ்வர்க்கஸ்தானத்தை நித்யவை குண்டமென்று மஹாநாராயணோபநிஷத்து நிகழ்த்தினும் அது, பிரளயகாலத்தின் மரணமாந்தேவர்க்கு மரணமிலாரெனும் பொருள் பயக்கத்தக்க அமரரெனுஞ்சொல்லும், அழிவுள்ள விஷ்ணுவுக்கு அழிவிலானெனும் பொருள்பயக்கத்தக்க அச்சுதனெனும் பெய ரும் ஏற்பட்டாங் கேற்பட்டதென்று கோடலிற் பாதகமொன்று மின்று. அவ்வுபநிஷத்தே—

"சுத்தஸத்வமயோல்லாக்ருஹீத நிரதிசயாநந்தலக்ஷணோ மாயோபாதிகோ நாராயண ஆஸீத் ஸவஸநித்ய பரிபூர்ண பாதவிபூதி வைகுண்டநாராயணஃ"

என்று கூறுதலின் மாயையினது ஸத்வகுண ஸம்பந்தத்தை நிரதிசயாநந்தமென்பதூஉம், நாராயணன் மாயோபாதிக னென்ப தூஉம் வெளியாதல் காண்க. இதுவேயுமன்றி அவ்வுபநிஷத் "விரஜா நதீம்" என்றியம்புமிடத்தில்—"கேவலமந்த்ரமய திவ்யதேஜோமய நிரதிசயாநந்தமய மஹாவிஷ்ணுஸாரூப்யவிக்ரஹம்" என்றுகூறும் வசனங்களானே, விரஜாநதியின் மூழ்கிப்பெறும் விஷ்ணுவடிவு கேவல மந்த்ரசரீரமும், வைகுண்டம் போகலோகமுமாம். இவ் விடயம் தே-குருபரம்பரை ப-ஃ-ல் "விண்ணூரான வைகுந்த

மாநகரிலே திவ்யபோகம் நடவாநிற்க" என வரையப்படுவதுமாயிற்று. அந்நகரத்தின் அநுபவம்:—ய - ப்ரபாவம் ப - கOஉ - ல்—

"இரண்டு முலைக்காம்பிலும் மாறாதே பெருகுகிற பாலை ஆராவமுதமாகப் பருகுவார் நாமன்றோ" என்று வைணவர் பேசிக்கொண்டனரென்பதாக வரையப்பட்டசொற்களானும், "நாராயணன்......கிழத்தனமில்லாமல் நித்யம் இருபத்தைந்து வயதுடனே கூடியிருப்பவன்" என்பதை உஉ - ம் பக்கத்திற் கொண்டுள்ள விஷ்ணுதத்வவிளக்கம் ப-கஉக,கருO,கருக-ல் "விரஜையைக் கிட்டி அதில் தீர்த்தமாடி......சதுர்ப்புஜ சங்கசக்ரங்களும் நித்யமான இருபத்தைந்துவயதும் ஆயிரத்தெட்டுமாற்றுத்தங்கம்போன்ற கோடிஸூர்யப்ரகாசமுடைய அப்ராக்ருத விக்ரஹத்தையும்பெற்று" வருமுக்தனை வைகுண்டநாராயணன்றூக்கி "லக்ஷ்மியின் திருக்கரங்களில் சாய்க்கையில் ஸ்ரீ பெரியபிராட்டியார் அந்தப் புத்ரனுக்கு ஸ்தந்யபானந் தந்து முத்தப்பட்ட" பின்னே அவன், "ஸ்ரீ பரமபதத்தில் நித்யஸூரிகளுடன்கூடி நித்யாநந்தத்தை அநுபவிப்பான்" என்று வரையப்பட்ட சொற்களானும், வ · தநுபாம்பரை ப - உO - ல் "ஸ்ரீவைகுண்டத்தில் திருமாமணிமண்டபத்திலே நித்ய ஸூரிகளோடு கலந்து குணாநுபவ கைங்கரியஞ் செய்வதே மோக்ஷம்"

என்று வரையப்பட்டமொழிகளானும் யௌவனபோகத்திற்குரிய உரு - வயதுள்ள விஷ்ணுவினுருவம் பெறுவோர் இலக்குமியின் குசத்தைச்சுவைத்துக் குடித்தலும், அங்குளாரோடு கூடிக் குணநுபவத்தொழி லிழைத்துக்கொண்டிருத்தலுமா மென்பது அறியப்படுவதாயிற்று. வைஷ்ணவ ரஹஸ்யங்கட்கெல்லாம் ரஹஸ்யபல னிவ்வநுபவமே. உரு - வயது பாலுண்பாலற் குரியதன்று. விரிப்பின் விபரீதமாகும். சௌந்தரியலகரி "கலைமகளும் பொதுமடந்தை கமலையுமற் றவளே—மலைமகள் கற்புடைய வனிதையெனப் பகருங்—குலமறைகள்" என்று கூறுதலிற் கமலையெனும் இலக்குமியைப் பொதுமகளென்றதும் இங்ஙனங் கருதத்தக்கது. வைகுண்டம் போகபூமிகளிற் சிறந்ததென்பது கருதியே—

"தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு."

என்ற குறளில் "தாமரைக்கண்ணா னுலகு" என்றதற்குச் "செங்கண்மாலுலகம்" என வுரையாசிரியரும் பொருள்செய்யலுற்றனர். அவர்க்கது கருத்தாயினும்—

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்."

என்ற குறளில் "மலர்மிசை யேகினன்" என்றதற்கு ஆன்மா வின் இதயதாமரையிடத் திருப்போனெனக் கொண்டபொருளே யே, இதற்குங் கோடல்வேண்டும். என்னை? சிற்றின்பத்தைப்புகழ் தற்கு இணையற்ற சிவஞானப்பேரின்பத்தையே யிழித்துக்கூறன் மரபாகலின். 'மலர்மிசை யேகினன்' என்ப தெப்படிப்பிரமதேவ னைக்காட்டாதோ, அப்படியே 'தாமரைக்கண்ணன்' என்பதும் விஷ்ணுவைக் காட்டாது. 'கண்ணன்' என்றது இடத்தானென்ப தொக்கும். கண்=இடம். சிவபெருமான் ஆன்மாவி னிதயதா மரையி லிருப்போனென்பது.—சுத்தாத்வைதத்தைச்சொல்கின்ற மண்டலப்ராஹ்மணோபநிஷத்—

([illegible])

"புத்திகுஹாயாம் ஸர்வாங்கஸுந்தரம் புருஷரூபமந்தர்லக்ஷ்ய மித்ய பரே | சீர்ஷாந்தர்க்கதமண்டலமத்யகம் பஞ்சவக்த்ரமுமாஸஹாயம் நீலகண் டம்ப்ரசாந்த மந்தர்லக்ஷ்ய மிதிகேசித் | அங்குஷ்டமாத்ர: புருஷோந்தர் லக்ஷ்யமித்யேகே | "

என்றும், பஞ்சருத்ரோபநிஷத்து னொன்றாகிய சுவேதாச் வதரம்—

([illegible])

"தமீச்வராணாம்பரமம் மஹேச்வரம் .....ஏகோதேவஸ் ஸர்வபூ தேஷு கூடஸ்ஸர்வவ்யாபீ ஸர்வபூதாந்தராத்மா | "

என்றும், பஞ்சப்ரஹ்மோபநிஷத்—

([illegible])

"ஸர்வேஷாம் ஜநகம்பரம் ஈசாநம்பரமம்
வித்யாத்ப்ரேரகம் புத்திஸாக்ஷிணம்"

என்றும், பிருஹதாரண்யகோபநிஷத்— 'அனைத்திற்கும் அதி பதியான ஈசானன் இருதயாகாசத்தி லமர்ந்தனன்' எனும் பொரு ளைத் தருமாறு—

([illegible])

"யஏஷோந்தர்ஹ்ருதய ஆகாசஸ் தஸ்மிஞ்சதே ஸர்வஸ்யவசீ
ஸர்வஸ்யேசாநஃ ஸர்வஸ்யாதிபதிஃ"

என்றும், ருக்வேதத்து அ-வது மண்டலம்— 'ஜனங்களிடத்தே அந்தரியாமியா யிருக்கும் உருத்திரனைப் பராசத்தியோடு தியானிக்குமவர் அன்னத்தை நாவினாற் கிரகிக்கின்றனர்' எனும் பொருளைத் தருமாறு—

([illegible])

"அந்தரிச்சந்திதம் ஜநேருத்ரம் பரோமநீஷயா
க்ருஹ்ணந்தி ஜிஹ்வயாஸஸம் |"

என்றும், தமிழ்வேதத்துத் திருவீரட்டானப் போற்றித் திருத்தாண்டகம்—

"புந்தியாய்ப் புண்டரிகத் துள்ளாய் போற்றி"

என்றும் முழங்குமாற்றானே வஜ்ரலேபமாக நாட்டப்படும். இன்னும் இது—

([illegible])

"ஏகஸங்க்யாவிஹீநோஸ்மி த்விஸங்க்யாவர்நஹம்நச | ......
அகாரோகாரரூபோஸ்மி மகாரோஸ்மி ஸநாதநஃ | ......
ஹ்ருதயக்ரந்திஹீநோஸ்மி ஹ்ருதயாம்புஜமத்யகஃ |"

எனும் ஸாமவேத மைத்ரேயோபநிஷத் வசனங்களானும், பிறவற்றானும் வலியுறுத்தப்படும். அருத்தம் :— "*ஒன்றெனு மெண்

* இஃது ஒன்றிரண்டெனாத சுத்தாத்வைதத்தைக் குறிக்கின்றது. "ஏகமேவாத்விதீயம்" எனுஞ் சாந்தோக்யோபநிஷத் வசனம்போல வருவனவற்றிற்கு 'ஏகவஸ்துவாகிய சிவமே அத்விதீயமா யுளது' என்றும், "ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்மம்" எனும் பைங்களோபநிஷத் வசனம்போல வருவனவற்றிற்கு மேலருத்தமே பொருந்த 'அத்விதீயமாயுள்ள பிரமமெனுஞ் சிவம் ஒன்றே' என்றும் பொருள்கொளின், அந்தச் சுத்தாத்வைதமே யேற்படும்.

னும் இரண்டெனுமெண்ணும் அற்றவனுயிருக்கிறேன். அகார உகார ரூபமாயிருக்கிறேன். மகாரமாயிருக்கிறேன். இருதயக்கிரந்தியில்லாதவனு யிருதயதாமரைமத்தியி லிருக்கிறேன்." என்று மஹாதேவனெனுஞ் சிவபெருமான் மைத்திரேயருக் கருளிச்செய்தனனெனவாம். இங்ஙனம் அகாரம் சிவபிரானென் றறியப்படுதலின் "அகரமுதல" என்பதை முதற்கட்கொண்டுள்ள குறளுஞ் சிவபக்ஷமாகவே யர்த்தமாம். ஆயிடைப் "பகவன்" என்பதூஉஞ் சிவனையே விளக்கும். என்னை? குமாரபரப்ரஹ்மத்தைப் "பகவாந்குஹ:" என்று அக்ஷமாலிகோபநிஷத்தும், உமாதேவியைப் "பகவத்யந்நபூர்ணு" என்று அந்நபூர்ணேபநிஷத்தும், "பகவத்யுமா" என்று ருத்ரஹ்ருதயோபநிஷத்தும், "ஹ்ரீங்காரேண ஹ்ருல்லேகாக்யா பகவதீ" என்று திரிபுராதாபிந்யுபநிஷத்தும், சிவபிரானைப் "பகவாந் பரமேச்வர:" என்று மேலை யுபநிஷத்தும், "சங்கரோ பகவாந்" என்று சரபோபநிஷத்தும், "ருத்ரஸ்ஸபகவாந்" "ஸபகவாந் ஸமஹேச்வர:" என்று அதர்வசிரோபநிஷத்தும், "பகவந் விச்வேச்வராய மஹாதேவாய" என்று ஸ்ரீருத்ரநமகமுங் கூறும் வழிப் "பகவத்" சப்தமானது சிவபக்கமா யிருத்தலின், மண்டல புருடனும் பகவனென்பது ஈசனெனுஞ் சிவபெருமாற்கு வியனிலையிலும், மாயனெனும் விஷ்ணுமுதலாயினர்க்கு இழிநிலையிலும் பொருந்தப் "பகவனே யீசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்" என்று கூறினன். இந்நியாயத்தானே யக்குறட்கட் பகவனெனவுளது விட்டுணுவை விளக்காது. "அறவாழியந்தணன்" எனவுளதும் அற்றே. (கடவுள்வாழ்த்திலுள்ள) பிற குறள்களினும் விட்டுணுவை நுழைத்தற் கியையுங்கிளவிக ளில. மேற்போந்த விஷ்ணுதத்வவிளக்கமெனுந் தாதச்சுவடியில்—

ரகஸ்யத்ரயமுணர்ந்துவசனபூஷணுதிகாரிகளான வைணவர்களின்மரணகாலத்திலே, பரமபத வாஸிகளான ஆதிவாஹிகரெனு நால்வர்வந்து அவர்களைத் தூலவுடம்பினின்று நீக்கித் தாங்கள் கொடுவந்த சூக்குமவுடம்பினுழைத்துப் பிரணவரதத்திலேற்றிக்கொண்டு அர்ச்சிராதிமார்க்கமாகச் செல்கையில், அவ்வைணவர்கள் முறையே சூரியமண்டலம், சந்திரமண்டலம், மருத்துக்களுலகு, வசுக்களுலகென்பவற்றையும், சமஸ்தப்பிரமாண்டங்களையும், சப்தாவரணங்களையும், மூலப்பிரகிருதியையும், அந்தப்பிரகிருதிராஜனுய்த் தன்னுடைய உரோமகூபங்களி லனேகப்பிரமாண்டங்கள் பிரகாசிக்கத்தக்கவனுயுள்ள விராட்புருஷனையுங் கடந்து அவனது கிரீடத்தின்மீ திருக்கும் விரஜாநதியின் மூழ்கிச் சூக்குமவுடம்பை வாசனையோடுகழித்து அமானவனது

கரஸ்பர்சத்தால் விஷ்ணுவடிவம்பெற்று மேலேபோய்ப் பரமபதமடைவர். வசனபூஷணாதிகாரிகளல்லாத மற்றை வைணவர் பரமபத மல்லாத பாற்கட னடுமுதலிய விடங்களிலுள்ள விஷ்ணு பதங்களை யடைவர். யோகபலமான ஆத்மாநுபவத்தையே அநுபவித் திருக்குங் கேவலர் சரீரமிலராய் விரஜாநதி யின் அக்கரைக் கணித்தான அந்தரநிஜல மத்தியிலே ஸ்வரூப லக்ஷணங்களில் லாத பிரகாசமொன்றேயுள்ள கைவல்யமெனும்பதத்தை யடைவர். விஞ் ஞானமே பரத்துவமெனு ஞானிகளுஞ் சரீரமிலராய், விரஜாநதிக்கரையி லமர்தபானஞ் செய்துகொண் டிருப்பர். விராட் புருஷனையே பர வஸ்து வெனக்கொண்ட யோகீசர், திகம்பரர், பரமஹம்ஸரெனப்படுங் கபில மதஸ்தரும், தத்தாத்ரேய மதஸ்தரும் அணுவடிவராகி அந்தப்புருஷனது கிரீடஸ்தானத்திலடங்கி யமர்தபானஞ் செய்துகொண்டிருப்பர். அந்தப்புருஷ னது புருவமத்தியிலுள்ள மூலப்பிரகிருதியைச் சக்திமதஸ்தர் அணுவடிவரா யடைவர். பிரமாண்டத்திற்குள்ளே மஹாஜலத்தின்மீது சயனித்துக்கொண்டு பிரமனைப் பிறப்பித்த நாராயணன்—மஹாமேருவின்கண் மூன்று சிகரங்களை யுண்டுபண்ணி நடுச்சிகரத்திற் சத்தியலோகத்தை நிருமித்து அதிற் பிரமன் வதிந்து படைப்புத்தொழில் செய்யவும், கிழக்குச்சிகரத்திற் கைலாயத்தை நிருமித்து அதிலுருத்திரனை வசிக்கவுஞ்செய்து, மேற்குச் சிகரத்திற் றனக் காக வைகுண்டமொன்று நிருமித்து அதன் கண்ணும் வசிக்கின்றனன். அந் தச் சத்தியலோகத்தின் கீழாகப் பூலோகம்வரை அறுவகை யுலோகங்க ளிருக்கின்றன. பிரமனுடன்பிறந்து பிரமருத்திராதிகட்குக் காலசக்கிரமாகச் சுழன்றுகொண்டிராநின்ற சிஞ்சுமாரசக்கிரத்தின்மேலே துருவனை வஸிக்கும் படி செய்தவனும் அந்நாரணனே. ஜோதிலிங்கமென்று இலிங்கபூஜைசெய் யுஞ் சைவரனைவரும் அண்டகடாகாந்தமுள்ள அந்தத் துருவனது தேஜஸி லணுக்களாக வடங்குவர். சொற்ற கைலாயத்தின் கீழுள்ள பட்டணத்தில் அக்கைலாயங்காறும் பிரகாசிக்குந் தேஜஸுள்ள சதாசிவனிருக்கின்றனன். அவனது தேஜஸில் உருத்திர தவசிகளும், சௌப்பிரமணிய சமயிகளும், காணபத்திய சமயிகளுந் தூசிகளைப்போல அடங்குவர்—

எனுங்குழறுபாடுக ளெழுதப்பட்டன. ரஹஸ்யத்ரய வசனபூஷ ணமுதலிய சுவடிகள் வைணவச்சுவடியிலேயே மறுக்கப்பட்டொழி ந்தசெய்திஇந்நூல் கஅரு,கஅசு - ம்பக்கங்களில்வந்துளது. பரமபதம் சிவபிரானால் விஷ்ணுவுக் களிக்கப்பட்டதெனுஞ் சுருதிக்கும், பூதங்க ளோடு நாராயணன் படைக்கப்படுகின்றனன்: அவை இலயமாகும் போது இலயமாகின்றனனெனுஞ் சுருதிக்கும், பிறசுருதிகட்கும் விரோதமாக அஃதெத்துணையுயரத்தில் வைக்கப்படினுங்கீழ்நிலையும் அநித்தியமுமேயாம். "இந்த முக்தன் வருகிறானென்று அலங்காரஞ் செய்திருக்கும் பரமபதம்" என்று அவ் விஷ்ணுதத்வவிளக்கம் ப - கஅo - லும், "திருநா டலங்கரித்தல்" என்று தே - குருபரம்பரை

யிலு மெழுதப்பட்ட செய்தியும் அலங்கரித்தாலன்றி யலங்காரமிலாவொரு நாடேயென்று அதன் அநித்தியத்தைவிளக்கும். வைதரணிநதி நரகத்தைக் குறிக்குமாறு விரஜாநதியும் வைகுண்டஞ் சுவர்க்கமென்பதைக் குறிப்பதாகுமென்பதும், பாவபுண்ணிய சம்பந்தமான இவ்விரண்டுமற்ற மோக்ஷமே அதீத சிவகதியென்பதுந் தெள்ளியோர்க்கே புலப்படும். அழிவுக்குரிய விஷ்ணுசாரூப்பிய கண்டத்துவ கதியை அழியாததாகக்கொண்டு அகண்டஞான நித்ய கைவல்யகதியை ஓரிடமாக்கி யிழிவுகூறியதும், யோகாநுபவத்தைப்பழித்ததும், விட்டுணுவின் பிறப்புப் கரு - ற் சேர்ந்த கபிலருடைய மதஸ்தரையுந் தத்தாத்ரேயபரம்பரையாரையும் ரஹஸ்த்ரய வசனபூஷணமெழுதிய சாமானியர்க்குங் கீழ்ப்படுத்தினதும் வைஷ்ணவ மதாந்தகாரமேயாம். யோக ஞானனுட்டானமும், சிவவழிபாடு மின்மையாலேயே வைணவக்குருக்கள் ஞானமில்லாக் குருடரும் நோயுற்றுச் சாவாருமாயினர். உருவத்தை யுயர்த்தியவவர் உருவிலா தெங்கணுமிருக்குங் கடவுளை யு மிகழ்ந்தோராயினர். அக் கடவுளெப்படியோ வப்படி யாதலே அனுத்துவத்தை நீங்கியடையுஞ் சிவகைவல்யம். அவ்வின்ப மளவிடப்படாதது. இதனை," ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந꞉ பரமம்ஸாம்யமுபைதி |" எனும் முண்டகோபநிஷத் வசனத்தானும், "ததாஸமரஸத்வம்யத் ஸமாதிரபிதீயதே | யத்ஸமத்வம் தயோரத்ர ஜீவாத்ம பரமாத்மநோ꞉ |" எனும் ஸௌபாக்யலக்ஷ்ம்யுபநிஷத் வசனத்தானும், "அதஸ் ஸர்வேஷாம் கைவல்யமுக்திர் ஜ்ஞாந மார்க்கேண" "ஊர்த்வ பூர்ண மதஃ பூர்ணக் மத்யபூர்ணம் சிவாத்மகம் | ஸாக்ஷாத்விதிமுகோஹ்யேஷஸமாதிꣳ பாரமார்த்திக꞉ |" எனும் முக்திகோபநிஷத் வசனங்களானுமறிக. பஞ்சருத்ரோபநிஷத்தி லொன்றான கைவல்யோபநிஷத்துரைக்கின்றபடி தஹரோபாஸனையிலேதனதந் தரியாமியாகிய சிவத்தையடைதலே கைவல்யமென்பதை "ஸ்வாத்மந்யேந கைவல்யம்" எனும் நாரதபரிவ்ராஜகோபநிஷத் வசனத்தானுமறிக. இந்நியாயத்தாலேயே நாராயணன் பிரமஞானிகளை வணங்குநனாயினன்: அவரிடுஞ் சாபத்தையுங் கடக்கவியலா தநுபவிப்பவனாயினன்: உருவனாகவே யெண்ணப்படுமவனுக்குப் பூரணத்துவமும் இன்றென்க. சூரியனைப்போன்ற பூரணத்துவ முண்டெனின்,—சூரியனிருக்குமிடத்தி லதிகவொளியும் ஏனையிடங்களிற் குறைந்தவொளியுமாம் விகாரமேற்படுமாறு நாரணனுக்கு மேற்

படும்: அஃதொரு படித்தான நிர்விகாரபூர்ணமாவ தன்றென்க. சிவபெருமாற்கு உருவங் கூறினும் உருவருவும், அருவும், அதீதமு முண்மையின், அவன் பூரணன்: அந்நிலையே சிவசாயுஜ்ய கைவல்ய மென்க. வைகுண்டத்தினுஞ் சிறந்த கைலாயம் அவனளிக்கும் பூரணகதியாகக் கூறப்படவில்லையென்க. அக்கைலாயம், முன்னுரைக்கப்பட்ட மேரு கைலாயத்திற்கு வேறாய், இமயகிரிக்கும் ஏமகூட கிரிக்கும் இடையிலுளதாய் விளங்கும் வெள்ளிமலையென்பதையும்; அது, விஷ்ணுமுதலிய எல்லாப்பிராணிகளின் பிரளயகாலத்திற் சிவனாரது திருவாணையாலே விரைவில் வளர்ந்து பிரமாண்டத்தைப் பிளந்து மீச்சென்றிருக்கத்தக்க தென்பதையும் மஹாஸ்காந்தத்தின் தக்ஷகாண்டத்து ௩௯-ம் அத்தியாயத்து ௫௧, ௫௨, ௫௩-ஞ் சுலோகங்களி னறிக. ௪௧-ம் அத்தியாயத்து, ௧௭, ௧௮-ஞ்சுலோகங்களில் இக்கைலாயங்களுக்கு வேறாக மேருவுக்கு வடபாலாய், அண்டச்சுவரிற்கு அணித்தாய், மஹாகைலாஸபர்வத முளதென்பதும்; அஃது உபதேசகாண்டத்து ௧-வது அத்தியாயத்தில் (௪0) நாற்பதுகோடி யோசனை யுயரத்தையும், (௧௧௧௧௧௧௧௮) கோடியே பதினொரிலக்கத்துப் பதினோராயிரத்து நூற்றுப்பதினெட்டுச் சிகரங்களையும் முடைத்தென்பதும்; ௨-வது அத்தியாயத்துப் ௧௬-ஞ் சுலோகத்தில் அஃது அவாந்தரப்பிரளய காலத்திலே அண்டத்திற்கு மேலாக வளரத்தக்கதென்பதும்; ௧௯-ஞ் சுலோகத்தில் இருவகைக் கைலாயமும் சிவனாரது திருவாணையாலே தாங்கப்பட்டிருப்பனவன்றிப் பூமியின் ஆதாரவிலில்லையென்பதும் பெறுதும். இக்கைலாயங்கட்குப் பரமாகாசசிவலோகம் வேறாம். மேலும், அந்நபூர்ணோபநிஷத்—

(𑌯𑌚𑍍𑌛𑍂𑌨𑍍𑌯𑌵𑌾𑌦𑌿𑌨𑌾𑌂 𑌶𑍂𑌨𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑌾𑌂 𑌚 𑌯𑌤𑍍 |
𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌦𑌾𑌂 𑌯𑌦𑌮𑌲𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍 |
𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌦𑍃𑌷𑍍𑌟𑍀𑌨𑌾𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑍋 𑌯𑍋𑌗𑌵𑌾𑌦𑌿𑌨𑌾𑌮𑍍 |
𑌶𑌿𑌵𑌃 𑌶𑍈𑌵𑌾𑌗𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌕𑌾𑌲𑌃 𑌕𑌾𑌲𑍈𑌕𑌵𑌾𑌦𑌿𑌨𑌾𑌮𑍍 |
𑌯𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌂 𑌯𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 [illegible] |
...... [illegible] |)

" யச்சூந்யவாதிநாம்சூந்யம் ப்ரஹ்மப்ரஹ்மவிதாம்சயத் |
விஜ்ஞாநமாத்ரம்விஜ்ஞாந விதாம்யதமலாத்மகம் |
புருஷஸ்ஸாங்க்யத்ருஷ்டீநாமீச்வரோயோகவாதிநாம் |

சிவச்சைவாகமஸ்தாநாம் கால: காலகவாதிநாம் |
யத்ஸர்வசாஸ்த்ரஸித்தாந்தம் யத்தத்வம்ததஸௌஸ்தித: |
......விமலஸ்திதிரீச்வர: க்ஷணேநேதி | ”

என்று கூறிற்று. சூனியவாதி சூனியமாகவறிகிறான்: பிரம வாதி பிரமமாக வறிகிறான்: விஞ்ஞானமுளோன் ஆன்மாவினிடத்தில் விஞ்ஞானமாக வறிகிறான்: சாங்கியன் புருஷனாகவறிகிறான்: யோகவாதி ஈச்வரனைக் காண்கிறான்: சைவாகமி சிவனாகவறிகிறான்: காலகவாதி காலமாகவறிகிறானாகலாற் சருவசாத்திரசித்தாந்தங்களின் முடிந்த தத்துவப்பொருளும், எவ்விகாரமுமிலாத நின்மலவஸ்துவுமான ஈச்சுவர னொருவனுளனெனும்பொருள் பயக்கத் தக்க இவ்வசனங்களில் நின்மலவஸ்து ‘ஈச்வர’ சத்தத்தாலே விளக்கப்படுவதாயிற்று. அச்சத்தத்திற்குரியோன்—

(ஹெஸுரா: ஈாவுரா:) “ மஹேச்வர: ஈச்வர: ” ’

என்றியாவர்க்கும் பொதுவான அமரஸிம்ஹ வசனத்தாற் சிவனொருவனேயாவன். வியாபகனாகிய இத்தலைவனுக் குட்படும் வியாப்பியமாகக் கூறப்பட்ட வாதிகள் தீர்மானங்களிற் பாஞ்சராத்திரமுடிவொன்றே கூறப்படவில்லை. சைவாகமம் அங்கீகரிக்கப் படுவதாயிற்று. இவ்வாகமம் வேதவுடம்பா டன்றெனும் பாஞ்சராத்திரி வாய்க்கும், பிறர் வாய்க்கும் இச்சுருதி பூட்டாக விருத்தலின் வைணவர் தீர்வை வாளாபோயிற் றென்க. “ ஸர்வாகமமயச் சிவ: ” எனும் நாரதபரிவ்ராஜகோபநிஷத் வசனம்— ‘ சகலாகம ஸ்வரூபன் சிவன் ’ எனும்பொரு டருதலையு மீண்டுக் கருதிக்கொள்க. சைவாகமத்தைமட்டும் அவாவிநிற்குஞ்சைவனே சைவாகமி யெனப்பட்டனனென்க. ஸ்ரீகண்டபாஷ்யமான நீலகண்டபாஷ்யம்—

பிரகிருதி மண்டலத்திற்குள் உயர்ந்தஸ்தானமான பரமபதத்திலே திரிமூர்த்திகளி லொருவனான விஷ்ணுவிருக்கின்றனன். விஷ்ணு ஸம்பந்தமான விரஜாநதி அம்மண்டலத்திற் கெல்லையாயுளது. இதற்கப்புறத்ததான அப்ராக்ருத பரமாகாச சிவலோகத்திலே பிரம விஷ்ணு உருத்திரர்களின் மேம்பட்ட பரமேச்வரன் சத்து, பிரமம், பரமான்மா, சதாசிவ னென்பனமுதலிய பெயர்களோடு விளங்குகின்றனன். அவனை வழிபடுமான்மா அர்ச்சிராதி மார்க்கமாகச்சென்று, அந்த விரஜாநதியின்மூழ்கிப் பாவ புண்ணியங்களை யொழித்து அந்நதிக்கப்புறத்தே பிரகிருதியில்லாத ஜீவன்முத்தித்தன்மையை யடைந்து மேலுள்ள சிவலோகத்தை யடையும்—

என்று கூறுமென்பதை மேலே காட்டப்பட்ட பிரமசூத்திரத் திராவிடபாஷியத்தி லறியலாம். இத்தீர்வை—

(𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍁𑌦𑍍𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑍇 𑌸𑌂𑌪𑍍𑌰𑌸𑍂𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌚𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌸𑌹𑌭𑍂𑌤𑍈𑌰𑍍𑌨 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑌾𑌂 𑌧𑍍𑌯𑌾𑌤𑌾 𑌕𑌾𑌰𑌣𑌂𑌤𑍁 𑌧𑍍𑌯𑍇𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 𑌶𑌂𑌭𑍁𑌰𑌾𑌕𑌾𑌶𑌮𑌧𑍍𑌯𑍇)

*"ப்ரஹ்மவிஷ்ணு ருத்ரேந்த்ராஸ்தே ஸம்ப்ரஸூயந்தே ஸர்வாணிசேந்த்ரியாணி ஸஹபூதைர் நகாரணம் காரணாநாம் த்யாதா காரணந்து த்யேயஸ் ஸர்வைச்வர்ய ஸம்பந்நஸ் ஸர்வேச்வரச் சம்பு ராகாச மத்யே"*

எனும் அதர்வசிகோபநிஷத் வசனத்தைத் தழுவியதாகும். இவ்வுபநிஷத்தும் அந்த நீலகண்ட பாஷ்யத்தி லுதாஹரிக்கப்பட்டதே. மேல் வசனத்தின்பொருள் :—"பிரமன், விஷ்ணு, உருத்திரன், இந்திரனாகிய இவரெல்லாம் படைக்கப்படுகின்றனர். இந்திரியங்களெல்லாம் பூதங்களோடு பிறப்பிக்கப்படுகின்றன. ஆகலின் அவர்களும் அவைகளுங் காரணமில்லை. தியாதாவாகிய அவர்களாலே தியானிக்கப்படுந் தியேயனெனும், சருவைச்சுவரிய சம்பன்னனும், சருவேச்சுவரனும், சம்புசத்த வாச்சியனும், பரமாகாச மத்தியத்திலிருப்பவனுமான சிவனே காரணன்" எனவாம்.

நவீன வைஷ்ணவகண்டனத்திற்கும், புராதன சைவஸ்தாபனத்திற்கும் இச்சுருதியொன்றேசாலும்: பிறவுங்கோட லதிகமே. அர்ச்சிராதிமார்க்கம்=ஒளிவழி. இது நிற்க. அவ் வைகுண்டத்தின் மேலே கைலாயமுண்டென்பதை "ஆங்கதன்மேற் பிரமபதமூன்று கோடி யதன்மேன்மா யவனுலக மூன்று கோடி—யோங்குமதன் மேற்புனிற்றுத் திங்கள் வேணி யும்பர்பிரா னுறையுலக நான்கு கோடி" எனும் மஹாஸ்காந்தத்துக் காசிகாண்டச் செய்யுளானும், பிறவற்றானு மறிக. பிறவற்றுள் ஒன்றுகாட்டுதும். சைவபுராண கைலாசசங்கிதையின் ௧௦-ம் அத்தியாயத்தில்—

நிவிர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதமென ஒன்றிற்கொன் றுயர்வான கலைகளைந்தில் (௧) நிவிர்த்தியினால் வியாபிக்கப்படுவது பிருதிவி தத்துவமென்பதும், இந்நிவிர்த்திகலாரூபம் சிருஷ்டிசக்கரமாதலின் இதனை யதிஷ்டிப்பவன் பிரமனென்பதும், (௨) பிரதிஷ்டையினால் வியாபிக்கப்படுவன அப்புமுதற் பிரகிருதி

வரையுள்ள தத்துவங்க ளென்பதும், இப் பிரதிஷ்டாகலாரூபம் ஸ்திதிசக்கரமாதலின் இதனை யதிஷ்டிப்பவன் விஷ்ணுவென்பதும், (ங) வித்தையினால் வியாபிக்கப்படுவன புருஷன்முதல் மாயைவரையுள்ள எ - தத்துவங்களென்பதும், இவ் வித்தியாகலாரூபம் சங்கார சக்கரமாதலின் இதனை யதிஷ்டிப்பவன் உருத்திரனென்பதும், (ச) சாந்தியினால் வியாபிக்கப்படுவன சுத்தவித்தை முதலிய ங - தத்துவங்களென்பதும், இச் சாந்திகலாரூபம் திரோபவசக்கரமாதலின் இதனை யதிஷ்டிப்பவன் மகேசுரனென்பதும், (ரு) சாந்தியாதீதத்தினால் வியாபிக்கப்படுவன சத்தி, சிவமெனும் உ - தத்துவங்களென்பதும், இச் சாந்தியாதீதகலாரூபம் அநுக்கிரகசக்கரமாதலின் இதனை யதிஷ்டிப்பவன் சதாசிவனென்பதும் வெளிப்படுதலின் ; நிவிர்த்திகலா சக்கரத்திற்கும், வித்தியாகலா சக்கரத்திற்கும் இடையிலுள்ள பிரதிஷ்டாகலாசக்கர பதமே வைகுண்டமென்பது வலியுறுத்தப்படும்.

(𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌚𑌕𑍍𑌰𑌮𑌿𑌦𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌰𑍂𑌪𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ।
𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌞𑍍𑌚𑌪𑌰𑌮𑌂𑌪𑌦𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌰𑌮𑌾𑌶𑌕𑍍𑌤𑌿𑌯𑍁𑌤𑍋𑌵𑌾𑌮𑍇𑌸𑌰𑍍𑌵𑌰𑌕𑍍𑌷𑌾𑌕𑌰𑍋𑌮𑌹𑌾𑌨𑍍 । )
(𑌏𑌤𑌦𑍍𑌦𑍇𑌵𑌪𑌦𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌂𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑌾𑌦𑌪𑍍𑌰𑌸𑍇𑌵𑌿𑌨𑌾𑌮𑍍 । )

" ஸ்திதிசக்ரமிதம்ப்ரஹ்மந் ப்ரதிஷ்டாரூபமுத்தமம் |
ஜநார்த்தநாதிஷ்டிதஞ்ச பரமம்பதமுச்யதே |
ரமாசக்தியுதோவாமே ஸர்வரக்ஷாகரோமஹாந் | "
" ஏதத்தேவபதம்ப்ராப்யம் விஷ்ணுபாதப்ரஸேவிநாம் | "

எனும் அக் கைலாசசங்கிதையின் வடமொழிகள்—' பிரதிஷ்டாகலாரூபம் ஸ்திதிசக்கரம் : இதனையதிஷ்டிக்கும் மஹானான ஜநார்த்தநன் இரமையென்பாள் வாமத்திற்பொருந்த அனைத்துங் காக்கின்றனன் : விஷ்ணுசேவைசெய்குநர் அடையும் பரமபதம் இது.' எனும்பொருளைத்தருதலுங் காண்க. ஸ்ரீஉமாதேவியின் றிருக்கர விரல்களில் வியர்வையெனத் தோன்றிப் பரமேசுரனது ஜடாமகுடத்திலடங்கியிருந்த கங்கையிற் சிலதுளிகளை விஷ்ணுமுதலிய தேவர்கள் பெற்றார்கள். அவை, விஷ்ணுலோகத்தில் விரஜையாயும், பிரமலோகத்தின் மானததீர்த்தமாயும், இந்திரலோகத்திற் றேவதீர்த்தமாயும் பெருகினவென்று மஹாஸ்காந்தங் கூறுதலின், அவ் விரஜாநதியுஞ் சிவனாரா லளிக்கப்பட்டதே யாயிற்று.

## ரு. ஞானமொன்றேபெரியமோக்ஷத்தைநல்கும்.

கைவல்யமெனும் பெரியகதியை ஞானமொன்றே நல்கும். இதனை—

(யஸ்யவிஜ்ஞாநமாத்ரேண மோக்ஷஸ்ஸாக்ஷாந்நஸம்ஶய꞉ ।)
"யஸ்யவிஜ்ஞாநமாத்ரேண மோக்ஷஸ்ஸாக்ஷாந்நஸம்சய꞉ |"

எனுஞ் சுகரஹஸ்யோபநிஷத் வசனத்தானும், (யேநவிஜ்ஞாநமாத்ரேண ஜீவந்முக்தோபவாம்யஹம் ।) "யேநவிஜ்ஞாந மாத்ரேண ஜீவந்முக்தோ பவாம்யஹம் |" எனுந் தர்சனோபநிஷத் வசனத்தானும், 'பணத்திற்பெரியவன் வயதிற்பெரியவன் வித்தையிற்பெரியவனெனு மின்னோர், ஞானத்திற்பெரியவனுக்கும் அவன்சீடர்கட்கும் வேலைக்காரரா யிருக்கின்றனர்' எனும் ஒண்பொருள் பயக்கத் தக்க (தநவ்ருத்தா வயோவ்ருத்தா வித்யாவ்ருத்தாஸ்ததைவச । தேஸர்வேஜ்ஞாநவ்ருத்தஸ்ய கிங்கராஃஶிஷ்யகிங்கரா꞉ ।) "தநவ்ருத்தா வயோவ்ருத்தா வித்யாவ்ருத்தாஸ் ததைவச | தே ஸர்வேஜ்ஞாநவ்ருத்தஸ்ய கிங்கராச் சிஷ்ய கிங்கரா꞉ |" எனும் மைத்ரேயோபநிஷத் வசனத்தானும்,

> "அரும்பவிழ் மலரோன் மாய னாதியர் வாழ்வெ லாமோர்
> துரும்பென நினைக்கத் தக்க சுகவயி ராக முண்டாம்
> விரும்புமற் றதனுற் சுத்த மெய்ச்சிவ ஞான முண்டாம்."

எனுஞ் சூதசங்கிதைச் செய்யுளானும்,

> "வானமெல்லா மாளினுமிவ் வையம் புரக்கினுமெய்ஞ்
> ஞானமில்லா ரேழையன்றோ நட்பே பரஞ்சோதீ.
> சிவஞான மில்லாத செல்வவழி யெல்லா
> மவஞான மென்றகன்றே னாய் பரஞ்சோதீ."

எனுங் காசியாத்திரைச் செய்யுள்களானும்,

> "ஞானத்தால்வீடென்றேநான்மறைகள்புராண
> நல்லவாகமஞ்சொல்லவல்லவாமென்னு
> மூனத்தாரென்கடவரஞ்ஞானத்தா
> லுறுவதுதான்பந்தமுயர்மெய்ஞ்ஞானந்தா
> னுனத்தாலதுபோவதலர்கதிர்முன்னிருள்போ
> லஞ்ஞானம்விடப்பந்தமறுமுத்தியாரூ

மீனத்தார்ஞானங்களல்லாஞான
மிறைவனடிஞானமேஞானமென்பார்."

எனுஞ் சிவஞானசித்தியார் அ-ஞ் சூத்திரச்செய்யுளானுமறிக. "குமர குருபர குணதர நிசிசரர் திமிர தினகர சரவண பவகிரி" என்றற் றொடக்கத்துத் திருப்புகழில்—

"அறிவை யறிவது பொருளென வருளிய—பெருமாளே."

என்ற ஸ்ரீ அருணகிரிநாத வள்ளலாரது அமிர்தவாக்கில் ஸ்ரீ குமாரபரப்ரஹ்மத்தினது திருவாக்கினுண்மையாக வெளிப்பட்டதும் இந்த ஞானமே. கைவல்யோபநிஷத்தில் 'எஞ்ஞான்றுமுள்ள பரசிவப் பொருளையறிந்த ஞானத்தால் மிருத்தியுவைக் கடப்பன். இஞ்ஞானமன்றி மோக்ஷ மெய்தவழி வேறில்லை.' எனும்பொருள் பயக்கத்தக்கதாய் (ஸநாதநம், ஜ்ஞாத்வாதம் ம்ருத்யுமத்யேதி நாந்ய: பந்தா விமுக்தயே ।) "ஸநாதநம், ஜ்ஞாத்வாதம் மருத்யு மத்யேதி நாங்யபந்தாவிமுக்தயே" எனவரும்வசனமே சுவேதாச்வதரத்தில்— (ம்ருத்யுமேதி நாந்ய: பந்தா வித்யதேऽயநாய) "ம்ருத்யுமேதிநாங்ய பந்தாவித்யதேயநாய" என வருதலானும், தக்ஷிணாமூர்த்யுபநிஷத்திற் சௌனகர்முதலிய இருடிகள் ஸ்ரீ மார்க்கண்டேயரைத் தரிசித்து, நீர் எதனாலே சிரஞ்ஜீவியாக வுளீர்? எதனாலே ஆநந்த மநுபவிக்கின்றீர்? என்றுகேட்ட கேள்விக்கு அம் மார்க்கண்டேயர், அது "பரமரஹஸ்ய சிவதத்வஜ்ஞாநம்" என்றும்; 'எதனாலே தக்ஷிணாமுகனான சிவனார் அபரோக்ஷமாகப் பிரகாசிப்பரோ அதுவே அந்த ஞானமெனும் பொருடோன்ற (யேந தக்ஷிணாமுக: ஶிவோऽபரோக்ஷீக்ருதோ பவதி । தத்பரமரஹஸ்ய ஶிவதத்வஜ்ஞாநம்।) "யேநதக்ஷிணாமுகச்சிவோபரோக்ஷிக்ருதோபவதி | தத்பரமரஹஸ்ய சிவதத்வஜ்ஞாநம் |" என்று மருளிச்செய்தனரெனுஞ்செய்தி காணப்படுதலானும் அந்த ஞானம் மேலைச்செய்யுட்கண் "இறைவனடி ஞானமே ஞானம்" என்று தேற்றேகாரத்தோ டறிவுறுத்தப்பட்டது. "ம்ருத்யு" என்றது அந்தகாரமான ஆணவ மலத்தை. மார்க்கண்டேயர்க்கு விஷ்ணுப்பிரஸாதத்தினாலே சிரஞ்ஜீவித்வங் கிடைத்த தென்பதாக, "புக்கடிமையினாற் றன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை—நக்கபிரானு மன்றுய்யக் கொண்டது நாராயணனருளே" எனுஞ் சடகோபன் குழறுபாடு மிங்குற்றசுருதியாற் றுவையுண்டு தொலைதல் காண்க. சாஸ்திரஞானத்தினும் விசேட

மாய் ஆனமாவற பரமானமாவை அத்துவிதமாகத் தரிசிக்குந் தகுதித்தாயிலகும் அநுபவஞானமே உபநிஷத்தில் "விஜ்ஞாநம்" எனப் பட்டது. அப்பரமான்மா பசுபதியெனும் பரமசிவமே.

(தஹூாதவ-ஹாநூரிதரஜ ரயெ ரயாநிஷாஜிகாநுவல-ரொநு ।
ஶிவஶவஹுாமெ ரயஹூவ-ஜுஸஂஸாரெஜோவகஃ॥)

"தஸ்மாத்ஸர்வாந்பரித்யஜ்யத்யேயாந்விஷ்ண்வாதிகாந்ஸுராந் |
சிவஏவஸதாத்யேயஸ்ஸர்வஸம்ஸாரமோசகஃ ||"

எனுஞ் சரபோபநிஷத் வாக்கியம்—'ஸம்ஸாரதுக்கநாச முக்திப்பிராப்தியின்பொருட்டு விஷ்ணுமுதலிய ஸர்வதேவர்களையும் விட்டு எஞ்ஞான்றுந் தியேயனுகவுள்ள சிவனையே தியானிக்கவேண்டும்' எனும் பொருளையும்,

(யஷாவஜ-வஷாகாஶ ஂவெஷயிஷ ரஜிஜாநவாஃ ।
தஷாஶிவஜவிஜ்ஞாய ஜ-ஃவஸ ரஸெஜாஹவிஷ ரதி॥)

"யதாசர்மவ*தாகாசம் வேஷ்டயிஷ்யந்திமாநவாஃ |
ததாசிவமவிஜ்ஞாய துஃகஸ்யாந்தோபவிஷ்யதி||"

எனும் மேலைச் சுவேதாச்வதர வாக்யம்— 'எப்பொழுது மனிதர்கள் ஆகாயத்தைச் சர்மமாகவெடுத்துப் போர்த்துக்கொள்வார்களோ அப்பொழுதுதான் சிவஸேவையின்றித் துக்கமற்ற மோக்ஷத்தை யடைவார்கள்' எனும் பொருளையுங் கருதலானே அந்தச் சிவஞான கைவல்யத்தை யவாவுநர் யாவருஞ் சிவபெருமானையே தியானித்தல்வேண்டும். இப்பெற்றி கணித்தே தமிழ்வேதத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளும் "பெம்மா னுன்னையல்லாற் பெரிதேத்த மாட்டேனே" என்றருளிச் செய்தனர். இச்சுருதியால் விஷ்ணுமுதலிய சுரர்கள் மோக்ஷப்ரஸாதங் கொடுக்குந் தகைமையில்லாத ஸம்ஸாரிக ளென்பதுஞ் சித்தித்தது. "ஸர்வஜ்ஞஃ பஞ்சக்ருத்ய ஸம்பந்நஸ் ஸர்வேச்வர ஈசஃ பசுபதிஃ |" எனும் ஜாபால்யுபநிஷத் வாக்யத்தின்படி சிவபெருமானார் பஞ்சக்கிருத்திய கருத்தாவாதலின் அவருடைய சிருட்டி, திதியெனும் இருதொழின் மதித்து, இகசுகம் விரும்புநரும் அவரையே விரும்புதல் வேண்டும். பந்தநாசமெனுந் தத்துவசங்காரமும், ஞானப்பிரகாசமாமாறு ஜகத்

* வெளி—ஒளியுடைமையின் ஆகாசமெனும் பெயர்த்து.

தை மறைக்குந் திரோபவமும், சிவசமத்துவ மடைவிக்கும் அநுக்கிரகமுமாகிய மேன்மூன்றுதொழின் மதித்துப் பாசுகம் விரும்புநர் யாவரும் அக்கருத்தாவையே விரும்புநரா யிருக்கின்றனர். இத்திறப் பிரமாணங்களானே சாமானியனாகிய இராமாநுஜனெழுதிய சிவத்துரோக பாடியமும், மத்துவமதபாடியமும் முமுக்ஷுக்களால் விரும்பப்படுவன வல்ல. இந்நியாயத்தை ஆங்கிலமொழி வல்லாரும் அங்கீகரிப்பவராயினார். இதனை, இந்நூலினீற்றிற் சேர்க்கப்படும் ஆனிபெஸண்டம்மாளது உபந்யாஸத்தினறிக. இந்நூலின் கருஅ - ம் பக்கத்திற் காட்டப்பட்ட சுருதியின்படி சிவனை யாச்சிரயிக்காத பாடியமெல்லாம் எரித்தொழிக்கப் படுவனவேயெனு நீதியையுமுணர்க.

## சா. நாரணன் மூதேவிக்களித்த வரம்.

நல்ல வரன் வேண்டுமென்பதைத் தெரிவித்துக்கொண்ட ஹே மூதேவீ! என்னையே வணங்கிச் சிவபெருமானையும் உமாதேவியையு மென்றுமிகழ்ந்து குழுமியிருப்போருடைய விருப்பிடத்தில் நீ யெப்போது மிருந்துகொண்டு, அன்னோர் தேடும் பொருளெல்லாங் கவர்ந்தநுபவிப்பாயாக. அந்தப் பெருமானது திருவருளாலன்றோ பிரமனும் நானும் விண்ணுலகில் நன்றாக வாழ்கின்றனமென்று நாரண னவின்று சென்றதை—இலிங்கபுராணத்து முகடிதோற்றமுரைத்த வத்தியாயத்தில்—

"என்றனுடிங்கெனை வணங்கி யீர்ஞ்சடையண்ணலையுமையோடிகழ்ந் துநாளு
மொன்றியுறைவோர்பொருள்களொன்றறவே வவ்வியவணுற்றேநின்று
மன்றவருந்திடுதியான்மற்றவன்றனருளினாலன்றோவானி
னன்றுமிகவாழ்கின்றோமலரோனும்யானுமெனநவின்றுபோனான்."

எனவரு செய்யுளிற்காண்க. இதனாற் சிவநிந்தைவைணவர் யாவரும் மூதேவிக்குழைக்கும் மக்களாயினமை காண்க. ஈண்டு, வைணவருட்சிலருந் திரவியமுடையராகக் காணப்படுகின்றனரே யெனுஞ் சங்கையுமெழுக்குமேல், அவர்பாட்டே சிவபக்தியுமுளதெனு நியாயத்தானே யதனைத் தீர்த்துக்கொள்க. என்று சிவநிந்தை தோன்றிற்றோ அன்றுமுதற் செல்வங் குன்றத்தொடங்கும். பெருஞ்சம்பத்துள்ள குபேரனே அரன்றோழனென விளங்குகின்றனன். அறிக.

## எ. சிவகதிக்கேகுநரை நாரணனெதிர்கொண்டழைத்தல்.

"இந்திரன்மால்பிரமனெழிலார்மிகுதேவரெல்லாம்
வந்தெதிர்கொள்ளவென்னைமத்தயானையருள்புரிந்து
மந்திரமாமுனிவரிவனாரென்னவெம்பெருமா
னர்தமரூரனென்றானொடித்தான்மலையுத்தமனே."

எனுந் தேவாரத்திருச்செய்யுட்செய்தி ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் வெள்ளையானைமீது திருக்கைலைக் கெழுந்தளியஞான்று நேரிலறிந்தருளிச்செய்ததாகும். "மால்" என்றது நாரணனை. இவ்வண்ணம் நாரணன் முதலிய தேவர்கள் பலவரிசையோ டெதிர்கொண் டழைக்க வெழுந்தருள்வோர் சிவனடியாரென்பது—சிவரகசியத்து ௩-ம் அமிசத்து உ-ங் காண்டத்து சஎ-ஞ் சருக்கத்தில் "சிவடுண்டி தவயோகன்றான்......உடலை விடுத்தான்......கண்ணுதலார் விமானம்விட வதனிலேறி, அனப்பிரமன் விண்டுவே முதல தேவரதிகவரி சைகள்செய்தே யருகு சூழ" என வருதலானும் பெறப்படும். 'மேதாவியரானோர் ஓங்கார ரதத்திலேறி விஷ்ணுவைச் சாரதியாகக்கொண்டு பிரமலோகத்தையடைய உருத்திரனை யாராதிப்பதிற் கருத்துடையவர்' எனு மருத்தத்தில்—

([illegible])

"ஓங்காரரதமாருஹ்யவிஷ்ணும்க்ருத்வாதஸாரதிம் |
ப்ரஹ்மலோகபதாந்வேஷீருத்ராராதநதத்பரஃ ||"

என அம்ருதநாதோபநிஷத் துரைத்தலும் மேற்சொற்ற நியாயமாக முடிகின்றது. பிரமலோகம்=சிவலோகம். தே - குருபரம்பரை ப-ககச-ற் பூதூரன் அரங்கத்துக் கோவிலுழைச் சேறனோக்கி—

"முக்தனைப் போருமவனை ஸ்ரீவைகுண்டநாதன் எதிர்கொள்ளுமாப் போலே, நம்பெருமாள் திருக்கைத்தலத்திலே எழுந்தருளி"

எனுஞ்செய்தி யெழுதப்பட்டுளது. இதுவும் ஈண்டெடுத்துக் கொண்ட நியாயத்தை வலியுறுத்தவாறும், எதிர்கொளல் கர்த்தாவுக்குளதெனல் ஈண்டைக் கேலாதவாறுங் காண்க. இவ் வேதுக்களானே நாரணன் பரமசிவனது வேலைக்காரனாகவிருக்கின்றன னென்பது தெள்ளிது. சைவஞானிகள் நாரணன் முதலிய தேவர்

களாலும் வணங்கத்தக்கோரெனுஞ் செய்தியைச் சூதசங்கிதையின் சாமசாகோபநிடத தாற்பரியவத்தியாயம்—

"பரமவத் துவித சைவமெய்ஞ் ஞானி பாரளந் தவன்முத லோரால்
வரமுறப் பூசை புரிந்திடத் தக்கோன்"

என்று விளக்குதலின் அவர்களை நாரணனெதிர்கொளல் ஓர் வியப்பிற்றன்று.

## அ. திரிமூர்த்திகட்கும் மேலாய நான்காவது தெய்வம் சிவபிரான்.

---

'பிரபஞ்ச லயஸ்தானமாய், சாந்தமாயிருக்கின்ற சிவமெனும் அத்வைத வஸ்துவை நான்காவது தெய்வமாக நினைக்கின்றனர்' எனும் பொருள்—தசோபநிஷத்து ளொன்றெனப்படும் மாண்டூக்யோபநிஷத்தில்—

([illegible])

"ப்ரபஞ்சோபசமம்சாந்தம் சிவமத்வைதம்சதுர்த்தம்மந்யந்தே"

எனும் வசனத்திற் பெறப்படும். இப்பொருளையே பயக்கும் வாக்கியங்கள் நிருஸிம்ஹ பூர்வதாபிந்யுபநிஷத்திலும், உத்தரதாபிந்யுபநிஷத்திலும்—

"ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவமத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே"

எனவும்; நாரதபரிவ்ராஜகோபநிஷத்தில்—

"ப்ரபஞ்சோபசமம்சிவம் சாந்தமத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே"

எனவும்; ராமோத்தரதாபிநீயோபநிஷத்தில்—

"ப்ரத்யயஸாரம் ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவமத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே"

எனவும்; பஸ்மஜாபாலோபநிஷத்தில்—

([illegible])

"அத்வைதம் சதுர்த்தம் ப்ரஹ்மவிஷ்ணுருத்ராதீத மேகமாசாஸ்யம் பகவந்தக் சிவம்"

எனவும் வருகின்றன. க0-ஆ - உபநிடதங்களுக்குள்ளே நான்காவது தெய்வத்தை விளக்குகிமித்தம் "சதுர்த்தம்" எனும் வாக்கியத்தோடு வெளிப்படுவசனங்க ளிங்கே காட்டப்பட்ட உபநிடதங்களிலேயன்றி வேறில்லை. இவ்வசனங்கடோறு மிருக்குந் தெய்வப் பெயர் "சிவம்" என்பதன்றி நாராயண நாமங்களில் யாது மின்றென்பது வெளிப்படையாகலின் நாராயணனை நான்காந்தெய்வமென வேதம் விதித்ததில்லையென்பதறிக. முதலிற்காட்டப்பட்ட மாண்டூக்யோபநிஷத்வசனத்தை அர்த்தஞ்செய்த பூதூரன் அதனிலுள்ள சிவமென்பதற்கு மங்களஸ்வரூபமென்றும், சதுர்த்தமென்பதற்குச் சங்கர்ஷண பிரத்யும்ந அநிருத்தரெனும்மூவர்க்கும் லயஸ்தானமான வாஸுதேவனென்றும்பொருள்கொண்டமை—ஈற்றிற் காட்டப்பட்ட பஸ்மஜாபாலவசனம், அந்நான்காந் தெய்வம் பிரமன், விஷ்ணு, உருத்திரனெனும் மூவரின் மேம்பட்ட சிவமென இனிது விளக்கினதற்கு விரோதமே. அவனை வேத முணர்ந்தவனென வித்தகர்க ளினைக்க நியாயமே யின்று.

## துரீயம், அக்ஷரம், பரப்ரஹ்மம், பிரஹ்மம்.

([illegible]) "ஜாகரிதேப்ரஹ்மா ஸ்வப்நேவிஷ்ணுஸ் ஸுஷுப்தௌருத்ரஸ் துரீயமக்ஷரம் |" என்று பிரஹ்மோபநிஷத்தும், பரப்ரஹ்மோபநிஷத்துங் கூறுதலானே, சாக்கிரம், சொப்பனம், சுழுத்தியெனும் அவஸ்தாத்திரயங்களுக்குரியபிரமன், விஷ்ணு, உருத்திரனெனும் மூவர்க்கும் மேலான துரீயதெய்வம் அக்ஷரமெனும் பிரமமென விளங்குகின்றது. துரீயதெய்வம் சிவனென்பதை—*"அவஸ்தாத்ரிதயாதீதம் துரீயம் ஸத்ய சித்ஸுகம் | ப்ரஹ்மவிஷ்ண்வாதிபிஸ் ஸேவ்யக் ஸர்வேஷாம் ஜநகம்பரம் | ஈசாநம்" எனும் பஞ்சப்ரஹ்மோபநிஷத்வாக்யத்தினறிக. துரீயம்=நான்கு. அக்ஷரம் சிவனென்பதை— ([illegible]) "ஸதாசிவோக்ஷரம் விமலம்" எனுந் திரிபுராதாபிந்யுபநிஷத் வாக்யத்தானும், ([illegible]) "சிவமக்ஷரமவ்யயம்" எனும் பஸ்மஜாபாலோபநிஷத் வாக்யத்தானு மறிக. பரப்ரஹ்மம், பிரஹ்மம் சிவனென்பதை— ([illegible]

* இதற்குரிய கிரந்தவெழுத்துக்கள் இக்காண்டத்தின் கரு-ம் அத்தியாயத்தி லுள்ளன.

𑌵𑌿𑌰𑍂𑌪𑌾𑌕𑍍𑌷𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂।) " ருதம்ஸத்யம் பரம்ப்ர ஹ்ம ஸர்வஸம்ஸாரபேஷஜம் | ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விச்வ ரூபம் மஹேச்வரம் | " எனும் தர்சனோபநிஷத் வாக்யத்தாலும், " ருதம்ஸத்யம் பரம்ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்கலம் | ஊர்த்வ ரேதம் விரூபாக்ஷம் விச்வரூபாயவை நமோநம: | " எனும் தைத் திரீயாருணசாகை நாராயண வாக்யத்தாலும், 'எவன் பிரமமோ' அப்பகவான் உருத்திரன்' எனும்பொருளைத் தரத்தக்க "ருத்ரஸ் ஸபகவாந்யச்சப்ரஹ்ம" எனும் அதர்வசிரோபநிஷத் வாக்யத்தாலும், 'நான் பந்தமோக்ஷமில்லாதவனா யிருக்கிறேன்: சுத்தமான பிரஹ் மமா யிருக்கிறேன்' என்று சிவபிரான் திருவாய்மலர்ந்தருளின னெனும்பொருளைத் தரத்தக்க (𑌬𑌨𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑌵𑌿𑌹𑍀𑌨𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑍍𑌮𑌿 𑌸𑍋𑌽𑌸𑍍𑌮𑍍𑌯𑌹𑌂।) " பந்தமோக்ஷவிஹீநோஸ்மி சுத்தம்ப்ர ஹ்மாஸ்மி ஸோஸ்ம்யஹம் | " எனும் மைத்ரேயோபநிஷத் வாக்யத் தாலுமறிக. சிவமந்திரம் "ஸத்யோஜாதாதிபஞ்சப்ரஹ்மமந்த்ரை: " எனுங் காலாக்நிருத்ரோபநிஷத் வாக்யத்தாலும், சிவஸ்வரூபம் " பஞ்சப்ரஹ்மாத்மகம் " எனும் மேலைய பஞ்சப்ரஹ்மோபநிஷத் வாக்யத்தாலும், இவ்வுபநிஷத்தும் பாசுபதப்ரஹ்மோபநிஷத்துஞ் சிவபரமாகவே யிருத்தலாலும், சிவவதனம் "பஞ்சப்ரஹ்மவக்த் ரம்" எனவும், சிவகுமாரனது திருப்பெயர் " ஸுப்ரஹ்மண்யம் " எனவும் வழங்கப்படுதலாலும் அந்தப் பிரஹ்மமென்பது சிவனை யே குறிக்குமென்க. (𑌬𑍃𑌹𑌤𑍍𑌵𑌾𑌦𑍍 𑌬𑍃𑌂𑌹𑌣𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌶𑌿𑌵𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌯𑍋𑌗𑌤𑌃।) "ப்ருஹத்வாத்ப்ருஹ்மணத்வாச்ச சிவோப்ரஹ்மை வயோகத: | " என்று பராக்கியை பகர்கின்றது. அருத்தம்:— 'மேன்மையினாலும், பெருத்திருக்கு நீர்மையினாலுஞ் சிவனே பிரமமெனப்படுவன்' எனவாம். பிரமமென்பதுபெரிதெனும்பொரு ளைத் தருஉமென்பது மிதனிற்பெறுக. இனைய பிரமாணங்களாற் சிவன் பிரமமென்பன வொருபொருளையே பயக்குங் கிளவிகளென் பதும், வேதாந்த மஹாவாக்யத்திலும் பிரஹ்ம ஸூத்ரத்திலு முள்ள பிரஹ்மசப்தத்திற்குஞ் சிவனென்றே யருத்தஞ் செய்தல் சால்பிற்றென்பதும் ஈண்டுணரத்தக்கன. இவ்வாற்றாலும் நான்கா வது தெய்வநு சிவனென்பதே சித்தித்தது. இந்நூலின் கஅ௱ - ம் பக்கத்திற் காட்டப்பட்ட அதர்வசிகோபநிஷத் வாக்யங்களிலும், இனிக்காட்டப்படு கைவல்யோபநிஷத் வாக்யங்களிலும், பிறவுப

நிஷத் வாக்யங்களிலுஞ் சிவபெருமானே நான்காவது தெய்வமாக விளங்குதலுங் காண்க.

## பிரணவம்.

(𑌤𑍍𑌰𑍍𑌯𑌕𑍍𑌷𑌰𑌸𑍍𑌯 𑌶𑌿𑌵𑌸𑍍𑌯 𑌤𑍁) "த்ர்யக்ஷரஸ்யசிவஸ்யது" என்றும், (𑌅𑌕𑌾𑌰𑌸𑍍𑌯 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌤𑍁 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌾𑌦𑌿𑌭𑌿𑌃।) "அகாரஸ்ய சரீரந்து வ்யாக்யாதம் ப்ரஹ்மவாதிபி: |" என்றும், (𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌶𑍍𑌚 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍𑌦𑍇𑌵 𑌉𑌕𑌾𑌰𑌃 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 ।) "விஷ்ணுச்ச பகவாந்தேவ உகாரபரிகீர்த்தித: |" என்றும், (𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 𑌪𑌰𑌮𑍋 𑌦𑍇𑌵𑍋 𑌮𑌕𑌾𑌰𑌃 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 ।) "ஈச்வர: பரமோதேவோ மகார: பரிகீர்த்தித:|" என்றும் பிரஹ்மவித்யோபநிஷத் விளம்புமாற்றானே, அகாரம் பிரமன், உகாரம் விஷ்ணு, மகாரம் ஈசுரனெனும் உருத்திரனென்பதும்; இம்மூன்றக்ஷரமுமான தாரகஞ் சிவபிரானென்பதும் பெறப்படும். இக்கிரமம்— "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம த்யேயம் ஸர்வமுமுக்ஷுபி: | ப்ருதிவ்யக்நிச்ச ருக்வேதோ பூரித்யேவ பிதாமஹ: | அகாரே துலயம் ப்ராப்தே ப்ரதமேப்ரணவாம்சகே | அந்தரிக்ஷம் யஜுர் வாயுர் புவோ விஷ்ணுர் ஜநார்த்தந: | உகாரே துலயம் ப்ராப்தே த்விதீயே ப்ரணவாம்சகே | த்யௌஸ் ஸூர்யஸ் ஸாமவேதச்ச ஸ்வரித்யேவ மஹேச்வர: | மகாரே து லயம் ப்ராப்தே த்ருதீயே ப்ரணவாம்சகே |" "த்யாயே தோங்காரம் மீச்வரம்" எனுந் தியாநபிந்தூபநிஷத் வசனங்களிலும், "அகாரம் ப்ரஹ்மாணம்" "உகாரம் விஷ்ணும்" "மகாரம் ருத்ரம்" "ஓங்காரம் ஸர்வேச்வரம்" எனும் நிருஸிஹ்மோத்தரதாபிந்யுபநிஷத் வசனங்களினும் பெறலாம். இன்னும், தாரகமென்றும் பிரஹ்மப்ரணவமென்றும் வழங்கப்படுகிற ஓங்காரவாச்சியன் சிவபிரானென்பது—"ஓங்காரோவேதபர ஈசோவா சிவ ஏகோத்யேய:" எனும் அதர்வசிகோபநிஷத் வசனங்களினும், "ஓம் மஹாக்ராஸாய மஹாதேவாய சூலிநே" எனுஞ் சரபோபநிஷத் வசனங்களினும், "கைலாஸ சிகராவாஸ மோங்கார ஸ்வரூபிணம் மஹாதேவம்" எனும் பஸ்மஜாபால வசனங்களினும், இந்த ஜாபாலமும் தைத்திரீயாருண சாகை நாராயணமும் "சிவோமே அஸ்து ஸதாசிவோம்" என்று கூறு வசனங்களினும், "ஓங்கார ஸ்வரபூஷிதம்" எனும் மேலைப் பஞ்சப்ரஹ்மோபநிஷத் வாக்யங்களினும், "ப்ரஹ்மப்ரணவ ஸந்தாந நாதோ ஜ்யோதிர்மயச்சிவ: |" எனும் நாதபிந்தூபநிஷத் வாக்யங்

களினும் பெறப்படும். இதுபற்றியன்றே இலக்குமிக்குப் பதியெ னும் அருத்தத்தில் 'லக்ஷ்மீபதி:' எனுஞ்சொல் வழங்கப்படுமாறு அரிக்குப்பதி ஓங்கார சிவனெனும் அருத்தத்தில் "ஹரி: ஓம்" எனுஞ்சொல் வழங்கப்படுதல் உலகவழக்கினுங் காணப்படுகின்றது. கடோபநிஷத்து உ - வது வல்லியில் (𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍, 𑌏𑌤𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌵𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌏𑌤𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌵𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑌰𑌂।) "ஓமித்யேதத், ஏதத்த்யேவா க்ஷரம்ப்ரஹ்ம ஏததேவாக்ஷரம்பரம் |" என்று இவ் வோங்காரத் தின்பெருமை சொல்லப்பட்டிருக்கிறது. பொருள் :— 'ஓமெனும் இப் பிரணவாக்ஷரமே பிரமம். இப் பிரணவாக்ஷரமே சிரேஷ்டம்.' எனவாம். முண்டகோபநிஷத்தின் உ - வது முண்டகம் 'பிரணவம் வில்' எனும் பொருடோன்ற—

(𑌪𑍍𑌰𑌣𑌵𑍋 𑌧𑌨𑍁𑌃) "ப்ரணவோ தநு:"

என்பதனானும்; 'பிரணவம் வலம்புரிச்சங்கு வடிவினது' எனும் பொருடோன்றக் கந்தபுராணத்து உமைகயிலைநீங்குபடலம்—

"வேத மூலநேர் வால்வளை யுருக்கொடு விளங்கி
யேத மில்லதோர் பதுமபீ டத்தின்மே லிருந்தாள்"

என்பதனானும் இப் பிரணவம்— தமிழிலும், கிரந்தத்திலும் அமைக்கப்பட்ட ஓகார வடிவிற்றேயாம். இந்த ஓங்காரத்தின் வியஷ்டி அகார உகார மகாரங்களாகலின், சிவபிரான் நான் அகார உகாரரூபமாயிருக்கிறேன்: மகாரமாயிருக்கிறேனென் றருளிச்செய் தது இந்நூல் கஎ௬ - ம் பக்கத்திற்காட்டப்பட்ட சுருதியிற் காணப் படுதலின் அம் மூன்றக்ஷரங்களுஞ் சிவபிரானாற்பிரமவிஷ்ணு உருத் திரர்கட்கு அவர் காரியார்த்தமாக அளிக்கப்பட்டனவேயாம். இப் படி வகை கூறப்படுதலானே, விஷ்ணுவைப் பிரணவமென்றும் ஓங் காரமென்றுங் கூறுதலெல்லாஞ் சமஷ்டிப்பிரணவமாகிய அவ் வோங்காரத்தின் வியஷ்டிப்பிரணவ மென்பதினும், உபசரிப் பினும், துதியினுமடங்கும். என்னை? சதுர்த்த சப்தத்தில் விஷ்ணு நாமம் படிக்கப் படாமையின். திரிமூர்த்திகளுஞ் சிவபெருமானு டைய வேலைக்காரர்களென்பது சிவன் பஞ்சக்கிருத்திய நியமன கருத்தாவெனுஞ் *சுருதியிற் பெறப்படும். இப்பிரணவ விசாரத்தா

* இக்காண்டத்தின் க௬ - ம் அத்தியாயத்திற் காட்டப்பட்ட பஞ்சப்ர ஷ்மோபநிஷத வாக்கியம்.

னும் நான்காவதுதெய்வஞ் சிவனென்பது சித்தித்தது. ஸம்ஸ்க்ருத வேதம் இவ்வாறு முழங்குதலினூற்றான் தமிழ்வேதத்தில்—

(க) "ஒருருவாயினை......படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை"

என்று திருஞானசமபந்தசுவாமிகளும்,

(உ) "ஆதி யும்மர னுயயன் மாலுமாய்ப்
பாதி பெண்ணுரு வாய பரமனென்
ரோதி யுட்குழைக் தேதகவல் லாரவா
வாதை ர்த்திடும் வாண்டீ ரீசனே."

என்று திருநாவுக்கரசுசுவாமிகளும்,

(ங) "வாழ்வர்கண் டீர்நம்முளீவர் வஞ்சமனைத்தீரே
யாவராலும்கழப்பட்டிங்கல்லலில்வீறாதே
மூவராயு மொருவராயுமுதல்வனவனேயாந்
தேவர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே."

என்று ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும்,

(ச) "தேவர்கோ வறியாத தேவ தேவன
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி"

"மூவரு முப்பது மூவ ரு மற்றொழிந்த
தேவருங் காணாச் சிவபெருமான்"

"தேவதேவன்மெய்ச்சேவகன்றென்பெருந்துறைநாயகன்
மூவராலுமறியொணாமுதலாயவானந்தமூர்த்தியான"

"சுந்தரத்தின்பக்குயிலே சுழ்சுடர்ஞாயிறுபோல
அந்தரத்தேநின்றிழிந்திங்கடியவராசையறுப்பான்
முந்துநடுவுமுடிவுமாகியமூவரறியாச்
சிந்துரச்சேவடியானைச்சேவகனைவரக்கூவாய்."

என்று ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகளும் அருளிச்செய்த திறங் காணப்படுகின்றது. இத்திருவாக்குகளிற் படைத்துக் காத்து அழிக்கும் முத்தொழின் மூர்த்திகளாகிய பிரம விஷ்ணு உருத்திரர்களுக்கு முதல்வனாகவும், அம்மூர்த்திகளாலு மளவிடற்கரியவனாகவும், நான்காவது தெய்வமாகவு முள்ளவன் சிவபிரானெனும் முடிவு காண்க. இத்திறமுணராத இழிமத வைணவர், தேவார திருவாசகங்களிற் சைவசமயக்கடவுண் மூவரி லொருவனென்பதே யொப்புக்கொள்ளப்பட்டது: அவ்வொப்புமைக்கு விரோதமாக இக்கா

லத்துச் சைவர்கள் தங்கள் கடவுள் நான்காவதுதெய்வ மென்கின் றனரென்றல் ஈண்டுப் பழுதுபட்டழிதலுங் காண்க.

"மூவரி லெங்கண் மூர்த்தி யிவனென முனிவ ரோடு
தேவர்வந் திறைஞ்சு நாங்கூர்த் திருமணிக் கூடத் தானே"

"மூவரி லொருவ னாய வொருவனை யுலகங் கொண்ட
கோவினை" என்று திருமங்கையாழ்வாரும்,

"முதலாவார் மூவரே யம்மூவ ருள்ளு
முதலாவான் மூரிநீர் வண்ணன்"

என்று பொய்கையாழ்வாரும புகன்றபடி சைவாசாரியருந் தங் கடவுளை மூவரி லொருவனெனக் கூறிக்கொள்ளவில்லை யென்க. மூவருள்ளுஞ் சிவனார் தம்முடைய சிருஷ்டியாதிகாரிய சத்திகளைப் பதியவைத்து அந்தரியாமியா யிருத்தல் கருதி அவரை "மூம மூர்த்திக ளாயினை" என்றும், "அரனயன்மாலுமாய்" என்றும், "மூவராயும்" என்றும் விதந்ததென்க. திரிமூர்த்திகளிற் சத்துவ குணக்கடவுள் யாவனெனப் பரீக்ஷித்தறியச்சென்ற பிருகுமுனிவர் வைகுண்டம்போந்து வைகுண்டன்றலையில், தங்காலான மிதித்தபோது கோபியாது புகழ்ந்துநின்ற அவ் வைகுண்டனையே சாத்துவிக சருவேசுரனென் றறிந்துகொண்டனரெனக் கூறும் வைணவர்பாகவத தசமஸ்கந்தத்து ௮௯ - ம் அத்தியாயத்துக் கட்டுக்கதையாலும், முக்குணமூர்த்திகளி லொருவனு யுதைபுண்டவனே தமது மதக்கடவுளென்று வைணவ ரொப்புக்கொள்வோரு மாயினர்.

## ஐந்து மூர்த்திகள்.

யஜுர்வேத யோகதத்வோபநிஷத்தில் (𑌧𑍍𑌯𑌾𑌯𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌮𑍁𑌖𑌾𑌕𑌾𑌰𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌂 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑌂 । 𑌧𑌾𑌰𑌯𑍇𑌤𑍍𑌪𑌞𑍍𑌚𑌘𑌟𑌿𑌕𑌾𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌜𑌯𑌮𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍 । ) "த்யாயம்ச் சதுர்முகாகாரம் சதுர்வக்த்ரம் ஹிரண்மயம்தாரயேத் பஞ்சகடிகாப்ருதிவீஜயமாப்நுயாத் |" எனவருதலிற் பிரமனை யுபாஸித்துப் பிருதிவியை வெல்லுதலும், (𑌸𑍍𑌮𑌰𑌨𑍍𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌂 𑌦𑍇𑌵𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌬𑌾𑌹𑍁𑌂 𑌕𑌿𑌰𑍀𑌟𑌿𑌨𑌂 । 𑌧𑌾𑌰𑌯𑍇𑌤𑍍𑌪𑌞𑍍𑌚𑌘𑌟𑌿𑌕𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍈𑌃 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌤𑍋𑌜𑌲𑌾𑌦𑍍𑌭𑌯𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌜𑌲𑍇𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 । ) "ஸ்மரந் நாராயணம்தேவம் சதுர்பாஹும், கிரீடிநம் | தாரயேத் பஞ்சகடிகாஸ் ஸர்வபாபை: ப்ரமுச்யதே | ததோஜலாத் பயம்நாஸ்தி ஜலேமருதுர் நவித்யதே |" எனவரு

தலின் நாராயணனை யுபாஸித்து அப்புவை வெல்லுதலும், ([illegible]) "த்ர்யக்ஷந்து வரதம்ருத்ரம் தருணாதித்ய ஸந்நிபம் | தாரயேத் பஞ்சகடிகாவஹ்நிநாஸௌ நதஹ்யதே |" எனவருதலின் உருத்திரனை யுபாஸித்து அக்கினியை வெல்லுதலும், ([illegible]) "தாரயேத்தத்ரஸர்வஜ்ஞ மீச்வரம்விச்வதோமுகம் | தாரயேத்பஞ்சகடிகா வாயுவத்வ்யோமகோபவேத் | மரணம் நதுவாயோஸ்து பயம்பவதியோகிந: |" என வருதலின் ஸர்வஜ்ஞனை மஹேசுரனையுபாஸித்து வாயுவை வெல்லுதலும், ([illegible]) "ஆகாசேவாயுமாரோப்ய ஹகாரோபரிசங்கரம் | பிந்துரூபம்மஹாதேவம் வ்யோமாகாரம் ஸதாசிவம் | சுத்தஸ்படிக ஸங்காசம் த்ருதபாலேந்துசேகரம் | உமார்த்ததேஹம்வரதம் ஸர்வகாரணகாரணம் | யத்ரகுத்ராபிதோவாபி ஸுகமத்யந்த மச்நுதே |" எனவருதலிற் சர்வகாரணங்களுக்குங் காரணனாயிருக்குஞ் சதாசிவமூர்த்தியை யுபாஸித்து ஆகாயத்தி லொருகேடுமிலாது உய்தலுங் கேட்கப்படும். இச்சுருதிவசனங்க ளிருக்குமிடத்தே பாதமுதன் முழங்கால்வரை பிரமனுக்குரிய பிருதிவிபாகமென்பதூஉம், முழங்கான்முதற் குதம்வரை விஷ்ணுவுக்குரிய ஜலபாகமென்பதூஉம், குதமுதல் இருதயம்வரை உருத்திரனுக்குரிய அக்கினிபாக மென்பதூஉம், இருதயமுதற் புருவநடுவரை மஹேசுரனுக்குரிய வாயுபாக மென்பதூஉம், புருவநடுமுதற் சென்னிவரை சதாசிவமூர்த்திக்குரிய ஆகாசபாக மென்பதூஉம் விவரிக்கப்பட்டுள்ளன. யஜுர்வேத யோகசிகோபநிஷத்—

([illegible] |

[illegible] |

[illegible] |

வாயொஸ்பிம்பஷட்கோண மீஸ்வரோஸ்யாதிதேவதா ।
ஆகாஸமண்டலம்வ்ருத்தம் தேவதாஸ்யஸதாஸிவ: । )

" சதுரச்ரம்தரண்யாதௌ ப்ரஹ்மாதத்ராதிதேவதா |
அர்த்தசந்த்ராக்ருதிஜலம் விஷ்ணுஸ்தஸ்யாதிதேவதா |
த்ரிகோணமண்டலம்வஹ்நீ ருத்ரஸ்தஸ்யாதிதேவதா |
வாயோர்பிம்பந்துஷட்கோண மீச்வரோஸ்யாதிதேவதா |
ஆகாசமண்டலம்வ்ருத்தம் தேவதாஸ்யஸதாசிவ: |

என்று கூறுகின்றது. ஸாமவேத யோகசூடாமண்யுபநிஷத்—

(தேஷாம்பஞ்சபூதாநாம்பதய:பஞ்ச ।
ஸதாஸிவேஸ்வரருத்ரவிஷ்ணுப்ரஹ்மாணஸ்சேதி । )

" தேஷாம்பஞ்சபூதாநாம்பதய: பஞ்ச |
ஸதாசிவேச்வரருத்ரவிஷ்ணுப்ரஹ்மாணச்சேதி | "

என்று கூறுகின்றது. ஸாமவேத தர்சநோபநிஷத்—

(ப்ரஹ்மாணம்ப்ருதிவீபாகே விஷ்ணும்தோயாம்ஸகேதயா ।
அக்நௌசமஹேஸாந மீஸ்வரம்சாநிலாம்ஸகே ।
ஆகாஸாம்ஸேமஹாப்ராஜ்ஞ தாரயேத்துஸதாஸிவம் । )

" ப்ரஹ்மாணம்ப்ருதிவீபாகே விஷ்ணும்தோயாம்சகேததா |
அக்நியம்சேசமஹேசாந மீச்வரம்சாநிலாம்சகே |
ஆகாசாம்சேமஹாப்ராஜ்ஞ தாரயேத்துஸதாசிவம் | "

என்று கூறுகின்றது. இச்சுருதிகளானே பஞ்சபூத கர்த்தாக்களான பிரமன், விஷ்ணு, உருத்திரன், மஹேசுரன், சதாசிவனெனும் ஐந்துமூர்த்திக ளிருக்கின்றன ரென்பதும், அவர்கள் பூதக்கிரமமாகவே ஒருவர்க்கொருவ ருயர்ந்தவரென்பதும், வெளியாயினமையின், பஞ்சகர்த்தாக்க ளென்பதும், பஞ்சக்கிருத்தியமென்பதுஞ் சைவாகம பரிபாஷையெனுஞ் சண்டாளபுண்டர வைணவர்கூற்றுத் தலைதூக்குமாறின்றே. ஈண்டுச் சைவாகம சித்தாந்தமே வேதாந்தமாதலுங் காண்க. இவ்வைந்து மூர்த்திகளுட் பிரம விஷ்ணு உருத்திரரெனு மூவரை யுண்டுபண்ணி யொடுக்கும் ஸ்ரீகண்டசிவனெனுஞ் சம்புருத்ரனும், சம்புமஹேசுரனும், சம்புசதாசிவனும் அந் நான்காவதுதெய்வமே யாவர். விவரம் வந்துழிக்காண்க. (ஆகாஸாத்வாயுர் வாயோரக்நி ரக்நேராப அத்ப்யஃப்ருதிவீ) "ஆகாசாத்வாயுர் வாயோராக்நி ரக்நேராப அத்ப்யஃப்ருதிவீ " என்று

ஸுபாலோபநிஷத் பூதோற்பத்தி புகல்கின்றபடி ஜலத்திற்கு அதிதேவதையாயிருக்கு நாராயணன் அக்கினிக்கு அதிதேவதையாயிருக்கும் உருத்திரனுக்குத் தாழ்ந்தவனாகவும், (𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌅𑌪𑍍𑌸𑍁 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌤𑍇 𑌆𑌪𑌸𑍍𑌤𑍇𑌜𑌸𑌿 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑍇𑌜𑍋 𑌵𑌾𑌯𑍌 𑌵𑌿𑌲𑍀𑌯𑌤𑍇 𑌵𑌾𑌯𑍁𑌰𑌾𑌕𑌾𑌶𑍇 𑌵𑌿𑌲𑍀𑌯𑌤𑍇) "ப்ருதிவ்யப்ஸு ப்ரலீயத ஆபஸ்தேஜஸி ப்ரலீயந்தே தேஜோவாயௌவிலீயதே வாயுராகாசேவிலீயத" என்று மேலைய ஸுபாலோபநிஷத் பூதலயக்கிரமம் புகல்கின்றபடி அக்கினிக்கு அதிதேவதையான உருத்திரனது சங்காரத்தில் ஜலத்திற்கு அதிதேவதையான அந் நாராயணன் இலயமாகின்றவனாகவும், ஜீவதேஹத்திலே மேலுரைத்தபடி உருத்திர பாகத்திற்குக் கீழே முழங்கான்முதற் குதம்வரையுள்ள தாழ்ந்த பாகத்திற்கே அந்நாராயண னுரியவனாகவு மிருத்தலை யொருசிறிது முணராமே அவனைச் சிவனுக்கும் பெரியதேவனென்றும், பிரமன்மகன் சிவனென்றும் பிதற்றும்படி நூதனவைணவங் கற்பித்தவர்களைப் பரமபாஷண்டிகளென்ப தேற்புடைத்தென்க. இவ்வித பூதக்கிரமம் பிறழாதிருக்க வேண்டுமெனு நியாயம்பற்றியே "ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரா" "ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரா" என்று வேதம் பல்லிடத்தும் பகர்கின்றதென்க. இவ் விஷ்ணுவை, மஹேசுரமூர்த்திக்கும், சதாசிவமூர்த்திக்கும் மேலாக்கிப்பரத்துவம்பகரவேண்டுமாயின் விஷ்ணு நாமம் ரு - வதாகவும், சு - வதாகவும் வேதத்திற் கூறப்படுவதோடு சதாசிவமூர்த்திக்குமேலாய்ச் சம்புவாய் அமூர்த்தசிதாகாசமாயுள்ள சிவத்திற்கும் மேலே எ - வதாகவுங் கூறப்படல் வேண்டும். ச - வதற்கே யிடமிலாதிருக்க அவ்வாறு கூறுதலை யெவ்விடத்தி லெவர் கண்ணுறுவர்! உறுராகலின் விஷ்ணுபரத்துவ மில்லையென்க. கூறிப்போந்த ஸுபாலோபநிஷத் "அந்தச்சரீரே நிஹிதோ குஹாயாம்" என்றற்றொடக்கத்து அ - ங் கண்டத்தில்—

"அசிந்த்யரூபம் திவ்யம் தேவமஸங்கம் சுத்தம் தேஜஸ்காயம் ஸர்வரூபம் ஸர்வேச்வர மசிந்த்யமசரீரம் நிஹிதம் குஹாயா மம்ருதம் விப்ராஜமாத்மாநந்தம் தம்பச்யதி வித்வாம்ஸஸ்தேநயேநபச்யந்தி |"

எனவுரைக்கும் வசனங்களில் ஆன்மாவி னிருதயகுகைக்கண்ணிலவும் பரவஸ்து "ஸர்வேச்வர" சப்தத்தான் விளங்குதலிற் பிறசுருதியாதி பிரமாணங்கட்கியைய அது, சதுர்த்தசப்த சிவமெனவறியப்படுவதாயிற்று.

## கூ. திரிமூர்த்திகளிலுருத்திரமூர்த்தியுயர்ந்தோன்.

---

திரிகுண ரஹிதனெனும் நிர்க்குண சிவனுக்கும் உருத்திரனெனும்பெயர் வேதமுதலிய பிரமாணங்களிற் காணப்படுதலால், அப்பெயரின் பொருள்:—

"இன்னலங் கடலுட் பட்டோர் யாரையு மெடுக்கு மாற்று
லுன்னரும் பரம மூர்த்தி யுருத்திர னெனும்பேர் பெற்றான்"

எனுங் கந்தபுராண மொழிகளின்படி 'சமுசாரத் துன்பமெனுஞ் சாகரத்திற் கிடந்து உழிதருமுயிர்களைத் திருவருளெனுந் தெப்பத்திலேற்றி முத்திக்கரை சேர்ப்பவன்' என வறியப்படுதலால், இவ்வுருத்திரனல் ஆளப்படுவோனாகி, உள்ளே சத்துவகுணமும், வெளியே தாமதகுணமு முளோனாகியிருக்கும் உருத்திரமூர்த்தியே "குணருத்ரன்" எனப்பட்டனன். இவ்வுருத்திரன—உள்ளும் புறமும் இராஜதமுள்ள பிரமனுக்கும், உள்ளே தாமதமும் வெளியே சாத்துவிகமுமுள்ள விஷ்ணுவுக்கும் உயர்ந்தோனுவன். இந்நியாயத்தைச் சூதசங்கிதை—

"எல்லா வற்றி னும்பிரம மென்னு மதியே விசேடமாம்
நல்லார் புகழு முருத்திரற்கு நகுமுள் ளேசத் துவகுணமும்
மல்லார் வெளியே தமோகுணமு மாயற் குள்ளே தமோகுணமும்
வில்லார் வெளிச்சத் துவகுணமு முள்ள வென்பார் மெய்யுணர்ந்தோர்."

"உள்ளும் புறமு மிராசதமே யுளது மலர்மே யவற்கு"

"திரிமூர்த் திகளி லுருத்திரனே திகழ்சத் துவநற் குணதேக
மரிய திறத்தோ னுதலினுல் விசேட னுவான் மாதவத்தீர்"

என்று பரமவிஞ்ஞானமுரைத்த வத்தியாயத்திற் பகர்தல் காண்க. இந்நியாயம் பதினெண்புராணங்களி லொன்றாய சைவபுராணத்து ஞானசங்கிதையின் உ-ம் அத்தியாயத்தினும், பிறவற்றினும் பெறப்படும். உள்ளே யிருப்பது பிரமமாகிய ஞானம், அது நல்ல சத்துவகுணமாக விளங்குவோன் உருத்திரமூர்த்தியாகலின், "கடுத்தது காட்டு முகம்" என்ற நியாயப்படி ஸத்வோத்கர்ஷமே வெளியிலுமென்பதை விளக்கும்பொருட்டே "எல்லாவற் றினும் பிரம மென்னு மதியே விசேடமாம்" என்றும், "திகழ்சத் துவநற் குணதேக மரிய திறத்தோன்" என்றுஞ் சூதசங்கிதை சொல்லிற்

றென்க. இந்நியாயத்திற்குச் சுருதியுண்டுகொலோ வெனின்,—உண்டென்க. யஜுர்வேத பைங்களோபநிஷத்—

(𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍋𑌦𑍍𑌰𑌿𑌕𑍍𑌤𑌾𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾 𑌆𑌵𑌰𑌣𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑌾𑌸𑍀𑌤𑍍 । 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌿𑌮𑍍𑌬𑌂 𑌯𑌤𑍍𑌤𑌦𑍀𑌶𑍍𑌵𑌰𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌮𑌾𑌸𑍀𑌤𑍍 । 𑌸 𑌸𑍍𑌵𑌾𑌧𑍀𑌨𑌮𑌾𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌲𑌯𑌾𑌨𑌾𑌮𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌤𑌾 𑌜𑌗𑌦𑌙𑍍𑌕𑍁𑌰𑌰𑍂𑌪𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌵𑌿𑌲𑍀𑌨𑌂 𑌸𑌕𑌲𑌂 𑌜𑌗𑌦𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌕𑌰𑍍𑌮𑌵𑌶𑌾𑌦𑍇𑌷 𑌪𑌟𑍋 𑌯𑌦𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌰𑌿𑌤𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌕𑌰𑍍𑌮𑌕𑍍𑌷𑌯𑌾𑌤𑍍𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑌿𑌰𑍋𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌵𑌾𑌖𑌿𑌲𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌸𑌙𑍍𑌕𑍋𑌚𑌿𑌤𑌪𑌟𑌵𑌦𑍍𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 । 𑌈𑌶𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌵𑌰𑌣𑌶𑌕𑍍𑌤𑌿𑌤𑍋 𑌰𑌜𑍋𑌦𑍍𑌰𑌿𑌕𑍍𑌤𑌾 𑌮𑌹𑌦𑌾𑌖𑍍𑌯𑌾 𑌵𑌿𑌕𑍍𑌷𑍇𑌪𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑌾𑌸𑍀𑌤𑍍 । 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌿𑌮𑍍𑌬𑌿𑌤𑌂 । 𑌯𑌤𑍍𑌤𑌦𑍍𑌧𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌮𑌾𑌸𑍀𑌤𑍍 । 𑌸 𑌮𑌹𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑍀 𑌸𑍍𑌪𑌷𑍍𑌟𑌾𑌸𑍍𑌪𑌷𑍍𑌟𑌵𑌪𑍁𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 । 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌵𑌿𑌕𑍍𑌷𑍇𑌪𑌶𑌕𑍍𑌤𑌿𑌤𑌸𑍍𑌤𑌮𑍋𑌦𑍍𑌰𑌿𑌕𑍍𑌤𑌾𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌾𑌭𑌿𑌧𑌾 𑌸𑍍𑌥𑍂𑌲𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑌾𑌸𑍀𑌤𑍍 । 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌿𑌮𑍍𑌬𑌿𑌤𑌂 𑌯𑌤𑍍𑌤𑌦𑍍𑌵𑌿𑌰𑌾𑌟𑍍𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌮𑌾𑌸𑍀𑌤𑍍 । 𑌸 𑌤𑌦𑌭𑌿𑌮𑌾𑌨𑍀 𑌸𑍍𑌪𑌷𑍍𑌟𑌵𑌪𑍁𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌥𑍂𑌲𑌪𑌾𑌲𑌕𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌭𑌵𑌤𑌿 ।)

*"ஸத்வோத்ரிக்தவ்யக்தா யாவரணசக்திராஸீத் | தத்ப்ரதிபிம்பம் யத் ததீச்வரசைதந்யமாஸீத் | ஸஸ்ஸ்வாதீநமாயஸ் ஸர்வஜ்ஞஸ்ஸ்ருஷ்டிஸ்திதி லயாநாமாதிகர்த்தா ஜகதங்குரரூபோபவதி | தஸ்மிந்விலீநம் ஸகலம் ஜகதாவிர்பாவயதி | ப்ராணிகர்மவசாதேஷ படோயத்வத்ப்ரஸாரித: | ப்ராணிகர்மக்ஷயாத் புநஸ்திரோபாவயதி | தஸ்மிந்நேவாகிலம் விச்வம் ஸங்கோசித படவத்வர்த்ததே | ஈசாதிஷ்டிதாவரசக்திதோ ரஜோத்ரிக்தாமஹதாக்யா விக்ஷேப சக்திராஸீத் | தத்ப்ரதிபிம்பிதம் | யத்தத்திரண்யகர்ப்பசைதந்ய மாஸீத் | ஸமஹத் தத்வாபிமாநீ ஸ்பஷ்டாஸ்பஷ்டவபுர்பவதி | ஹிரண்யகர்ப்பாதிஷ்டித விக்ஷேபசக்திதஸ் தமோத்ரிக்தாஹங்காராபிதா ஸ்தூலசக்திராஸீத் | தத்ப்ரதிபிம்பிதம் யத்தத்விராட் சைதந்யமாஸீத் | ஸததபிமாநீ ஸ்பஷ்டவபுஸ் ஸர்வ ஸ்தூலபாலகோ விஷ்ணுஃ ப்ரதாநபுருஷோபவதி"*

என்று கூறுகின்றது. இதன்பொருள் :— 'சத்துவாதிக்கிய முள்ள அவ்வியத்தமெனும் ஆவரணசத்தியிற் பிரதிபலித்த தெதுவோ அஃது ஈசுரசைதன்யமாம். அது மாயையை ஸ்வாதீனமாயுடையதாய்ச் சர்வஜ்ஞனாய்ச் சிருஷ்டி ஸ்திதி லயங்களுக்கு ஆதிகர்த்தாவாய்ச் சகத்திற்கு முளையாயிருக்கின்றது. இச் சைதன்யமான ஈசுரன் தன்னிடத்துள்ள ஸர்வஜகத்தையும் பிராணிகளின்

கர்மவசத்தின்படி சுருட்டப்பட்ட சித்திரபடத்தை விரிப்பதுபோலத் தோன்றுமாறு செய்தனன். பிராணிகளின் கர்மக்ஷயத்தின்படி பின்னரும் அதனை மறைத்துவிடுகின்றனன். அதனால் அகிலமெனும் பெயரிய விசுவம் சித்திரபடம் போன்றதாம். ஈசுர ஸ்வாதீனமாயிருக்கும் ஆவரணசத்தியினின்று இரஜோகுணப் பிரதான மஹத்தெனும் விக்ஷேபசத்தி தோன்றிற்று. அதனிற் பிரதிபலித்ததெதுவோ அது ஹிரண்யகர்ப்ப சைதன்யமாம். மஹத் தத்வாபிமானியான அந்த ஹிரண்யகர்ப்ப சைதன்யம் வெளிப்படையும் வெளிப்படையில்லாததுமான உடம்புடையதாகும். இச் சைதன்ய ஹிரண்யகர்ப்பனிடத்துள்ள விக்ஷேபசக்தியினின்று தமோகுணப் பிரதான அஹங்கார ஸ்தூலசக்தி யுண்டாயிற்று. அதனிற் பிரதிபலித்ததெதுவோ அது விராட்சைதன்யமாம் (விராட் புருஷன்). அஃது அவ் வஹங்காரத்திற்கு அபிமானியாகி வெளிப்படையான உடம்பினதாய்ச் சகல ஸ்தூலத்தையும் இரக்ஷிக்கும் பிரதான புருஷனெனும் விஷ்ணுவாகிறது.'

எனவாம். இங்ஙனம், ஈசனெனும் உருத்திரமூர்த்தி சத்துவாதிக்கிய மூளனென்பதும், இரணியகருப்பனெனும் பிரமதேவன் இராஜதமூளனென்பதும், இரக்ஷகனாகியிருக்கிற விஷ்ணு தாமதமூளனென்பதும், சங்காரத்தின் பின்னே சிருட்டியும், அதன் பின்னே திதியும், பின்னர்ச் சிருட்டி திதியாகிய விரண்டுஞ் சங்காரத்தி லொடுங்குதலுஞ் சித்தித்தன. 'சிவனுக்குள்ள எல்லாப்பெயர்களும், வடிவமும், தொழிலும் விளங்கவிருப்போன் உருத்திரமூர்த்தி' என்பது—

(𑌤𑌚𑍍𑌛𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌸𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌤𑌚𑍍𑌚𑌿𑌹𑍍𑌨𑍈𑌰𑌪𑌿𑌚𑌿𑌹𑍍𑌨𑌿𑌤𑌃 ।
𑌤𑌨𑍍𑌨𑌾𑌮𑌨𑌾𑌮𑌾𑌤𑌦𑍍𑌰𑍂𑌪𑌸𑍍𑌤𑌤𑍍𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌕𑍍𑌷𑌮𑌃 ॥
𑌤𑌤𑍍𑌤𑍁𑌲𑍍𑌯𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌶𑍍𑌚𑌤𑌦𑌾𑌜𑍍𑌞𑌾𑌪𑌰𑌿𑌪𑌾𑌲𑌕𑌃 । )

"தச்சக்த்யாதிஷ்டிதச்சஸ்வத்தச்சிஹ்னைரபிசிஹ்நித: |
தந்நாமநாமாதத்ரூபஸ்தத்கார்ய்யகரணக்ஷம: ||
தத்துல்யவ்யவஹாரச்சததாஜ்ஞாபரிபாலக: |"

எனுஞ் சைவபுராணத்து வாயுசங்கிதையின் பூருவபாகச் சுலோகார்த்தமாதலானும், "சிவனுக்குரிய பெயர், அடையாளம், தொழிலென்பன உருத்திரனுக்கும் ஏற்பட்டுள" என்பது மஹாஸ்காந்தத்தின் உபதேசகாண்டத்து எச - ம் அத்தியாயத்தின் ருக - ஞ்

சுலோகார்த்த மாதலானும் துரீயசிவனுக்குரிய ஈசுரசப்தம் இச் சுருதியில் உருத்திரமூர்த்திக்காயிற்று. படைப்பையுங் காப்பையு மழித்தடக்கத்தக்க இம்மூர்த்தியையுந் தன்னிடத்திலடக்குமாற்ற லீற்றுத்தொழில், ஐந்தொழின் முதல்வனான சிவனுடையதாகலின், அவ்வாற்றலைச்சார்ந்த அழிப்புத்தொழிலும் உருத்திரமூர்த்திக் காயிற்று. இம்மூர்த்தியின் பெயர்கள் அந்தச் சிவன்பெயர்களால் விளங்கினும் காலருத்ரன், காலாக்நி ருத்ரன், பிரளயகால ருத்ரன், பிரளயகாலாக்நி ருத்ரன், நீலலோகித ருத்ரனெனும் பெயர்களா னும் விளங்கும். இம்மூர்த்தியின் தேவிபெயர் ருத்ரி, ருத்ராணி முதலியனவாக விளங்கும். இவரிருக்கை சப்தபாதாளமுங்கட ந்த அண்டகடாக வெளியிலுள்ள காலாக்நிருத்ர புவனமாம். இவ் விருக்கையன்றிப் பிறவிருக்கையுமுண்டென்பது—“ அவாந்தரப் பிரளயஞ் சம்பவிக்குமுன் அரிபிரமர்களுடன் குணதத்துவத்தி லும், அந்தப்பிரளயகாலத்தில் அவ்விருவரையுமொடுக்கிக்கொண்டு அராகதத்துவத்திலு மிருப்பவர் ஸ்ரீகண்டராகிய குணருத்ரர் ” எனுஞ் சாத்திரங்களானு மறியப்படும். சிவபிரானை மூவரிலொருவ னாகத் தியானிப்போரெல்லாம் இவ்வுருத்திரகதியைத்தானடைவர். இவ்வுருத்திர மூர்த்திக்கு வேறாகத் திக்குப்பாலகரு ளொருவனான ஈசானமூர்த்தியுளன். இம்மூர்த்திக்குவேறாக ‘ ருத்ரன் ’ எனும் அக் கினி தேவனுளன். இத்தேவனுக்கு வேறாக ஏகாதசருத்ரரிருக்கின் றனர். இவர்க்கு வேறாக எண்ணிறந்த உருத்திரரிருக்கின்றனர். விவரம் எமது சுப்பிரமணியவியாசத்தி னறியலாம். நிற்க.

(𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾𑌚 𑌸𑌾𑌤𑍍𑌵𑌿𑌕𑍀 𑌰𑍁𑌦𑍍𑌰𑍇 𑌭𑌕𑍍𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌰𑌾𑌜𑌸𑍀।
𑌤𑌾𑌮𑌸𑍀 𑌦𑍈𑌤𑍍𑌯𑌪𑌕𑍍𑌷𑍇𑌷𑍁 𑌮𑌾𑌯𑌾 𑌤𑍍𑌰𑍇𑌧𑌾 𑌹𑍍𑌯𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌾।)

“ ப்ரோக்தாச ஸாத்விகீருத்ரே பக்தேப்ரஹ்மணிராஜஸீ |
தாமஸீதைத்யபக்ஷேஷு மாயாத்ரேதாஹ்யுதாஹ்ருதா | ”

எனுங் கிருஷ்ணோபநிஷத் வசனமும் உருத்திரன் ஸாத்விக குணமுள னென்பதைக் காட்டுகின்றது. அற்றாகலினன்றே இவ் வுருத்திரகாரியமுதல்வனான சிவபெருமானைநோக்கி—

(𑌸𑌤𑍍𑌵𑌸𑍍𑌯𑍈𑌷 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌕𑌃,
𑌸𑍁𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌾𑌮𑌿𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌮𑍀𑌶𑌾𑌨𑍋 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌵𑍍𑌯𑌯𑌃 ।)

“ ஸத்வஸ்யைஷப்ரவர்த்தக:,
ஸுநிர்மலாமிமாம்ப்ராப்தி மீசானோஜ்யோதிரவ்யய: | ”

என்று சுவேதாச்வதரோபநிஷத்துங் கூறிற்று. இப்படி உருத்திரனைச் சத்துவகுணனென்று சாற்று சுருதிவசனங்கள், உருத்திரன் தமோகுணனெனுஞ் சுருதிவசனங்கட்கு விரோதமாகாவண்ணம் உட்குணங் குறித்துச் சத்துவமும், வெளிக்குணங்குறித்துத் தாமதமுஞ் சாற்றுகின்றனவென்று அவிரோதநயனஞ் செய்து கொள்க. இந்நியாயம் விஷ்ணுவைத் தமோகுணனெனும் பைங்களோபநிஷத் வசனத்திற்கும், விஷ்ணுவைச் சத்துவகுணனெனும் பிறவுபநிஷத் வசனத்திற்குங் கொள்க. விஷ்ணுவுக்கு உட்குணந் தாமதமாகலின், அக்குணம் "நித்ராலஸ்யே மோஹராகௌமைதுநம் சௌர்யமேவச |" எனுஞ் சாரீரகோபநிஷத் வசனத்தின்படி பகுக்கப்படும். இவை விஷ்ணுவுக்குளவென்பது விஷ்ணுசரிதைகளானும் விளங்கும். வந்துழி வந்துழிக்காண்க. வீழ்ந்துறங்கு நித்திரை விஷ்ணுவுக்குளதென்று கேட்கப்படுமாறு உருத்திரனுக்குமுளதென்று கேட்கபடுதலின்று. உள்ளே வஞ்சகமும் வெளியே சாந்தமுங் காட்டுவானையே 'கபடன்' என்றிவ்வுலக மியம்புமாறு, உள்ளே தாமதமும் வெளியே சாத்துவிகமுமுள்ள அவ்விஷ்ணுவுமெண்ணப்படுகின்றனன். "மாயன்" என்பதும் இப்பெற்றிமைக்கே சாலும். உருத்திரனது வெளிக்குணம் இவ்வித தாமதகுணமன்று. அது கௌரவமுடையது. அதுதான் சங்காரகாலத்திற் காரியப்பட்டுப்பெருகி ஹரி பிரமர்களுடைய உருக்களையும் பொடித்துக் கோரநடனஞ் செய்யவுளது. இக் கௌரவ குணத்திற்றான் விஷ்ணுமுதலிய தேவர்களுந் தவத்தின்வழியாகச் சிறிதடைந்து அசுராதியரை வெல்பவராவர். நிலவுலக அரசர் முதலியோர்க்கும் இக்குணமில்லையாயிற் சிறந்த சௌரியமும் வெற்றியுமுண்டாதலில்லை. இராமனும் உருத்திராமிசந்தாங்கி இராவணனைக் கொன்றனனென்பதை வான்மீகங்கூறும். நாரணன் மது கைடவரை வென்றதும் உருத்திரசத்தி கொண்டென்பதைக் "கன்னிதன் னருளால் வென்றேன் கயிடவன் மதுவைக் கண்டீர்" எனுஞ் சிவரகசியத்து ங-ம் அமிசத்து க-ங் காண்டத்தின் கஉ-ஞ் சருக்கத்திற் பெறப்படும். விஷ்ணு ஜலத்தைப் பெருகும்படிசெய்து பிருதிவி தத்துவத்தை மூடும்பிரளயமும் உருத்திரசத்தியினதேயென்பது "பிரளயகாலத்தில் தாமசகுணப் பிரதானனுன ருத்ரரூபியா யிருந்து அதிபயங்கரனுய்ச் சராசரங்களான அகிலபூதங்களையும் விழுங்கி" எனும் விஷ்ணு புராணத்து க-ம் அமிசத்து உ-ம் அத்தியாய வசனத்தானும்,

"(நாராயணன்) காலாக்கினி ருத்ரரூபத்தாற் பிரளயகாலத்திலே மேகமண்டலத்தைப் பெருங்காற் றடித்ததுபோலச் சங்காரஞ் செய்கிறான்" எனும் வைணவர்பாகவதத்து உ-ம் ஸ்கந்தத்தின் க0-ம் அத்தியாய வசனத்தானும் பிறவற்றானும் பெறப்படும். இத்திற மறியாமே கேவலம் சோம்பேறி நீர்த்தாய்த் தூங்கிவீழுந் தாமதகுணத்தையே உருத்திரன்பாலேற் றுவார்கூற்று நரியூளையிடுத லொக்குமன்றோ. நாரண சாத்துவிகமும் உருத்திர சாத்துவிகத்திற் குத் தாழ்ந்த தன்மைத்தே. மாயாகாரியங்களை யெல்லாம் நாசஞ் செய்யத்தக்க நெற்றிநேத்திர ஞானாக்கினி மஹா மயானத்திலே தஹிக்கப்படும் ஹரி பிரமர்களி னுயிர்களைச் சிவனார், மஹாருத் ராம்ச சம்புபக்ஷ பராக்கிரம மூர்த்திகளி லொருவராய் நின்று தம் பாலடக்கியபடி கருணையால் அவர்களுடம்பையு மடக்கவென்று அவ்வுடற் சாம்பரைத் தந்திருமேனியிற்றிமிர்ந்தும், எஞ்சியவெண் டலை முதலியவற்றை மாலையாகவணிந்துந் தனியிருக்குந்தானத்தை ஏழை வைணவர் சுடுகாடென்றக்கால், நாரணன் றனது பிரளயத் தில் ஆன்மகோடிகளையெலாம் விழுங்குபவனெனுஞ் செய்தியில், ஆன்ம வுடம்புகளாம் பிரேதங்களைப்புதைக்கும் இடுகாடே அவ னது வயிறெனுந் தீர்வை கூறத் தடையிராதே. இடுகாட்டிலன்றோ துர்க்கந்தமுமுளது. எலும்பு முதலியவற்றைச் சிவனார் ஏனணிந்து ளார்? அடையாளத்திற்கெனினும் பொருந்துமோ எனும் பாட ண்டவைணவர்க்குப் பல்பனுவல் பகருமாறு வாசுதேவன் பஞ்ச ஜநாசுரனைக் கொன்று அவனது எலும்பைப் பாஞ்சஜந்யமெனுஞ் சங்காக்கித் தரித்திருத்தலையும், அதனை வாயில்வைத்து ஊதுதலை யும், வைணவர்பாகவதத்து எ-ம் ஸ்கந்தத்து அ-ம் அத்தியா யத்துமுள்ளபடி தைத்தியனாய இரணியனை வதைத்து அவனது வயிற்றிலிருந்த ஆபாசக்குடலையுஞ் சுடுகாட்டுத்துளசியையும் மாலை களாக வணிந்திருத்தலையு மெடுத்துரைக்கு ஞான்று அவர் குன்று முட்டிய குரீஇபோன் றிருப்பவரே. பிணநாற்றமும் அக்குடலி லன்றோ வுளது. இவ்விடயத்தை நாலாயிரப்பிரபந்தவிசாரத்து அ-வது அதிகாரத்து ச-வது இழிப்புரைமறுப்பில் விஸ்தரித்து விளக்கியுள்ளோம். உண்மையுணரு முணர்வின்றிச் சிவன் பிக்ஷை யெடுப்போனெனும் ஹேய வைணவர்க்கு, மாபலியிடம் வாமனன் மண்ணிரந்து நின்றதை ஞாபகப்படுத்துக. பூதங்களின் பிரபாவ மறியாமற் சிவகணங்களைப் பூதங்களென்றிகழும் வைணவர்க்குத்

திருவாய்மொழி யென்பதின் பொலிகவென்றற் ருெடக்கத்துப் பத்தில்—

"வைகுந்தன்பூதங்களேயாய்மாயத்திருலெங்குமன்னி" என்றும்,

"பூதங்க ளேயாய்க்
கிடந்துமிருந்துமெழுந்துங்கீதம்பலபலபாடி
நடந்தும்பரந்துங்குனித்துநாடகஞ்செய்கின்றனவே"

என்றுங் கூறியிருத்தலை ஞாபகப்படுத்துக. (ஸ்ரூதழ) "பூதம்" எனும் நபும்ஸகலிங்க வடமொழி (வலழ) "பலம்" எனும் பொருளைத் தருமென்று நாநார்த்தரத்நமாலாவெனு நிகண்டு கூறுதலால் அம்மொழி— பலமுள்ள சிவகணங்களின் மேற்றுயதென்க. அங்ஙனம் பிசாசிற்கும் அது பெயராகுமென்பது காணப்படுதலின், "கடிவே தாளங் கழுது கூளி—வெறியே யலகை பிசாசு மண்ணை... பேய்பெயர் கூறும்." எனப் பிங்கலந்தை கூறுதலின், அப் பூதமென்பதையே தமிழிற் பேயெனக்கொண்டு தக்ஷயாகபங்கமொத்த காரியத்திற் பூதங்களோடு விளையாடுஞ் சிவபராக்கிரமமூர்த்தியைப் "பேயோடாடி" என்று அப்பிங்கலந்தையர் கூறிவிட்டனரென்க. (ஸ்ரூதெஸஃ) "பூதேசன்" எனவே சிவநாமம் அமரஸிம்ஹத்திற் படிக்கப்பட்டது. இதனில் (ஹரிஃ) "அரி" எனுஞ்சொல் தேவரிலொருவனுகிய விஷ்ணுவுக்கும், மிருகங்களிலொன்றுகிய குரங்குக்கும் பிறவற்றிற்கும் பெயராகுமென வறிந்தபடி பூதமென்பதும்—சிவகணங்கட்கும், பிசாசிற்கும் பெயராகுமென வறிந்து கோடல்வேண்டும். பேரருளுடைமைப் பித்தன் என்பதன் பிரபாவ மறியாமே சிவன்பெயர் "பித்தன்" அன்றே வென்றிகழும் பேதை வைணவர்க்கு, தொண்டரடிப்பொடியாழ்வான் திருமாலையென்பதின் ச - ஞ் செய்யுளில்—

"நம்மரங்க ளுய
பித்தனைப் பெற்று மந்தோ பிறவியுட் பிணங்கு மாறே"

என்றபடி அரங்கநாதனுகிய நாராயணன்பெயர் பித்தனெனப் படிக்கப்பட்டதையும் ஞாபகப்படுத்துக. உருத்திரமூர்த்தியை நாசத்தொழிலுடைய தாமசதேவதையென் றிகழ்ந்தும், நாரணனைச் சாத்துவிகதேவதையென்று புகழ்ந்துந் திரிதரு வைணவர், நாரணனுக்குப் பரத்துவம் பகருநிமித்தம் உருத்திரனையும் விட்டுணு

விழுங்குவோனென்று அவன்பாற் சருவநாசத்தொழி லேற்றுவ தும் பேய்மதியன்றோ. ஈண்டுச் சருவசங்காரத் தொழிலுடையா னுக்கே பரத்துவமென்பது மறிக. பிரமாவுக்குச் சிருஷ்டியும், விஷ்ணுவுக்குத் திதியும், உருத்திரனுக்குச் சங்காரமு முண்டென் பதை—

(ஸ்ரஹ்மாஜெவாநாம்ப்ரமஸஸ்ரஸம்ஸ்வ । யாதாவஸ்ருஷுள ।
விஷ்ணுஶ்ஸ்திளள । ரூஜஸ்நாமெஶ । )

"ப்ரஹ்மாதேவாநாம்ப்ரதமஸ்ஸம்பபூவ | தாதாசஸ்ருஷ்டௌ |
விஷ்ணுச்சஸ்திதௌ | ருத்ரச்சநாசே | "

எனும் யோகசூடாமண்யுபநிஷத் வசனத்தானும் ;

(ரக்ஷகொவிஷ்ணுரிதுாதி ஸ்ரஹ்மாஸ்ருஷெஷ்ஹுகாரணம் ।
ஸம்ஹாரெ ரூஜ)

" ரக்ஷகோவிஷ்ணுரித்யாதி ப்ரஹ்மாஸ்ருஷ்டேஸ்துகாரணம் |
ஸம்ஹாரே ருத்ர" எனுந் தேஜோபிந்தூபநிஷத் வசனத்தானுமறிக.

இம்முத்தொழிலில் உருத்திரமூர்த்திசெய்யுஞ் சங்காரஞ் சிரே ஷ்டமென்பது கூறிப்போந்த பைங்களோபநிஷத் வாக்யங்களினும் வந்துளது.

(ஏகொரூஜ ஏகஏவரூஜொ நஶிதீயாயதஸ்ூ)

"ஏகோருத்ர ஏகஏவருத்ரோ நத்விதீயாயதஸ்துர்ய "

என அதர்வசிரோபநிஷத்திலுஞ் சுவேதாச்வதரோபநிஷத்திலு நிகழும் வசனம்—'சர்வகர்த்தாவான உருத்திரனொருவனேயுளன்: இரண்டாமவனுளனென யாரும் ஒருப்படுகின்றிலர்' எனும் பொருளைத்தரும்.

(யஸஸெவொவரமகாலெஸவாநாத்மநஸூபஸம்ஹுத்யஸ்வாத்மா
நநெஸகெமொதெ ப்ரகாஶதெவாஸதெவஃ।)

" யஸ்ஸர்வோபரமகாலேஸர்வாநாத்மந்யுபஸம்ஹ்ருத்யஸ்வாத்மா
நந்தேஸுகேமோததேப்ரகாசதேவாஸதேவஃ | "

எனுந் தக்ஷிணாமூர்த்யுபநிஷத் வசனம்— 'பரமகாலத்திலே யாவையுந் தம்மிடத்திலேயே உபஸம்ஹாரஞ்செய்து தமதான்மா னந்த சுகத்திற் சந்தோஷித்திருப்பவரெவரோ அவரே தேவர்'

என்று தக்ஷிணாமூர்த்தியாகிய சிவனை விளக்குகின்றது. "யோந்த காலே ஸர்வலோகாந்ஜகாரஸ ஏகச்ரேஷ்டச்ச ஸர்வ" எனநிகழுஞ் சரபோபநிஷத் வசனமும் மேலை வசனங்களின் பொருளையே தரு கின்றது. இங்கேவந்த ஸர்வஸம்ஹாரருத்ரசப்தம் மஹாருத்ரனாகிய நான்காவதுதெய்வத்தைக் குறிக்கின்றதெனக. இத்திறச் சுருதி கட்கு விரோதமாக விட்டுணுவுக்குச் சருவசங்காரத்தொழில் சாற் றுதல் ஸர்வாபாஸமேயாம். சருவசங்காரத்தை நடாத்துஞ் சிவ பெருமானது குணம்யாதெனின்,—உரைப்பம். கிருபை, சருவஞ் ஞத்துவம், திருத்தி, அநாதிபோதம், சுவதந்திரத்துவம், விசுத்த தேகம், அனந்தசத்தி, நிராமயமெனும் எட்டுக்கலியாணகுணங் களில் அது கிருபையின்பாற்படும். அனந்தசத்தியின்பாற் படுமெ னினும் ஏயும். இக்குணங்களையுடையவன் சிவனென்பது கருதியே "ஸர்வைச்வர்யஸம்பந்நஸ் ஸர்வேச்வரச்சம்பு:" என்று அதர்வசி கையுங் கூறிற்று. "தானு வெண்குணன் சங்கரன்" என்று பிங் கலந்தையருங் கூறினர்.

## ௧௦. திரிமூர்த்திகளும் பசுக்களே.

இந்நூலின் கஅ௫-ம்பக்கத்தி லெடுத்துக்காட்டப்பட்ட அதர் வசிகை வசனத்திற் பிரமன், விஷ்ணு, உருத்திரனெனும் மூவரை யும் இந்திரனாகிய பசுவோடு சேர்த்து இவர்கள் காரணராகமாட் டார்கள்: சம்புவே காரணனெனும்பொருள் பெறப்பட்டமையின் மூவரும் பசுக்களென்பது போதரும். 'எல்லாத்தேவரும் பசுக்கள்' எனும் பொருளைத்தரத்தக்க (ஸவெ஁ெஷவாஃ வஶுஂதாஂவாஃ) "ஸர்வேதேவா: பசுதாமவாபு:" என்று மிழற்றுகின்ற சரபோப நிஷதமே (விஷ்ணாஜ஻ஹாநு ஸுஂாரநு) "விஷ்ண்வாதிகாந் ஸுராந்" எனும் வசனத்தால் விஷ்ணு முதலிய ஸுரர்களே அந்தத் தேவர் களென்று வியக்தப்படுத்திற்று. (அஹஂகாராவிஷ்டஸ்ஸஂஸாரி ஜீவஸ்ஸ ஏவபஶுஃ) "அஹங்காராவிஷ்டஸ்ஸம்ஸாரி ஜீவஸ்ஸஏவபசு:" (ஜீவாஃபஶவஉக்தாஃ।) "ஜீவா:பசவஉக்தா:।" எனும் ஜாபால்யுபநிஷத் வசனங்களின்படிக்கும், (பாஶபத்தஸ்ததாஜீவஃ) "பாசபத்தஸ்ததா ஜீவ:" எனும் ஸ்கந்தோபநிஷத் வசனத்தின்படிக்கும் அஹங்கார ஸம்ஸாரபாசத்திற் கட்டுப்பட்ட ஜீவனே பசுவாகலின் அந்தத் தேவரனைவரும் ஜீவர்களேயாவர். (ஸவாஸுரெஷு ஹஂஸவா நீஷெஷ

(Grantha text) "ஸவாஸ—தேவோபகவாந் க்ஷேத்ரஜ்ஞ: பரமோமத: |" என லக்ஷ்மீதந்த்ரமெனும் வைணவச்சுவடியில் வருவசனமும் விஷ்ணுவைச் சீவான்மாவென்றே நிர்ணயஞ்செய்வதாயிற்று. க்ஷேத்ரஜ்ஞன்=சீவான்மா. (Grantha text)

"ப்ரஹ்மவிஷ்ண்வீசாநேந்த்ராதீநாம் நாமரூபத்வாரா ஸ்தூலோஹமித்யத்யாஸவசாஜ்ஜீவ:" எனும் நிராலம்போபநிஷத் வசனம்—பிரமனையும், விஷ்ணுவையும், உருத்திரனையும், இந்திராதி தேவர்களையும் ஜீவர்களென்றேவிளக்கிற்று. இவ்விதஜீவர்களாகிய பசுக்களையாளும் பதி—

(Grantha text)

"ஸர்வஜ்ஞ:பஞ்சக்ருத்யஸம்பந்நஸ்ஸர்வேச்வர ஈச: பசுபதி: |"

எனும் ஜாபால்யுபநிஷத் வசனம் பரமசிவனேயென்று பிரகாசப்படுத்துவதாயிற்று. இந்தச் சுருதிகட்கு உபப்ரஹ்மண புராண வசனங்களையும், சிவனுக்குப் பசுபதிநாமம் ஆகந்துக மென்பார் கூற்று மறுக்கப்படுதலையும் நாலாயிரப்பிரபந்தவிசாரத்து எ-ம் அதிகாரத்தில் விளக்கியுள்ளாம். ஆண்டுப் பரக்கக் காண்க.

(Grantha text)

"ஹர: க்ஷராத்மாநாவீசதேதேவஏக:"

எனுஞ் சுவேதாச்வதரோபநிஷத் வசனமும் மேலைய நியாயத்தையே உறுதிப்படுத்துகின்றது. பொருள் :— * 'க்ஷரத்தையும், ஆன்மாவையும் ஹரனாகிய தேவனொருவன் ஆளுகின்றனன்.' எனவாம். மேலே கூறிப்போந்த ஜாபால்யுபநிஷத்தில் ஜீவர்களைப் பசுக்களெனவும், ஈசனைப் பசுபதியெனவுங் கூறுங்காரண மென்னைகொலோவென்று கடாவ; ஆண்டு நிகழ்ந்தவிடை—

"யதாத்ருணசிநோ விவேகஹீநா: பரப்ரேஷ்யா: க்ருஷ்யாதிகர்மஸு நியுக்தாஸ்ஸகலது:க ஸஹாஸ் ஸ்வஸ்வாமி பத்யமாநா: கவாதய: பசவ: | யதா தத்ஸ்வாமிநஇவ ஸர்வஜ்ஞ ஈச: பசுபதி: |"

---

* இவ்விதப்பொருளே ஸ்ரீநிவாஸசாஸ்திரியார் செய்த சுவேதாச்வதரோபநிஷத் பாஷ்யத்திலுமுளது. 'ஹர:' என்பதற்குப்பொருள் ஜீவனென வரையப்படவில்லை.

எனும் வசனங்களே. பொருள் :— 'புல்லைப் புசிப்பனவும், விவேகஈனமுடையனவும், பிறனாற் கிருஷியாதிகருமங்களி லேவப் படுவனவும், துக்கமுடையனவும், இயமானுற் கட்டப்படுவனவு மாயுள்ளன பசுக்கள், அன்னணமே பாசபந்த ஜீவர்களாகிய பசுக் களும்,ஸர்வஜ்ஞனுகிய பசுபதியும்.' எனவாம். ஆகமத்திற் சொல்லப் படுகிற பதி, பசு, பாசமெனும் மூன்றும் இங்ஙனம் வேதோக்தமாத லுங் காண்க. பாசமெனும் அக்கட்டானது (𑌜𑍀𑌵𑌾𑌤𑍍𑌮𑌰𑍂𑌪𑌂𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍂𑌪𑌮𑌣𑍁𑌮𑌾𑌤𑍍𑌰𑌂𑌵𑌰𑍍𑌤𑌤𑍇) "ஜீவாத்மரூபம் ஜ்யோதிரூப மணு மாத்ரம் வர்த்ததே" எனுந் தியாநபிந்தூபநிஷத் வசனத்தின்படி ஜீவனை யணுத்துவப்படுத்தி நிற்றலானே ஜீவனும் அணுவெனப் படும். இப்படி யணுவான ஜீவனதுபக்குவ தாரதம்மியத்திற்கேற்ப அதனிற் சிவனுடைய திருவரு ளதிகாரசத்திபதியின், அஃது அச்சத்தியோடு விளங்குவதாகும். அப்படி விளங்கினும் அது சம்பு வேயாகாமே அணுவேயாகும். இதனால் திரிமூர்த்திகளி லொருவ ரான உருத்திரமூர்த்தியும் அணுருத்ர ரெனப்படுவர்.

ஈண்டு விளக்கியபடி திரிமூர்த்திகளி லொருவனுகிப் பசுவா யிருக்கின்ற விஷ்ணுவை உபேந்திரனென்றுரைத்து வைகுண்ட வாஸுதேவனைப் பசுத்தன்மையினின்றுஞ் சில வைணவர் விலக்க முயல்கின்றனர். திரிமூர்த்திகள் பெயர் கூறுமிடங்களில் 'உபேந்தி ரன்' எனுஞ்சொல் வாராமையானும், விஷ்ணுவின் அவதாரங்கள் பலவிருப்ப வாமனுவதார உபேந்திரனை மட்டுந் திரிமூர்த்திகளி லொருவனென வுரைத்த லமையாமையானும், பசுத்தன்மையை வாமனன்றலையி லேற்றுமாற்றுன் அவதார காரண விஷ்ணுவை விட்டு அத்தன்மை நீங்குமெனற்கு மண்ணுங்குடமும் வேறன்மை காணப்படாமையானும், ஆழ்வார் தஞ்செய்யுள்களிற் பிரமன், விட் டுணு, உருத்திரன் அல்லது பிரமன், உபேந்திரன், உருத்திரனெனு மூவர் வழிபடுகடவுள் விட்டுணுவென விளக்காது மூவரிலொருவ னே விட்டுணுவென விளக்கினமையானும் அம்முயற்சி வெப்பு நோய்க் காற்றுதான் பித்துப்பிதற்ற லொக்குமென்க. பசுவெ னும் ஜீவசப்தத்திலும், நகாரண சப்தத்திலும், உருத்திரனுக்குக் கீழுறு சப்தத்திலும் விஷ்ணுவெனும்பெயர் படிக்கப்பட்டமையின், விஷ்ணு வென்பது வியாபகம் அதனால் விஷ்ணு பெரியவனெனுங் குத்ருஷ்டிகளுரையுங் கனம்பெறுவதன்றே. அவ்வியாபகமும் பிர கிருதியி னுட்படுவதும், அக்கினி தத்துவத்திற்குக் கீழ்ப்படுவதுமே.

யாகும். சிவனறிவிக்க வறியும்ஜீவனே விட்டுணுவென்பது வேத சம்மதமாம். ஆகவே, விட்டுணு சருவஞ்ஞத்துவ முடையன் அல்ல னென்க. இதனை, அழகியமணவாளப்பெருமாளென்பா னெழுதிவைத்த ஆசார்யஹ்ருதயமெனுஞ் சுவடியின் (அவதாரிகை) ப - உ - ல்—

"நாமேசென்று திருத்தக்கடவோமென்று ராமக்ருஷ்ணாத்யவதாரமுகேந இவர்களிருக்கிற விடத்திலே தான்வந்து திருத்தப்பார்த்தவிடத்திலும் ஒருவரும் திருந்தக்காணாமையாலே" என்றும், ப - கச - ல்—

"ஆதித்ய ராமதிவாகராச்சுத பாநுக்களுக்குப் போகாதவுள்ளிருள் நீங்கி சோஷியாத பிறவிக்கடல் வற்றி விகஸியாதபோதிற் கமலமலர்ந்தது * வகுளபூஷண பாஸ்கரோதயத்திலே." என்று மெழுதப்பட்ட வசனங்களானும், தே - குருபரம்பரை ப - ககஉ, ககரு - ல் "பெருமாளும் அத்தைக்கேட்டருளி, ப்ரீதராய், நாமும் நம்பெண்டுகளுமொழிய நீர் வேண்டினத்தைத் தருகிறோம், அத்தைச் சொல்லிக்காணீர் என்ன, அரையரும் ராமாநுஜனைக் காட்டி, இவரை அடியேனுக்குத் தந்தருளவேணும் என்று விண்ணப்பஞ் செய்ய, பெருமாளும் அப்போதே அறியப்பெற்றிலோமே, இவரையொழிய நீர் வேண்டினதெல்லாந் தருகிறோம், அத்தைக்கேளீரென் றருளிச்செய்ய"

எனவெழுதப்பட்ட செய்தியானும், இந்நூல் கஙரு - ம் பக்கத்திற் காட்டப்பட்ட ய - ப்ரபாவத்துள்ள செய்தியானும் வைணவர்களே இனிது வலியுறுத்திக்கொள்வோரு மாவர். இவற்றுண் முற்பட்டசெய்தி தே - குருபரம்பரையினும் வந்து அஃது இந்நூல் கஙக - ம் பக்கத்திற் காட்டப்பட்டுளது. இங்ஙனே, நாம் அவதரித்தால் உலகர்திருந்துவர் திருந்தாரெனவுணர் ஞானமில்லாமே நாரணனவதரித்தனனென்பதும், அப்படியொருமுறையவதரித்தகாலத்து முலகு திருந்தாமை தெரிந்தவவன் அம்மட்டிற் றகுதியான யோசனை செய்யாமே மறித்தும் மறித்தும்பிறந்து ஏலாதுபோயினனென்பதும் நாரணன் சிற்றுணர்வினனென்பதை நன்கு சாதிக்குமாறறிக. அவை சருவசத்தியின்மையையுஞ் சாதித்தபடி காண்க. 'நாமும் நம்பெண்டுகளுமொழிய நீர்வேண்டினத்தைத் தருகிறோம்' என்ற செய்தியை, இராமாநுஜனைத் தரமாட்டோமென்றசெய்தி அசத்தியமாக்கி நிற்றலுங்காண்க. இன்னன சிற்றுணர்வுஞ் சிறுதொழிலுமுள்ள விண்டுவினிடத்தில் முற்றுணர்வுபெற்று மோக்கமடையக் கருதுநர்காரியம் மின்மினியினிடத்தே நெருப்புக்கேட்டு நிற்றல் கடுக்குமென்க. இராமாவதாரத்தில் மாயமானாக வந்த மாரீசனை

* வகுளாபரணனெனுஞ் சடகோபன்.

யறியு ஞானமில்லாமல் அம்மானைப்பிடிக்கச்சென்றமையும், அஞ்ஞான்று சீதையை யெடுத்துச்சென்றவன் இராவணனென் றறியு மறிவிலாது கலுழ்ந்து கலுழ்ந்து தேடிநின்றமையும், இந்திரசித்து கொடுவந்து துண்டித்த மாயாசீதையைத் தன்றேவியாகிய சீதை யென நினைத்துக் கவன்றமையும், பிற செய்கைகளும், கிருஷ்ணாவதாரத்திற் சால்வராஜன் ஒச்சிய ஆயுதத்திற்கு ஆற்றாது மூர்ச்சித்து வீழ்ந்தஹரி, அச்சால்வன்கொடுவந்து துண்டித்த மாயாவஸுதேவனைத் தன்பிதாவெனவே நினைத்து வருந்தினமையும், பரசுராமாவதாரத்தில் தசரதராமனுந் தானும் அவதாரவுண்மை யறியாமே சம்பிரதாயங்கள்பேசிச் சண்டையிட்டமையும், பிற வரலாறுகளும் விண்டுவினது சிற்றுணர்வைக் காட்டத்தக்கவைகளே. காளமேகப் புலவரும்—

> "சத்தாதி யைந்தையுந் தாங்காத தெய்வந் தனிமறையுங்
> கர்த்தா வெனுந்தெய்வ மம்பலத் தேகண்டுங் கண்களிரு
> பத்தான வன்மைந்தன் பொய்த்தேவி யைக்கொல்லப் பார்த்தழுத
> பித்தான வன்றனை யோதெய்வ மாகப் பிதற்றுவதே."

என்று முழங்கினரே. இங்ஙனம், இராமன் பிறக்குமுன்னேயே வான்மீகியென்பார் இராமாயணத்தை யிஷ்டம்போல வெழுதிவிட்டார்: வைகுண்டநாதனும் அவ்வெழுத்தைப் பொய்யாக்காமல், இராமனாயவதரித்து அவ்வெழுத்தின்படி நடந்தனன்: அதனால் இராமன் சிற்றுணர்வின னாகானெனச் சில வைணவரும்; எல்லாம் நாடகமாக நடித்துக்காட்டினனெனச் சில வைணவருங் கூறுவர். இராமன்விடயத்தி லிவ்வாறு கூறுவோமாயிற் கிருஷ்ணன் முதலியோர் விடயத்திற்கு யாதுகூறலாமெனும் யோசனையில்லாமலும், பிரமாண மில்லாமலும், ஏற்றபடி குழறித்திரியும் அன்னார்கூற்று மேலே காட்டலுற்ற குருபரம்பரைமுதலிய செய்திகட்கும் முரணும். இதுவேயுமன்றி, இராமன் விபீஷணனுக்குச் சிரஞ்சீவித்தன்மை கொடுத்தமையையும், பிற மேம்பாடுகளையும் நாடகநடிப்பென்றன்றோ அங்ஙனிற்சிய ரொப்புதல்வேண்டும். ஆயினனைத்தும் பொய்யாய்விடுமே. "நாராயணஸ்ய ஸ்வேச்சாநுஸாரேணைஷாநேக்ஷோஜாயதே" எனும் மஹாநாராயணோபநிஷத் வசனத்தின்படி நாராயணனது காரியம் சுவேச்சையென்பதற்கும் விரோதமாம். நாராயணனுக்குற்ற பத்துப்பிறப்பும் பிருகு முனிவரது சாபத்தா லேற்பட்டனவென்று சிவபுராணங்கள் கூறுதலை யொப்

பாமல் அவை, நாராயணன் சுவேச்சையாற்கொண்ட அவதாரங்களெனும் வைணவமுடிபுக்கும் மாறுகோளாம். இராவணஸம்ஹாரம் இவ்வண்ணமாகச் செய்யவேண்டுமென்று தேவலோகத்திற் றேவர்கள் பேசியவாறே இராமாயண மெழுதப்பட்ட தென்பதை வான்மீகர் இஷ்டம்போல வெழுதிவிட்டாரெனும் மாற்றம் விரோதிப்பதுமாம். இவ்வைணவர் கூற்றுவழியே இராவணனது அபசயம், மரணம் முதலியவெல்லாம் அவ்விராவணனுடைய நடிப்பென நவிலற்கு மமையுமாறு மற்றையோ ரிழிவுகளு மமையுமன்றே. ஈண்டன்னார்கூற் றென்னும்! அன்னவ ரிப்படிப்பலவகையாகக் குழறியவலப்படுவதினின்றும் வைகுண்ட நாராயணுவதார மிவையல்லவென் றொதுங்குதல் நல்லதென் றறிவுடையார் தீர்மானித்திடுவரால். தே - குருபரம்பரை ப - கசுக - ல் "சக்ரவர்த்தி திருமகன் றிருவுள்ளத்தை ஒருபக்ஷி புண்படுத்திற்று" என்று திருக்கோட்டியூர்நம்பி சொல்லின னென்பதாக வெழுதப்பட்ட செய்தி—இராமன் உள்ளபடி வியசனமுடையோ னென்பதை நன்கு வற்புறுத்துவதாயிற்று. ஒருபக்ஷி யென்றது சீதை குயத்தைப் பின்னப்படுத்திய காக்கையை. இராமாயணம் தத்வார்த்தப் பொருளுடைத்தென்றுஞ் சிலர் மொழிப. ஆவதேல், உருவமே சிரேஷ்டமென்று அதுகொண்டாடப்படும் வைணவத்திற்கு அதுவும் விரோதமாம். ஜமதக்கினி முனிவரும் பரசுராமனுக்குச் சிரஞ்சீவித்தன்மை யளித்ததனுனே இராமனளித்த சிரஞ்சீவித்தன்மை மீக்கொண்டு இராமனுக்குப் பரத்துவஞ் சாதியாது. இத்திறத்தன்மைகள் சிவனருளடைந்தார்மாட் டுண்டாவனவே.

## கக. விட்டுணுவடைந்த சாபவிவரம்.

பிருகு முனிவருடைய பத்தினியைக் கோறல்புரிந்த விட்டுணுவை மனிதனுகப் பிறந்து மனைவியையிழந்து வருந்தும்படி அம்முனிவர் சபித்தனரென்னும் வான்மீகராமாயணத்து உத்தரகாண்டத்து ருக - ஞ் சர்க்கம். இச் சாபவிவரம்—மஹா ஸ்காந்தபுராணத்து உபதேசகாண்டத்து சுச - ம் அத்தியாயத்து முளது.

ஜலந்தராசுரனுக்கு மனைவியாகிய பிருந்தையைப் புணரவேண்டுமெனும் வேட்கை தலைமீக்கொண்ட விட்டுணு—மரணமடைந்த அவ்வசுரனதுடம்பி னுழைந்தெழுந்து அவளை யநுபவித்திரு

க்குளான்று,' இவ்வா றநுபவித்தவன் இன்னனென வறிந்துகொண்ட அவள் "மாயையினு லென்னேடுகூடிப் பிறன் மனையாளைப் புல்லலெனுங் குற்றத்திற் குள்ளாகிய ஹே விஷ்ணு! உன் மனைவியைச் சத்துருவாவான் வஞ்சனையா லெடுத்துப்போகக் கடவன்: என்புருட னுடம்பினைக்கொடுவருங் கருமத்தில் நினக்குக் குரங்குகளோ டுறவிருந்ததனுலே குரங்குகளோடு நீயுஞ் சஞ்சரிக்கக்கடவை" என்று சபித்ததையும், அப்படிக் கோபித்துச் சபித்தவவள் உடனே அக்கினிப் பிரவேசமாகி யுடம்பைச் சாம்பராக்கியதையும் விளக்கும் மேலைப்புராணத்துத் தக்ஷகாண்டத்து உ௩-ம் அத்தியாயம். ஒரு பிரதோஷவேளையில் விஷ்ணு மனிதவடிவாகி மலர்மகளைப் புணர்ந்துகொண் டிருந்தலைக்கண்ட அற்புதாக்ஷனெனுஞ் சிவகணத்தலைவன் அதனை ஸ்ரீ நந்திதேவர்க்குத் தெரிவித்தபோது அவர், அவ்விஷ்ணுவைப் பூலோகத்தரசன் மகனென இராமனுகப் பிறந்து வருந்துமாறு சபித்தனரென்பது—

"அவனைநீ யாவனடா வென்று கேட்டே
னம்புயப்பெண் ணைத்தழுவ னீங்க கில்லா
னெவனமா துடன்கூடி யிலச்சை யின்றி
யென்னைநீ யாவனடா வென்று கேட்டான்
கவனமுறு மிவன்றூர்த்த னென்று கண்டேன்
கருத்திலவன் றனைத்தள்ள வல்லே னெம்மான்
சிவனருள்சே ருனதாணை குறித்து மீண்டேன்
றேவரிலீ தொருபுதுமை யவன்பாற் கண்டேன்,"

"மன்னவன்றன் மைந்தனு மிராம னுகி
வந்துபிறந் திடக்கடவ னுகு மன்றே"

எனுஞ் சிவரகசியத்து ௯-ம் அமிசத்தின் உ-ங் காண்டத்து ௪௯-ஞ் சருக்கக் கூற்றுக்களிற் பெறப்படும். இனைய சாபங்களை யிராமாவதாரமாய் நின்று நாராயணனநுபவித்தவனே யாயினுன். இச்சாபங்களுக் கேதுவான இச்சைதான், அவதாரங்களுக்கு நாராயணனுடைய சுவேச்சையே காரணமெனும் வைணவர் கோட்பாட்டிற்குங் கோடற்பாலதாம்.

கிருட்டிணனுக்குத் தூர்வாஸர்முதலிய இருடிகளிட்ட சாபம் பலித்ததென்பதை விஷ்ணுபுராணத்து ரு-ம் அமிசத்தின் ௩எ-ம் அத்தியாயமுங்கூறும். திரிதராட்டிர பத்தினி காந்தாரியிட்டசாபம் அந்தக்கிருட்டிணனுக்குப் பலித்ததென்பதைப் பாரதம் பகரும்.

பொய்ச்சான்று புகன்ற விட்டுணுவைக் குருட்டுப் பாம்பாகும்படி ஸ்ரீ உமாபிராட்டி சபித்தருளான்று, அவ்வாறான விட்டுணு வடதீவத்தின்கண் ஏழு யோசனை விஸ்தீரணமுள்ள ஓராலமரத்துப் பொந்தினுழைந்து சிவபெருமானையும் விநாயகக்கடவுளையுந் தியானித்துக்கொண்டிருந்தனனென்னும் மேலைத் தக்ஷகாண்டத்து உஎ - ம் அத்தியாயம். மார்கழிமாதத்துச் சஷ்டியில் விநாயகக்கடவுள் தரிசனமானவுடன் அச்சாபத்தினின்றுநீங்கிய விட்டுணு—இச் சஷ்டியில் அடியே னும்மைப்பூஜித்த வழியாகப் பூஜிப்போர்களின் விருப்பத்தை நிறைவேற்றியருளல் வேண்டுமென்று அக்கடவுளிடம் வரம்வாங்கிக் கொண்டனனென்னும் உஅ - ம் அத்தியாயம். தாருகாவனத்திருடிகளிட்ட சாபங்கள் சிவபெருமானைப்பற்றுதொழிந்தபடி யொழியாமற் பற்றலுற்ற இச் சாபங்களும் விட்டுணுவினது பசுத்துவத்தை நிலைபேறு செய்வனவாயின. கூறிப்போந்த சிவரகசியம்—கஉ - அமிசங்களாய் இலக்ஷத்திற் கதிகமான கிரந்தசங்கியையாய் நிலவிநிற்கும் மஹேதிகாசமாம். இத்தகைய இதிகாசமுமில்லா வறுமைத்தே வைணவம்.

## கஉ. விட்டுணுவின்பசுத்தன்மையைவிளக்கத்தக்க சில விடயங்கள்.

---

அயோத்தியையாண்ட அம்பரீஷனுடைய புத்திரியாய் ஸ்ரீமதியெனும் பெயருடையளா யிருந்தவளின் சுயம்வரத்திற்கு அழைக்கப்பட்ட பருவதன் நாரதனெனும் முனிவரிருவரையுங் குரங்குகளாகவும், அக்குரங்குகளி னிடையிற் றன்னையொரு காளைப்பருவமுடையானாகவும் அவள் பார்வைக்குத் தெரியும்படி செய்த நாரணன், அவளிட்ட மாலையைத் தோளிற்றாங்கி, அவளை யங்கிருப்பாரறியாவண்ணங் கொடுமறைந் தநுபவிப்பவ னாயினன். பின்னை அவ்விருவருந் தங்கள் வழிபடு கடவுளாகிய விட்டுணுவைத் தரிசித்து நின்று, நீ யெங்களைக் குரங்காகக் காட்டிவிட்டு ஸ்ரீமதியைக் கைப்பற்றிக்கொண்ட தென்னையென வினுதலும் அந் நாரணன், நீயிருரைப்பதை நானினைத்தது மில்லையென்று பொய்புகன்றனன். உடனே முனிவர்கள் அம்பரீஷனை நோக்கி நீ! அந்தகாரத்தி லழுந்தியிருப்பாயாகவென்று சபித்தார்கள். பின்னர் விஷ்ணு சக்கரத்தாற் றுரத்தப்பட்ட அவர்கள் இனி, இவ்வஞ்சகனைப் போற்றுதல்

திதென்று உடனே சிவபக்தர்களானார்கள். இச்செய்தியை, இலிங்க புராணத்து அம்பரீடனை யாழிகாத்தவத்தியாயம்—

"சுரங்க தாக்கிமற் றெங்களைக் கொடிபுரை மருங்கு
லிரங்கு மேகலை யேழையைக் கொணர்ந்திவண் வைகி
விரும்பு மாறெவ னென்னனும் விழுமணி கொழிக்குந்
தரங்க வாரிதிப் பள்ளியா னகைத்திது சாற்றும்.

உரைத்த மாற்றநம் முளத்திலு முணர்ந்திலே மென்ன
விரைத்து மாய்முகி லுரைத்தலும் வேந்தினைக் குறுகி
யருத்தி மிக்குளா யந்தகா ரத்திடை யழுந்தி
யிருத்தி யாலென வைதனர் வெகுளிகை யிகந்தே."

என வியம்புமாற்றானறிக. இவ்விட்டுணு ஜலந்தராசுரனுடைய மனைவியை யுருமாறிப் புணர்ந்தசெய்தியொன்று மேலேவந்துளது: வைகுண்டத்திற் பிரதோஷவேளையாகிய அந்திப்போதில் நாரணன் இலக்குமியைப் புணர்ந்துகொண்டிருந்தனன். அஞ்ஞான்று அங்கே செல்ல முயன்ற பிருகுமுனிவர் தம்மைத்தடுத்த கருடனைச் சாம்பராக்கி யுண்ணுழைதலும், அவர் வரவுநோக்கிய நாரணன் புணர்ச்சியிலிருந்தபடியே அவரை வராதுநிற்கவென்று கைகாட்டித் தடுத்தனன்: உடனே—

"எந்நாளு மினியவந்தி வேளை தன்னி
லேந்திழையைப் புணர்வரோ வுனக்கிப் புத்தி
சொன்னாரா ருன்மத்த முண்டோ வென்று
தூயமா தவன்றான்மா தவனை நோக்கிப்
பன்னாளும் பிரதோடந் தனிலுன் னாமம்
பகர்ந்துளோர் தரிசித்தோர் பரவல் செய்தோர்
துன்னாத நிரயத்திற் புகுவா ரென்று
சூழ்கோபத் தாற்சாபஞ் சொல்லிப் போனான்."

என்றபடி முனிந்து சபித்துச்சென்ற அம்முனிவர், தமக்கஞ்ஞான்று விஷ்ணுவைப் பார்த்ததாலேனர்ந்த தோஷத்தைக் காசியம்பதியெய்துபு தீர்த்துக்கொண்டனர்: பின்னொரு பிரதோஷகாலத்தில் ஹரிபஜனை செய்தவொரு கந்தருவன் க்ஷானகயானையாகப் பிறந்தனனெனுமிச் செய்திகளைச் சிவரகசியத்து ௩ - ம் அம்சத்து உ - ங் காண்டத்தின் சஎ - ஞ் சருக்கத்திற் பரக்கக்காணலாம். இந்நியாயத்தாலன்றோ பிரதோஷகாலத்தில் விஷ்ணுகோவில்களில் ஆராதனையேற்படவில்லை. பிரதோஷகாலத்தில் நாரணனைத்தொழுவோர்

நரகடைவரென்பது மிங்ஙனோர்ந்து கொள்க. நாரணனுக்குப் பெண்ணசையு முண்டுகொலோ? என வைணவர் வார்த்தையெழும் பின் அதனை, இப்பிரமாணங்களைக் கொண்டும்; தாசரதி வாசுதேவ னென்பார் புத்திரோற்பத்தி, பரதாரங்களான கோபிகைகளின் புணர்க்கை யிவற்றினைக் கூறுஞ் சரிதைகளைக்கொண்டு மடக்குக. தருப்பைப் புல்லையே அஸ்திரமாகக்கொண்ட சிவஞான சம்பத்தை யுடைய ததீசிமுனிவரோடு நாரணன் பெரும்போர் தொடுத்துச் சக்கராயுதப்பிரயோகமுஞ்செய்து பயன்காணாது கருத்துக்கலங்கி நின்று, பிரமனுரை பிடித்து அம்முனி சிரேஷ்டருடைய திருவடி யிரண்டையுங் கரங்கூப்பிவணங்கி யிருப்பிடமெய்தினனென்பது—

> "மலருற்றுறை யந்தணன் வாசகங் கேட்டு மாயோன்
> கலைமுற்றுணர் வேதியன் றாளிணை கைகள் கூப்பி
> யலைதுற்றிய பாற்கடற் பள்ளியி னுங்கு மேவக்
> கொலைபற்றிய வேற்சுப னுள்ளங் குழைந்து சென்றான்."

எனும் இலிங்கபுராணத்துத் திருவிருத்தத்தி னறியப்படு விவரத்தை நாலாயிரப்பிரபந்த விசாரத்து அ-வது அதிகாரத்தினறிக. இவ் வதிகாரத்திற்றானே, விஷ்ணு பிரயோகித்த சக்கரத்தைக் கழுத்தணியாகக் கொண்ட தாரகாசுரன், இரக்தாசுரன் முதலிய வேழசுரர், திரிபுரவாசிகளாகிய இவர்களோடு விஷ்ணு போர்தொடுத்து ஆற்றாதோடிய விவரமும்; தாருணாசுரனாகிய சுரலோசனனது பார்வைக்கு விஷ்ணு பயந்தோடினதும்; காலயவன னென்பானுக்குக் கிருஷ்ணனஞ்சி யோடினதும்; பிரசண்டசூரனுக்குப் பயந்தொளித்த விஷ்ணு அவனது சிவபூஜைக் கனலால் வெதுப்பப்பட்டு மரணமூர்ச்சை யடைந்ததுகண்ட கருடனும் இலக்குமியுங் கண்ணீர் வாரவார அழுததும்; அப்பொழுது இலக்குமி யநுஷ்டித்த சாம்பவ விரதத்தால் விஷ்ணு வுயிர்த்தெழுந்ததும்; விஷ்ணுவை யடக்கியாண்ட குரண்டாசுரன், பத்துத்தலைகளையுடைய ஐந்தசுரர், கஜமுகாசுரன், மகிஷாசுரன், பிரமனிடம் வரம்பெற்ற தாருகாசுரன், துஷ்டநிக்கிரகத்தின் பொருட்டுண்டாய சிவகோபாக்கினியிற்றோன்றி விஷ்ணுமுதலிய தேவர்களைப் பெண்களணியும் ஆடையாபரண மென்பவற்றை யணிந்து பெண்களைப்போலத் திரியுமாறு செய்த அந்தகாசுரன், விஷ்ணுமுதலிய தேவர்க ளிருதயத்துழை யொளித்திருந்து அவர்களுடைய இந்திரியமெல்லாம் புசித்திருந்த பண்டாசுரனெனு மிவர்களைப் பரமசிவன் சங்கரித்து இரக்ஷித்த

பராக்கிரமங்களும் ; பிறவுங் கூறியுள்ளாம். இந்நூலின் ௩-ம் பக்கத்தில் விவரித்தவாறு விஷ்ணுமூர்த்தி வேதமார்க்கத்திற்கு விரோதமான ஜைன பௌத்தமத நூல்களைச்செய்த தோஷத்தாற் பாபிகளடையக்கூடாத கைலாசகிரியிலேறும் வலியிழந்து வருந்தியகாலை, அத்தோஷம் நீங்குமாறு சிவபிரானைத் தியானித்தபடி பெருந்தவத்தை நாரதரோடு செய்தன னென்பதை மஹாஸ்காந்தபுராண உபதேசகாண்டத்து ௭௪-ம் அத்தியாயம் இனிது பிரகாசப்படுத்தும். பரசுராமன்—கார்த்தவீரியன் முதலியோரை முருக்கியபாவந்நீருமாறு தீர்த்தயாத்திரை செய்துள்ளா னென்பதை வைணவர் பாகவதமும் பகரும். பலராமன்—சூத்திரஜாதியில்வந்த சூதமுனிவரைக் கோறல்புரிந்ததனாலுற்ற பிரஹ்மஹத்தி நிவாரணமாமாறு ஒருவருடந் தீர்த்தயாத்திரை செய்துள்ளானென்பதை அந்தப்பாகவத தசமஸ்கந்தத்து ௭௮-ம் அத்தியாயத்தில் "பிரசன்னமாக எதிர் நிற்கின்ற பிரஹ்மஹத்தி" எனுமிடத்திலுங் காணலாம். பிரம இருடியாகிய விசிரவசு வீரியத்திற் கேகசிவயிற்றிற்பிறந்த இராவணனை இராமன் கொன்றதனாலுற்ற பிரஹ்மஹத்தி தீருமாறு அவன் சிவபூஜை செய்ததற்கு இராமேசுவரம் பெருஞ்சான்றாகவுள்ளது. வான்மீகராமாயண பாலகாண்டத்தில்—

(𑌸𑌾𑌹𑌿 𑌗𑍌𑌤𑌮𑌵𑌾𑌕𑍍𑌯𑍇𑌨 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌰𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑌾 𑌬𑌭𑍂𑌵 𑌹 ।
𑌤𑍍𑌰𑌯𑌾𑌣𑌾𑌮𑌪𑌿 𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂 𑌯𑌾𑌵𑌦𑍍𑌰𑌾𑌮𑌸𑍍𑌯 𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 ॥
𑌶𑌾𑌪𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌮𑍁𑌪𑌾𑌗𑌮𑍍𑌯 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑌾𑌗𑌤𑌾 ।
𑌰𑌾𑌘𑌵𑍌 𑌤𑍁 𑌤𑌦𑌾 𑌤𑌸𑍍𑌯𑌾𑌃 𑌪𑌾𑌦𑍌 𑌜𑌗𑍃𑌹𑌤𑍁𑌰𑍍𑌮𑍁𑌦𑌾 ॥)

"ஸாஹி கௌதமவாக்யேந துர்நிரீக்ஷ்யா பபூவஹ |
த்ரயாணாமபிலோகாநாம் யாவத்ராமஸ்யதர்சநம் ||
சாபஸ்யாந்தமுபாகம்ய தேஷாம்தர்சநமாகதா |
ராகவௌ துததாதஸ்யா: பாதௌஜக்ரஹதுர்முதா ||"

எனவுள்ள சுலோகங்கள் 'அந்த அகலியை அந்தக் கௌதமர் வாக்கியத்தால் மூவுலகத்தாராலும் பார்க்கவொண்ணாத வுருவங் கொண்டவளாயிருந்தனள். இராமன் தரிசனமானவுடன் சாப நீக்கம்பெற்று இராம இலக்குமண விசுவாமித்திரர்களெதிரிற் காணப்பட்டனள். மிகுந்த அன்புடன் இராமனும் இலக்குமணனும் அவளடிகளைத் தொட்டு வணங்கினர்.'

எனும்பொருளைத் தருகின்றன. இப்படி யொருமுனி பத்தினியின்காலை வணங்கிய இராமன், திரிமூர்த்திதொழுந் தெய்வமாய் மஹரிஷியாய் விளங்குஞ் சிவனை வணங்கத் தடை யாதுமின்று. மஹாதேவனெனுஞ் சிவனை வணங்கி அம் மஹாதேவப்பிரசாதம் பெற்றவனே இராமனெனுஞ் செய்தியும் இந்த ராமாயணத்திலுண்டு. இதனை, (𑌅𑌤𑍍𑌰 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌃 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌮𑌕𑌰𑍋𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑍁𑌃) "அத்ரபூர்வம் மஹாதேவ: ப்ரஸாதமகரோத்ப்ரபு:" எனும் ராமாயணவசனத்தி னறிக. பொருள் :—'எனக்கு இவ்விடத்திற் பிரபுவாகிய மஹாதேவர் முன்னே பிரசாதம்புரிந்தருளினர்' எனவாம். இதனிலுள்ள 'மஹாதேவ' சப்தத்திற்கு வைணவர்; வருணனென் றருத்தம்பண்ணி மகிழ்ந்த மகிழ்ச்சியை யிகழ்ச்சி செய்யற்கு (𑌵𑌰𑌦𑌾𑌨𑌂 𑌮𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑍇𑌣 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾 𑌵𑌰𑍁𑌣𑍇𑌨 𑌚। 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌚𑍍𑌚 𑌪𑌿𑌤𑍍𑌰𑌾 𑌮𑌮 𑌸𑌮𑌾𑌗𑌮𑌃॥) "வரதாநம்மஹேந்த்ரேண ப்ரஹ்மணா வருணேநச | மஹாதேவப்ரஸாதாச்ச பித்ராமமஸமாகம:||" எனும் ராமாயணச் சுலோகமொன்றே சாலும். என்னை? வருணனுக்கு வேறாக மஹாதேவன் காணப்படுதலின். இச்சுலோகத்தின் பொருள் :—'(தனது வரவைப் பரதனுக் கறிவிக்குமாறு அனுமானை யனுப்பத்துணிந்த இராமன்) நான் இந்திரனிடத்தும் பிரமனிடத்தும் வருணனிடத்தும் வரம்பெற்றதையும், மஹாதேவரது பிரசாதத்தால் என்பிதாவைத் தரிசித்ததையும் (பரதஸ்ய நிவேதய) பரதனுக்கு அறிவிப்பாயாக என்றுரைத்தனன்.' எனவாம். நிற்க. இங்ஙனம் இராமனது பாதம் அல்லது பாதரேணுவே அகலிகை சாபந்தீர்த்ததாகப் பிதற்றற்கு எட்டுணையுமிடனின்று. நகுஷனைப் பாம்பாக்கிய சாபம் பாண்டவரைக் கண்ணுற்றகாலத்தில் நீங்கியவாறு அவ்வகலிகைசாபமுங் காலவளவையி னீங்கிற்றென்க.

விஷ்ணு சிவலிங்கபூஜையை யுடையவரென்பதற்கு அனந்தசயனத்துக் கோவிலிலுள்ள நாராயண விக்கிரகமுஞ் சாக்ஷியாகும். தெற்கே தலைவைத்து மலர்ந்துபடுத்த சயனகோலமாயுள்ள அவ் விக்கிரகத்தின் வலக்கையானது சிவலிங்கத்தைத் தீண்டாமல் ஒரு சாணிற்கு மேலே பூக்கொண்டருச்சிக்குங் குறிப்பாகப் பெருவிரலையுஞ் சுட்டுவிரலையு நெருக்கிக்கொண்டு நிற்பதாயுளது. அர்ச்சகரால் அச்சிவலிங்கத்தின்மீது புட்பங்களுஞ் சாத்தப்படுகின்றன. இவ்வுண்மையை யாம் நேரிற்கண்ணுற்றவாறு யாவருங் கண்ணுற

லாம். படுத்துக்கொண்டுஞ் சிவபூஜை செய்வதுளதோ வெனின்,—"இருக்கினு நிற்கும் போது மிரவுகண் டுயிலும் போதும்—பொருக்கென நடக்கும் போதும் பொருந்தியூ ணெடுக்கும்போதும்—முருக்கிதழ்க் கனிவா யாளை முயங்கிநெஞ் சழியும் போதுந்—திருக்களாவுடைய நம்பா சிந்தைபுன் பால தாமே." என்றபடி எப்பொழுதும் அப்பூஜை மானதமாகச் செய்யத்தக்கதே. கனவினு மறக்கொணாதெனு நியாயமாகப் பூஜித்துக்கிடத்தலைப் பிறருக்கறிவுறுத்துவான் அவ்விருதிற வடிவு மவ்வா றமைக்கப்பட்டனவென்க. துவரைக்கிறையாகிய மாதவன்முடிமே லடிவைத்தவனென விளங்கும் ஸ்ரீ உபமந்யுமுனிவரிடம் பாசுபததீக்ஷையிற் பாதமஸ்தக சையோக தீக்ஷைபெற்றிருந்தவனே கிருஷ்ணனென்பது—சைவம், ஸ்காந்தம், கூர்மம் முதலிய புராண இரத்தினங்கள் பகர்ந்தாங்கு மஹாபாரதமும் பகரும். பகர்தல் எவ்வெவ்விடத்தென்னின்,—சைவபுராணத்து வாயுசங்கிதையின் உத்தரபாகத்து உ-ம் அத்தியாயத்தினும், ஸ்காந்தபுராணத்துச் சங்கரசங்கிதையின் உபதேசகாண்டத்து அ0-ம் அத்தியாயத்தினும், கூர்மபுராண பூர்வபாகத்து உ௫-ம் அத்தியாயத்தினும், மஹாபாரத அநுசாஸநிகபர்வத்துப் கச-ம் அத்தியாயத்தினு மென்க.

(உபமந்யுஸ்துக்ருஷ்ணாய தீக்ஷாமேதாஞ்சகாரஹ ।
க்ருத்வாதுவிரஜாதீக்ஷாம்)

" உபமந்யுஸ்துக்ருஷ்ணாய தீக்ஷாமேதாஞ்சகாரஹ |
க்ருத்வாதுவிரஜாதீக்ஷாம் "

எனும் அந்த ஸ்காந்தபுராண ஸநத்குமார ஸம்ஹிதையைச் சார்ந்த காளிகாகண்ட வசனங்களானும் உபமந்யுமுனிவர்பால் விரஜாதீக்ஷை பெற்றவனே கிருஷ்ணனென்பது அறியற்பாலதென்க. விரஜாதீக்ஷையென்பது—இந்நூலின் க௫உ-ம் பக்கத்தில் விளக்கப்பட்ட பாசுபதவிரதமெனுஞ் சிரோவிரதமே. இது சிவாகமங்களில் " மந்த்ரஸம்ஸ்காரதீக்ஷை " எனப்படுமென்பதையும் அக் காளிகாகண்டமே கழறுகின்றது. போந்த பாரத துரோண பர்வத்தில்—

(வாஸுதேவஸ்துதம்த்ருஷ்ட்வா ஜகாமேஶிரஸாக்ஷிதிம் ।
பார்த்தேநஸஹதர்மாத்மா க்ருணந்ப்ரஹ்மஸநாதநம் ॥)
(லோகாதிம்விஶ்வகர்மாணம் அஜமீஶாநமவ்யயம் । )

"வாஸுதேவஸ்ததந்த்ருஷ்ட்வா ஜகாமப்ரஸாதஷ்திம் |
பார்த்தேநஸஹதர்மாத்மா க்ருஷ்ணம்ப்ரஹ்மஸநாதநம்||
லோகாதிம்விச்வகர்மாணம் அஜமீசாநமவ்யயம் | "

எனவுள்ள வாக்கியங்கள்—சிவனாரது பதித்தன்மையையும், விஷ்ணுவினது பசுத்தன்மையையுங் காட்டுகின்றன. இவ்வாக்கியங்களினருத்தம் :—' தருமான்மாவாகிய வாசுதேவன் உலகிற்கு ஆதியானவரும் எல்லா முண்டாக்கினவரும் பிறப்பிறப பற்றவருமான அந்த ஈசுவரனைப் பிரமமென்றறிந்து அருச்சுனனோடு பூமியில் வீழ்ந்து சிரஸால் வணங்கினன் ' எனவாம். இக்கிருஷ்ணன் விசுவரூபங்கொண்டனனென்பதையும், அநேக கோபிகாஸ்த்ரீகளிடம அநேகவடிவங்காட்டி நின்றனனென்பதையும பெருமையாக நினைத்து விஷ்ணு பரத்துவம், பகரத்துணிந்தால் விசுவரூபங்கொண்ட அனுமன் வீரபாகுதேவ ரென்பார்க்கும, கிருஷ்ணன் செய்தபடி அனேகவுருவங்காட்டிநின்ற சௌபரிமுனிவர்க்கும் பகரல்வேண்டும். ஆகலினது சாலாது. சௌபரிமுனிவர் செய்கையையெடுத்து "விரோதஃ கர்மணி" என்றற்றொடக்கத்துப் பிரமசூத்திரபாடியத்திற் பூதூரன் காட்டியிருத்தலுங் காணப்படுகின்றது. இரணியன் பொருட்டு நரசிங்கந் தூணிற்றோன்றினதும் இச்சித்தியி லடங்கற்பாற்றே. சிவோபாஸகர்கள் அனேகசித்திகளைப்புரிய வல்லாராகலின், ஸ்ரீ அகஸ்தியனார் கடலினை அங்கையில் வாங்கி ஆசமனஞ்செய்து விட்டதையும, அவர்விந்தகிரியைப்பூமியி லமிழ்த்தியதையும், குழவிபபருவத்திற் பாநுகோபன் சூரியனைப்பற்றியதையும், அவன்தமபி அக்கினிமுகன் சந்திரனைபபற்றியதையும், பிறவற்றையும் ஞாபகஞ்செய்வார்கருக் கிருஷ்ணன் செய்கைகள் வியப்பாகத் தோன்று. கிருஷ்ணனுக்கிருந்த ஞானமும நோக்கியறியும் யோக ஞானமே யன்றிப் பரிபூரண ஞானமன்றென்றற்கு, அவன் மாயா வஸுதேவன் விடயத்தின் மயங்கினமையுஞ் சான்றாகும். இராமன் மறைந்துநின்று விடுத்த அஸ்திரத்தான் மரணமடைந்த வாலியே கிருஷ்ணவதாரத்தில் ஒரு வேடனாய்த் தோன்றியிருந்து கிருஷ்ணன்காலைத் தானுண்ணும பிராணியாக நினைத்து மறைநதுநின்று அம்போச்சினன் : அதனாற்கிருஷ்ணன் மரணமடைந்தனனெனுஞ் செய்தி மஹாபாரதாதிகளிற் கேட்கப்படும். இதனை—

" இருப்புலக்கையின் சிறிய துணுக்கையைத் தன்னம்புக்கு முள்ளாக வைத்துக்கொண்டவனான ஜரனென்கிற வேடன்வந்தான். தூரத்திலிருந்து

சுவாமியின் திருவடியை ஒருமிருகமாக நினைத்து, அவ்வம்பை அத்திருத்தாளி னடிப்புறத்தி லெய்தான்."

என்று கூறிச்செல்லும் விஷ்ணுபுராணத்து ரு-ம் அமிசத்தின் ருஎ-ம் அத்தியாய வசனங்களால் வைணவருமொப்புநரேயாவர். கிருஷ்ணனுடம்பில் உத்தரக்கிரியை விதிப்படி அருச்சுனன் கொள்ளிவைத்தசெய்தி மேலைய அமிசத்து ருஅ-ம் அத்தியாயத்துளது. தீட்டிற்குரிய கருப்பப்பையிற் கட்டுண்டு மலமூத்திரவுடம்போடு பிறத்தலும், இப்படியிழவுகொண்டாட விறத்தலும் விஷ்ணுவுக்குளவென் றறிந்தபடி சிவனுக்கு முளவென்றறிய யாதொரு சரித்திரமு மில்லாமையானும், இராமாவதாரத்திற் செய்தகுற்றம் கிருஷ்ணவதாரத்தையும் பற்றினமையானும், இயம தருமசபையில் இயமதருமராசனை மாந்தாதா சோமன் இராமன் இலக்குமணன் முதலியோர் உபாஸித்துக்கொண் டிருக்கிறரென்பது மஹாபாரத சபாபருவத்தில், "தஸ்யாம் ராஜர்ஷய" எனுமிடத்திருக்கின்றமையானும் நாரணன் பதிப்பொருளாகான். முற்றுந் தகனமாகாமே சமுத்திரவெள்ளத்தின் மிதந்துபோந்த கிருஷ்ணனுடம்பு தங்கிய விடனே ஜகந்நாதமெனுந் தலமாய் விளங்குகினறதென்ப. கிருஷ்ணன் விஷ்ணுவின் கறுப்புமயிரென்றும், பலராமன் விஷ்ணுவின் வெள்ளைமயிரென்றும் மஹாபாரதமும், வைணவர் பாகவதமும் பகரும். இச்செய்தி விஷ்ணுபுராணத்து ரு-ம் அமிசத்தின் க-ம் அத்தியாயத்தில்—

"அவ்வெம்பெருமான் தமது திருமேனியினின்றும் வெண்மையுங் கருமையுமான மயிர்கள்போற் காணப்பட்ட தேஜசுகளையெடுத்து, ஓ வானவரே! இந்த என் தேஜசுகள் பூமியிலவதரித்துப் பூமிக்குப் பாரத்தினு லுண்டான துன்பத்தை நீக்கும்"

என வருகிறது. இது ஜீவர்கட்குரிய நரையையும் விளக்குவதாயிற்று. 'மயிர்கள்போற் காணப்பட்ட தேஜசுகள்' என்றெழுதிக் கொண்டதனுலே மயிர் போய்விடாது. இப்புராணம் "விஷ்ணுசித்தீயம்" எனும் வியாக்கியான தாற்பரியங்களையுஞ் சேர்த்துத் தமிழின் மொழிபெயர்க்கப் பட்டதாக வுளது. தைத்திரீயாருணசாகை நாராயணம்—

(ஒாஂஹ்ரீஃலவ-ஃஹ-ஞ தா நாஜாஃஹொவ ஹ்யெஸ்ரியஂ। ஸ்ரீஃஜெஃ ஹஜத-ஂ। சுவக்ஷீஜெஃநஸ ) த-ஂ। ஷிஷ்-ணஃ-வொஃஷெஷெஷா ஹுஜொ

ஹிரிமாம்ல்லோகாநந பஜய்யமப்யஜயந் | மஹாம்இந்த்ரோவஜ்ரபாஹுஷோடஶீஶர்மயச்சது | )

"ஈச்வரீம் ஸர்வ பூதாநாந்தாமிஹோபஹ்வயேச்ரியம் | ஸ்ரீர்ம்மேபஜது | அலக்ஷ்மீர்ம்மே நச்யது | விஷ்ணுமுகாவைதேவாச்சந்தோபிரிமாந் லோகாநந பஜய்யமப்ய ஜயந் | மஹாம்இந்த்ரோவஜ்ரபாஹுஷ் ஷோடசீசர்ம்மயச்சது|"

என்றுகூறுகின்றது. இதன்பொருள் :— 'சோடசிரூபிணியும், வித்யாரூபிணியுமாகிய ஈசுவரியை அவாவுகின்றேன். (ஸ்ரீ) திருவை யெனக்கு அருள்வாயாக. அலக்குமி தொலைக. விஷ்ணுமுதலியதேவர்கள் எந்தச் சோடசியாகிய வுன்னைச் சந்தமுறையின் வழுவாமலுபாஸித்து உலகங்களில் நிகரில்லாது விளங்குகின்றனரோ அவர்கள்வழியே மகானும் வச்சிரமேந்தினவனுமாகிய இந்திரனுமாவன். அத்தகைய சோடசியானவள் எனக்குச் சுகமளிப்பாளாக.'

எனவாம். இதனில், விஷ்ணு சிவசக்தியை யுபாஸித்து விளங்குந் தேவனுதல் காண்க. இப்படி இலக்குமியைச் சிவன்உபாஸித்து விளங்குவோனென்றற்கு யாதொரு சுருதிவசனமுமின்று. இந்தச் சுருதியில் "பத்மகோசப்ரதீகாசம்" என்பதாதியாக, 'தஸ்யாச்சிகாமத்யே பரமாத்மா வ்யவஸ்திதஃ" என்பதுவரையுள்ள வாக்கியங்களுக்குச் சீவான்மாவின் இருதயகமலமத்தியிற் பரமான்மா வுளனென்று பொருள்கொள்வழியும், இந்நூலின் "திரிமூர்த்திகளும் பசுக்களே" எனும் அத்தியாயத்திற்காட்டப்பட்ட பிரமாணங்களானே சீவனுகவும், ஈண்டுரைத்தவாறு சிவசக்தியை யுபாஸித்துய்வோனுகவுமுள்ள விஷ்ணுவினிருதய மத்தியில் அப்பரமான்மாவுளனென்றல் சாலும். இப்பொருள் தகுதித்தாகும். இந்நியாயத்தாலும் இச்சுருதியில் யாண்டும் நாராயண பரத்துவமின்றென்க. இச்சுருதியை மகோபநிஷத்தென்றும், மகாநாராயணோபநிஷத்தென்றுங் கூறுவாருமுளர். இவனுரைத்த யாவற்றாலும் விஷ்ணுவினது பசுத்தன்மை வெளியாயிற்று.

## இலக்குமி விடயம்.

விஷ்ணுவின் மனைவியாகிய இலக்குமியுஞ் சீவகோடிகளிலொருத்தியேயென்றல் வைணவர் தீர்வையுமாம். இதனை, உடையவர்சூர்ணவிளக்கம் ப - சச, அக - ல்—

"நமது பெரிய பிராட்டியாரும் ஜீவகோடிகளுக்குள் ஒருத்தியாய் எம்பெருமானுக்குச் சேஷமாய்" என்றும், "இதில் பிராட்டியைச் சேதநகோடியுள் ச்ரேஷ்டையென்று கருத்து"

என்று மெழுதியிருத்தல் கொண்டுமறிக. சீவான்மாவாயிருத்தல் பற்றியன்றே "சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கை முலை தீண்ட" என்று பெரியாழ்வாரெழுதியபடி சீதைகுயத்தைக் காகாசுரன் தீண்டவும், அவளுடம்பை இராவணன் தீண்டவு மிடமுண்டாயிற்று. இலக்குமி குயத்தை விஷ்ணுவினுருவம் பெற்றோரெல்லாந் தீண்டுவரெனும் விடயமும் வைணவச்சுவடிகளி லுளதென்பது இந்நூலின் கஎஎ-ம் பக்கத்தில்வந்துளது. இவளே, மஹாகாளியென்பதும் அச்சூர்ணவிளக்கம் ப-௲அ-ற் பொறிக்கப்பட்டுளது. அவுணர் போர்க்கோலத்தோடு மோகித்து விழும்படி கொல்லிப்பாவை வடிவாய்நின்று இலக்குமியாடிய கூத்தே பாவையெனப்பட்டது. இராவணன் தீண்டின விவரத்தை—

([illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible])

"இத்யுக்த்வாமைதிலீம்வாக்யம் ப்ரியார்ஹாம்ப்ரியவாதிநீம் |
அபிகம்யஸுதுஷ்டாத்மா ராக்ஷஸ: காமமோஹித: ||
ஜக்ராஹராவணஸ்ஸீதாம் புத: கேரோஹிணீமிவ |
வாமேநஸீதாம்பத்மாக்ஷீம் மூர்த்தஜேஷுகரேண ஸ: ||
ஊர்வோஸ்துதக்ஷிணேநைவ பரிஜக்ராஹபாணிநா |
தம்த்ருஷ்ட்வாம்ருத்யுஸம்காசம் தீக்ஷ்ணதம்ஷ்ட்ரம்மஹாபுஜம் ||
அங்கேநாதாயவைதேஹீம் ரதமாரோஹயத்ததா |
ஸாக்ருஹீதாபிசுக்ரோச ராவணேநயசஸ்விநீ ||"

எனும் வான்மீகராமாயணச்சுலோகங்களினறிக. அருத்தம் :—'பிரியத்திற்குத் தகுதியானவளும் பிரியமாய்ப்பேசும் பெற்றிவாய்ந்தவளுமாகிய சீதை பக்கலிலே தனது மோஹக்கருத்தை வசனித்துநின்ற துஷ்டாத்மாவாகிய

இராவணன், சீதையினிட நெருங்கி, உரோஹிணியைப் புதன்கிரகிப்பதுபோலக் கமலமன்ன கண்களையுடைய அச்சீதையினது தலைமயிரை யிடக்கரத்தாற் பிடித்துக்கொண்டு, வலக்கரத்தைத் தொடைகளின் கீழறச்செய்து, அவளைத் தூக்கிக்கொடுபோய் இரதத்தில் வைத்துக்கொண்டனன். கூர்த்தபற்களும் மஹாபுஜமுமுள்ள மிருத்தியுவையொத்த அந்த இராவணனாற் கிரகிக்கப்பட்டவளுங் கீர்த்தியுள்ளவளுமான சீதை அங்ஙனம் பெருஞ்சத்தமிட்டனள்.'

எனவாம். இராவணன் சீதையைத்தீண்டவியலாமே தரையோடெடுத்துப்போயினனென்பதாகக்கதைக்குங் கம்பராமாயணமாற்றமிங்ஙனந் தலையெடாதொழிதல் காண்க. இவ்விடயத்தில் அரங்கிந்தை வைணவம் அதிகமும் அவமானப்படுகின்றதே! கூறிப்போந்தவாறு பசுவாயிருக்கும் விஷ்ணுவைச் சிவசத்திமூர்த்தம்நான்கில் நாராயணமூர்த்தமுமொன்றென்றல் எவ்வாறு கூடுமெனிற் கூறுதும். உமாகாந்தனது இடப்புறமான சத்திபாகத்திலிருந்து விஷ்ணு வெளிப்பட்டமையானும், சிவசத்திபிரணவமான உகாரம் அவ்விஷ்ணுவிற் பதிந்து திதிசெய்கின்றமையானும் பிரகிருதியேனும் ஆதிமூலரூப விஷ்ணுமூர்த்தஞ் சிவமாயாசத்திமூர்த்தமாம். அதனில் யாதொருஜீவன் மாட்டு இராஜத தாமதங்களுஞ் சாத்துவிகமும், வௌவாலுருவிற் பறவைவடிவும் மிருகவடிவும், பேய்பிடித்தானுருவிற் பேயும் பிடிபட்டவுயிரும் உள்ளமைபோலச் சத்தியும் பசுவுமுள. பூனைக்கண்ணைப் பூதவிருள் பீடியாததுபோல அச்சத்தியைப் பசுபாசமும் பீடியாது. இவ்விரண்டு தன்மையுமுளவென்பது கொண்டே விண்டுவுக்கு உள்ளே தாமதமும் வெளியே சாத்துவிகமு முளவென்று முந்துநூல்கள் மொழிகின்றன. அவ் வாதிமூலமெனும் பிரகிருதி மாயைக்கேனுந் தனது வரைப்பு வரையினும் வியாபகமிருக்குமேயெனின்,— (ராயிநஂ து மஹேஶ்வரம்) "மாயிநந்து மஹேச்வரம்" எனுஞ் சுவேதாச்வதரோபநிஷத் வசனம்— 'மாயையை யுடையவர் மகேசுவரர்' அஃதாவது மாயையை நடாத்துந்தலைவர் மகேசுவரரென்றுமாற்றானும், சிவனாரது சுதந்திரவஸ்துவாயுளது மாயையென்பதாகச் சிவஸ்வரூபத்தை விளக்காநின்ற பஞ்சப்ரஹ்மோபநிஷதம்— (ஸ்வமாயயா வைபவாந் ஸர்வாந்) "ஸ்வமாயாவைபவாந் ஸர்வாந்" என்று கூறுமாற்றானும் அவ்வியாபகஞ் சிவபிரானுடையதேயாம். போந்த சுவேதாச்வதரோபநிஷத் வசனம்— உபப்ரம்ஹண பாத்மபுராணத்துச் சிவகீதையின் உ-ம் அத்தியாயத்தினும் வந்துளது. கீதாரத்நமாக விளங்கும் இச்சிவகீதைக்கு உரையாசிரி

யர்கள்—நாகோஜிபட்டர், பட்டோஜிதீக்ஷிதர், பண்டித கணநாத ரென வறிகின்றனம். இக்கீதை பாத்மோத்தரபாகமாம். பாத்மோத்தரமென வைணவர் வைத்திருக்குஞ் சிவதூஷணச்சுவடி கற்பனையே. விவரம்—இந்நூலின் சுறு, சுசு - ம் பக்கங்களி லறிக.

## கரு. சிவாதிக்கிய விளக்கம்.

ஈண்டுச் சிவாதிக்கியத்தை இயன்றமட்டுங் கூறக்கடவேம். பைப்பலாத மஹரிஷியானவர் பிரமதேவரைப்பார்த்துத் திரிமூர்த்தி பரன் யாவனென்று வினவியபோது அத்தேவனாற் கூறப்பட்ட அதர்வணவேத சரபோபநிஷத்—

[illegible]

𑌰𑌂 । 𑌤𑌾𑌪𑌤𑍍𑌰𑌯𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑍂𑌤𑌜𑌨𑍍𑌮𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌜𑌰𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 । 𑌨𑌾𑌨𑌾𑌵𑌿𑌧𑌾𑌨𑌿
𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑌿 𑌜𑌹𑌾𑌰𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 । 𑌏𑌵𑌂𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌃𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑌾𑌨
𑌆𑌤𑍍𑌮𑌾𑌵𑍈𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌮𑍍 । 𑌶𑌙𑍍𑌕𑌰𑍋𑌭𑌗𑌵𑌾𑌨𑌾𑌦𑍍𑌯𑍋 𑌰𑌰𑌕𑍍𑌷
𑌸𑌕𑌲𑌾𑌃𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 । 𑌯𑌤𑍍𑌪𑌾𑌦𑌾𑌮𑍍𑌭𑍋𑌰𑍁𑌹𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌂 𑌮𑍃𑌗𑍍𑌯𑌤𑍇𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌨𑌾
𑌸𑌹 । 𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌵𑌾𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌂𑌮𑌹𑍇𑌶𑌾𑌨𑌮𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑌸𑌗𑍋𑌚𑌰𑌮𑍍 । 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌨𑌮𑍍𑌰
𑌤𑌨𑍋𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌮𑌕𑌰𑍋𑌦𑍍𑌵𑌿𑌭𑍁𑌃 । )

"பஹுபிர்புண்யாநிக்ருதாநியேந, தேநைவலப்ய: பரமேச்வரோஸௌ யஸ்யாங்கஜோஹம் ஹரிரிந்த்ர முக்யா: | மோஹாந் நஜாநந்தி ஸுரேந்த்ர முக்யா: ப்ரபும் வரேண்யம்பிதரம் மஹேசம் | ......தம்வைப்ரபும் பிதரம் தேவதாநாம் மமாபிவிஷ்ணோர்ஜநகம் தேவமீட்யம் | யோந்தகாலே ஸர்வ லோகாந் ஜஹாரஸ ஏகச்ரேஷ்டச்ச ஸர்வசாஸ்தாஸ ஏவ | யோம்சாரம் வேஷமாஸ்தாய சரபாக்யம் மஹேச்வர: | ந்ருஸிம்ஹம் லோகஹந்தாரம் ஸஞ்ஜகாநமஹாபல: | ஹரிக்ஹரந்தம் பாதாப்யா மநுயாந்திஸுரேச்வரா: | மாவதீ: புருஷம் விஷ்ணும் விக்ரமஸ்வ மஹாநிதி | க் நுபயாபகவாந் விஷ்ணும் விததார நகை: கரை: | சர்மாம்பரோ மஹாவீரோ வீரபத்ரோப பூவஹ | ......யோ ப்ரஹ்மண: பஞ்சமவக்த்ர ஹந்தா தஸ்மை ருத்ராயநமோ அஸ்து | யோவிஸ் புலிங்கேந லலாடஜேந ஸர்வம் ஜகத் பஸ்மஸாத்வைகரோதி | புநச்ச ஸ்ருஷ்ட்வாபுநரப்யரக்ஷத்தேவக் ஸ்வதந்த்ரம்ப்ரகடீகரோதி | ......யோவாம பாதேந ஜகாநகாலம் கோரம் பபாவத ஹாலாஹலந்தம் | ......யோவாம பாதார்ச்சித விஷ்ணுநேத்ரஸ் தஸ்மைததௌசக்ரமதீவஹ்ருஷ்ட: | ......யோலீலயைவ த்ரிபுரந்ததாஹ காமம் காலம் ஸோமஸூர்யாக்நிநேத்ர: | ......யோமத்ஸ்ய கூர்ம வராஹ ஸிம்ஹாந் விஷ்ணும் க்ரமந்தம் வாமநமாதிதேவ: | விவிச்லபம்பீட்யமாநம் ஜகாந பஸ்மீசகாரமந்மதம் யமஞ்ச | தஸ்மைருத்ராயநமோ அஸ்து | ஏவம்ப்ரகாரைர் பஹுதாப்ர துஷ்ட்வாக்ஷமாபயாமாஸுர்நீலகண்டம் மஹேச்வரம் | தாபத்ரயஸமுத்பூதஜந்ம ம்ருத்யுஜராதிபி: | நாநாவிதாநி துக்காநி ஜஹாரபரமேச்வர: | ஏவம்மந்த்ரைர்ப்ரார்த்யமாந ஆத்மாவைஸர்வதேஹிநாம் | சங்கரோபகவாநாத்யோ ரரக்ஷஸகலா: ப்ரஜா: | யத்பாதாம்போருஹ த்வந்த்வம் ம்ருக்யதே விஷ்ணுநா துநா ஸ்துத்வாஸ்துத்யம் மஹேசாநமவாங்மாநஸகோசரம் | பக்த்யாநம்ரதரோ விஷ்ணௌ ப்ரஸாத மகரோத் விபு: |"

என்று உத்கோஷிக்கின்றது. அருத்தம்:—'மிக்க புண்ணியஞ் செய்தவர்களா லடையத்தக்கவரும், பரமேச்வரரும், (பிரமனுகிய) நானும் விஷ்ணுவும் இந்திரனும் பிறக்க வுற்பத்திஸ்தானமானவரும், இந்திரன் முதலானவர்களால் மோஹத்தா லறியப்படாதவரும், பிரபுவும், சிரேஷ்டரும், பிதாவும், மஹேசரும், (பிரமனுகிய)

எனக்கும் விஷ்ணுவுக்கும் ஜநகரும், தேவராயிருப்பவரும், அந்திய காலத்திற் சர்வலோகங்களையுஞ் சங்கரிப்பவரும், ஏகரும், சிரேஷ்டரும், யாவரையும் சிக்ஷிக்கத்தக்கவரும், பயங்கரமான சரபவேஷந்தாங்கி உலக பீடிதமாயிருந்த நரசிங்கத்தை ஹிம்ஸித்தவரும், பாதங்களால் ஹரியை ஹரிக்கின்றவரும், புருஷரூப விஷ்ணுவை வதஞ்செய்யாமல் தேவரீரது பராக்கிரமத்தை மாத்திரங் காட்டியருளல் வேண்டுமென்று சர்வ தேவர்களாலும் மகாராத்திரியிற் பின்றொடர்ந்து பிரார்த்திக்கப்பட்டவரும், கிருபையினால் நரசிங்கத்தின் உடம்பினது தோலை நகங்களாற் கிழித்துரித்தெடுத்து வஸ்திரமாக வணிந்துகொண்டவரும், மஹா பலமுள்ள வீரபத்திர மூர்த்தியானவரும், பிரமதேவனது ஐந்தாவது முகத்தைச் சேதித்தவருமான அந்த உருத்திரருக்கு நமஸ்காரம் பண்ணுகின்றேம்: சர்வலோகங்களையுந் தமது நெற்றிவிழிப்பொறி யொன்றினாற் சுட்டெரித்துவிட்டுப் பெயர்த்துஞ் சிருட்டித்தலுஞ் சிருட்டிக்கப்பட்டவற்றை யிரக்ஷித்தலும் இரக்ஷிக்கப்பட்டவற்றைச் சங்கரித்தலுமாகிய சுவதந்திரப் பிரகடனார்த்த லீலை செய்கின்றவரும், இடப்பாதத்தாற் காலனை யுதைத்தவரும், கொடியவிஷத்தைப் பானம்பண்ணினவரும், விஷ்ணுவின் கண்ணை யர்ச்சிக்கப்பெற்ற இடப்பாதமுடையவரும், அவ்வர்ச்சனை வாயிலாக விஷ்ணுவுக்குச் சக்கராயுதத்தைப் பிரசாதித்தருளினவரும், விளையாட்டாகவே திரிபுரத்தை யெரித்தவரும், சந்திர சூரியாக்கினிகளென்னு நேத்திரமுடையவரும், விஷ்ணுவையும் விஷ்ணுவி னவதாரங்களான மச்சம் கூர்மம் வராகம் நரசிங்கம் முதலியவற்றையும் வாட்டிப் பீடிக்கின்றவரும், மன்மதனையும் இயமனையும் பஸ்மமாகச் செய்தருளினவருமான அந்த உருத்திரருக்கு நமஸ்காரமென் றிவ்வாறு தேவர்கள் தனித்தனி நீலகண்டரான மஹேச்வரரை மிகவுந் துதித்துச் சமாதானஞ்செய்தார்கள். பரமேசுவரர் அத் தேவர்களுடைய தாபத்திரய ஜனன மிருத்தியு ஜரை முதலியவற்றாலுண்டான நாநாவித துக்கங்களையும் ஹரித்தருளினர். இப்படித் தேவதைகளுடைய பிரார்த்தனையை அங்கீகரித்தருளினர். பகவானும் (ஆத்யன்)=முதற்கடவுளுமான சங்கரர் எல்லாப் பிரஜைகளையு மிரக்ஷித்தருளினர். எவருடைய பாதாரவிந்தங்கள் விஷ்ணுவாற் றேடப்பட்டனவோ அந்த விஷ்ணுவுடன் தேவர்கள் சூழ்இ நின்று வாக்குக்கும் மனத்துக்கு மெட்டாதவரும், துதிக்கத்தக்கவருமான மஹேசாநரைத் துதித்

துப் பக்தியோடு வணங்கினார்கள். அப்பொழுது விபுவெனும் மஹேஹ சாநர் விஷ்ணுவுக்கு நல்ல பிரசாதஞ் செய்தருளினர்.'

எனவாம். இவ்வுபநிஷத்திலுள்ள இன்னுஞ் சில வாக்கியங்களின் வாயிலாகச் சிவனாது பதித்தன்மையும், விஷ்ணுவினது பசுத்தன்மையும் இந்நூலின் ௯௫, ௯௮, ௧௨௩, ௧௨௪, ௧௮௯, ௨௧0-ம் பக்கங்களில் வந்துள்ளன. சிவோத்கர்ஷத்தை விளக்கும் புராணசரிதைகட்கு இவ் வுபநிஷதம் பிரமாணமா யிருத்தலாற் சிவபுராணங்களைத் தாமசபுராணங்க ளென்பார்கூற்றுக் குத்ருஷ்டி கூற்றுதல் காண்க. சிவோத்கர்ஷங்கூறு மிவ்வுபநிஷத்தைப்போல நாராயணோத்கர்ஷங்கூற வோருபநிஷத்து இன்மையால் ஆண்டானை யடிமையாக்கி, அடிமையை யாண்டானாக்கிக்கொண்ட அதிபாதக வைஷ்ணவர்களாற் சிவாபகர்ஷமாக வெழுதிவைக்கப்பட்ட சரிதையனைத்தும் பொய்யென்றல் பசுமரத்தாணி யறைந்தாற்போலாமென்க. இதுபற்றியன்றே " சிவனை யாச்சிரயிக்காத சாஸ்திரத்தை யெரித்துவிடு" என்று பிருஹஜ்ஜாபாலோபநிஷதமுங் கூறிற்று. இவ்வாக்கியம் இந்நூல் ௧௫௩-ம் பக்கத்திற் காட்டப்பட்டுளது. இதனானே சிவனை யாச்சிரயித்த சாஸ்திரங்களே பிரமாணமென்பதூஉம் பெறுக. மேலைச் சரபோபநிஷத்தில், பயங்கரமான சரபவேஷந்தாங்கி நரசிங்கத்தை ஹிம்ஸித்தவரெனவும், பாதங்களால் ஹரியை ஹரிக்கின்றவரெனவும், நரசிங்கத்தின் தோலை நகங்களாற் கிழித்துரித்தெடுத்து வஸ்திரமாக வணிந்துகொண்டவரெனவும், விஷ்ணுவுக்கு நல்ல பிரசாதஞ்செய்தருளினவரெனவும் சிவனார் துதிக்கப்பட்டிருத்தலை யறியாத வைணவர்—கூரேசவிஜயமெனுந் தாதச்சுவடியின் சரபர்நரசிங்கர்கக்ஷியெனுமிடத்திற் சரபர் நரசிங்கரை வென்றதில்லையெனவும், அதற்குச் சில புராணவசனங்க ளுளவெனவும், யமசங்காரகக்ஷியெனுமிடத்தில் நரசிங்கந்தான் சரபத்தைக் கிழித் தெறிந்ததென்று கருடபுராணஞ் சொல்லுகிறதெனவு மெழுதிவைத்தனர். வேதவிரோதமான இவ்வெழுத்துக்களும், புராணவசனங்களென்பனவும் யாங்ஙனம்பயன்படுவன! அவரொத்த அவைதிகர் அவைக்கட் பயன்படுவனவே. நரசிங்கம் சரபத்தைக் கிழித்தெறிந்த துண்மையாயின் அவ்விவரம் நரசிங்கத்தின் பெருமைகூற வந்த நிருஸிஹ்மதாபிநியுபநிஷத்திலன்றோ விருக்கவேண்டும்? இல்லாமையால் அது பொய்யென்பது தெளிவு. இது கிடக்க. திருமால் கண்

டபேருண்டமாக அவதரித்துச் சரபத்தைக்கிழித்தெறிந்த செய்தி யை நாரதீயம் முதலிய புராணங்கள் நவிலுமெனச் சிலவைணவர் பிதற்றுவர். இவரது கண்டபேருண்டப்பிதற்று வழியாகவும் சரப த்தை நரசிங்கம் வெல்லமாட்டாதென்பதும் வலியுறும். மேலும் இவர்—சிவனார் சருவதோமுகமெனும் உருக்கொண்டு அக்கண்ட பேருண்டத்தையழித்தார்: பின்னர்த் திருமால் சருவதோபத்திர மாக அவதரித்து அச்சருவதோமுகத்தை யழித்தாரெனப் பிரபஞ் சசாரமெனும் மந்திரசாத்திரங்கூறுமெனவும், இவற்றிற்குரிய இயந் திர மந்திரங்களும் அதனிலுளவெனவும் பிதற்றுவர். அப்பெயரிய மந்திரசாத்திரமுளதென்பது மெய்யேயென்றும், அதனிற் கண்ட பேருண்ட விடயமுளதென்பது பொய்யேயென்றும், சங்கராசாரி யரே அந்நூலாசிரிய ரென்றும் உண்மையுணர்ந்தோ ருரைப்பர். நரசிங்கமூர்த்திக்கும், சரபமூர்த்திக்கும் உபநிஷத்துக்க ளிருத்தல் போலக் கண்டபேருண்டத்திற்கும், பிறவற்றிற்கும் உபநிஷத்துக்க ளில்லாமையால், இச்செய்தி யாங்ஙனந் தலைதூக்குமென்பதை அறி விலாவைணவரும் அறியுநீர ராவரோ! ஆகாரென்க. நிகண்டு - அம ரஸிம்ஹம்— (ஸம்யவ-ஃஸூாஷு) "கந்தர்வச்சரபஃ" என்றதிலுள்ள 'சரபம்' என்பதற்கு "எட்டுக்காலையுடையதாய் ஸிம்ஹத்தைக் கொல்லுகிற மிருகம்" என்று பொருள்வரைந்திருப்பதை ராமாநு ஜாசார்யராற் பரிசோதிக்கப்பட்டு நுங்கம்பாக்கம்: அம்பாவிலாஸ முத்ராக்ஷரசாலையில் விரோதிநாமஸம்வத்ஸரத்திற் பதிப்பிக்கலான டீகாஅமரமெனும் புத்தகத்தி லுளதென்பதையும் கற்பனைவிழை யும் அவ்வறிவிலிகட்குக் காட்டுக. மேலைச் சரபோபநிஷதம்— பிரமன் விஷ்ணுவென்பார்க்கு உற்பத்திஸ்தானமும் ஜனகரும் உரு த்திரரென்றதையும்,—சர்வலோகங்களையுஞ் சுட்டெரித்துவிட்டுப் பெயர்த்துஞ் சிருட்டி திதி சங்காரங்களைச்செய்கிறவர் உருத்திர ரென்றதிற் பிரமன் விட்ணுவென்பார் காலமு மடங்குதலையும்,— "பிரமனும், விஷ்ணுவும், உருத்திரனும் எல்லாப் பூதங்களோடுஞ் சிவத்தாற் படைக்கப்படுகின்றனர்: வடவைத்தீயால் ஜலம் நாசமா தல்போல அப்பூதங்களோடு அவர்களும் இலயமே யடைகிறார் கள்." எனும்பொருளைத் தருவதற்காய—

(ப்ர,ஹ்மாவிஷ்ணு-ருத்ராஃ ஸர்வ-பூதாஃ ஜாயந்தே ।
நாஶமேவாந்-யாந்தி ஸலிலாநீவவாடவம்॥)

"ப்ரஹ்மாவிஷ்ணுச்சருத்ரச்ச ஸர்வாவாபூதஜாதய꞉ |
நாசமேவாநுதாவந்தி ஸலிலாநீவபாடபம் ||"

எனும் வசனத்தையும், "ஸ்வரூபதேஜோமய சாச்வதம்சிவம்" எனும் வசனத்தையுந் தருகின்ற ஸாமவேத மஹோபநிஷத்திலும், இந்நூல் கஅ௬ - ம் பக்கத்திற் காட்டப்பட்ட அதர்வசிகோபநிஷத்திலும் பெறுக. இப்படி வடமொழிவேத மியம்புதலினுற்றன் தமிழ் வேதமாகிய தேவாரம்—

"நூறு கோடி பிரமர்க ணொந்தினு
ராறு கோடி நாராயண ரங்ஙனே
யேறு கங்கை மணலெண்ணி லிந்திர
ரீறி லாதவ னீச னொருவனே." என்றும்,

"செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ" என்றும், திருவாசகம்—

"எண்ணுடை மூவ ரிராக்கதர்க ளெரிபிழைத்துக்
கண்ணுத லெந்தை கடைத்தலைமு னின்றதற்பி
னெண்ணிலி யிந்திர ரெத்தனையோ பிரமர்களு
மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் டோணோக்கம்."

என்று மியம்புகின்றன. சூதசங்கிதையின் சிலமறையோர்க்குச் சிவபத்தியிலாமைக் கேதுவுரைத்த வத்தியாயம்—

"சீவர்கள்போற் பிறந்திறந்து திரிகின்ற மாயன்முதற் சிறிய தேவர்
பாவமறுத் தன்பரையாள் பரசிவனி னதிகமெனப் பற்றி மாயுந்
தாவரிய மயக்கநமக் குண்டாக"

என்றும், சைவபுராணத்து வாயுசங்கிதையின் உருத்திரோற்பத்தி யத்தியாயம்— "முன்ன மிறந்த மால்பிரமன் றலைகண் மூவாயிரகோடி" என்றும், ஞானசங்கிதையின் எஎ - ம் அத்தியாயம்— "சங்கார காலத்தே அரிபிரமர் போல உருத்திரன் மரணமடையாமற் சதாசிவனிடஞ் சேர்வன்" என்றுங் கூறுகின்றன. இவ்வாறு யின் நாராயணனிடத்திருந்து பிரமன் பிறந்தனன், உருத்திரன் பிறந்தனன், இந்திரன் பிறந்தனனெனும் பொருளுற "நாராயணாத் ப்ரஹ்மாஜாயதே | நாராயணாத் ருத்ரோஜாயதே | நாராயணா திந்த்ரோஜாயதே |" என்று நாராயணோபநிஷத்தும்; 'பிரமனுமில்லை, ஈசானனுமில்லை, நாராயண னொருவ னிருக்கிறான்' எனும் பொருளுற "ஏகோஹவை நாராயண ஆஸீந் நப்ரஹ்மாநேசாந꞉"

என்று அந்த மஹோபநிஷத்துங் கூறுத லென்னைகொலெனின்,—பெரும்பிரளயத்தில் நான்காவது மூர்த்தியாகிய மஹேசுரனிடத் தடங்கியிருந்த திரிமூர்த்திகளும் அவனருளாற் படைக்கப்பட்ட பின்றை உருத்திரன் மற்றிருவரையும், பிரமன் மற்றிருவரையும் அம் மஹேசுரனருளாற் படைத்தபடியே விட்டுணுவும் மற்றிருவரையும் படைத்திட்ட வுயர்வை மேலேபோந்த வாயுசங்கிதை கூறுமாகலின், இச் சுருதிவசனங்கள் குணருத்ரன்விஷயமாகப் பிரயோஜனப்படும்: இவ்வித சிருஷ்டிகள் கற்பபேதத்தனவாமென்க. பிரமனது நெற்றியிலும், விட்டுணுவினிடத்திலும் உருத்திரன் பிறந்தனனென்பது—தேவகி வயிற்றிற் கிருட்டிணன் பிறந்த கர்ப்பாசௌச ஜனனம்போலாது தூணிடை நரசிங்கந்தோன்றிய தோற்றம்போல்வதாகும். நரசிங்கத்திற்குத் தூண் தந்தையாமாயிற் குணருத்ரனுக்கும் ஹரி பிரமர் தந்தையாதல் கூடும். உருத்திரனாற் பிரமனும், பிரமனால்விட்டுணுவும் உண்டாயவிவரம் இந்நூலின் உ0௯-ம் பக்கத்திற் காட்டப்பட்ட பைங்களோபநிஷத் வசனங்களினறிக. "சிவவரப்பிரசாதவலியுற்ற பிரமன் ஒருகற்பத்தில் விட்டுணுவை உலகத்தோடு விழுங்கியிருந்து பின்னர்த் தனது அபான வழியாக அவ்விட்டுணுவைப் பிறப்பித்தனன்." எனும் மஹா ஸ்காந்தோபதேசகாண்டத்து ௬அ-ம் அத்தியாயத்து ௫௫, ௫௬-ஞ் சுலோகங்களி னருத்தமும் ஈண்டுக்கருதத்தக்கது. இவ்வித ஜன்மத்தாலேயே 'அதோக்ஷஜன்' எனும்பெயரும் விட்டுணுவுக்குண்டாயிற்றெனல் ஏற்புடைத்து. "அதோக்ஷஜாயநம:" என மஹாநாராயணோபநிஷத்துங் கூறுகின்றது. இவ்வுபநிஷத்து நாராயணனாற் சொல்லப்பட்டதாகவேயுளது. சிவனருளாற் பிரமனை யொடுக்கிக்கொண்ட விட்டுணுவினுந்தியிற் பிரமனும், பிரமனதுநெற்றியிற் குணருத்ரனும் வெளிப்படுமுன்னர்ப் பிரமசிருஷ்டியி லாகுமுலகின்மையால் "ஏகோஹவைநாராயண ஆஸீத்" என்று அந்த மஹோபநிஷதமியம்பிற்றென்க. இதுபற்றியன்றே "கார்யம் விஷ்ணு: க்ரியா ப்ரஹ்மா காரணந்துமஹேச்வர:|" என்ற ருத்ரஹ்ருதயோபநிஷத் "ஜகத் விஷ்ணு:" என்றுங் கூறிற்று. இந்த விதப்பிற்றுன் "திசச்சநாராயண:| காலச்சநாராயண:| கர்மாகிலஞ்சநாராயண:|" "காரணாத்மகக் ஸர்வம் கார்யாத்மகக் ஸகலம்நாராயண:|" "நாராயண பரம்ப்ரஹ்ம நாராயணநமோஸ்துதே" என்றியம்புகின்ற மஹாநாராயணோபநிஷத்திலும், இன்னுஞ்சிலவுபநிஷத்துக்களிலுமுள்ளவிஷ்

ணுவினுயர்வெல்லாமடங்கும். பஞ்சகோசங்களெனப்படும் அன்னத்தைப் பிராணனை மனத்தை விஞ்ஞானத்தை ஆனந்தத்தை யொன்றற்கொன்று பெரியபிரமமென்பதும், சூரியனைப்பிரமமென்பதும்—“ அந்நம்ப்ரஹ்ம ” “ ப்ராணோப்ரஹ்ம ” “ மநோப்ரஹ்ம ” “ விஜ்ஞாநம்ப்ரஹ்ம ” ஆநந்தோப்ரஹ்ம ” எனும் தைத்திரீயோபநிஷத்தின் பிருகுவல்லி வசனங்களிலும், “ ஆதித்யோப்ரஹ்ம ” எனுஞ் சாந்தோக்யோபநிஷத்தின் ௩-ம் பிரபாடகத்துப் க௯-ங் கண்ட வசனத்தினும் பெறப்படும். இப்படிப்பட்ட நாராயணாதிப்ரமோபாசனைகள்—மிக்கபுண்ணிய மில்லாத இழிபக்குவான்மாக்கணிமித்தஞ் சாகபசுநியாயமாகவும், ஸ்தூலாருந்ததிநியாயமாகவு மேற்பட்டனவாகும். “ விச்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி: ” எனுந் தைத்திரீயாருணசாகை நாராயணவசனத்தில் ஜகத்தாகிய விசுவத்தைக் கடந்துளோன் சிவனென்ப தறியப்படுமாற்றானும் ஜகத்விஷ்ணு: என்பது தாழ்பொருட்டாயிற்று. மேலே காட்டப்பட்ட மஹாநாராயணோபநிஷத்தில் “ தேவகீஸுத கோவிந்த வாஸுதேவ ஜகத்பதே | ” எனும் வசனமுமிருத்தலால் இவ்வுபநிஷத்து—கிருஷ்ணன் காலத்திற்குப் பின்னுண்டானதென்பது மறிக. நிற்க. இந்நூல் உ0௯-ம் பக்கத்திற் காட்டப்பட்ட “ ஏகோருத்ர ஏக ஏவ ருத்ரோ ” என்ற சுருதியில் ஏவகாரமும், நத்விதீயமு மிருத்தல் போல “ ஏகோஹவை நாராயண ஆஸீத் ” என்பதிலில்லாமையானும் இது பரத்துவ நிரூபணத்திற்குச் சாதகமாகாது. நாராயணனைத் ‘ துரீயம் ’ ‘ துரீயாதீதம் ’ எனுங் கிளவிகளுஞ் சீவான்மாவுக்குரிய பஞ்சாவஸ்தையின்கண் ணடங்கும். நாராயணனைச் ‘ சச்சிதாநந்தம் ’ எனுங்கிளவியுஞ் சீவான்ம சத்தத்திலேயே அடங்கும். என்னை ? சத்து, சித்து, ஆநந்தமெனு மூன்றுதன்மையும் அவ்வான்மாவுக்குமுண்மையின். ‘ ஜ்யோதிஸ்வப்ரகாசமயம் ’ சீவனுக்குமுண்டென்பதற்காயபிரமாணம் இந்நூலின் உகஉ - ம் பக்கத்தில் வந்துளது. சிவத்தியானத்திற் சீவனுக்கு ‘ நிரஞ்சன ’த் தன்மையுமுண்டு. ‘ புருஷ ’ சத்தம் விஷ்ணுகாயத்திரியில் இல்லாமை முதலிய காரணங்களால், யஜுர்வேதத்தில் உச - மந்திரங்கொண்டதும், “ உதாம்ருதத்வஸ் யேசாந: ” என்பதோடுள்ளதுமான புருஷஸூக்தம்— விஷ்ணுபரத்துவ போதகத்ததன்று ; சிவபரத்துவ போதகத்ததென்பதை ஸ்ரீநிவாஸதீக்ஷிதீயமெனும் புருடசூக்தபாஷியத்திற் பெறுக.

" நாராயணும்சை ஃ ரஜோகுணப்ரதானை ரேகைக ஸ்ருஷ்டி கர்த்ருபி ரதிஷ்டிதாநி | விஷ்ணுமஹேச்வராக்யைர் நாராயணும்சைஸ் ஸத்வதமோ குணப்ரதானைரேகைக ஸ்திதி ஸம்ஹார கர்த்ருபிரதிஷ்டிதாநி | "

எனும் வசனங்கட்கு யாதானுமோர் பொருளே அடி நடு முடியெனும் பாகுபாடாக விருத்தல்போல நாராயணனும் ரஜோகுணம், ஸத்வகுணம், தமோகுணமெனும் மூன்றமிசமாகவுளனெனப் பொருள்கொள்ளுமிடத்தும் நாராயணன் நான்காவது தெய்வமெனலேற்படாது. முக்குணங்கட்கும்வேறு*காத பிரகிருதிமாயை நாராயணனெனு நியாயத்தால் இவ்வாறு கூறப்படும் அமிசம் மாயையின் கூறேயாகலின் இது பரத்துவசாதகமாகாது. ஆக வேண்டுமேல், நாராயணநாமம் அத்வைத சப்தத்தோடுங்கூடிய சதுர்த்தத்தில் வியக்தப்பொருள் போதரப் படிக்கப்படல்வேண்டும். அத்திறவாக்கியம் சுருதியில் யாண்டுமின்று. விஷ்ணுவைச் சிவனென்று பல்லாற்றானும் இழித்துக்கூறுஞ்சுருதி அப்படிப்படிக்கவு நியாயமின்று. சிருட்டி திதி சங்காரங்கள் பஞ்சக்கிருத்திய நியமனகருத்தாவான சிவனுடையதொழில்களென்பது சுருதியின் றீர்வையென இந்நூலின் ௧௬௯ - ம் பக்கத்திற் பகர்ந்துள்ளாம். ௨௦௧ - ம் பக்கத்திற்கூறியுள்ள பரத்துவ நியாயத்தையும் இங்கே கருதிக்கொள்க. விஷ்ணுவை விதந்துகூறிய இன்னுஞ்சில வசனங்கட்குரியபொருள் நாலாயிரப்பிரபந்தவிசாரத்திற் காண்க. பிரமனது நெற்றியிற் றோன்றினவன் குணருத்ரனென்னுது மஹாருத்ரனென்றக்கால் அது, கூறிப்போந்த சரபோபநிஷத்திற்கும்,

"யோதேவாநாம்ப்ரபவச்சோத்பவச்சவிச்வாதிகோருத்ரோமஹர்ஷிஃ |
ஹிரண்யகர்ப்பஞ்ஜநயமாஸபூர்வக்ஸனோபுத்யாசுபயாஸம்யுநக்து||"

எனுஞ் சுவேதாச்வதரோபநிஷத்திற்கும், இவ்வாக்கியத்தைத் தொடர்ந்த வாக்கியங்களைத் தரும் தைத்திரீயாருணசாகை நாராயணத்திற்கும், பிறவற்றிற்கும் விரோதமாமெனமறுக்க. 'வைஷ்ணவபுராணங்களில் எவ்வுருத்திரர் அபகர்ஷமாகக் காணப்படுகின்றனரோ அவ்வுருத்திரர் இத்துரிய சிவனுரது விபூதியாவர்' எனும் பொருடாத்தக்க—

([illegible] |
[illegible]||)

" வைஷ்ணவேஷுபுராணேஷு யோபகர்ஷஸ்துத்ருச்யதே |
ருத்ரஸ்யாஸௌஹரஸ்யாஸ்ய விபூதிரேவகேவலம்|| "

எனும் பராசரபுராணச் சுலோகமும் ஈண்டுக் கருதத்தக்கது. விபூதியென்றது சிவவுரு நாமாதிகளை. மேயோந்த சுருதி வாக்கியார்த்தம்:—"விசுவாதிகனும் மஹாரிஷியுந் தேவர்க்கெல்லாம் உற்பத்தித்தானமானவனும் ஆதியிற் பிரமனாகிய இரணியகருப்பனை யுண்டுசெய்தவனுமான உருத்திரன் நமக்கு நல்லறிவை யூட்டுவானாக." எனவாம். தேவர் ௩௩ - கோடி யென்பதிலடங்கிய ௧௧ - கோடி யுருத்திரர்களைச் சிருஷ்டித்த ஏகாதசருத்ரரும் பிரமனது நெற்றியிற் றோன்றினரென்று மஹா ஸ்காந்தத்தின் ஆசுரகாண்டத்து ௭ - ம் அத்தியாயமியம்பும். பிரம விட்டுணு உருத்திரரெனு மூவரும் முறையே சிவனது வலம், இடம், இதயமெனு மிடங்களினுதித்தனரென்னும் வாயுசங்கிதையின் உ௭ - ம் அத்தியாயம்.

(ஸஸஷஹமவாநீஶ ஸர்வதத்வாதிரவ்யய: ।
ஸர்வதத்வவிதாநஜ்ஞ: ப்ரதாநபுருஷேச்வர: ॥
யோஸ்ருஜத்தக்ஷிணாதங்காத் ப்ரஹ்மாணம்லோகஸம்பவம் ।
வாமபார்ச்வாத்ததாவிஷ்ணும் லோகரக்ஷார்த்தமீச்வர: ॥)

"ஸஏஷபகவாநீசஸ் ஸர்வதத்வாதிரவ்யய: |
ஸர்வதத்வவிதாநஜ்ஞ: ப்ரதாநபுருஷேச்வர: ||
யோஸ்ருஜத்தக்ஷிணாதங்காத் ப்ரஹ்மாணம்லோகஸம்பவம்
வாமபார்ச்வாத்ததாவிஷ்ணும் லோகரக்ஷார்த்தமீச்வர: ||"

என்னும் மஹாபாரத அநுசாஸநிகபர்வம். பொருள் :— 'இந்தப் பகவானாகிய ஈசன் சகல தத்துவங்களுக்கும் ஆதியும், அந்தமிலானும், சகல தத்துவங்களையும் உண்டுபண்ணை வறிந்தவனும், பாசபசுக்களுக்கு ஈச்வரனுமாக வுள்ளான். அவனே உலகங்களைப் படைக்கும்பொருட்டுப் பிரமனைத் தனது வலப்பக்கத்திலும், உலகங்களைக் காக்கும்பொருட்டு விட்டுணுவைத் தனது இடப்பக்கத்திலுந் தோற்றுவித்தனன்.' எனவாம். பிரமன் பிறக்குமுன்னேயே சிவனிருக்கின்றனனென்று மங்கையாழ்வானு மொப்பிய செய்தி இந்நூலின் ௮௧ - ம் பக்கத்தில் வந்துளது.

(நதஸ்யகச்சித்பதிரஸ்திலோகே நசேசிதாநைவசதஸ்யலிங்கம் ।
ஸகாரணம்கரணாதிபாதிபோ நசாஸ்யகச்சிஜ்ஜநிதா நசாதிப: ॥)

"நதஸ்யகச்சித்பதிரஸ்திலோகே நசேசிதாநைவசதஸ்யலிங்கம் |
ஸகாரணம்கரணாதிபாதிபோ நசாஸ்யகச்சிஜ்ஜநிதா நசாதிப: ||"

எனும் (பஞ்சருத்ரோபநிஷத்தி லொன்றான) சுவேதாச்வத ரோபநிஷத் வசனம்—"அவ்வுருத்திரனுக்கு மேலான பதியுமில்லை: இரக்ஷகனுமில்லை: உற்பத்தித்தானமுமில்லை: அவனே காரணன்: அவனே காரணாதிபதிகட்கு மதிபன்: அவனைப் பிறப்பிக்கின்றவனும், அவனுக்கதிபனுமில்லை.' எனும்பொருளைத் தருதலிற் பிரமனுடைய புத்திரன் சிவன், விட்டுணுவினுடைய பௌத்திரன் சிவனெனும் பாடண்டவுரைகள் நெருப்பில்வீழு நீர்த்துளிபோலாகும். சிவன் பிறவா னிறவானெனுஞ் சைவஸமயோத்தாரணர்களுடைய அமுதவுரை யெல்லாம் இந்தப் பிரபலப்பிரமாணமாக வமைதலையும் ஈண்டுக் கருதிக்கொள்க.

சங்காரத்திற்குப் பின்னுண்டாகுஞ் சிருட்டியுந் திதியும் அச்சங்காரத்தி லொடுங்குமென்று முன்னுதாஹரிக்கப்பட்ட பைங்களோபநிஷதார்த்தம்— சருவசங்காரஞ்செய்த மஹாருத்ரனே பெயர்த்துஞ் சிருட்டி திதிகளைச் செய்கின்றனனெனுஞ் சரபோபநிஷத்தினும் பெறப்படுவதாயிற்று. இவ்வுபநிஷத்தில் விஷ்ணுவாற் றேடப்பட்டன சிவபெருமான் றிருவடித்தாமரைகளெனவும், பிற தேவர்களோடு விஷ்ணுவுஞ் சிவனை வணங்கினனெனவும், பெறப்பட்ட பொருள்கள் ருக்வேதஸம்ஹிதையில்—

"விஷ்ணு வராஹமாகிப் பூமியைக்கிழித்துச் செல்லுங்கால் ஆயிரவருடங்களாயின: சிவனுடைய பாதங்களைத் தேடுவதில் அவாவுடைய விஷ்ணு நீயே தாய், நீயே தந்தை, நீயே யுடன்பிறந்தார், நீயே மூத்தோர், நீயே யுயர்ந்தோரென்று துதித்தனன்"

என நன்கு பெறப்படும். இதற்குரிய வடமொழியை நாலாயிரப்பிரபந்தவிசாரத்து ௬-ம் அதிகாரத்தில் "விஷ்ணுர்வேவாராஹம் ரூபமாஸ்தாய பூமிர்விதாரயந் ஸஹஸ்ரம்ஸமாஆசந் | பாதாந்வேஷணபரோபூத்வா |" என்றுகூறிச் செல்லுமிடத்திற் காண்க. இச்செய்தியைத் தமிழ்வேதத்தில் ஸ்ரீஞானசம்பந்தப்பெருமான் கூ-ந் திருப்பாட்டுத்தோறும் அருளிச்செய்த திறம்—

"அன்னந்தாவுமணியார்பொழின்மணியார்புன்னை
பொன்னந்தாதுசொரிபாதிரிப்புலியூர்தனுள்
முன்னந்தாவியடிமூன்றளந்தவன் நான்முகன்
தன்னந்தாளுற்றுணராததோர்தவநீதியே."

"வண்ணமாமலரயன்மாலவன்காண்கிலா
அண்ணலார்காளத்தியாங்கணைந்துய்மினே"

என்பவற்றானும்; ஸ்ரீமணிவாசகப்பெருமானருளிச்செய்ததிறம்—

"பிரம னரியென் றிருவருந்தம் பேதைமையாற்
பரம மியாம்பரம மென்றவர்கள் பதைப்பொடுங்க
வரனா ரழலுருவா யங்கே யளவிறந்து
பரமாகி நின்றவா தோணோக்க மாடாமோ."

"போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்
றடிமுடி யறியு மாதர வதனிற்
கடுமுர ணேன மாகி முன்கலந்
தேழ்தல முருவ விடந்துபின் னெய்த்து"

என்பவற்றானு மறியலாம். அற்றாகலினன்றே சிவன்பெயரில் "மாலயற் கரியோ னாதனெண் டோளன்" என்று அனைவர்க்கும் பொதுவான நிகண்டு - பிங்கலந்தையுங் கூறிற்று. இங்ஙனம் இராமாநுஜ மதத்தின் முற்பட்ட வைணவம், இரணியகருப்பமெனு மிரண்டுங் கண்டிக்கப்பட்டபடியுங் காண்க. இவ்வுண்மை யுணரமாட்டாமே தேவார திருவாசகங்களில் வைணவங் கண்டிக்கப் படவில்லை யென்பதூஉம், திருவண்ணாமலைக்குச் 'சுதரிசனகிரி' யெனும் பெயரமைத்துச் சுதரிசனகிரிபுராணமென வொருதூதச் சுவடியெழுதிச் சிவன் பாதத்தை விஷ்ணு தேடினதாகக் கூறுந் தேவார திருவாசகங்கள் அப்ரமாணமெனத் தெந்தினம் பாடுவதூஉம்,

"ஓரேனந்தனைத்தேடவொளித்தருளுமிருபாதத்தொருவனந்தப்
போரேனந்தனைத்தேடிக்கணங்களுடன்புறப்பட்டான்புனங்களெல்லாஞ்
சீரேனல்விளைகிரிக்குத்தேவதையாங்குழவியையுஞ்செங்கையேந்திப்
பாரேனையுலகனைத்தும்பணிவுடனேபுகழ்ந்திடத்தன்பதிபின்வந்தாள்."

எனும் வில்லிபுத்தூராழ்வார்பாரதச் செய்யுளை நோக்காது நொடிப்பதூஉம்,

"பங்கய மாயிரம் பூவினிலோர் பூக்குறையத்
தங்க ணிடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே
சங்கர னெம்பிரான் சக்கரமாற் கருளியவா
றெங்கும் பரவிநாந் தோணோக்க மாடாமோ."

எனுந் திருவாசகச்செய்தி அப்ரமாண ஸ்காந்தபுராணத்த தென்பதூஉம் வேதந்தெரியா விழலர்கூற் றாதலறிக. 'முன்னந்தா வியடி மூன்றளந்தவன்' என மேலெடுத்துக்காட்டப்பட்ட தேவார

வாக்கியங்கள்—சிவபாதத்தைத் தேடியறியா திடைந்த விட்டுணு, மாவலியிடத்தில் மூன்றடிமண் ணிரந்தேற்று உலகளந்த வியாபகம் அந்தச் சிவபெருமானின் றிருவடியளவாகவுமில்லை யெனும் உண்மையை யறிவித்து நிற்குமாறு மறிக. இந்நியாயத்தாலன்றே மஹா ஸ்காந்தபுராண சம்பவகாண்டத்து ௬௧-ம் அத்தியாயத்து ௨௦-ஞ் சுலோகத்தில்—

"பின்பு பிரம விஷ்ணு முதலிய சர்வதேவோத்தமரும் கந்தஸ்வாமியாகிய அந்தப் பரமாத்மாவின் அளவற்ற தேஜஸில் ஆயிரத்தில் ஓரம்சம் மட்டு மறிந்தனர்."

என்பது பரமேச்வரகுமாரனது பாரமேச்வர ரூபார்த்தமாகப் பெறப்படுவதாயிற்று. மேலைச் சரபோபநிஷத்தில் வெளிப்பட்ட மன்மததகனம்—வைணவர்பாகவத தசமஸ்கந்தத்து ருரு-ம அத்தியாயத்திற் சிவனார் நெற்றிவிழி நெருப்பால் மன்மதனெரிந்தான்: அவனே ருக்மிணிதேவி வயிற்றிற் பிரத்யும்நனைகப் பிறந்தானெனவும், தே-குருபரம்பரை ப-கரு-ல் "இவரை அநங்கனைப்போலே யாக்கக் கடவேனென்று" சிவனார் வெகுண்டாரெனவு மெழுதிக் கொண்டவழியானும்; வில்லிபுத்தூராழ்வார்பாரதத்துப் பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்தில் "எண்ணுடைக் காமனையெரித்த பேரழற்—கண்ணுடைக் கடவுளே" என்று கிருஷ்ணன்செய்த துதியுரைகள் காணப்படுமாற்றானும் வைணவரொப்புக்கோடலுமோர்க. விட்டுணுவின்மகனாகிய இம்மன்மதன்றான் விட்டுணு வியூகமூர்த்திகளிலொருவனான பிரத்யும்நன். இவனிழந்த வுருவையும், இவனுக்கு மூத்தோனான பிரமனிழந்த சிரசையும் அன்றுதொட் டின்றுகாறு முண்டுசெயும் ஊற்றம் விட்டுணு முதலிய தேவர்கட்கின்மையால் அத்தேவர்கள் முதற்கடவுளாகாரென்றல் திறம்பாத் தீர்வையாம். ஸ்ரீதாயுமானாரும்—இந்தப் பிரமசிரச்சேதத்தையும், சிவனது திருவடியில் விட்டுணுவின் விழி யர்ச்சிக்கப்பட்டதையும் "வெண்டலை [illegible]கை காலில் விளங்கிட நின்றான் யாவன்" என்பதனை லெடுத்துக்காட்டிச் சிவபாரம்யத்தை விளக்கியுள்ளார். பிரமாணம் சரபோபநிஷதமும், பிறவுமாம். இதுநிற்க. பஸ்மஜாபாலோபநிஷதம்—

(ஸ்ரீம்மாதவிணம் ஓாமீஸம்வஸ்ஜ) ஷிஷயஷிெயாமிந ஷீஷாஷீ ஷீம்மசாயஜஷி யஜாஶெராஓாஒெவஷாவஷி வெஷாஷாம்ஹாஷெவநிஷெ ஷெஷ்கிஷாவாரமஓதாந) உஷஒெவஸவசூ ஓபீஸவசூவூ கிஷிகம

மகாமகோபாத்யாய, டாக்டர்

[illegible]

"லிங்கரூபிணம் மாக்ஸம்பூஜ்ய சிந்தயந்தியோகினஸ் ஸித்தாஸ் ஸித்திம் கதாயஜந்தி யஜ்வானோமாமேவஸ்துவந்தி வேதாஸ்ஸாங்காஸ் ஸோபநிஷதஸ் ஸேதிஹாஸாநமத்தோந்யதஹமேவஸர்வம் மயிஸர்வம்ப்ரதிஷ்டிதம் ததஸ்காச் யாம் ப்ரயதைரேவாஹமஹர்நிசம் பூஜ்யஸ் தத்ரகணாரௌத்ராநநா நாநாமுகா நாநா சஸ்த்ரதாரிணோ நாநாரூபதரா நாநாசிஹ்நிதாஸ்தே ஸர்வே பஸ்மதிக் தாங்கா ருத்ராக்ஷாபரணாஃ க்ருதாஞ்ஜலயோநித்யமபித்யாயந்தி | தத்ரபூர்வஸ் யாந்திசி ப்ரஹ்மாக்ருதாஞ்ஜலிரஹர்நிசம் மாமுபாஸ்தே | தக்ஷிணஸ்யாந்திசி விஷ்ணுஃ க்ருத்வைவ மூர்த்தாஞ்ஜலிம் மாமுபாஸ்தே | ப்ரதீச்யாமிந்த்ரஸ் ஸந்ததாங்க உபாஸ்தே |........முக்திமண்டபஸம்ஜ்ஞிதம் தத்ராநேககணாஃ பாலகாஸ் ஸாயுதாஃ பாபகாதகாஸ் தத்ர ருஷயச்சாம்பவாஃ பாசுபதா மஹா சைவா வேதாவதக்ஸம்சைவம்பஞ்சாக்ஷரம் ஜபந்தஸ்தாரகக்ஸப்ரணவம் மோதமாநாஸ்திஷ்டந்தி"

என்று கூறுகின்றது. அருத்தம்:—'இலிங்கவடிவாகிய என்னை நனிபூஜித்து யோகிகளுஞ் சித்தர்களுஞ் சிந்திக்கின்றார்கள் : சித்தியை யடைகின்றார்கள் : தீக்ஷிதர்களு மென்னையே யஜனஞ்செய்கின்றார்கள் : சாங்கங்களான வேதங்களும், உபநிஷதங்களும், இதிகாசத்துடன் என்னையே துதிக்கின்றன : எனக்குவேறாக யாதொன்றுமின்று நானேயாவுமாயுள்ளேன் : என்னிடத்திலேயே யாவுமிருக்கின்றன: அதனாற் காசியில் மரணவிருப்புள்ளோர்க்கு இரவும்பகலும் பூஜிக்க நானே யுரியவனானேன் : அவ்விடத்திற் பயங்கரமான முகங்க ளுள்ள கணங்கள் பலவகைப்பட்ட முகங்களுள்ளனவாகவும், பலவகைப்பட்ட ஆயுதங்களைத் தாங்கினவைகளாகவும், பல்பேத வுருவங்களைத் தாங்கினவைகளாகவும், பலதிறவடையாளங்க ளுள்

ளனவாகவு மிருக்கின்றன: அவையெல்லாம் விபூதிதாரணமுடை யனவும், உருத்திராக்ஷாபரணமுடையனவும், கூப்பிய கரங்களுடை யனவுமாகி நாளும் அபித்தியானஞ்செய்துகொண் டிருக்கின்றன: அங்கே பூர்வதிசையிற் பிரமன் அஞ்சலியஸ்தனுகி இரவும்பகலு மென்னையுபாஸித்துக்கொண் டிருக்கின்றனன்: தக்ஷிணதிசையில் விஷ்ணு தலையிற்கூப்பிய கைகளுடையனுகி என்னையுபாஸித்துக் கொண்டிருக்கின்றனன்: மேற்றிசையில் இந்திரன் வணக்கத்துட னுபாஸித்துக்கொண்டிருக்கின்றனன்: அங்குள்ள முக்திமண்டபத் தில் ஆயுதமுள்ள அனேக கணங்கள் காப்புத்தொழிலுடையன வாகவும், பாபிகளைப் பற்றுவனவாகவு மிருக்கின்றன: அவ்விடத் தில் இருடிகளும், சாம்பவர்களும், பாசுபதர்களும், மஹா சைவர்க ளும் வேதோக்தமான சைவபஞ்சாக்ஷரத்தைத் தாரகமாகப் பிர ணவத்தோடு ஜபித்துக்கொண்டு சந்தோஷமாக வசிக்கின்றனவெ ன்று சிவனார் திருவாய்மலர்ந் தருளினர்.'

எனவாம். இச் சுருதிவாயிலாகவுஞ் சைவத்தின் பெருமையும் வைணவத்தின் சிறுமையும் வெளிப்பட்டன. காசிவிஷய மிவ்வா றிருப்ப, "ராம மந்த்ரத்தைக் காசியில் விருஷபத்துவஜனுகிய சிவன் ஆயிரமநுவந்தரம் ஜபித்து ஜபஹோமாதிகளால் அர்ச்சிக்க, இரா மன் பிரசன்னமாகிச் சங்கரனைப் பார்த்து, உனக்கு வேண்டியவற் றைக்கேள் தருகின்றே னென்றனன்" எனும்பொருள் ராமதாபிந் யுபநிஷத்திற் காணப்படுதலானே இராம மந்திரத்திற்குரிய தசரத குமாரன் சிவனுக்குத் தெய்வமாவனென்று ஏழைவைணவ ரியம்பு கின்றனர். மநுவந்தரமென்பது தேவமானத்தில் எக - மஹாயுகமா மென்று விஷ்ணுபுராணமே விளம்பும். சென்ற துவாபரயுகத்திற்கு முற்பட்ட திரேதாயுகமே அந்த இராமனது காலமாகலின், அக் காலமுத லிக்காலம்வரையும் ஒரு மநுவந்தரத்திற்கு மிடமின்மை யானும், இந்தராமனுக்கு முன்னேயே பரசுராமனென வொருவன் பிறந்திருக்கின்றமையானும் தசரதராமன் பெயர் அம்மந்திரமென் றல் பொருந்தாது. மற்றென்னைகொலெனின்,— நான்காவது தெய் வம் சிவமென்கின்ற இவ்வுபநிஷத்தும், மற்றை கoஎ - உபநிஷத் துக்களும் பிரமாணமென்று அனுமனுக்கு அவ்விராமனே யோதிய செய்தி முக்திகோபநிஷத்திற் காணப்படுமாற்றுனே அது சிவஈம மேயென்பதும், அதனைச் செபித்தவன் அணுருத்ரனே யென்ப தும், அம்மந்திர தெய்வமாகிய சிவபெருமான் சில முனிவரகத்தி

விருந்து "நானே பிரமம்" என்றதுபோலத் தன்னடியானாகிய தசரதராமனிடத்து மிருந்து மேல்விளக்கியவாறு விளம்பினனென் பதும், இவ்விராமன் ஆங்குற்ற காலங்காறும் அவ்வுருத்திரன் ஜப ஓமாதிகளிழைத்த காலம் ௧000-மநுவந்தரமாயிற் றென்பதுமே பொருந்தும். அந்த ராமசப்தத்தைச் சிவபரமாக நிச்சயித்தற்கு— 'எங்ஙனே யோகிகள் ரமிக்கின்றார்களோ அதுவாயிருப்போன் ராமன்' எனும் பொருளைத் தரத்தக்க (𑌰𑌾𑌮𑍋 𑌰𑌮𑌂𑌤𑍇 𑌯𑌤𑍍𑌰 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃) "ராமோரமந்தேயத்ரயோகிநஃ" எனும் ராமரஹஸ்யோப நிஷத் வசனமும், இராமன் மஹாதேவப்பிரசாதமுள னென்பதை விளக்குவதாய் இந்நூலின் ௨.௨௧-ம் பக்கத்திற் காட்டலுற்றதா யுள்ள ராமாயண வசனமுமுளவே. இந்த ராமசப்தமானது இரா மாநுஜ மதத்தினர்க்கு முக்கியமான "*ரஹஸ்யத்ரயம்" என்பதிற் சேர்ந்ததன்று. இதனைப் பெரிய தாரகமந்திரமென்று அவர் கூற முயலல் அவர்க்கே யிழிவை யுண்டுபண்ணும். கைலாயகிரியைத் தூக்கிக்கொடுபோக முயன்றனோன்று அதன்மீது ஊன்றலுற்ற சிவனது திருவடிவிர லொன்றி னழுத்துதலாற் றன்னுடைய தோ ள்கள் நெரிதலினாலும் வேதனை பொறானப் பத்துவாயாலுங் கதறியழுத இராவணனையே இராமன் பெருமுயற்சிசெய்து கொன் றனனென்கின்ற இராமாயணமும் பல்லாற்றானும் அவர்க்கிழிவை நல்கு நூலேயாம். இச்செய்தி—

> "மாலொடும்பொருதிறல்வாளரக்கன்னெரிந்
> தோலிடும்படிவிரலொன்றுவைத்தானிடங்
> காலொடுங்கனகமூக்குடன்வரக்கயல்வரால்
> சேலொடும்பாய்வயற்றென்குடித்திட்டையே."

எனத் திருஞானசம்பந்தசுவாமிகள் திருவாக்கானு முணர்த்தப் படுவதாயிற்று. இராவணனைக் கொன்றதும் உருத்திராமிசமேயென் பது இந்நூலின் ௨0௫-ம் பக்கத்தில் வந்துளது.

"ஓ நல்விரதமுடையோனே! எனக்கும் விஷ்ணுவுக்கும் மிக்க மோஹத்தையுண்டுபண்ணும் மாயை—அம் மஹாதேவனுடைய பா தாரவிந்தத்தியானத்தினால் எளிதாகக் கடக்கப்படுவதாம்" என்று பிரமதேவன் கூறியசெய்தி—

* விவரம் ௩௩-ம் பக்கத்துளது.

([illegible] ।
[illegible] ॥)

“ அதிமோஹகரீமாயாமமவிஷ்ணோச்சஸுவ்ரத ।
தஸ்யபாதாம்புஜத்யாநாத்துஸ்தராஸுதராபவேத் ॥ ”

எனுஞ் சரபோபநிஷதவசனத்திற் பெறப்படுதலானும், விஷ்ணுவி னவதாரமூர்த்தியாகிய இராமன் சிவபெருமானுக்குத் தெய்வமாவனென்பது குத்ருஷ்டிகூற்று மென்க. இந்நூலின் பக்கங்களசு-ல் “நாராயணன் மாயோபாதிகன்” என்றதையும், கஅஉ-ல் நாராயணன் பிரமஞானிகளை வணங்குநனாயினன் என்றதையும், கஅக-ல் “மோக்ஷப்ரஸாதங்கொடுக்குந் தகைமையில்லாத ஸம்ஸாரிகளான தேவர்களிலொருவனே விஷ்ணு” என்றதையும் இச்சுருதி வலியுறுத்துவதுமாயிற்று. இங்ஙனம் வைணவத்திற்கும் உயிருண்டோ! உய்த்துணர்க. இன்னும் அவ்விராமாவதார மூலனை விஷ்ணுமூர்த்தி— இந்திராதி தேவர்களோடு குருக்ஷேத்திரத்திற் செய்த யாகபலனைத் தானே கிரகித்தமை நோக்கித் தன்னோடு போர்தொடுத்த அத்தேவர்களை வில்லுமம்புங்கொண்டு வென்று செருக்கி அவ்வில்லிற் றனது கழுத்தைப் பொருந்தவைத்துச் சோகித்துநிற்றலை யுணர்ந்த இந்திரன், சிவனதருளாற் செல்லுருக்கொண்டு அந்நாணறத் தின்ற ஞான்று விண்ணிமிர்ந்த விசையிற் றனது தலையறப்புண் டுயிர்துறந்து, பின்னர்ச் சிவ வரப்பிரசாதமுடைய மருத்துக்களா லுடல்பொருந்தி யெழுந்த கேசவனேயாயினன். அவ்விதகாரிய முஞற்றியதற்காகவே அம் மருத்து தேவதைகட்கும் வேள்வியில் அவிப்பாகம் ஏற்பட்டுளது. இதனை—

“ எம்புடை வரம்பெறு மிரும ருத்துவ
வும்பரி னவன்றலை யொன்றிக் கூடுக
நம்புமிவ் விருவரு நந்த மாணையாற்
பம்பிய வேள்வியிற் பாக மெய்துக.”

என மஹா ஸ்காந்தபுராண ஸநத்குமாரஸம்ஹிதையின் காளிகாகண்டத்துக் காஞ்சிப்புராணத்திற் சிவனருளுரையாக வருதலி னறிக. இவ் வுபப்ரம்ஹணத்திற்குரிய சுருதி சதபதப்ராஹ்மணமே. இதனை, இந்நூலினீற்றிற் சேர்க்கப்படு (Professor. F. Max Muller) புரோவசர் எப். மாக்ஸ் முல்லரது ஆங்கில மொழிபெயர்ப்பி னறிக. முக்திகோபநிஷதம்— ஸ்ரீராமதாரகத்தைக்

காசியில் மரணமடையும் ஜந்துக்களின் வலச்செவியி லுபதேசிப்பவன் (ஸ்ரீஹரி) மஹேச்வரனென்றபடி செய்வோனும் அவ்வணு ருத்ரனேயாவனெனல் இயைபு. இத்தாரகம் தாழ்ந்த பக்குவான்மாக்களுக்கே யுபதேசிக்கப்படும். உயர்ந்த பக்குவான்மாக்களுக்குச் சிவபஞ்சாக்ஷரதாரகம், ஓங்காரதாரக மென்பன வுபதேசிக்கப் படும். ராமதாரகவிஷயத் தின்னுமுள்ள நியாயங்களை நாலாயிரப் பிரபந்தவிசாரத்தி னறிக. "மஹாதேவாய மஹாருத்ராய" எனும் பஞ்சப்ரஹ்மோபநிஷதம்—

(𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌤𑍍𑌰𑌿𑌤𑌯𑌾𑌤𑍀𑌤𑌂 𑌤𑍁𑌰𑍀𑌯𑌂𑌸𑌤𑍍𑌯𑌚𑌿𑌤𑍍𑌸𑍁𑌖𑌮𑍍 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌷𑍍𑌣𑍍𑌵𑌾𑌦𑌿𑌭𑌿𑌸𑍍𑌸𑍇𑌵𑍍𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂𑌜𑌨𑌕𑌂𑌪𑌰𑌮𑍍 ।
𑌈𑌶𑌾𑌨𑌂𑌪𑌰𑌮𑌂𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑍇𑌰𑌕𑌂𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌣𑌂 ।
𑌆𑌕𑌾𑌶𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌓𑌂𑌕𑌾𑌰𑌸𑍍𑌵𑌰𑌭𑍂𑌷𑌿𑌤𑌂 ।
𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌵𑌮𑌯𑌂𑌶𑌾𑌨𑍍𑌤𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌤𑍀𑌤𑌂𑌸𑍍𑌵𑌰𑌾𑌦𑍍𑌬𑌹𑌿𑌃 ।
𑌅𑌕𑌾𑌰𑌾𑌦𑌿𑌸𑍍𑌵𑌰𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 𑌆𑌕𑌾𑌶𑌮𑌯𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 ।
𑌪𑌞𑍍𑌚𑌕𑍃𑌤𑍍𑌯𑌨𑌿𑌯𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 𑌪𑌞𑍍𑌚𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌕𑌂𑌬𑍃𑌹𑌤𑍍
𑌪𑌞𑍍𑌚𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌪𑌸𑌂𑌹𑌾𑌰𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌿𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌂
𑌸𑍍𑌵𑌮𑌾𑌯𑌾𑌵𑍈𑌭𑌵𑌾𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌸𑌂𑌹𑍃𑌤𑍍𑌯𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ।
𑌪𑌞𑍍𑌚𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌤𑍀𑌤𑍋 𑌭𑌾𑌸𑌤𑍇𑌸𑍍𑌵𑌸𑍍𑌵𑌤𑍇𑌜𑌸𑌾 ।
𑌆𑌦𑌾𑌵𑌨𑍍𑌤𑍇𑌚𑌮𑌧𑍍𑌯𑍇𑌚 𑌭𑌾𑌸𑌤𑍇𑌨𑌾𑌨𑍍𑌯𑌹𑍇𑌤𑍁𑌨𑌾 ।
𑌮𑌾𑌯𑌯𑌾𑌮𑍋𑌹𑌿𑌤𑌾𑌶𑍍𑌶𑌮𑍍𑌭𑍋𑌰𑍍𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌂𑌜𑌗𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌂 ।
𑌨𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿𑌸𑍁𑌰𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌰𑌣𑌕𑌾𑌰𑌣𑌂॥)

"அவஸ்தாத்ரிதயாதீதம் துரீயம்ஸத்யசித்ஸுகம் |
ப்ரஹ்மவிஷ்ண்வாதிபிஸ்ஸேவ்யக் ஸர்வேஷாம்ஜநகம்பரம் |
ஈசாநம்பரமம்வித்யாத் ப்ரேகரம்புத்திஸாக்ஷிணம் |
ஆகாசாத்மகமவ்யக்த மோங்காரஸ்வரபூஷிதம் |
ஸர்வதேவமயக்சாந்தக் சாந்த்யாதீதக்ஸ்வராத்பஹி: |
அகாராதிஸ்வராத்யக்ஷ மாகாசமயவிக்ரஹம் |
பஞ்சக்ருத்யநியந்தாரம் பஞ்சப்ரஹ்மாத்மகம்ப்ருஹத் |
பஞ்சப்ரஹ்மோபஸம்ஹாரம் க்ருத்வாஸ்வாத்மநிஸக்ஸ்திதம் |
ஸ்வமாயாவைபவாந்ஸர்வாந் ஸம்ஹ்ருத்யஸ்வாத்மநிஸ்தித: |
பஞ்சப்ரஹ்மாத்மகாதீதோ பாஸதேஸ்வஸ்வதேஜஸா |
ஆதாவந்தேசமத்யேச பாஸதேநாந்யஹேதுநா |

மாயயாமோஹிதச்சம்போர் மஹாதேவம்ஜகத்குரும் |
நஜாநந்திஸுராஸ்ஸர்வே ஸர்வகாரணகாரணம் ||"

என்று கூறுகின்றது. அருத்தம் :—'ஜாக்ராதி மூன்றவஸ்தைகடக்கதீதரும், துரீயரும், சச்சிதானந்தமாயுள்ளவரும், பிரமவிஷ்ணுமுதலியோராற் சேவிக்கப்படுவோரும், யாவர்க்கும் ஜநகரும், நடத்துகின்றவரும், புத்திகளுக்குச் சாக்ஷியாயுள்ளவரும், பரமருமானஈசானரையறியவேண்டும். ஆகாச ஸ்வரூபரும், அவ்யக்தரும், ஓங்காரஸ்வரூபரும், உதாத்தாதி ஸ்வரத்தாற் பூஷிக்கப்பட்டவரும், ஸர்வதேவமயரும், சாந்தரும், சாந்தியாதீதரும், ஸ்வரத்திற்குவெளியில் அகாராதி ஸ்வரங்களுக்கதிபரும், ஆகாசமயமான தேஹமுள்ளவரும், சிருட்டி முதலிய பஞ்சக்கிருத்திய நியமனகர்த்தரும், பஞ்சப்ரஹ்மஸ்வரூபரும், பெரியவுருவுள்ளவரும், பஞ்சப்ரஹ்மரூபமாகும் பிரமன்முதலிய பஞ்சகர்த்தாக்களையுந் தம்மிடத்தில் உபசங்காரஞ்செய்து ஸ்திரமாகவிருப்போரும், தமதுமாயையின் வைபவத்தால் யாவையுஞ் சங்கரித்துத் தாமே பிரகாசித்துக்கொண்டிருப்போரும், பிரஹ்மஸ்வரூப பஞ்சமூர்த்திகளுக்கு அதீதருமான அந்தப்பரமேசுரர் தமது ஸ்வதேஜஸினால் விளங்கிக்கொண்டிருக்கின்றனர். அவர் ஆதியிலும் அந்தத்திலும் மத்தியிலும் அன்னிய காரணத்தினால் விளங்குபவரல்லர். தேவர்யாவரும் சம்புவின் மாயையான் மோஹமுற்றுச் சகத்குருவுஞ் சர்வகாரண காரணருமான மஹாதேவரை யறியாராயினர்.'

எனவாம். இவ்வுபநிஷத்தும் வைணவத்தின் மண்டைபிளக்கமர்த்தனஞ்செய்வதாகவே யுளது. இதனிற் சிவனார் அருவுருவெல்லாம் வெளிப்பட்டன. வெளிப்பட்ட உபசங்காரத்தி லடங்குகின்ற பஞ்சகர்த்தாக்களைப் பிரமன், விஷ்ணு, அணுருத்ரன் அணுமஹேசன், அணுசதாசிவனென்றே கோடல்வேண்டும். பிரமன் விஷ்ணுவென்பார்க்கு மேலான அணுருத்ரனையும், அணுமஹேசனையும், அணுசதாசிவனையும் முறையே நடாத்து மூர்த்திகள் சம்புருத்ரன், சம்புமஹேசன், சம்புசதாசிவனென்க. இம்மூன்று மூர்த்திகளுஞ் சம்புவேயாவர். என்னை? 'எல்லாம் உருத்திரனே' எனும் விசேடார்த்தத்தைக் தரத்தக்க (ஸர்வோவை ருத்ர:) "ஸர்வோவை ருத்ர:" எனுந் தைத்திரீயாருணசாகை நாராயணவசனமும், கூறிப்போந்த பல்பிரமாணங்களும் அணுருத்ரனுக்குவேறாகச் சம்புருத்ரனுளனென்பதையும்; இந்நூலின் உஉஎ - ம் பக்கத்தில் அருத்தத்

தோடுகொட்டப்பட்ட "மாயிநந்துமஹேச்வரம்" எனுஞ் சுருதிவசனம் அணுமஹேசனுக்குவேருகச் சம்புமஹேசனுளனென்பதையும்; "பரமாத்மா ஸதாசிவோக்ஷரம்விமலம்" எனுந் திரிபுராதாபிநியுபநிஷத் வசனமும், "ப்ரஹ்மாசிவோமே அஸ்து ஸதாசிவோம்" எனுந் தைத்திரீயாருணசாகை நாராயணவசனமும் அணுசதாசிவனுக்குவேருகச் சம்புசதாசிவனுளனென்பதையுங் காட்டுகின்றனவாகலின். சிவனுரது பெரியவுருவம்—

([illegible] ।

"கோடிகோடிகணுத்யக்ஷம் ப்ரஹ்மாண்டாசண்டவிக்ரஹம் |"

எனும் பஞ்சப்ரஹ்மோபநிஷத் வசனத்தினும்,

([illegible] ।)

"ப்ரஹ்மாண்டவ்யாப்ததேஹாபஸிதஹிமருசாபாஸமாநாபுஜங்கை:
கண்டேகாலா: கபர்த்தாகலிதசசிகளாச் சண்டகோதண்டஹஸ்தா: |"

எனும் ஸ்ரீருத்ரநமக வசனத்தினு மறியப்படுகின்றது. இந்தச் சுருதி—"நமோ அஸ்து நீலக்ரீவாய ஸஹஸ்ராக்ஷாயமீடுஷே |" என்றும், "ம்ருத்யும்ஜயாய ஸர்வேச்வராய ஸதாசிவாய ஸ்ரீமந் மஹாதேவாயநம:" என்றுஞ் சிவனுக்குவணக்கங் கூறுகின்றது. சிவனுரது திருமேனி ஜீவர்களாயுள்ளதேவர்கள் தேஹம்போலாது விபுத்வ சிறக்கனமாய் அளவிடப்படாததாயுளது. அதுபற்றியன்றே "ஆகாசமயவிக்ரஹம்" என்று போந்தசுருதியும், ([illegible]) "ஆகாசசரீரம்ப்ரஹ்ம" என்று தைத்திரீயோபநிஷத்தின் சிக்ஷாவல்லியும், ([illegible] ।) "ஆகாசோர்த்தாந்தரத்வாதிவ்யபதேசாத் |" என்று பிரஹ்மஸூத்ரமும்,

"மைப்படிந்த கண்ணுளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் மாசொன்றில்லா
னொப்புடைய னல்ல னொருவ னல்ல
னோரூர னல்லனோ ருவம னில்லி
யப்படியு மந்நிறமு மவ்வண் ணமு
மவனருளே கண்ணுகக் காண்ப தல்லா
லிப்படிய னிவ்வுருவ னிவ்வண் ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணுதே."

என்று தேவாரமும்,

" தேமினியகுயிலேகேட்டியேலெங்கள்பெருமான்
பாதமிரண்டும்வினவிற்பாதாளமேழினுக்கப்பாற்
சோதிமணிமுடிசொல்லிற்சொல்லிறந்துநின்றதொன்மை
யாதிகுணமொன்றுமில்லானந்தமிலான்வரக்கூவாய்."

என்று திருவாசகமும் முழங்குவனவாயின. சிவனார்திருமேனி விபுவென்பது—பிரானுடையகண்களைப் பிராட்டி கரங்களாற் புதைத்தகாலத்தும், தக்ஷிணாமூர்த்தியாய் மோனமிருந்த காலத்தும், பிட்டுக்கு மண்சுமந்தவடிவிற் பிரம்படிபட்டகாலத்தும், வேடவடிவில் அருச்சுனன்கை வில்லடிபட்டகாலத்தும் வெளிப்படுதலுமாயிற்று. விட்டுணுவினுடம்பிற்படலான வடிமுதலியன அப்படி விபுத்துவங் காட்டவில்லை. வில்லடிச்செய்தியை—

" விண்ணிலுறைவானவரில்யாரடிபடாதவர்விரிஞ்சனரியேமுதலினோர்
மண்ணிலுறைமானவரில்யாரடிபடாதவர்மனுக்கண்முதலோர்களதலக்
கண்ணிலுறைநாகர்களில்யாரடிபடாதவர்கள்கட்செவிமகீபன்முதலோ
ரெண்ணில்பலயோனியிலும்யாவடிபடாதனவி ருந்துழியிருந்துழியரோ.

வேதமடியுண்டனவிரிந்தபலவாகமவிதங்களடியுண்டனவொரைம்
பூதமடியுண்டனவிநாழிகைமுதற்புகல்செய்பொழுதொடுசலிப்பில்பொரு
பேதமடியுண்டனபிறப்பிலியிறப்பிலிபிறங்கலரசன்றன்மகளார் [ளின்
நாதனமலன்சமரவேடவடிவங்கொடுநரன்கையடியுண்டபொழுதே."

எனும் வில்லிபுத்தூராழ்வார்பாரதச்செய்யுள்களினறிக. இவ்வேதுக்களானே சிவன் உள்ளும் புறமும் விபுவேயாகின்றனன். இத்திற விபுவையறிந் துய்வதற்காய மார்க்கமும்—

" விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போன்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியா
னுறவு கோனட் டுணர்வு கயிற்றினான்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே."

எனுந் திருநாவுக்கரசுகளது தேவாரத்திற் பெறப்படுவதாயிற்று. இவ்வுண்மையையும், சிவாலயமூலஸ்தான சிவலிங்கம் ரூபாரூப ஐதிகமென்பதையும் அறியமாட்டா மந்தமதிகள் சைவசமயக் கடவுளைக் கண்டப்பொருளாகவே நினைத்திழிவுகூறியுழிதரல் கலிவலிபோலும். பஞ்சப்ரஹ்மோபநிஷத்திலும், கைவல்யோபநிஷத்திலுமுள்ள "அவ்யக்தம்" எனுஞ்சொல்லும்; "மைப்படிந்த கண்ணாளும்" என்றற்றொடக்கத்துத் தமிழ்மறைத்தூக்கும் 'சிவன் இன்னதன்மையனென வரையறுக்கப்படாதவன்'' எனும் பொரு

டருதலுங்காண்க. தேவர்யாவரும் (சுவாநுபூதிவாயிலாக) மஹா தேவரையறியாராயினரென்று போந்தசுருதி புகறலினாற்றான் "கருமால் பிரமன்—றடைப்பட் டின்னுஞ் சாரமாட்டாத் தன்னைத் தந்தவென் னாரமுதை" என்று திருவாசகத்துப் புணர்ச்சிப்பத்தும் புகலாநின்றது. பரிபூரண சிவபிரான் அன்பர்மாட்டுறு பேரன்பானே பிட்டுக்கு மண்சுமந்த பெருங்கருணையையொத்த வொரு கருணையை விட்டுணுவுக்குங் கூறுபாக்கு ஒருகதை வரையப்பட்டதென்பதை நிச்சயிக்க—தே - குருபரம்பரையுழை அநந்தாழ்வான் வைபவமென்பதில், இராமாநுஜன் எரிகட்டுங்காலே அவ்வாழ்வான் கர்ப்பவதியாயிருந்த தன்மனைவியையும் மண்சுமக்குமாறு செய்தனனெனுஞ் செய்தியில்—

"கர்ப்பவதியான தம்தேவிகள்மேலே மண் சுமத்தாநிற்க; இதுகண்டு திருவேங்கடமுடையான் ஒருபிள்ளையாய் எதிரே வந்து வாங்கிக்கொண்டு போக; தேவிகள் கடுகவருமதுகண்டு, இதுவென் கடுகவருகிறு யென்ன; அவளும் ஒருபிள்ளை எதிரேவந்து கூடையை வாங்கிக்கொண்டு போகிறுனென்று சொல்லக்கேட்டு, உடனேசென்று கண்டு, கைங்கர்ய விக்நகாரீ! நீ கூடையைத் தொடாதேகொள்ளென்று கொட்டெடுத் தடிக்கப்புக; திருவேங்கடச் செல்வன் ஓடிச்சென்று கோயிலிலே புகுந்தானென்பர்கள்."

என வரையலாய சொற்கள் உரியனவாம். வெறுமண் சுமந்து அடிக்கஞ்சி யோடியதாகவுள்ள இக்கதையை மெய்யெனக்கொள் வழியும் இது—மண்சுமந்து பிரம்படிபட்ட பெருங்கருணைச் சிவவிபுத்துவ லீலைபோலாதல் யாங்ஙனமென்ப கற்றுவல்லாரென்க. பாசுபதப்ரஹ்மோபநிஷதம்—

(ஸமஸ்தயாகாநாம்ருத்ரஃ பசுபதிஃ கர்த்தா ।
ருத்ரோயாகதேவஃ । விஷ்ணுரத்வர்யுஃ । )

"ஸமஸ்தயாகாநாம்ருத்ரஃ பசுபதிஃ கர்த்தா ।
ருத்ரோயாகதேவஃ । விஷ்ணுரத்வர்யுஃ । "

என்றியம்புமாற்றானுஞ் சிவன் பெருமையும், விஷ்ணு சிறுமையும் வெளியாயின. இங்ஙனம் உருத்திரன் யாகதேவனும், விஷ்ணு அத்வர்யுவுமாதல் காண்க. அத்வர்யு=யாகஞ்செய்விக்கும் உருத்துவிக்கு என்பவர்களி லொருவர். இவர் வேலையாவது அங்ஙனம் நடாத்தும் விதிசொல்லுதலாம். இந்தச்சுருதி பாசுபதப்ரஹ்மோபநிஷதமெனும் பெயர்த்தாகலின், பாசுபதர்கட்குரிய சைவச்

செந்நெறி—ஈண்டு வைதிக பாசுபதமெனவும் அறியக் கிடக்கின்றது. தர்சநோபநிஷதம்—

(𑌸𑍁𑌷𑍁𑌮𑍍𑌨𑌾𑌯𑌾𑌶𑍍𑌶𑌿𑌵𑍋𑌦𑍇𑌵 𑌇𑌡𑌾𑌯𑌾𑌦𑍇𑌵𑌤𑌾𑌹𑌰𑌿𑌃 ।
𑌪𑌿𑌙𑍍𑌗𑌳𑌾𑌯𑌾𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌃)

"ஸுஷும்நாயாச்சிவோதேவ இடாயாதெவதாஹரி: |
பிங்களாயாவிரிஞ்ச:"

என்று விளக்குந் தத்துவக்கிரமத்தானும் விஷ்ணுவினது சின்மை வெளிப்பட்டது. என்னை? ஸுஷும்நா நாடிக்கு உருத்திரனும், இடாநாடிக்கு விஷ்ணுவும், பிங்களா நாடிக்குப் பிரமனுந் தெய்வமென்ப தறியப்படுதலின். ஸுஷும்நாநாடிதான் இடா, பிங்களாவெனு மிரண்டுநாடிகட்கும் மத்தியி லுள்ள பிரமநாடி. முதுகினடுவெலும்பினூடே யியங்கிச் சென்னிவரை சென்று புருவமத்திவரை நிற்குமிதனது துவாரத்தைக் கருத்தானமெனப்படு மூலாதாரத்திலிருந்து படத்தான்மறைத்து மேற்போகி வாலாற் பிரமரந்தரத்தை மறைத்துநிற்பது சூக்கும அரவுருவான குண்டலிசத்தியாகும். இந்நாடி சத்திதரிசனத்திற் சருவபாவ அஞ்ஞான நிவிர்த்தியெனுஞ் சங்காரத்தை யடைந்து நான்காவது தெய்வகதியையெய்தக்கருதும் பரமயோகிகளுக்குச் சிவத்தியானமே பற்றுக்கோடாகும். அப்பற்றுக்கோ டிலையேற் பிரமநாடி தரிசிக்கப்படாத தாம். தரிசனபலனை—

"மூலாதாராதாரப்ய ப்ரஹ்மரந்த்ரபர்யந்தம் ஸுஷும்நாஸூர்யாபா | தந்மத்யேதடித்கோடிஸமாம்ருணாளதந்து ஸூக்ஷ்மாகுண்டலிநீ | தத்ரதமோநிவ்ருத்தி: | தத்தர்சநாத் ஸர்வபாப நிவ்ருத்தி: |"

எனும் மண்டலப்ராஹ்மணோபநிஷத் வாக்யத்தினறிக. விஷ்ணு பரமாகக்கூறப்படும் அந்தரியாமித்தன்மை இடாநாடியி லடங்கும். நிற்க. கைவல்யோபநிஷதம்—

"விவிக்ததேசேச ஸுகாஸநஸ்தச்சுசிஸ் ஸமக்ரீவ சிரச் சரீர: | அத்யாச்ரமஸ்தஸ் ஸகலேந்த்ரியாணிநிருத்யபக்த்யா ஸ்வகுரும்ப்ரணம்ய | ஹ்ருத் புண்டரீகம்விரஜம் விசுத்தம் விசிந்த்யமத்யே விசதம்விசோகம் | அசிந்த்யமவ்யக்தமநந்தரூபம் சிவம்ப்ராசாந்தமம்ருதம் ப்ரஹ்மயோநிம் | ததாதிமத்யாந்தவிஹீநமேகம் விபும்சிதாநந்தமரூபமத்புதம் | உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசநம்நீலகண்டம் ப்ரசாந்தம் | த்யாத்வாமுநிர்கச்சதிபூதயோநிக் ஸமஸ்தஸாக்ஷிந் தமஸ: பரஸ்தாத் | ஸப்ரஹ்மஸசிவஸ்ஸேந்த்ர: ஸோ

க்ஷர ஃ பரமஸ்ஸ்வராட் | ஸஏவவிஷ்ணுஸ் ஸப்ராணஸ் ஸகாலோக்நிஸ் ஸசந்த்ரமா ஃ | ஸஏவஸர்வம்யத்பூதம் யச்சபவ்யக்ஸநாதநம் | ”

என உத்கோஷிக்கின்றது. அருத்தம்:—‘ஏகாந்தஸ்தானத்திற் சுகாசனமிட்டிருந்து சுத்தனாகி நேரான கழுத்துத்தலை யுடம்புகளை யுடையனாகி அத்தியாச்சிரமியாகி எல்லா விந்திரியங்களையு மடக்கிப் பத்தியால் தன்னாசாரியரை வணங்கி இதயகமலத்தைத் தூகளறுதாய்தாகக்கருதி அதனடுவில் தெளிவுடையராய், சோகமிலராய், சிந்தனைக் கெட்டாதவராய், அவ்வியத்தராய், அனந்தரூபராய், சிவனாராய், அமிர்தராய், பிரமயோனியாய், தத்பதப்பொருளாய், ஆதிமத்திஅந்தமிலராய், ஏகராய், விபுவாய், சிதானந்தரூபராய், அரூபராய், அற்புதராய், உமாசகாயராய், பரமேசுவரராய், பிரபுவாய், முக்கண்ணராய், கரியகழுத்தராய், மிக்க சாந்தமுளோராய், பூதயோநியாய், சமஸ்தசாக்ஷியா யிருப்பவரை முனிவன் தியானித்து இருளைக்கடப்பன். அவ்வித சாக்ஷியாயிருக்கும் அவர் பிரமா, அவர் சிவன், அவரிந்திரன், அவரழிவற்றவர், பரமர், சுவப்பிரகாசர், அவரே விஷ்ணு, அவர் பிராணன், அவர்காலன், அக்கினி, அவர்சந்திரன், அவரே யிருந்தது மிருப்பதுமாகிய வெல்லாமானவர், என்றுமுள்ளவர்.’

எனவாம். இந்தத்தியானந்தான் தஹரோபாஸனை. பிரமா, விஷ்ணு, சிவன்=(குணருத்ரன்) என்பார் சிறப்பெல்லாஞ் சிவனார் சிறப்பாக விருக்கின்றனவெனுஞ்செய்தி யீண்டுக்காணப்படுதலின், இவ்வுபநிஷத்தும் நான்காவது தெய்வஞ் சிவனெனமுழையடிப்பதாயிற்று. இதனிற் சிவன்பெயர் (அம்ருதம்) “ அம்ருதம் ” எனப் படிக்கப்பட்டதை—

(அயஹைநம் ப்ரஹ்மசாரிண ஊசு ஃ | கிம்ஜப்யேநாம்ருதத்வம் ப்ரூஹீதி | ஸஹோவாச யாஜ்ஞவல்க்ய ஃ | ஶதருத்ரீயேணேத்யேதாநிஹவா அம்ருதஸ்ய நாமதேயாநிபவந்தி | ஏதைர்ஹவா அம்ருதா பவந்தீதி||)

“ அதஹைநம் ப்ரஹ்மசாரிண ஊசு ஃ | கிம்ஜப்யே நாம்ருதத்வம் ப்ரூஹீதி | ஸஹோவாச யாஜ்ஞவல்க்ய ஃ | சதருத்ரீயேணேத்யேதாநிஹவா அம்ருதஸ்ய நாமதேயாநிபவந்தி | தைர்ஹவா அம்ருதாபவந்தீதி||

எனும் ஜாபாலோபநிஷத் வசனங்கள் நன்கு வற்புறுத்துவனவாயின. என்னை? ‘பிரஹ்மசாரிகள் யாஜ்ஞவல்க்யரைப்பார்த்து

எதனைச்செபித்தால் அமிர்தத்துவமெய்துமெனு வினய வினவிற்கு அவர்— சதருத்ரீயத்தைச்செபித்தா லெய்துமென்றும், இச் சத ருத்ரீயத்தி லடங்கியவை அமிர்தத்தின் பெயர்களென்றும், அவற் றைச் செபித்தலினுல் அமிர்தத்துவ முண்டாமென்றும் விடை யிறுத்தனர்.'

எனும் ஒண்பொருள் அவ்வசனங்களினும், யஜுர்வேதத்து அச் சதருத்ரீயத்தி லடங்கிய பெயர்கள் நீலக்ரீவர், விலோகிதர், கபர்த்தி, சிவன், ஹிரண்யபாஹு, ருத்ரர் முதலியனவே யென் பதும் பெறப்படுதலின். இவ்வேதுவானே சுருதிகளில் ' அம்ருதம் ' என வருவனவற்றிற்கெல்லாஞ் சிவனே பொருளெனலும், அம்ருத மெனு மோக்ஷம் சிவநாம ஜபத்தாலேயே யுறவேண்டுமெனலு மோர்க. பிரச்நோபநிஷத்தில்—

> " யாதே தநூர்வாசி ப்ரதிஷ்டிதாயா ச்ரோத்ரேயாசசக்ஷுஷி |
> யாசமநஸி ஸந்ததா சிவாம் தாம்குரு மோத்க்ரமீ ஃ ||"

என வரூஉம் உ - வது பிரச்நவசனத்தில் ' வாக்கு, செவி, விழி, மனமென்பவற்றைத் தாங்கியுள்ள உனதுடம்பைச் சிவரூபமாகச் செய் : விட்டுநீங்கறக.'

என்று பிராணனைநோக்கிச் சொற்றதுங் காணப்படுகின்றது. தலவகாரமெனுங் கேநோபநிஷத்தில் இந்திரன் முதலிய தேவர்க ளது அறிவீன கர்வத்தை யடக்கவேண்டுமென்று அக்கினி வாயு வென்பார் முன் எரிக்கவும் அசைக்கவுமொண்ணு வொருதுரும் பையெறிந்து நின்று மறைந்த யக்ஷவடிவுளானையே சருவசத்தி யுள்ள 'பிரமம்' என்று அவ்வடிவுளானோடு வந்து ஆகாயத்திற் பிர காசித்துக் கொண்டிருந்த ஹைமவதியான உமையவள் இந்திரனுக் கறிவித்து மறைந்தனளெனுஞ் செய்தியில், அந்த ஹைமவதியெ னும் பார்வதி பிரமமெனப்படுவது தன் கணவனாகிய சிவனேயென வறிவிக்க அவர்களு மறிந்தார்களென்பது வெளியாயிற்று. இதன் உபப்ரம்ஹணம்—

> "காரணக் கடவுள் யாவன்மற் றெனக்குக் கணவனு கியபிரான் யாவன்
> ஆரண முணரான் யாவன்மற் றவனே யாகிய வியக்கனுய் வந்தான்"

எனுஞ் சூதசங்கிதையின் சாமசாகோபநிடத தாற்பரிய வத்தி யாயத்திற் பார்வதியின் திவ்விய வாக்காகவருவதி லறியப்படுகின்

றது. (பஹுஹேமாநா உமாம்ஹைமவதீ) "பஹுசோபமாநா முமாம்ஹைமவதீ" என்பது மேல் உபநிஷத்திலுள்ளதே. இங்ஙனம் "அந்தப் புருஷகாரரூதையான உமையாய்த் தோன்றிய லக்ஷ்மியினுடைய அந்தயக்ஷனைப் பரப்பிரமமென்று நினைத்துக்கொள்" என்பதாகவும், "அந்தப் பரப்பிரமத்தை ஸ்ரீயஃபதி என்று இந்திரனவன் தெரிந்துகொண்டான்" என்பதாகவு மெழுதலான இராமாநுஜபாடியம் புரட்டுரையேயாம்.

## ௧௪. நாராயணாதி நாமங்களின்பொருள்.

**நாராயணன்** என்பதன் பொருள் :— 'நரனது இருதயத்திலிருப்போன்' எனவாம். நரன்=ஆன்மா. இந்நூலின் ௧௭௮, ௧௭௬, ௧௮௦ - ம் பக்கங்களி லெடுத்துக்காட்டப்பட்ட பிரமாணவாயிலாக ஆன்மாவினிருதயத்தி லிருப்போன சிதாகாசசிவனெனல் ஏற்படுதலின் நாராயணனெனும் பெயர் சிவனுக்குமாமென்க.

(௨) நாரம்=நீர். இது சிவனுடைய அஷ்டமூர்த்தங்களி லொன்றாகலின், அதிலிருக்குஞ் சிவன் நாராயணனெனப்படுவன். எனவாம்.

(௩) சிவ சக்தியாகிய நாராயணிகொண்ட புருஷகோலமே நாராயணன். எனவாம்.

(௪) நரனாற் படைக்கப்பட்டது நாரம். அது நீர். அந்நீரை யிருப்பிடமாகக்கொண்டு அதற்கு அபிமானதேவதையா யிருப்போன் வைகுண்டராஜனாகிய நாராயணன். நரன்=அழிவிலாதவன். அவன் இந்நூலின் ௨௩௭, ௨௩௮ - ம் பக்கங்களிலும் பிற இடங்களிலு மெடுத்துக் காட்டப்பட்ட பிரமாணங்களின் வாயிலாகச் சிவனே என்பதேற்படும். "ருத்ரோநர உமாநாரீ தஸ்மை தஸ்யை நமோநமஃ |" என ருத்ரஹ்ருதயோபநிஷத்தும், நாரி பாகன் ஆலமர் கடவுள்" எனப் பிங்கலநிகண்டுங் கூறுகின்றன.

நாராயணசப்தம் ௨௮ - வகையாகச் சிவபக்ஷஞ் சமர்ப்பிக்கப்படுதலை மல்லிகார்ச்சுனாராத்திய ரியற்றிய சிவபரகேசவாதிநாமநிர்வசநம் எனு நூலிற் காணலாம்.

**வாஸுதேவன்** என்பதன் பொருள் :— வஸு = தனம், வாஸு=குபேரன். குபேரன் எந்தத் தேவனாற் பிரகாசிக்கின்றனனோ அந்தத்தேவன் வாஸுதேவன். அவன் சிவன். எனவாம்.

(உ) வஸதி, வாஸு=பிருதிவி. இது சிவனுடைய அஷ்ட மூர்த்தங்களி லொன்றாகலின் அதிலிருக்குஞ் சிவன் வாஸுதேவன். எனவாம். வஸுதேவன் மகன் கிருஷ்ணனாகலின், அவனும் வாஸுதேவ னெனப்பட்டனன்.

ஸங்கர்ஷணன் என்பதன் பொருள் :—இது, ஸம்யக் - கர்ஷ - ந எனப்பிரிக்கப்படுமாற்றான் முன்னைய விரண்டும் நிருவிகற்ப சமாதியெனவும், பின்னையது சுகமெனவுமாம். ஆகவே அச் சமாதியி லிருப்போனுக்கு எச்சுக மெய்துமோ அச் சுகசொரூபன் சிவனாகலின் அவன் ஸங்கர்ஷணனென்ப தேற்படும்.

(உ) யாவையும் இழுத்துக்கொள்வோன் ஸங்கர்ஷணனெனுமாற்றானே சருவசங்கார மகாஉருத்திரன் ஸங்கர்ஷணன். எனவாம்.

ப்ரத்யும்நன் (ப்ரத்யும்நஃ) என்பதன் பொருள் :— ப்ர=மேலான, த்யும்நன்=தேவன். எனவாம். இது சிவநாமங்களி லொன்றாய ‘ மஹாதேவன் ’ என்பதைப் பொருந்தும்.

அநிருத்தன் (அநிருத்தஃ) என்பதன் பொருள் :— (அநிநஃ ருத்தஃ இதி அநிரஃ - தம் அநிரம் ஹந்தீதி=அநிருத்தஃ) அநிநஃ ருந்த இதிஅநிரஃ - தம் அநிரம் ஹம்தீதி=அநிருத்த ஃ எனுமாற்றானே ‘ பிராணிகளைத் தடுக்கும் ஆற்றலுள்ள மன்மதனைக் கொன்றவன் ’ எனவாம். இவ்வாறு கொன்றவன் சிவனே யென்பதற்குரிய பிரமாணங்கள் இந்நூலின் உசO - ம் பக்கத்தில் வந்துள்ளன. அநி= பிராணி.

ஹரி என்பதன் பொருள் :— ஹரி=சூரியன். இவன் சிவனுடைய அஷ்டமூர்த்தங்களி லொன்றாகலின் அவனுக்கு அந்தரியாமியாயிருக்குஞ் சிவசூரியன் ஹரியெனப்படுவன். எனவாம்.

(உ) ஹரி=சந்திரன். இவனுஞ் சிவனுடைய அஷ்டமூர்த்தங்களி லொன்றாகலின் அவனுள்ளிருக்கும் அந்தர்க்கத சந்திரனான சிவன் ஹரியெனப்படுவன்.

(ங) ஹரி=வாயு. இவனுஞ் சிவனுடைய அஷ்டமூர்த்தங்களி லொன்றாகலின் அவனுள்ளிருக்கும் அந்தர்க்கத வாயுவான சிவன் ஹரியெனப்படுவன்.

(ச) பாசபாவங்களை ஹரிப்பவன் ஹரி. அத்திறமுளோன் சிவனென்பது— இந்நூலின் உஉகூ - ம் பக்கத்திற் காட்டப்பட்ட

சரபோபநிஷத்தில் "பரமேசுரர் அத் தேவர்களுடைய தாபத்திரய ஜனன மிருத்தியு ஜரை முதலியவற்றா லுண்டான நாநாவித துக்கங் களையும் ஹரித்தருளினர்" "விஷ்ணுவுக்கு நல்லபிரசாதஞ் செய்த ருளினர்" எனும் அருத்தத்தி னறியப்படுதலால், சிவன் ஹரியெ னப்படுவன். எனவாம். விஷ்ணுவிற்கு ஹரியெனும்பெய ருற்றகார ணம் :— விஷ்ணுபுராணத்தின் ௩-ம் அமிசத்து க-ம் அத்தியா யத்தில்—

"தாமசமனுவந்தரத்திலே ஹரியை என்கிறவள் கருப்பத்திலே ஹரிகள் என்கிற தேவர்களோடுகூட ஹரியென்கிற திருநாமமுடையவரா யவதரித் தார்" என வரைந்துள்ளதிற் காணலாம்.

கோவிந்தன் (ஸொவிந்தம்) என்பதன் பொருள் :— 'விருஷபா ரூடன்' எனவாம். விட்டுணு விருஷபமாகிச் சிவனைச் சுமந்தன னென்பது கூரேசவிஜயமெனுந் தாதச்சுவடியின் 'இடபமாய்த் தாங்கினகக்ஷி' யென்பதினும் ஒப்புக்கொள்ளப்பட்டதே. "ஏறு கட்டிய கொட்டிலரங்கமே" என்றார் ஸ்ரீ காளமேகப்புலவரும். ஏறு=இடபம்.

ஈண்டெடுத்துக்கொண்ட நாராயணுதிநாமங்களை யிவ்வகையா கவும் பொருள்படுத்தலா மென்பதை யிவணறிவித்தோமே யன்றி இந்நூற்கண் அவற்றுளொன்றற்கேனும் இவ்விதப்பொருளை யாங் கூறியதில்லை. புரட்டுரையை யவாவி நிற்போரும், பிறரும் இந்நியா யுணர்வாராக.

## கரு. சருவோபநிஷத்துக்களிலுமுள்ள பெரியபொருள் சிவனே.

---

உபநிஷத்து நூற்றெட்டனுள் முதலிலுள்ள ஈசாவாஸ்ய மெனும் உபக்ரமோபநிஷத்து "ஈசாவாஸ்யமிதம் ஸர்வம்" என்று சிவபிரானுக்குரிய ஈச சப்தத்தில் உபக்ரமித்தபடியாலும், இறுதி யிலுள்ள முக்திகோபநிஷத்தென்னும் உபஸம்ஹாரோபநிஷத்து ([illegible] ।) "சதுர்விதாச யாமுக்திர்மதுபாஸநயாபவேத் |" என்றும், ([illegible] ।) "கைவல்ய முக்திரேகைவ பார மார்த்திக ரூபிணீ |" என்றும், இந்நூல் க௬௨-ம் பக்கத்தில விள

க்கியவாறு "அதஸ்ஸர்வேஷாம் கைவல்யமுக்திர் ஜ்ஞாநமார்க்கேண" என்றுங்கூறி இறுதியத்தியாயத்தில் "ஊர்த்வபூர்ணமத: பூர்ணக் மத்யபூர்ணம் சிவாத்மகம் |" என்பதனுலும், அந்தக் கைவல்யமுக்தி சிவோபாஸகரடையுஞ் சாயுச்சியமென்று கைவல்யோபநிஷத்து முதலியவற்றிற் பெறப்படுதலாலும் 'உபக்ரமோபஸம்ஹார' நியாயப்படி சர்வோபநிஷத்துக்களிலுமுள்ள பெரியபொருள் சிவனேயாயினன். இன்னுமொருதிற முடிபுமுளது. அதாவது:—வேதநான்கென்பதில் இறுதிவேதம் அதர்வம், இதனீறு அதர்வசிகையெனுமுபநிஷத்து. இஃது இந்நூலின் கஅரு - ம் பக்கத்திற்புக்க வசனத்தானே திரிமூர்த்திகளையும் நகாரணரெனத் தள்ளி, சம்புவே காரணனென நிறீஇ, (ஶிவஏகோ த்யேய:) "சிவ ஏகோத்யேய:" எனும் வாக்கியத்தாற் சிவனொருவனே தியானிக்கப்படு தியேயனென முடிபுகூறி நிற்றலாகும். இம்முடிபு சூதசங்கிதையின் சருவசாத்திர சங்கிரகமுரைத்த வத்தியாயத்தினுமினிது காட்டப்பட்டது. இதனை—

> "அறையதர்வ சிகையிந்தத் தாற்பரியத் தேமுடிவுண் டாயி ருக்கும்
> மறைபலவி னுக்குமதர் வணமறையே முடிவு"

எனும் அவ்வத்தியாய மொழிகளா னறிக. ஆதலினன்றே "சிவனை யாச்சிரயிக்காத சாஸ்திரத்தை யெரித்துவிடு" என்று பிருஹஜ்ஜாபாலோபநிஷத்தும், "சாங்கங்களான வேதங்களும், உபநிஷதங்களும் இதிகாசத்துடன் என்னையே துதிக்கின்றன: எனக்கு வேருக யாதொன்று மின்று." எனுஞ் சிவனுரது திவ்வியதிருவாக்கைப் பஸ்மஜாபாலோபநிஷத்தும் பகர்வனவாயின. இச்சுருதிகட்கு விரோதமாகப் புராணேதிகாசங்கள் புகலுமெனல் பொருந்தாதென்க. கழறுற்ற அதர்வசிகைமீது திக்விஜயம் எம்பாவையங்காரென்பா ரியற்றிய அதர்வசிகாவிலாசமெனுஞ் சுவடிக்குக் கண்டனசாஸ்திரம்—அதர்வசிகாவிலாசநிரஸநமாம். இந் நிரஸநத்தை யியற்றிய மைசூர் - வீரபத்ராசாத்யஸ்வாமிகளை அவ்வையங்கார் வாதத்தில் வெல்லமாட்டாது தோல்வித்தானமுற்றவுடனே தம்முடைய விருதுமுதலியவற்றை அந்தச்சுவாமிகளுக் களித்துத் தாமுந் தங்கூட்டத்தினரும் அவர்க்கடிமையாயினரென்பது சங்கரபட்டரா லியற்றப்பட்ட சகலவேதசிகாமணியெனும் புத்தகம் புகல்கின்றதென்பதையும் அறிகின்றனம்.

## க௬. நூற்றெட்டுபநிஷத்தும்பிரமாணமே.

நூற்றெட்டுபநிஷத்தும் பிரமாணமே யென்பதை, முக்தி கோபநிஷத்து—

(ஜீவந்முக்தி விதேஹமுக்த்யோ ரஷ்டோத்தரசதோபநிஷத: ப்ரமாணம் ।) "ஜீவன்முக்தி விதேகமுக்த்யோ ரஷ்டோத்தரசதோபநிஷதः ப்ரமாணம் |"

என்று கூறுதலினறிக. சிவோத்கர்ஷத்தை விவரித்து வெளிப் படையாக விளக்கும்வாக்கியங்கள் அநேகோபநிஷத்துக்களா யிருத் தலைநோக்கிய சிவத்துவேஷிகள் பத்துபநிஷத்துக்களன்றே பாஷி யஞ்செய்யப்பட்டன வெனுங்கூற்று—இந்தச்சுருதிக்கு விரோதமா தலோடு '௧௦அ - உபநிஷத்திற்கும் வியாக்கியாதா வித்யாரண்ய ரெனும் பெயரிய ஆசாரியர்' எனும் பொருளைத்தரத்தக்க "வித்யா ரண்யாசார்யை ஃ அஷ்டோத்தரசதோபநிஷதோ வ்யாக்யாதா ஃ" எனும் மஹாவாக்யரத்நாவளி வசனத்தை யறியார் கூற்றுமாம். (கதிஸாமாந்யாத்) "கதிஸாமாந்யாத்" எனும் பிரமசூத்திரத்திற்குச் செய்த பாடியத்தில் எல்லா உபநிஷத்துக்களும் பிரமாணமென்றே ப்புக்கோடல் வேண்டுமென்பது இதன்பொருளெனச் சங்கராசாரி யரும், இராமாநுஜனும் வரைந்திருக்கின்றனரென்பதைப் பிரமசூத் திரத்திராவிடபாஷியத்தினுங்காண்க. இன்னமும் சுவேதாச்வதரம், கைவல்யம், காலாக்நிருத்ரம், அதர்வசிரம், அதர்வசிகை யெனு மைந்தும் பஞ்சருத்ரோபநிஷதமெனவழங்கப்படுதலை நோக்கி—ராம தபநம்,கோபாலதபநம், நிருஸிஹ்மதபநம், ஹயக்ரீவம், மஹாநாரா யணமெனு மைந்தையுந்தமது மதத்திற் காதரவான பஞ்சதபநோப நிஷத்துக்க ளெனக்கொண்ட வைணவர் ஈசாவாஸ்யம், தலவகார மெனுங்கேநம், கடவல்லி, பிரச்நம், முண்டகம், மாண்டூக்யம், தைத் திரீயம், ஐதரேயம், சாந்தோக்யம், பிருஹதாரண்யமாகிய பத்தை மட்டும் பிரமாணமாகக்கொளிற் பஞ்சதபநமும் அப்ரமாணமா யொழியும். ஆமேல், வைகுண்டகதி வைதிகமெனற்கு வாயேயில்லை யென்பது வற்புறுத்தப்படும். பத்துபநிஷத்திலும் நாராயணபரத் துவ மேற்படாது சிவபரத்துவமே யேற்படு மென்பது இந்நூற் கண்ணு மறியப்படும். இராமாநுஜபாஷ்யம்.— கொன்னும் புரட்டு ரையும், வலிந்துகொண்ட பொருளுமாய் முடியும். இப்பாஷ்யத்திற்

பத்துபநிஷத்திற்கு வேறான மகோபநிஷதம், அதர்வசிரம் முதலிய வுபநிஷத்துக்களு முதாஹரிக்கப்பட்டுள்ளன. வியக்தப்படாப் பொருளுடைப் பிரமசூத்திரத்திற்கு அர்த்தஞ்செய்தல் சால்புடைத்தென்பது கருதிப் பிரதமத்தில் அவ்வாறு செயத்துணிந்தோர் அத்திறப்பொருளுடைப் பத்துபநிஷத்திற்கும் அர்த்தஞ்செய்தனர். வியக்தப்படுபொருளுள்ள வேனையுபநிஷத்துக்கட்கு அர்த்தஞ் செய்யாராயினரென்பதே யினையுடைத்து. சங்கராசாரியர் பஞ்சருத்ரோபநிஷதாதிகட்கும் வியாக்கியானஞ் செய்துள்ளா ரென்பது அவரது சரிதை.

## கஎ. புராணப்பிரமாணம்.

சுருதிக்கும், மூலபுராணங்கட்கும் விரோதமாக வரையலான எந்தத்தலபுராண சரிதைகளும், பிறவும் பிரமாணமாகமாட்டா. வாயுவினமிசம் ஹநுமனென்று வான்மீகங் கூறுமதற்கு விரோதமாக அவன் சிவனமிசமுமாவ னென்பதாகப் "புராரிமற் றியானே வாத சேயெனப் புகன்றான்" எனக் கம்பராமாயணத்தில் வருதலையும், விருகாசுரனெனும் பஸ்மாசுரனுக்கு வரமளித்த சிவன் அவ்வசுரனுக்குப் பயந்தொளித்தனனென்று படைத்துமொழியும் வைணவர்பாகவதமெனும் பொப்பதேவன்பாகவத கதையையும் அப்ரமாணப்படுத்திப் க அ - புராணங்களி லொன்றான பாகவதம் தேவீபாகவதமேயென்று நாலாயிரப்பிரபந்தவிசாரத்தில் வற்புறுத்தியுள்ளோம். புராணவிவரம் :—

"பிராம்மம், பாத்துமம், வைஷ்ணவம், சைவம், பாகவதம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பவிஷ்யத்து, பிரமகைவர்த்தம், லைங்கம், வாராகம், ஸ்காந்தம், வாமனம், கவூர்மம், மாச்சியம், காருடம், பிரமாண்டம் என்கிற இவையேயாம். அவற்றின் முறையும் இதுவே. இப்புராணங்களெல்லாம் சிருஷ்டி, சங்காரம், வம்சங்கள், மனுவந்தரங்கள், வம்சங்களின்சரித்திரம் என்கிற இவற்றைத் தெரிவிக்கின்றன."

எனும் விஷ்ணுபுராணத்து ௩ - ம் அமிசத்து ௬ - ம் அத்தியாயவசனங்களானு மறியப்படும். இப்பதினெட்டும்—சிவபுராணம் - ௧௦, விட்டுணுபுராணம் - ௪, பிரமபுராணம், - ௨, அக்கினிபுராணம் - ௧, சூரியபுராணம் - ௧ எனப்பிரிக்கப்படும். இவ்வாற்றானுஞ் சிவாதிக்யம் வெளியாயிற்று. புராணப்பெயர்கொண்டே விட்டுணுவுக்குப்பரத்துவஞ் சாதித்தற்கும் வேனைத்தேவர் புராணங்க ளிடங்

கொடா. பாரதம் பரதவமிசத்தினர் சரிதையாயும், அரிச்சந்திர புராணம் அரிச்சந்திரன்சரிதையாயும் முடியுமாறு விஷ்ணுபுராணங் களும் விஷ்ணுசரிதையாகவேமுடியும். பிரமனுக்கும், (இந்நூலின் உ௬௬-ம் பக்கத்திற் பிரமாணிக்கப்பட்ட பராசரபுராண வசனத் தின்படி) சிவ உரு நாமந்தாங்கின உருத்திரனுக்கும் பெரியதேவன் விட்டுணுவென்று கூறுமாற்றானே விட்டுணுபுராணங்களில் மூர்த்தி மூவரேயுள்ளாரென்பதூஉம்; இம்மூவர்க்கும் பெரியதேவன் சிவ னென்று கூறுமாற்றானே சிவபுராணங்களில் மூர்த்திநால்வருள்ளா ரென்பதூஉம்; சிலவிடங்களில் மகேசுவர சாதாசிவமூர்த்திகளு முள்ளாரென்பதூஉம் அறியக் கிடக்கின்றன. இவ்வரையறை யறி யாதார் சிவபுராணங்களிற் சிவனுக்கும், விட்டுணுபுராணங்களில் விட்டுணுவுக்கும் வியாஸர் பரத்துவம்பகர்ந்து குழப்பிவைத்தன ரென்ப. சிவபுராணங்களில் விட்டுணுமுதலிய தேவர்களுடைய குறைகோட்சரிதைகள் பலப்பல செறியக் கிடத்தலை யறிந்து கொண்ட அரங்கை வைணவர்—இவை தாமதபுராணங்கள் பொய் யைப்புகலுமென்று புறம்போக ஒரு தந்திரமுங் கற்றுள்ளார். அத் தந்திரம் இந்நூற்கட் பிரமாணிக்கப்பட்ட சுருதிகளின்முன் பல் லைக்காட்டிப் பசபசென விழிப்பதன்றி வேறென்செய்யும்! எல் லாப்புராணங்களையும் அங்கீகரித்துள்ள விட்டுணுபுராணமும் இனித் தாமதமேயாம்போலும்!! விட்டுணுவின் சிறப்பினை விளக் குஞ்சுருதி அதிகமில்லையென்பதற்கு விட்டுணுபுராணம் குறைவுற் றிருத்தலு மோர் சான்றே.

## க௮. சிவபெருமானேவேதங்களையருளிச்செய்தவன்.

---

பஞ்சருத்ரோபநிஷத்தி லொன்றாகிய சுவேதாச்வதரத்தில்—

(யோ ப்ரஹ்மாணம் விதயாதி பூர்வம் யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை।)

"யோப்ரஹ்மாணம் விதநாதிபூர்வம் யோவைவேதாக்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை |"

எனவருவது 'பிரமனை முதற்கண்ணே யுண்டாக்கி அவனுக்கு வேதங்களையருளினவன் ஈசானன்.'

எனும்பொருள்பயக்கின்றது. இந்நூலின் க௨௬-ம் பக்கத்திற் காட்டப்பட்ட "யோப்ரஹ்மாணம்விததாதி" என்றற்றொடக்கத்

துச் சரபோபநிஷத் வசனமும் இப்பொருளையே பயக்கின்றது. கைவல்யோபநிஷத்தில்—

(வெடெ௱ெநெகொஹ௦ெவ வெடெ௱ாவெஷாஜ கூ௱ெஷ விடெவஷாஹ௦ ।)

"வேதைரநேகைரஹமேவ வேத்யோவேதாந்த க்ருத்வேதவிதேவசாஹம் |"

எனவருவது 'எல்லா வேதங்களினு நானே பிரதிபாத்தியன்: வேதங்களைச்செய்தவனுநானே: வேதங்களை யறிந்தவனுநானே: (என்று சிவன் திருவாய்மலர்ந்தருளினன்.)'

எனும்பொருள் பயக்கின்றது. இந்நியாயமே—

(அஸ௱ஹதொஹ௱தஸ௱ நிஃ௱ஸிடஜெதஷ௱ஷ௱ஷெ யஜுவெஷ் ஸாஜவெடொ௱வாஜிரஸ ஐதிஹாஸஃ வொஜராணஂ விஷ௱ா உவநிஷஷஃ)

"அஸ்யமஹதோபூதஸ்ய நிச்வஸிதமேதத்யத் ருக்வேதோ யஜுர்வேதஃ ஸாமவேதோதர்வாங்கிரஸ இதிஹாஸஃ புராணம் வித்யா உபநிஷதஃ"

எனும் பிருஹதாரண்யகோபநிஷத்தின் ௪-ம் அத்தியாயத்து ௪-ம் பிராஹ்மண வாக்யங்கட்குங் கோடற்பாற்று. இவ்வாக்யங்களின்பொருள் :—'இருக்குவேதம், யஜுர்வேதம், சாமவேதம், அதர்வணவேதம், இதிகாசம், புராணம், வித்தை, உபநிஷதமென்பன இந்தப்பரம்பொருளின்சுவாசம்.'

எனவாம். இந்நியாயத்தாலன்றோ திருஞானசம்பந்தசுவாமிகள் "பூவணத்துறை—யானநல் லருமறை யங்க மோதிய—ஞானனையடி தொழ" என்றும், திருநாவுக்கரசுகள் "ஏழைதன்னொரு—கூறினர் கூறினர் வேத மங்கமும்......கெடில வாணரே" என்றும், மணிவாசகப்பெருமான் "மூவா நான்மறை முதல்வா போற்றி" என்றுந் தமிழ்வேதத்திலும் பாடியருளினர். முதல்வனருளிய வேதத்தைச் சோமுகாசுரன் களவாடிச் சமுத்திரத்தி லொளித்திருந்த ஞான்று அதனைப் பேணிக்கொள்ளுநிமித்தம் நாராயணன் மச்சாவதாரஞ் செய்தமையின் வேதமுதல்வன் நாராயணனெனு நவிற்சி சாலாதென்க.

## கக. சிவசத்தியின்பெருமை.

சிவசத்தியினாலுந் திரிமூர்த்திகளும் படைக்கப்பட்டார்களென் பதை—

(ஓம்தேவீஹ்யேகாக்ர ஆஸீத் | ஸைவஜகதண்டமஸ்ருஜத |......
தஸ்யாஏவ ப்ரஹ்மா அஜீஜநத் | விஷ்ணுரஜீஜநத் | ருத்ரோ அஜீஜநத் |
......ஸைஷா பராசக்தி: | ஸைஷா ஸாம்பவீவித்யா | ......
ஸைஷாஷோடஸீ ஸ்ரீவித்யா பஞ்சதஸாக்ஷரீ)

"ஓம்தேவீஹ்யேகாக்ரஆஸீத் | ஸைவஜகதண்டமஸ்ருஜத | .......தஸ்யாஏவ ப்ரஹ்மாஅஜீஜநத் | விஷ்ணுரஜீஜநத் | ருத்ரோஅஜீஜநத் | ...... ஸைஷா பராசக்தி: | ஸைஷா ஸாம்பவீவித்யா | ......ஸைஷாஷோடஸீ ஸ்ரீவித்யா பஞ்சதசாக்ஷரீ"

எனும் ருக்வேத பஹ்வ்ருசோபநிஷத் வசனத்தினறிக. இவ்வா லாறு மஹாஸ்காந்தோபதேசகாண்டத்து எச - ம் அத்தியாயத்து சஎ, சஅ, சகூ - ஞ் சுலோகங்கள்—

"சக்தி! மூன்றுபிரிவினையாக வுன்னாற் படைக்கப்பட்ட அண்டத்திற் பிரம விட்டுணு உருத்திரர்களையும், வாணி இலக்குமி அம்பிகை யென்பார்களை யுஞ் சிருட்டித்து முறைப்படி தலைவன் தலைவியெனச்சேர்த்துச் சிருட்டியாதி முத்தொழிலையும் புரிவாயாகவெனுஞ் சிவகட்டளையைப் பெற்றிய அச்சத்தி அவ்வாறே மூவரையுமுண்டுபண்ணிப் படைப்புமுதலிய முத்தொழிலையும் அன்னார்வாயிலாக நடக்குமாறு செய்தனள்."

எனப் பொருளாமாற்றானு மினிதறியப்படுகின்றது. இச்சத்தி காரிய வாயிலாகவுஞ் சிவனார் நான்காவதுதெய்வமெனலும், விஷ்ணு திரிமூர்த்திகளிலொருவனாகப்படைக்கப்பட்டபசுவெனலுமேற்பட் டன. விஷ்ணுமுதலிய தேவர்கள் சிவசத்தியையுபாஸித்து உலகிற் சிறந்தவர்களானார்களென்பதற்காயசுருதியும் இந்நூல் உஉச, உஉரு - ம் பக்கங்களில்வந்துளது. திரிபுராதாபிந்யுபநிஷத் (யந்தர்பாணதாரிணீம் வாக்விஜ்ரும்பிணீம் சந்த்ரமண்டலமத்யவர்த்தினீம்...த்ரிநேத்ராம் விசிந்த்யதேவீம் மஹாலக்ஷ்மீம் ஸர்வலக்ஷணஸம்பந்நாம் ஹ்ருதயே வைசக்ரம் பஞ்சாத்மகம்......ஸர்வஸம்ஸாரமோசனீம்) "தநுர்பாணதாரிணீம் வாக்விஜ்ரும்பிணீம் சந்த்ரமண்டல மத்யவர்த்திநீம்......த்ரிநேத்ராம் விசிந்த்யதேவீம் மஹாலக்ஷ்மீக்

ஸர்வலக்ஷ்மீமயீக் ஸர்வலக்ஷண ஸம்பந்நாம் ஹ்ருதயே சைதந்ய ரூபிணீம் நிரஞ்ஜநாம்......ஸர்வஸ்வரூபகாம் மஹாகுண்டலிநீம்" என்றும்; "வைஷ்ணவீக் ஸ்கந்தமாதரம்......சிவாம்" எனக்கிளத்தி ([illegible]) "மஹாலக்ஷ்மீசவித்மஹே ஸர்வஸித்தீசதீமஹி | தந்நோ தேவீஃப்ரசோதயாத் |" எனுஞ் சிவசத்தி காயத்திரியையுந் தெரிக்கின்ற தேவ்யுபநிஷத் ([illegible]) "மஹாகாருண்யரூபிணீம்......மந்த்ராணும் மாத்ருகாதேவீ சப்தாநாம்ஜ்ஞாநரூபிணீ | ஜ்ஞாநாநாம் சிந்மயாதீதா சூந்யாநாம் சூந்யஸாக்ஷிணீ | யஸ்யாஃபரதரம் நாஸ்தி சைஷா துர்க்காப்ரகீர்த்திதா |" என்றுஞ் சிவசத்தியை விளக்குகின்றன. இவ்விளக்கத்திற் சிவத்தை நீங்காமல் அக்கினியிற் சூடுபோலத் தாதான்மியமாயுள்ள சிவசத்தியின் உருமகிமைகளும் வெளியாயின. "யஸ்யாஃ பரதரம் நாஸ்தி" எனவெழுந்து முடியும்வாக்கியத்தைக்கொண்டு அத் தாதான்மியத்தை வலியுறுத்திக்கொள்க. இந்நியாயம்—

([illegible] |
[illegible] |
[illegible] | )

"அபரே துபராசக்திச் சிவஸ்யஸமவாயிநீ |
தாதாத்ம்யமநயோர்ந்நித்யம் வஹ்நிதாஹகயோரிவ |
அதஸ்தத்தர்ம்மதர்ம்மித்வாத் பராசக்திஃ பராத்மநஃ |"

எனுஞ் சைவபுராண வாயுசங்கிதை வசனத்தினு மறியவுள்ளது. பொருள் :—'பராசத்தி சிவனுக்குச் சமவாய சம்பந்தத்தோடுற்றவள். அக்கினியுஞ்சூடும்போலப் பராசத்தியும் பரமான்மாவுங் குண குணித்தன்மையர்.' எனவாம். மேற்போந்த பஹ்வ்ருசோபநிஷத்தில் வெளிப்பட்ட பராசத்தியைக்குறித்துச் சுவேதாச்வதரோபநிஷதம்—

([illegible] | )

"பராஸ்யசக்திர்விவிதைவச்ரூயதேஸ்வாபாவிகீஜ்ஞாநபலக்ரியாச |"

என்று கூறுகின்றது. பொருள் :— ' அம் மகேசுவரருடைய பராசத்தி சுவாபாவிக ஞானசத்தியும், பலசத்தியும், கிரியாசத்தியு மாகப் பலதிறப் படுவனெனல் கேட்கப்படும் '

எனவாம். இச்சுருதியாதி பிரமாணங்கட்குமுன்னே வைணவர்கள் வரைந்துவைத்த இழிப்புரைகள் யாங்ஙனந் தலைதூக்குமென்க ! தென்கலை வைணவரென்பாரால் ஜீவகோடிகளி லொருத்தியாகக்கொளப்பட்ட இலக்குமியென்பாளை வணங்குநர் பெறும் பேறு சிறிதேயென்பதூஉம், அவ்விலக்குமிக்கு மிலக்குமியென மஹாலக்ஷ்மீயாய், ஸர்வலக்ஷ்மீயாய், ஸர்வஸ-ுபகையாய் விளங்குஞ் சிவசக்தியைவணங்கிப் பெறும்பேறு பெரிதேயென்பதூஉங் கூறிப் போந்த சுருதிகளிற் பெறுக. பார்வதி திருப்பெயர் (ஸவ-ுஙஂமஹா) " ஸர்வமங்களா " என நிகண்டு - அமரஸிம்ஹம் நிகழ்த்தலுஞ் சுருதிப்பிரமாணமாமென்க. சிவசத்திமகிமையை வழங்குகின்ற உபநிஷதம்—தேவ்யுபநிஷத்தெனவும், அச்சத்தி திருப்பெயர் தேவியெனவும், தேவிபூஜையென்பது சிவசத்தியாராதனை யெனவும் வழங்கப்படுமாற்றானே ஜீவர்களாகிய தேவதைகட்குத் தேவனாகியுள்ளோன் அத்தேவி தலைவனாகிய சிவனென்றலு மேற்புடைத்தன்றோ? தக்ஷிணாமூர்த்யுபநிஷத்தும் " ப்ரகாசதேவாஸதேவ ஃ " எனும் வசனத்தாற் சிவனைத் தேவனென்பதுங்காண்க. ஜீவர் தேவரெனப்படுங்கால், சிவன் மஹாதேவனெனப்படுவன். ' தேவி ' யென்பது இலக்குமிதேவி, சீதாதேவி யென்பவற்றில் விசேடண மொழியா யெய்தலுங் காண்க. சித்தர் முதலிய ஆன்றோ ரநுஷ்டித்த தேவிபூஜை சிவசத்தியாராதனையே யன்றி விட்டுணுபத்தினியாராதனை யன்று. அவர் சிவகுமாரனாகிய ஸ்ரீ ஸ்கந்தநாதனை வழிபட்டுய்ந்தவாறு விட்டுணுவை வழிபட்டுய்ந்தவருமல்லர். சிவசத்திநாயகனுக்குஞ் சிவகுமாரனுக்குந் தொண்டிழைப்போரே பெருஞ் சம்பத்துடையராவ ரென்றற்குச் சிவாலய குமாராலயங்களையே விளக்கிக்கொண்டுவருந் தேவகோட்டைத் தனபதிகளே யின்ஞான்று பிரத்தியக்ஷ சாக்ஷியாயுள்ளார். ஐச்வர்யத்தைக் கொடுத்தாள்வோன், ஐச்வர்யமுளோ னெனும்பொருளைத் தருமொழியே ' ஈச்வரன் ' என்பதாகலின் அம்மொழிக்குரிய சிவனும், சிவகுமாரனும், ஈச்வரியெனுஞ் சிவையுமே அந்த ஐச்வர்யத்தைக் கொடுத்தருள்வோரென்பதையும் ; அதர்வணத்தை யடக்கிக்கொண்ட புராதன மூன்று வேதங்களின் மத்தியில் வேத இருதயமா யிருக்குஞ் ' சிவ'

சப்தம்—மங்களம், வசியமென வாதலேயு மீண்டுக் கருதிக்கொண்டு, சிவோபாஸனேயானது செல்வநல்காது பிக்ஷையெடுக்கச்செய்யு மெனுந் தீயோர்மாற்றங்களேச் சுருதி கூறுமாறு தீயிலிட் டெரித்திடுக. சிவசப்தத்தைக் கூறக்கூடாதெனுங் கருத்தாற் சிவகங்கையெனு மூரின்பெயரைக் "குறுணிக்குண்டு" எனக் குழூஉக்குறியாகக் கூறித்திரியும் அமங்கல வைணவர், பரத்துவபோதக சதுர்த்த சிவசப்தத்தைத் தம் மதச்சார்பாகக் கிரகிப்பது திருட்டுநீர்மையெனற்குச் சிவனெனும்பெயர் அவருளவருக்கு மில்லாமையே தகுசான்றென்க. அவ்வாறே ஈசானன், ஈசுரன், பரமேசுவரன், சம்பு, உருத்திரனென்பனவு மென்க. நாரணன் மூதேவிக்களித்த வரவிவரம் இக் காண்டத்தின் ௯-ம் அத்தியாயமாகலின் அதனேயும் ஈண்டு மறவற்க. சிவபூஜை யில்லாதவன் மனேயிலும் புகலொண்ணுதென்பதற்காய பிரமாணம் இந்நூலின் ௫௫-ம் பக்கத்திலும், "எவனுடைய நெற்றியில் விபூதியில்லேயோ, உடம்பில் உருத்திராக்கமில்லேயோ, எவனுடைய கிருகத்திற் சிவபூஜையில்லேயோ அந்த விப்பிரன் நாய்மாமிசத்தைத் தின்கிறவனிலுங் கீழ்ப்பட்டோனுவன்" என்பதற்காய பிரமாணம் ௧௮௪-ம் பக்கத்திலும் வந்துள்ளன.

## ௨0. சிவனேயும்விண்டுவையுஞ்சமப்படுத்தல் நரகத்தை நல்கும்.

"சிவமத்வைதம் சதுர்த்தம்" என்ற சுருதிப் பொருளேயே "ஏகமேவாத்விதீயம்ப்ரஹ்ம" என்றுங் கூறவந்த சுருதியின்படி அத்விதீயமாயுள்ள கடவுளொருவனே யன்றி யிருவரெனல் கூடாது. அக் கடவுள் அகலம், நீளம், கனமெனு மூன்றிலக்கணத்துடன் யாதொரு பொருளிருக்குமாறு சிவன், தேவி, குமாரனெனச் சத்து, சித்து, ஆனந்தமெனு மிலக்கணத்தால் விளங்குகின்றனன். இக் கடவு ளெத்திற நியாயத்தாலுஞ் சிவனே யென்பதும் இந்நூற்புலம் மிகுதியும் வெளியாயிற்று. அன்றியும்—

(பராத்பரதரம் ப்ரஹ்ம தத்பராத்பரதோ ஹரி꞉ । தத்பராத்பரதோஹீஶஸ் தஸ்மாத் துல்யோதிகோ நஹி ।) "பராத்பரதரம் ப்ரஹ்ம தத்பராத்பரதோஹரி꞉ | தத்பராத் பரதோஹீசஸ் தஸ்மாத் துல்யோதிகோநஹி |" எனுஞ் சரபோபநிஷத்து வாக்கியமோ 'பரத்துக்குப்பரம் பிரமன், அவனுக்குப்பரம் ஹரி, அவனுக்குப்பரம்

ஈசன், அவனுக்குச் சமானமும் அதிகமுமில்லை.' எனும் பொருளைத் தருகின்றது. ([illegible]) "தமீச்வராணாம் பரமம்மஹேச்வரம்......நதத் ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே" எனுஞ் சுவேதாச்வதரோபநிஷத்து வாக்கியமோ 'அம் மஹேச்வரனுக்குச் சமானமானவரும் அதிக மானவருமிலர்.'

எனும் பொருளைத் தருகின்றது. "அறிவுஞ்சிவனுமொன்று" எனுமே "அரியுஞ்சிவனுமொன்று" எனப் பிதற்றிக்கொண்டு இப் பெருந்தகைக் கடவுளையும், விட்டுணுவையுஞ் சமமாகநினைத்தல்—இயமானனையும், வேலைக்காரனையுஞ் சமமாகநினைத்தல் கூடாதென் பதை யுணரா மூடமாதலோடு நரகத்தையு நல்கும். இந்நியாயத் தைச் சூதசங்கிதையின் பரமவிஞ்ஞானமுரைத்த வத்தியாயம்—

"ஆற்றல்சேருருத்திரப்பிராற்கரியையயனை யொப்பதிகமென்றுரைப்போர்
பாற்றரிதாயகொடுநிரயத்துப்பற்பனுண்மூழ்குவருண்மை"

என்றும், வேதார்த்தமுரைத்த வத்தியாயம்—

"மாசில் வேந்தனைத் தாசனு மதிக்கின்வாழ் வுண்டோ"

என்றும், கூர்மபுராணம்—

([illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ॥)

"நப்ரஹ்மாத்யைஸ்ஸமம்ப்ரூயாச் சக்திபிச்சாபிபார்வதீம் |
ப்ரூயாத்யதிஸமம்ஸம்பும் ப்ரஹ்மவிஷ்ண்வாதிபிஸ்ஸுரை: |
ய: கச்சித்தாமஸாவிஷ்ட: கதாசிந்நைவதம்ஸ்ப்ருசேத் |
ததாதேவீம்சகிரிஜாம் த்விஜச்ரேயோர்த்தவாக்வதேத்||"

என்று மியம்புதலிற் றெளிக. இவ் வடமொழி:—'பிரம விட்டுணுமுதலிய தேவரோடு சிவனையும், இதரசத்திகளோடு பார்வதியையுஞ் சமத்துவங் கூறலொண்ணது : சமஸ்ததேவர்கட்குஞ் சிவனையுஞ் சமஸ்த சத்திகட்கும் பார்வதியையு முயர்த்திக்கூறல்வேண்டும்: எவன் தமோபூதனுய் இம்முடிபுக்கு வேறுகக் கூறுவனே அவன் (பதிதனுய்த்) தீண்டத்தகாதவனுவன்' எனும் பொருளைத் தரும். சூதசங்கிதையிற் போந்த "உருத்திரப்பிரான்"—குணருத்ர

மூர்த்தி. இம் மூர்த்திக்கே அரியயனென்பாரை யொப்பாக வுரைப்போர் நரகாழ்வாரென்றக்கால் ச-வது தெய்வத்தை அங்ஙனமுரைப்பாருறுகணும் அளவிடற்பாற்றோ! மஹாஸ்காந்தத்துத் தக்ஷகாண்டத்தின் க-ம் அத்தியாயத்து உகூ, நூ0, நூக-ஞ் சுலோகங்களி னருத்தம் :—

"புத்திபேதமற்று விஷ்ணுமுதலிய வெங்களைச் சகதீசனுக்குச்சமானமாக எவனுரைக்கின்றனனோ அம் மஹாபாதகன் அருநரகே யனுபவிப்பான். எங்களை அப் பரமேசுரனுக்கு அடியரென்றே யுரைக்கும் ஏனையோர்பால் யாங்கள் பெருநேயங் கூர்கின்றனம்: மற்றைப்பாதகரை விரோதிகளாகவே நினைக்கின்றனம்: மஹேசுவரனுன சம்புவே பதி, யாங்களே பசுக்கள்."

என அவ்விஷ்ணுவேயியம்பினன் எனவாம். இத்தீர்வையுணர்ந்தே இரட்டையரும் தமது தைவீகவுலாவில்—

"பொருந்தி விடையாகப் பூந்துழாய் மாலை
விரும்பி நடத்தினர் வேறார்—அரன்பெருமை
யின்னும் பலகோடி யில்லையோ யாமிருந்து
சொன்ன பொழுதே தொலையுமோ—உன்னரிய
மூவா முதலா முதல்வனையு மூவுலகிற்
சாவார் பிறப்பார்க டங்களையும்—தேவாக
வொக்க நினைவாருக் கல்லவோ வோரேழு
மிக்க நரகம் விதித்ததுகாண்"

என வருளிச்செய்தனர். மூவுலகு=சுவர்க்கம், மத்யம், பாதலம். "ஸம்ஸாரதுக்கநாசமுக்திப்பிராப்தியின்பொருட்டு விஷ்ணுமுதலிய ஸர்வதேவர்களையும்விட்டு எஞ்ஞான்றுந் தியேயனாகவுள்ள சிவனையே தியானிக்கவேண்டும்" எனும் ஒண்பொருடரத்தக்க சுருதியும் இந்நூல் கஅகூ-ம் பக்கத்தில் வந்துளது. இப்பொருளையே பயக்கத்தக்கனவாய் அதர்வசிகையில்—

(ஶிவஏகோ த்யேய: ஶிவங்கர: ஸர்வமந்யத்பரித்யஜ்ய) "சிவஏகோத்யேயச் சிவம்கரஸ் ஸர்வமந்யத்பரித்யஜ்ய" எனும் வாக்கியங்களுமுள்ளன. அருத்தம் :—'அந்நியமானயாவையும்விட்டு, சிவமெனும்பெற்றியால் மங்களத்தைச் செய்யுஞ்சிவனையே தியானிக்க வேண்டும்' எனவாம்.

([grantha text, partly illegible] |
[grantha text, partly illegible] ||)

"அந்தந்தமஃ ப்ரவிசந்தி யேஸம்பூதிமுபாஸதே |
ததோபூயஇவதேத மோயஉஸம்பூத்யாக்ரதாஃ ||"

எனும் ஈசாவாஸ்யோபநிஷத வாக்யவாயிலாக 'ஈசனைவிட்டு, (ஜடமாகிய) பிரகிருதியை யுபாஸிப்போரும், உற்பத்தி (நாசம்) உள்ள தேவதைகளை விரும்புவோரும் பேரிருளிற் பிரவேசிக்கின்றனர்' எனும்பொருளறியப்படுதலின், கிருஷ்ணன்வாயிலாகவும் பிரத்தியக்ஷ உற்பத்திநாச தேகியாயிருக்கும் விஷ்ணுவை உபாஸித்தலாலே ஆணவமெனும் அஞ்ஞான இருள் நீங்காதென்பதுஞ் சித்திக்கின்றது. அடியிற்காட்டப்படுந் தாயுமானசுவாமிகள் பாடலும் இப்பொருளையே பயப்பதாகும். ஸம்பூதி=உற்பத்தியையுடையது.

"ஆதலின் முத்தி விரும்பினோ னெனையு மாழியங் கரதலத் தனையுங்
காதலி யாமற் பரசிவ னடியே கருத்துறத் தியானிக்க வேண்டுஞ்
சாதலை யடையாத் தன்பிர சாதஞ் சார்ந்தவன் பாலென்றும் பரமன்
மேதகு மூர்த்தி சொரூபமா யான்ம சொரூபமாய் விளங்கிவை குவனால்."

எனச் சூதசங்கிதையின் சாமசாகோபநிடத தாற்பரிய முரைத்த வத்தியாயத்திற் பிரமதேவன் கூறுங் கூற்றாக வருவதும மேலைச் சுருதிபொருளாய் நிலவுதல் காண்க.

(ஸத்ராப்யஶக்தோஹரம் விஷ்ணும்ப்ரஹ்மாணமர்ச்சயேத் |
"அதராப்யசக்தோதஹரம் விஷ்ணும்ப்ரஹ்மாணமர்ச்சயேத் |"

எனுங் கூர்மபுராணத்து இறுதிஅத்தியாய வசனமும் ஈண்டுக் கருதத்தக்கதே. பொருள்:— '(திரிகுணரஹித சிவோபாஸனையைச் செய்யவேலாத) அசக்தன் உருத்திரனையும், விஷ்ணுவையும, பிரமனையும் வழிபடுக' எனவாம். இவையற்றை யுணர்ந்து வீடுபேற்றிற்கு முயல்வோர் விட்டுணுவை நினைக்கவேமாட்டார். இதுவே சைவசன்மார்க்க மென்பதைப் "பெம்மா னுன்னையல்லாற் பெரி தேத்த மாட்டேனே" எனுந் தேவாரமும், "உள்ளேன் பிற தெய்வ முன்னையல் லாதெங்க ளுத்தமனே" எனுந் திருவாசகமும், பிறவு முணர்த்துவனவாயின. இந்நூலின் ௧௬௪, ௬௮-ம் பக்கங்களிற் காண்க.

"அல்லலார்ந் தொழில்ப டைத்தே யடிக்கடி யுழுமெ லெத்தே
மல்லன்மா ஞாலங் காக்க வருபவர் கடவு ளென்னின்
நேர்ல்லையாம் பிறவி வேலை தொலைந்திடா திருணீங் காது
நல்லது மாயை தானு நானென வந்து நிற்கும்."

எனுந் தாயுமானசுவாமிகள்பாடலும் இங்ஙனமுணரத்தக்கது. விட்டுணுவைச் சிவனடிமையாக்கொண்டு பணிதலும் மனமிறவா நனவினர் மாட்டேயாம். விட்டுணுவையுஞ் சிவனையுஞ் சமஞ்செய்யும் பாதகம் இன்னோர்மாட்டு இன்று.

## உக. சிவநின்மாலியந் தூயது.

சிவமஹாபுராணம்—

(ஸம்போர்நிர்மால்யகம்சுத்தம் புஞ்ஜீயாத்ஸர்வதாத்விஜா: |
அந்யதேவஸ்யநைவேத்யம் புக்த்வாசாந்த்ராயணம்சரேத் ||)

"சம்போர்நிர்மால்யகம்சுத்தம் புஞ்ஜீயாத்ஸர்வதாத்விஜா: |
அந்யதேவஸ்யநைவேத்யம் புக்த்வாசாந்த்ராயணம்சரேத் ||"

எனக் கூறிற்று. பொருள் :— 'சம்புவின் நின்மாலியம் பரிசுத்தமுள்ளது. (அதனைத் தகுதியுள்ள) பிராமணர் எப்பொழுதுமுண்ணலாம். அந்நிய தேவர்களின் நைவேத்தியங்களை யுண்டக்கால் சாந்திராயண விரதாசரணை செய்யவேண்டும்.'

எனவாம். ஆகவே தூய சிவநின்மாலியமே புசிக்கத்தக்கது: மற்றைப் பாசபசுக்களாகிய தேவர்கள் நைவேத்தியம் புசிக்கத் தகாததென்பது பெற்றாமன்றே. இது கருதியே—

(அபிதீபாவலோகம்மே நோபயுஞ்ஜ்யாந்நிவேதிதம் |)

"அபிதீபாவலோகம்மே நோபயும்ஞ்யாந்நிவேதிதம் |"

என்பது வைணவர்பாகவதத்தும் வரையப்பட்டதுபோலும். இது கக-ம் ஸ்கந்தத்தின் கக-ம் அத்தியாயத்து ௩௩-லுளது. பொருள் :— 'எனக்குச் சமர்ப்பித்த பதார்த்தங்களில் தீபமும் பிறர் உபயோகித்தல் கூடாதென்று கிருஷ்ணன் கிளத்தினன்' என்றபடி. எனவே, கிருஷ்ணனுக்கு நிவேதித்த அன்னமுமுண்ணலாகாதென்பதுஞ் சித்தித்தது. இவ்வன்னம் க்ஷேமகரமானதன்றென்பது—இந்நூலி னிறுதிக்கட்சேர்க்கப்படும் கர்னல் ஜேம்ஸ் டாட் என்பாரெழுதிய ராஜஸ்தானம் எனும் ஆங்கிலமொழிப்புத்தகத்தின் 551-ம பக்கத்து வசனங்களி னறியப்படுவதாயிற்று. சிவநின்மாலியம் நலந்தருமெனற்குச் சுருதியுண்டுகொலோ வெனின்,—பஸ்மஜாபாலோபநிஷத்தில்—

([illegible])

"அஹரஹரப்யர்ச்ய விச்வேச்வரம் லிங்கம் தத்ர ருத்ரஸூக்தைரபி ஷிச்ய தத்தேவஸ்நபநம்பயஸ் த்ரிஃபீத்வா மஹாபாதகேப்யோ முச்யதே நசோக மாப்நோதி முச்யதே ஸம்ஸாரபந்தநாத் | ததநப்யர்ச்யநாச்நீயாத் பலமந்நமந் யத்வாய தச்நீயாத் ரேதோபக்ஷீபவேத்"

எனும் வசனங்க ளுளவென்க, பொருள் :— 'நாடோறும் விசுவேசுவர லிங்கத்தை யர்ச்சித்து அவ்விலிங்கத்தில் உருத்திரசூத்தங்கொண் டபிடேகஞ் செய்து, அவ்வபிடேகநீரை மும்முறை குடிப்போன் மாபாதகங்களினின்று நீங்குகின்றனன் : அவன் சோகத்தையடையான் : குடும்ப பந்தத்தினின்றும் விடுபடுகின்றனன் : எவரும் அவ்விலிங்கத்தை யர்ச்சியாம லுண்ணலாகாது : பழத்தையேனும், அன்னத்தையேனும், மற்றெதனையேனும் புசிக்கொண் ணாது : சிவநிவேதிதமிலாது அவையற்றை யொருவன் புசிப்பனேல் அவன் இரேதசையே புசித்தவனாவன்.'

எனவாம். சிவபத்தியுள்ளார் சிவநின்மாலியம் புசிக்கொணா தெனும்விதி — சண்டுப் புசிக்கலாமென்றதை விரோதிக்குமோ வெனின்,—அக்கினி சுத்தவஸ்துவாயினு மதனைச் சாமானியர் தீண் டுதல்கூடாது : திறனுடையர் தீண்டுவரெனு நியாயமே அந்நின்மா லிய விடயத்துங் கோடற்பாற்றாகலின் விரோதியாதென்க. அஃ தசுத்தமாகலிற் புசிக்கொணாதென்றதென அயோக்கியர்கூறின் அக் கூற்றை, கடைவருணத்தினர் மறையோதொணா தென்றதூஉம் மறை அசுத்தமென்பது கொண்டோவென்று கடாவி மறுக்க.

## உஉ. பிராமணர்க்குத்தெய்வம்சிவன்.

சாமவேதப்பிராமணம்—

([illegible])

"த்வம்தேவேஷு ப்ராஹ்மணோஸி அஹம்மநுஷ்யேஷு ப்ராஹ்மணோஹி ப்ராஹ்மணமுபதாவதி உபத்வாதாவாமி"

என்றிமிழ்கின்றது. பொருள் :—'உருத்திரனெனும் நீ தேவர்களுட் பிராமணன் : நான் மனிதர்களுட்பிராமணன் : பிராமணன் பிராமணனைத்தான் வழிபடுவன் : ஆதலின் யானுன்னை வழிபடுவேன்' எனவாம். இச்சுருதியைத்தழீஇ—

(விப்ராணாம்தைவதம்ஶம்பும் க்ஷத்ரியாணாம்துமாதவ꞉ ।
வைஶ்யாநாந்துபவேத்ப்ரஹ்மா ஶூத்ராணாம்கணநாயக꞉॥)

"விப்ராணாம்தைவதம் சம்பும் க்ஷத்ரியாணாந்துமாதவ꞉ |
வைச்யாநாந்துபவேத்ப்ரஹ்மா சூத்ராணாம்கணநாயக꞉ ||"

என வெழீஇய மநுஸ்ம்ருதிச் சுலோகம்—'பிராமணர்க்குத் தெய்வம் சிவன், க்ஷத்திரியர்க்குத்தெய்வம் விஷ்ணு, வைசியர்க்குத் தெய்வம் பிரமன், சூத்திரர்க்குத்தெய்வம் கணநாயகன்.'

எனும்பொருள் பயப்பதாயிற்று. கணநாயகனென்றது மருதநிலக்கடவுளான இந்திரனையென்ப. பிராமணர்க்குத்தெய்வம் சிவனென்றதனால் ஏனையோரும் வழிபடவுள்ளோன் அவனென்பதும் அறிக. இவ்வேதுக்களானே விட்டுணுவைப் பெரியதெய்வமெனக் கொள்வார் யாவரும் பிராமணசிரேட்டரென்றற் கிடனின்றென்பது மேற்பட்டதன்றோ? தேவர்களுள் நாராயணன் க்ஷத்திரியனெனு நியாயம்—'மண்ணை' என்றற்றொடக்கத்துப்பத்தில் " திருவுடைமன் னரைக்காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்" எனுஞ் சடகோபனதுகூற்றினும் பெறுக. பெறுதலின், நாராயணன் அவனிச்செல்வ அரசரைப்போலுளன் : சிவன் அருட்செல்வமாமுனிவரைப்போலுளன் : அரசர் முனிவரை வணங்குவர் : முனிவர் அரசரைவணங்காரெனு நியாயங்கண்டபடி சிவனை வணங்குவோன் நாராயணனென்றற்கு, பிருகு ததீசியெனு முனிவர்களை வைகுண்டராஜனும், அகஸ்தியராதி முனிவர்களை இராமனும், தூர்வாஸர் உபமந்யுமுதலிய முனிவர்களைக் கிருட்டிணனும் இனிது வணங்கினமையும், அம்முனிவர்க ளவர்களை வணங்காமையுந் தகுசான்றென்பதூஉம் பெறுக. நாராயணனையுஞ் சிலமுனிவர் வணங்கினரென்பதுளதாயின், அன்னோர் சிவ்வழிபாடுள்ள சிரேட்ட முனிவராயிருந்தா ரல்லரென்க. தேவஇருடிமுதலிய இருடிகளனைவருந் தன்னை வழிப்பட்டுய்யுமாறு மகாஇருடியெனும் பெயரோடு விளங்குகின்ற சிவபெருமானே முனிவரடையும்பரம்பொருளென்

பது கணித்து "முக்கண்ணராய்க் கரியகழுத்தராய் மிக்க சாந்தமுளோராய்ச் சமஸ்தசாக்ஷியாயிருப்பவரை முனிவன் தியானித்து இருளைக்கடப்பன்" எனும்பொருட் சுருதியும் இந்நூலின் உ௫௰, உ௫௧-ம் பக்கங்களிற் காட்டப்பட்டதன்றோ? தூர்சநோபநிஷத்தின் ௬-ங் கண்டத்தில்—

(𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌰𑍇𑌤𑌂 𑌵𑌿𑌰𑍂𑌪𑌾𑌕𑍍𑌷𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌸𑍋𑌽𑌹𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌦𑌰𑍇𑌣𑍈𑌵 𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌦𑍍𑌯𑍋𑌗𑍀𑌶𑍍𑌵𑌰𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥)

"ஊர்த்வரேதம்விரூபாக்ஷம் விச்வரூபம்மஹேச்வரம் |
ஸோஹமித்யாதரேணைவ த்யாயேத்யோகீச்வரேச்வரம்||"

எனவுள்ளவசனம் 'ஜிதேந்திரியராய், நெற்றிக் கண்ணையுடையவராய், விசுவரூபராய், யோகீசுவரர்க்கெல்லாம் ஈசுவரராயிருக்கின்ற மஹேசுவரரை அன்புடன் (ஸோஹம்பாவனையாக) அவன் நானென்று தியானிக்கவேண்டும்.'

எனும்பொருளைத் தருதலுமறிக. இத்திறப்பிரமாணங்களானும் சிவன் அசுத்தனென்றும், சிவனை வணங்கலாகாதென்றும் படைத்துமொழிந்த பாதகர்மாற்றம் பயன்படா தொழிவதாயிற்று.

## உ௩. சருவகன்மாரம்பங்களிலுஞ்சிவசிந்தனையே செய்யத்தக்கது.

அசுசி போக்கிச் சுசிசெய்யு மாற்றலுள்ள நெற்றிக்கண்ணினையுடைய சிவனைச்சிந்தித்தலே சருவகன்மாரம்பங்களிலுஞ் செய்யத்தக்கது. இதனை, சாமவேதமானது பிரதமமந்திரத்தில்—

(𑌤𑌪𑌶𑍍𑌚𑌤𑍇𑌜𑌶𑍍𑌚) "தபச்சதேஜபச்சதே" என்று தொடங்கி, (𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑌿𑌪𑌤𑌯𑍇𑌨𑌮𑌃) "கர்மாதிபதயேநமஃ" என்று முற்றும் பிரஸ்தாபித்து, (𑌤𑌤𑍍𑌰𑌵𑌿𑌰𑍂𑌪𑌾𑌕𑍍𑌷𑌾𑌸𑌿) "தத்ரவிரூபாக்ஷாஸி" எனுமாற்றானும், இதற்கு உபப்ரம்ஹணமாகச் சைவபுராணம்—

(𑌅𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑍋𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌂𑌗𑌤𑍋𑌽𑌪𑌿𑌵𑌾 ।
𑌯𑌸𑍍𑌮𑌰𑍇𑌤𑍍𑌵𑍈𑌵𑌿𑌰𑍂𑌪𑌾𑌕𑍍𑌷𑌂 𑌸𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌶𑍍𑌶𑍁𑌚𑌿𑌃॥)

"அபவித்ரம்பவித்ரோவ ஸர்வாவஸ்தாங்கதோபிவ |
யஸ்மரேத்வைவிரூபாக்ஷம் ஸபாஹ்யாப்யந்தரச்சுசி:||"

எனுமாற்றானு மறிந்துகோடலிற் சர்வகர்மாரம்பாந்தங்களி லும் ஆராதிக்கப்படுவோன் சிவனென்பது மறிந்துகொள்க. இத் திறப் பிரமாணங்களானே 'நித்யகர்மமானசந்தி விஷ்ணுபாரம்பம் பெறும்' எனும் வைஷ்ணவர்வாசகமும் இழுக்குடைமையாயிற்றெ ன்க. சுரர், நரர், அசுரர்முதலிய யாவர் முகத்தும் இரண்டு கண்ணே யிருப்ப, சிவன்முகத்து விரூபாக்ஷமெனு நெற்றிக்கண்ணொன்று விசேட அங்கமாயிருத்தலின் அதுகணித்து அவனே பிரதானக் கடவுளென்பதை "நயனம்பிரதானம்" எனுநியாயமு நனிநாட்டுவ தாகும். அக்கண் தன்கண்ணுமாகவொருவன் பாவித்து, அதுகொ ண்டு நோக்குழி, நோக்குறு பொருளெல்லாந் தூயனவாமாகலிற் சர்வகர்மாரம்பங்களிலும் விரூபாக்ஷ சிவசிந்தனைசெய்ய வேதம் விதித்ததென்பதூஉம் இவணையறியற்பாற்றே. இவ்வித நியாயங் களையும், சிவசிந்தனை யெஞ்ஞான்றுஞ் செயப்படுதல்போல விஷ்ணு சிந்தனை செயப்படுவ தன்றென்பது *பிரதோஷவேளையில் விஷ் ணுநாமோச்சாரணஞ் செய்யொண்ணாதென்பதனால் வலியுறுமென் பதையும், சிவனை முன்னிட்டுச் செய்யப்படாத வைதிககர்மம் பயன் படாதென்றற்குத் தக்ஷயஜ்ஞநாசம் பெருஞ்சான்றென்பதையும்—

"சிவசிவ வென்கிலர் தீவினை யாளர்
சிவசிவ வென்றிடத் தீவினை மாளுஞ்
சிவசிவ வென்றிடத் தேவரு மாவர்
சிவசிவ வென்றிடச் சிவகதி தானே."

"புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணலை தைக்கண் டருள்புரி யாநிற்கு
மெண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை
நண்ணறி யாம னழுவுகின் றாரே."

என்று திருமந்திரத்திற் கூறப்படு சாதங்களையு முணராது சோணட்டிலிருக்குஞ் சில பஸ்மதாரிகள், சுபகர்மங்களில், "கோவி ந்தா கோவிந்தா" என்று கூவுகின்றனர். இக்கூவுதல்—சென்னை முதலியவிடங்களிற் பிரேதத்தைக்கொடுபோம்போது சில புபுக்ஷி தர் வாயிலெழுவதென்பதை அவரறியார்போலும்.

இனியேனுமவர் சுபாசுபகர்மங்களில், "ஸதாசிவோம்" "பார் வதீபதயேநமஃ" "பரமேச்வராயநமஃ" "மஹாதேவாயநமஃ" "சங்கராயநமஃ" என்பவற்றொதனையேனும் மும்முறை மொழிந்

* இவ்வரலாற்றினை உ௩அ - ம் பக்கத்திற்காண்க.

துய்யக்கடவர். ஏனைய பிரசித்த சிவநாமங்களி லெதனை மொழியி னும் இனிதேயாம். "திருச்சிற்றம்பலம்" என்றலுமாம். அங்ஙனம் அனேக தேவர் முனிவர் முதலினோரும், அனேக அபர ஸுப்ரஹ்மண்யர்களுஞ் சேவிக்க விளங்காநின்ற பர ஸுப்ரஹ்மண்யத்தின் அனந்தகல்யாண குணைச்வர்யம் தமக்கெஞ்ஞான்று முண்டாமாறு "ஸுப்ரஹ்மண்யோம்" "வல்லீதேவஸேநாபதயேநமஃ" "குமாராயநமஃ" என்பனவும் மொழியத்தக்கனவே. "வேலும் மயிலும்" என்பதூஉம் விசேடபலன் பயப்பனவற்று ளொன்றே. பர ஸுப்ரஹ்மண்யத்தின் உருவம்பெற்றவர்களே அபர ஸுப்ரஹ்மண்யர்கள். அவர்க ளனேகரென்பதை—

"ஓரெழுகோடியைங்கரர்கோடிவயிரவரொன்பதுகோடி [டி
சீர்கெழுமெண்டோணீலிகண்மயின்மேற்செல்லும்வேலுழவரெண்கோ
யோர்பெறுமியக்கரொன்றரைக்கோடியிசைநவில்கின்னரர்கோடி
கூர்நுதிப்பிறைப்பற்புயங்கமோர்மூன்றுகோடிதானவரிருகோடி."

எனுங் காசிகாண்டத்து ௬௨-ம அத்தியாயத்துக்கில் "மயின் மேற் செல்லும்வே லுழவரெண் கோடி" எனும் மொழிகளானு முணர்க.

## உ௪. ஜீவான்மாக்கள் அழிவற்றுள்ளனவாகலின் அவை சிவகதியையவாவும்பெற்றியன.

சாந்தோக்யோபநிஷத்தின் ௬-ம் பிரபாடகத்துப் கக-ங் கண்டத்தில் (நஜீவொம்ரியத) "நஜீவோம்ரியத" எனவரு வசனம 'ஜீவனழிவற்றது' எனும் பொருளைத் தருகின்றது. அழிவற்றது என்றலின் ஆக்கப்படுவதுமற்றது என்பதூஉம் போதரும். அது "நஜாயதே ம்ரியதே" எனுங் கடோபநிஷத்தின் உ-ம் வல்லீவசனத்தால் வலியுறுத்தப்படும். அன்றியும் இது—

(𑌜𑍍𑌞𑌾𑌜𑍍𑌞𑍌 𑌦𑍍𑌵𑌾𑌵𑌜𑌾𑌵𑍀𑌶𑌨𑍀𑌶𑌾𑌵𑌜𑌾 𑌹𑍍𑌯𑍇𑌕𑌾 𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌭𑍋𑌗𑌾𑌰𑍍𑌥𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 । )

"ஜ்ஞாஜ்ஞௌத்வாவஜாவீசநீசாவஜாஹ்யேகா போக்த்ருபோகார்த்தயுக்தா |"

எனுஞ் சுவேதாச்வதரோபநிஷத் வசனத்தானும் வலியுறுத்தப் படுகின்றது. பொருள் :— 'அறிவுளானெனும் ஞன்னும், அறிவிலா

னெனும் அஞ்ஞனுமாம் இருவரும் பிறவாதவர்களாகிய ஈசனும் அநீசனுமாவர். பிறவாத ஒருத்தி போக்தாக்களுக்குப் போகத்தின் பொருட்டுக் கூடுகின்றனள்' எனவாம். அப்படிக்கூடுகின்றவள்— க்ஷரமெனும் ஜகத்கார்யத்திற்குப் பிரதானமெனுங் காரணமாயிருக் கின்ற மாயையேயென்க. ஆயின், ஜீவனுக்குப் பிறப்பிறப்பெனும் இருதிறமுரைத்தல் யாங்ஙனமெனின்,—மாயாகாரிய சூக்கும, தூல வுடம்புகளைப் பெறுதலும் இழத்தலுமே அவ் விருதிறமுமென்க. 'ஆன்மாக்கள் பல' என்பது வெளியாக "ஆன்மாக்கள்யாவும்" எனும் அருத்தத்தில் (ஸர்வேஷ்வாத்ம) "ஸர்வேஷ்வாத்ம" என்று மேலைய சாந்தோக்யோபநிஷத்தின் ரு - ம் பிரபாடகத்துப் கஅ - ங் கண்டங் கழறிற்று. அரிசியில் உமியைப்போலவும், செம்பிற் களிம் பைப் போலவுஞ் சீவான்மாவுக்கு மலபந்தம் ஸஹஜமாகவுண் டென்பது—

(தண்டுலஸ்ய யதா சர்ம யதா தாம்ரஸ்ய காளிமா ।
நஶ்யதி க்ரியயா விப்ர புருஷஸ்ய ததா மலம் ॥
ஜீவஸ்ய தண்டுலஸ்யேவ மலம் ஸஹஜமப்யலம் ।)

"தண்டுலஸ்யயதாசர்ம யதாதாம்ரஸ்யகாளிமா |
நச்யதிக்ரியயாவிப்ர புருஷஸ்யததாமலம் ||
ஜீவஸ்யதண்டுலஸ்யேவ மலம்ஸஹஜமப்யலம் |"

எனும் மஹோபநிஷத்தின் ரு - ம் அத்தியாய வசனத்தி னறி யப்படும். இதனின் முற்பட்ட பந்தலக்ஷணம் ஸ்கந்தோபநிஷத் திலுஞ் சொல்லப்பட்டதே. இப்படி நித்தியவஸ்துவாயுள்ள ஜீவன் மலபந்தியாயிருத்தலின், அதனை நித்தியசிவப்பேற்றில் வைப்பான் சிவவழிபாடு விவேகிகளால் வேண்டப்படுவதே. 'மறைத்துக் கூறு வதிலேயே தேவர்கள் பிரியமுள்ளவர்கள்' எனும்பொருள் பயக்கத் தக்க (பரோக்ஷப்ரியா இவ ஹி தேவா:) "பரோக்ஷப்ரியா இவஹி தேவா:" எனும்வசனத்தை ஐதரேயோபநிஷதந் தருதலானே, அவ் வழிபாட்டிற் கிடைக்குந் திருவாக்கு முதலியவற்றை வெளியிடா திருத்தலே நலமாம். இங்கே கூறிப்போந்த ஈசலக்ஷணமும், ஜீவ லக்ஷணமும், பந்தலக்ஷண உவமைகளும் சிவாகமசித்தாந்த சாத்தி ரங்களிலு முள்ளனவாகலின், இவை வேதபடித மல்லவென்பார் கூற்று அறியார்கூற் றுதலுமறிக. சிவாகமங்களிற் பூதமுதல் நாத பரியந்தம் ஜடமாகப் பிரதிபாதிக்கப்படுகின்ற தத்துவம் ௩௬ - ம்—

*“ப்ருதிவீசப்ருதிவீமாத்ரா சாபச்சாபோமாத்ராச தேஜச்ச தேஜோமாத்ராச வாயுச்ச வாயுமாத்ரா சாகாசச்சாகாசமாத்ராச சக்ஷுச்சத்ரஷ்டவ்யஞ்ச ச்ரோதஞ்சச்ரோதவ்யஞ்ச க்ராணஞ்ச க்ராதவ்யஞ்ச ரஸச்சரஸயிதவ்யஞ்ச த்வக்சஸ்பர்சயிதவ்யஞ்ச வாக்சவக்தவ்யஞ்ச ஹஸ்தௌசாதாதவ்யஞ்சோபஸ்தச்சாநந்தயிதவ்யஞ்ச பாயுச்சவிஸர்ஜயிதவ்யஞ்ச பாதௌசகந்தவ்யஞ்ச மநச்சமந்தவ்யஞ்ச புத்திச்சபோத்தவ்யம்சாஹம்காரச்சாஹம் கர்த்தவ்யஞ்ச சித்தஞ்சசேதயிதவ்யஞ்ச”*

எனும் பிரச்னோபநிஷத் வாக்ய வாயிலாகப் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், கந்தம், ரசம், ரூபம், பரிசம், சப்தம், சக்ஷு, சுரோத்ரம், கிராணம், சிங்குவை, துவக்கு, வாக்கு, ஹஸ்தம், உபஸ்தம், பாயு, பாதம், மனம், புத்தி, அஹங்காரம், சித்தமெனும் உச - ஆகவும்;

(காலஸ்வபாவோ நியதிர்யத்ருச்சா பூதானி யோனி: புருஷ இதிசிந்த்யம் ।)

*“கால ஸ்வபாவோ நியதிர் யத்ருச்சா பூதாநி யோநி: புருஷ இதி சிந்த்யம் |”*

எனுஞ் சுவேதாச்வதரோபநிஷத் வாக்ய வாயிலாகக் காலம், கலை, நியதி, ராகம், வித்தை, மாயை, புருஷனெனும் எ - ஆகவும்;

(சிவம்சக்திஞ்சஸாதாக்யா மீசம்வித்யாக்யமேவச ।)

*சிவம்சக்திஞ்சஸாதாக்யா மீசம்வித்யாக்யமேவச |”*

எனும் பிருஹஜ்ஜாபால வாக்ய வாயிலாகச் சிவம் (=நாதம்), சக்தி (=பிந்து), சாதாக்கியம், ஈசம், (சுத்த) வித்தையெனும் ரு - ஆகவும் வெளிப்பட்டன. உச, எ, ரு - ஆகவுள்ள இவை முறையே ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவமெனப்படுமென்பது சைவபுராணத்து வாயுசங்கிதை முதலியவற்றி லறியப்படும். சைவர்க ளநுஷ்டிக்குஞ் சோமவாரவிரதமும் (ஸோமவாரவ்ரதாஸ்த்யக்த) “ஸோமவாரவ்ரதாஸ்த்யக்த” எனும் பஸ்மஜாபால வசன வாயிலாக வேதோக்தமேயாயிற்று. சிவயோகியாவார் மனத்தடிப் பிரிதற்காகப் புளி, உப்புநீக்கியுண்பவராவரென்பது (கட்வாம்லலவணத்யாகீ க்ஷீரபோஜநமாசரேத் ।) “கட்வாம்ல லவணத்யாகீ க்ஷீர போஜநமாசரேத் |” எனும் யோகசூடாமண்யுபநிஷத் வசனத்திற் பெறப்படும். இது, தியாநபிந்தூபநிஷத்திலுங் கூறப்பட்டதே. இந்த

வைதிகக்கொள்கை—புளியோரைப் புஷ்டிவிக்ரஹங்கட்குப் புறம் போந்ததுமன்றி, இது சித்தர்நூற்கொள்கையென்பார் கூற்றை அறியார்கூற் றாக்குவதுமாம். சிவயோகியின் கால்கழுவிய நீரினது மகிமையும் (ஜ்ஞாநயோக பராணாஞ்ச பாதப்ரக்ஷாளிதஞ்ஜலம்। பாவநார்த்தமஜ்ஞாநாம் தத்தீர்த்தம்முநிபுங்கவ||) "ஜ்ஞாநயோக பராணாந்து பாதப்ரக்ஷாளிதம்ஜலம் | பாவசுத்யர்த்தமஜ்ஞாநாம் தத்தீர்த்தம்முநிபுங்கவ||" எனத் தர்சநோபநிஷத்தின் ச - ங் கண்டத்திற் கூறப்படலாயிற்று. ஈண்டு, ஆன்மாக்கள்பல என்றமையின் முத்திநிலை யெத்தன்மைத்தெனின்,— ஓரிடத்திற் பலர் பதிநிட்டை கூடின் அவருடைய விபுத்துவ அநுபவம் இடையூறின்றிக் காணப் படும் அத்தன்மைத் தென்க. இவ்வுவமையே சால்பிற்றென்க.

## உரு. முடிப்புநுவற்சி.

மேலே விளக்கலுற்ற எல்லா வகையானுஞ் சிவனொருவனே பரமபதி, ஏனைத்தேவரனைவரும் பசுக்களேயென்பதும்; அப்பதி யொருவனேயானபடி அவனை வழிபடு சன்மார்க்கமு மொன்றே, அது வேதோக்தமான விபூதி யுருத்திராக்க சின்னங்களோடு விளங்காநின்ற சைவமென்பதும்; இச்சைவத்தை யிழித்துக்கூறு மாற்றானே அறியாமைசெறிந்தாரும், அதிபாதகமுயர்ந்தாரும் பற்றும் வைணவம், வேதோக்தமான யாதொருசின்னமுடைத் தன்றென்பதும்; சிவனை ஆச்சிரயிக்காத சாஸ்திரங்களை யெரித்துவிட வேண்டுமெனல் சுருதியினாணையென்பதும்; பிறநியாயங்களும் வெளியாயின. இவற்றையெல்லாம் ஆய்ந்துய்ந்த ஆன்றோருள் ஸ்ரீ தாயுமானார்—

> "சைவ சமய மேசமயஞ் சமயா தீதப் பழம்பொருளைக்
> கைவந் திடவே மன்றுள்வெளி காட்டு மிந்தக் கருத்தைவிட்டுப்
> பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டா முத்திதருந்
> தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் செகத்தீரே."

என்றருளிச்செய்ததும் இங்ஙனம் நன்கு கருதத்தக்கதே. "சைவசமயமே சமயம்" என்றதிலுள்ள ஏகாரம்—குழூஉவினின்று பிரிக்கும் பிரிநிலையாம். துணிதற் பொருட்டாந் தேற்றேகாரமெனினும் இழுக்காது. "சைவசமயம்" என்பது தளிர்த்துப் பூத்துக் காய்க்கு மொரு தருவொக்கும். "சமயாதீதம்" என்பது அத்தருவிற் பழுக்

கும்பழம் கொம்பரைவிட்டு நீங்கி அனுபவிப்பார்க்கு அனுபவப் பொருளாதலொக்கும். "இல்லது வாராது" எனு நியாயத்தின்படி இருந்து பழம்போல வெளிப்படத்தக்க அது "பழம்பொருள்" எனப்பட்டது. மிக்கபொருத்தமான இவ்வுவமான உவமேயங்களை யுணருநரெல்லாம் இங்ஙனம் தமக்கு வேண்டியவாறே இனிப் பொருள்கூறிச் சொற்குணம் வாளாபோகாரென்பது ஒருதலையே. "சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத் தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம்" என அத் தாயுமானாரருளிச்செய்ததூஉம் ஈண் டுணரத் தக்கது. அத்வைதப்ரஹ்ம நிஷ்டர்களுக்கு அனுபவமாகத் தக்கதே அந்தச்சிவமென்பது—"த்வேவித்யே" என்று தொடங் கிப் பரவித்தை அபரவித்தையெனு மிரண்டுவித்தைகளை விளக்கும் முண்டகோபநிஷத்திலும் பெறப்படும். அதனை—

(தத்ராபராருக்வேதோ யஜுர்வேதஸ்ஸாமவேதோ அதர்வவேத: ஶிக்ஷாகல்போ வ்யாகரணம் நிருக்தம்சந்தோ ஜ்யோதிஷமிதி। அத பரா யயா ததக்ஷரமதிகம்யதே।)

"தத்ராபராருக்வேதோ யஜுர்வேதஸ் ஸாமவேதோ அதர்வவேதச் சிக்ஷாகல்போ வ்யாகரணம் நிருக்தம் சந்தோ ஜ்யோதிஷமிதி | அதபராயயா ததக்ஷரமதி கம்யதே |"

எனும் அவ்வுபநிஷத் வாக்யங்களி னறிக. அருத்தம்:—'இரு க்கு, யஜுர், சாமம், அதர்வமெனும் வேதங்களும்; சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தம், சோதிடமெனும் அங்கங் களும் அபரவித்தையாம். எதனாலே அக்ஷரமாகிய சிவமறியப்படு மோ அது பரவித்தையாம்' எனவாம். இந்நியாயம்—

(த்ரயம்யதாவிந்ததே ப்ரஹ்மமேதத்)

"த்ரயம்யதாவிந்ததே ப்ரஹ்மமேதத்"

எனுஞ் சுவேதாச்வதரோபநிஷத் வசனத்திலும் பெறப்படு கின்றது. பொருள்:—'மூன்றையும் எஞ்ஞான்றறிவனோ அஞ் ஞான்று இந்தப்பிரமம் (சிவம்) ஆவன்' எனவாம். மூன்று—ஈசன், அநீசன், மாயை.

'பிரமம் பிரமநிஷ்டரா லடையப்படுபொருள்' எனு மருத் தத்தைத்தருகின்ற (தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்।) "தந்நிஷ்

டஸ்ய மோக்ஷோபதேசாத்" எனும் பிரஹ்மஸூத்ர வசனமும் மேலுபநிடதப்பொருளாகவே முடிகின்றது.

"தேடிக் கண்டுகொண்டேன் திருமாலொடு நான்முகனும்
தேடித்தேடொண்ணாத் தேவனை யென்னுளே தேடிக் கண்டுகொண்டேன்."

என்று திருநாவுக்கரசுகள் திருவாய் மலர்ந்தருளியதும் அது. இப்படி யனுபவப்பொருளாயுள்ள சிவத்தை அற்றன்றென வேறு கூறல் அசம்பாவிதமன்றோ. அனுபவமாகாப்பொருளுளதென்பது ஆகாயத்தாமரையையும் ஒக்கும். மேலை யுபநிஷத்தில் அனுபவ ஞானமல்லாச் சாஸ்திரஞானமே அபரவித்தையெனப்பட்டது: இஞ்ஞானத்தின்மேற் சிரவணத்திற்குப் பின்னுண்டாகும் பிரத்தியக்ஷ அனுபவஞானமே பரவித்தையெனப்பட்டதென்க. சில வுபநிஷத்துக்கள் அபரவித்தையைப் பரோக்ஷஞானமெனவும், பரவித்தையை அபரோக்ஷஞானமெனவுங் கூறும். இந்தஅனுபவ பரவித்தையே "விஜ்ஞாநம்" எனப்பட்டதென்பது முதலிய விவரமெல்லாம் இக்காண்டத்து "ஞானமொன்றே பெரியமோக்ஷத்தைநல்கும்" எனும் அத்தியாயத்தில் விளக்கியுள்ளாம். ஆயிடைக்காண்க. இன்னன பிரமாணங்களாற் சுருதி, குரு, சுவானுபவவாயிலாகச் சிவகைவல்யமெனும் பரகதியை யடையவேண்டுமென்பதும் ஏற்படுவதாயிற்று.

கு - எனும் அந்தகாரத்தை நிரோதிப்பவன் குரு: குருவே பரப்பிரமம், குருவே பரகதி, குருவே பரவித்தையென்பது—

"குசப்தஸ் த்வந்தகாரஸ்ஸ்யாத் ருசப்தஸ் தந்நிரோதகஃ | அந்தகார நிரோதித்வாத் குருரித்யபிதீயதே || குருரேவபரம்ப்ரஹ்ம குருரேவபராகதிஃ | குருரேவ பராவித்யா"

எனும் அத்வயதாரகோபநிஷத் வசனங்களிற்பெறலாம். மேலே காட்டப்பட்ட ஸ்ரீதாயுமானார்பாடலில் "மன்று" என்றது சபை. இது, ஸாமவேத சாந்தோக்யோபநிஷத்தின் அ - ம் பிரபாடகத்தின் (ஆகாஶோவைநாம) "ஆகாசோவைநாம" என்றற்றொடக்கத்துப் கச - ங் கண்டத்தில் (ப்ரஜாபதேஸபாம்வேஶ்ம) "ப்ரஜாபதே ஸபாம்வேச்ம" எனும் வசனத்திற் பெறப்படும். அங்ஙனமே அச் சபை சிதாகாசமெனப்படுவதுமாம். அது, (ஏகம்ப்ரஹ்மசிதாகாஶம் ஸர்வாத்மகமவஸ்திதம் |) "ஏகம்ப்ரஹ்மசிதாகாசம் ஸர்வாத்மக மகம்ஸ்திதம் |" எனும் ஸாமவேத மஹோபநிஷத்தின் ரு - ம் அத்

தியாய வசனத்தானுமறியப்படும். ஆகாசம்=அம்பரமெனப்படுமாற் ரூனே சிதாகாசம்=சிதம்பரம் எனவாம். சித்=ஞானம். இச் சிதம் பரம் ஆன்மாவின் இருதயமத்தியி லுளதென்பது ([illegible]) "சிதம்பரந்து ஹ்ருந்மத்யே" எனும் ஸாமவேத தர்ச னோபநிஷத்தி னறியப்படும். இந்த இருதயமத்தி குஹையெனும் பெயர்த்தென்பது ([illegible]) 'குஹாயாம் பரமே வ்யோமந்" எனும் யஜுர்வேத தைத்திரீயோபநிஷத்தின் ஆநந்தவல்லீ வசனத்தினறியப்படும். வ்யோமம்=ஆகாசம். இந்நியா யம்பற்றியே ஸ்ரீதாயுமானார் 'மன்று' என்றதற்பின் "உள்வெளி" என்றுங் கூறியருளினர். ([illegible]) "ஹிர ண்மயேபரே கோசேவிரஜம்" எனும் அதர்வணவேத முண்டகோப நிஷத் வசனத்தானே அக் குஹை 'ஹிரண்மயகோசம்' என்றுஞ் சொல்லப்படும். அதுவே பொற்சபை, பொன்னம்பலமென வழங் கப்படுவதாயிற்று. அம்பலம்=சபை. இக்குஹை—பிரமபுரத்திலே தஹரபுண்டரீகவீடெனும் பெயரானும் விளங்கற்பாற்றென்பதை, இனியுதாஹரிக்கப்படு சுருதியானு மறியலாம். ([illegible]) "ஹ்ருத்பத்ம மத்யேஸர்வம் தத்ப்ரஜ்ஞாநேத்ரம் ப்ரஜ்ஞாநே ப்ரதிஷ்டிதம்" என்று ருக்வேத ஆத்மபோதோபநிஷத்துங்கூறுகின்றது. ஆன்மாவின் இருதய பதுமத்திலிருக்கும் பரவஸ்து சிவனேயென்பது இந்நூலின் ௧௭௮, ௧௭௯, ௧௮௰-ம் பக்கங்களிற் பிரகாசப்படுத்தப்படுவதா யிற்றனரே. இப்படி ஆன்மாவெனும் பசுவினகத்திருத்தல் கரு தியே சிவனைப் பசுபதியென்று கூறியவேதம் விஷ்ணு முதலிய தே வர்களை அவ்வாறு கூறாததாயிற்று. இப்பதியே மோக்ஷாதிகாரிக ளால் விரும்பப்படுபொருளென்பது—

([illegible]) "அதயதிதமஸ்மிந் ப்ரஹ்மபுரேதஹரம் புண்டரீகம் வேச்ம தஹரோஸ்மிந்நந்தராகாசஸ் தஸ்மிந்யதந்தஸ்ததந்வேஷ்ட வ்யம் தத்வாவவிஜிஜ்ஞாஸிதவ்யம்"

எனுஞ் சாந்தோக்யோபநிஷத்தின் ௮-ம் பிரபாடக வாக்கியங் களிற் பெறப்படும். அருத்தம் :— 'பிரமபுரமெனும் இதிலே தஹர

புண்டரீகவீடுள்ளது : இதிலே தஹராகாசமுள்ளது : இந்த ஆகா சத்திற்குள்ளேயுள்ளது நாடற்பாற்று : அறியற்பாற்று.'

எனவாம். இங்கே ஆகாசமென்றதூஉஞ் சிதாகாசமே. அதுவே சிவசத்தி. அதுவேதிருவருள். தஹரபுண்டரீக வீடே 'கோயில்' எனப்பட்டது. இல்=வீடு. (வெஃறூ) வேச்மந்=வீடு. இதுகாறுங் கூறப்பட்டது பிண்டதகரவித்தையே யாகலின் அது சிற்றம்பல மாம். விராட்புருஷனது இருதயமத்தி அண்டதகரவித்தையாகலின் அது பேரம்பலமாம். இரண்டுந் தகரவித்தை யெனப்பட்டுத் தஹர மென்பது சிறுமையெனு நுட்பத்தைக் குறித்தலின் இரண்டுஞ் சிற் றம்பலமுமாம். பிண்டதகரவித்தை வழியாகவே அண்டதகரவித் தையும் வேறற வறியப்படும். இதனைத் தயிலதாரைபோன்ற அந் தர்முகத் தியானத்திருப்போரே விடாதடையத்தக்கவர். அங்ஙனம் விட்டாரை அதுவும் விட்டிடும். இதனை—

"பன்னி யூறும் பழத்தினு மின்சுவை
யென்னி லூறி யெனக்கே களிதரு
முன்னி லுன்னுமுன் னுவிடில் விட்டிடு
மென்னு மீச னிருந்த வியற்கையே." *

எனுந் திருநாவுக்கரசுகளது திருவாக்கானுமறிக. இத்திற அனு பவஞானத்தை விதிக்கும் மதமே யுயர்வுடைத்தென்பதை—

"உயிர்க்குயிராய் நிற்கு மொருகுகனைக் காண
வயிர்ப்பறவே நெஞ்சடக்கி யங்க—னுயிர்ப்பறுபோ
தானநினை வேறும வுன்னவிதி யாதமத
மானமத மீனமத மாம்."

எனுங் காசியாத்திரைத் தூக்கானுமறிக. மேலும் அக் காசி யாத்திரை—

"பிண்டத் தடைந்தவையே பேரண்டத் தும்மடைவார்
தண்டத் தவத்தாருந் தந்தாய் பரஞ்சோதீ."

எனு நியாயத்தின்படி ஆன்மவுடம்பினுள் உயர்பொருளாயுள்ள ஆன்மாவை, அருட்டுணைகொண் டனுபவத்தி லறிபவனே அதனை நீங்கா நிறைபொருளாயுள்ள பரமான்மாவையுமறிந்து பரிபூரண

---

* இத் தேவாரப்பாசுரம்—ஸ்ரீ தாயுமானுரால் "அறிஞருரை" எனும் பகுதியில் "உன்னிலுன்னு மென்ற வுறுமொழியா லென்னிதயந்—தன்னி லுன்னி நன்னெறியைச் சாருநா ளெந்நாளோ." எனுந் தூக்கி லெடுத்தாளப் பட்டது. இஃது அச்சிடப்பட்டபிரதிகள் பலவற்றுள்ளும் விடுபட்டுளது.

மடைவன். இதனைவிட்டு வேறு கூறுவதெல்லாங் கீழ்நிலையேயா மென்க. இருதிறத் தகரவித்தையின் விவரமெல்லாம் ககள - திருச் செய்யுள்களா னிரம்பியுள்ள தகராலயரகசியத்திற் கூறியுள்ளாம். 'சிதம்பரம்' என்றசொல்ல நாணிச் 'சித்திரகூடம்' என்று பிதற்றுஞ் சிவத்வேஷ வைணவர்க்குத்தான் இம்மார்க்க மெங்ஙனம் வாய்க்கும்! சித்திரகூடமெனுஞ் சொற்றான் வேதத்திலுளதாமா!! அக் கூடத்தையும் விலக்கித் 'திருவரங்கம் பெரியகோயில்' எனக் கூறிக்கொள்வதுதானென்னை!!! இதுகிடக்க. அநேகோபநிஷத படிதமான இந்தத் தகரவித்தை—(தஹரஉத்தரேப்ய:) "தகரஉத்த ரேப்ய:" எனப் பிரஹ்மஸூத்ரத்திலுங் கூறப்பட்டது. தைத்திரீ யாருணசாகை நாராயணம்—"ஹிரண்யாயநம: | ஹிரண்யலிங்கா யநம: |" என்றும், "சிவாயநம: | சிவலிங்காயநம: |" என் றும், "ஆத்மாயநம: | ஆத்மலிங்காயநம: |" என்றுங் கூறுத லின், ஆன்மாச் சிவனிருக்கும் இலிங்கமூர்த்தமென்பது மறியப்படு வதாயிற்று. இதுகாறுங்காட்டலுற்ற பிரமாணங்களானே சிதம்பர தகரவித்தை—வேதம் நான்கனிலும் வெளிப்பட்டதோருண்மை யென நல்லிசைப்புலவரால் நாட்டப்படுவதாகலின், இந்தயமத்தியி லெது தியானிக்கப்படுகிறதோ அது சித்திக்குமென்பதுஞ் சுருதி யின் றீர்வையாகலின் வேதமுணர்ந்தார் யாவர்க்குஞ் சதா வழிபடு கடவுள் சிதம்பரநாயகமான சிவமன்றிப் பிறகடவு ளின்றென்க. ஸுப்ரஹ்மண்யோம், ஸுப்ரஹ்மண்யோம, ஸுப்ரஹ்மண்யோம.

வாழ்த்து.

கலிவிருத்தம்.

தெய்வ முதன்மை திகழ்செவ் வேளருண்
மெய்வ லிமையின் விரைவி லாயவிச்
சைவ சமய சரபம் வாழ்கமா
பொய்வ ழிதபு புகழ் வாழ்கவே.

திருச்சிற்றம்பலம்.

கைவல்லியகாண்டம் முற்றிற்று.

ஆக் காண்டம் ச - க்கு அத்தியாயம் - சுரு.



*The Indian Review, November, 1906.*

# KRISHNADEVA RAYA AND HIS TIME.

BY

MR. VENKATANARASIMHA ROW, B.A., B.L.

The age of the Vijayanagar was really one of religious excitement. At this period, the two Brahmin sects that commanded prominence in the social scale throughout South India were Smartha and Vaishnava. It is pretty certain that the Vijayanagar kingdom in its foundation was wedded to Saivism, as the founders thereof were greatly indebted for their success to the exertions of one Madhava, their subsequent prime minister who has been identified with the famous Vidyaranyaswami, a scholar of the celebrated school of Sankracharya and one of the very first savants of the day. And we have reasons to believe that till Krishna Deva Raya's time, the state religion of the Vijanagar House was Saivism, and that Vaishnavism usurped the place Saivism had occupied till then in the economy of Vijayanagar sovereignty, only under the regime of Krishna Raya. From the manuscript account of Vijayanagar existing in the Mackenzie collection of Oriental manuscripts, we read that one Tatacharyulu, probably a Vaishnavaite priest, went to Krishna Deva and expounded to him the tenets of his sect in such an attractive manner as to bring about his conversion to his faith. The account then goes on to say that Krishna Raya's blind acceptance of Tatachari's persuasive preaching made him abandon those grand principles of toleration and liberty in matters religious, which had been the mainstay of the popularity and influence of Vijayanagar sovereignty ever since its birth and which had been left to Krishna Raya by his predecessors as a rich legacy to be utilised to still greater advantage. But fortunately for those who were of Saivite persuasion, as the account runs, a celebrated Saivite scholar of the time, by name Appayya Dikshitulu, a native of Virinjipuram, in the North Arcot District, took up the gauntlet, and through his bold and fearless advocacy of Saivism in opposition to the powerful preachings of Tatacharyulu, the

intelligent mind of Krishnadeva Raya receded from its dogmatic standpoint, and he once more became the ardent follower of the liberal faith of his early years. We find, on the whole, from recorded inscriptions, a freehanded lavishing of gifts on temples of denominations—even Jainas coming in the category—right through the whole period of his reign.

**1906 - ம் ஸ்ரீ நவம்பர்மாசத்து இண்டியன் ரிவியூ என்னும் பத்திரிகையிற் காணப்படுவது.—வெங்கடநரஸிம்ஹராவ் பி.ஏ., பி.எல். என்பவரால் எழுதப்பட்ட கிருஷ்ணதேவராயரும், அவருடைய காலமு மென்னும் விஷயம்.**

(அப்பையதீக்ஷிதர் தாதாசாரியை மதவாதத்தில் வென்றனரென்பது.)

விஜயநகரத்தார் காலத்திலும் உண்மையான மதவிஷய விவகாரங்கள் பலமாக நடந்தன. அக்காலத்தில் தென்னிந்தியா முழுது மிருந்த ஜனங்களால் விசேஷமாக அநுசரிக்கப்பட்ட பிராமண மதங்கள் ஸ்மார்த்தமும், வைஷ்ணவமுமே. விஜயநகரராஜாங்கம் ஸ்தாபிக்கப்பட்ட காலத்தில் அந்த இராஜ்ஜியமானது—"அங்கே பிரதம மந்திரியாகப் பின்னிருந்தவரும், மகாகீர்த்திமானாகிய வித்யாரண்யர் இவரேயென்று நினைக்கவுள்ளவரும், எங்கும்பரவிய புகழுடையதாகிய சங்கராசாரியரது மதத்தினரும், அக்காலத்து விசேஷ வித்வசிரோமணிகளி லொருவருமாகிய மாதவரென்னும் பெயருடைய பண்டிதமணிசெய்த பெருமுயற்சிகளால் அபிவிருத்தியையடைந்ததாக விருந்தமையாற் சைவசமய சம்பந்தமுடையதாக விருந்ததென்னும் விஷயம் பெரும்பான்மையும் யதார்த்தமே. மேலுஞ் சான்ற காரணங்களிருத்தலாற் கிருஷ்ணதேவராயருடைய ஆளுகைவரையில் விஜயநகரராஜாங்கமதம் சைவமேயென்றும், வைஷ்ணவம் பலாத்காரமாக அந்த ராஜாங்கத்திற் சைவஸ்தானத்திற் குடிபுகுந்தது—கிருஷ்ணதேவராயருடைய ஆளுகையிலேயேயென்றும் நம்பவேண்டும். மக்கென்ஜி என்பவராற் சேகரிக்கப்பட்ட கீழ்த்திசையின கரலிகித தஸ்தாவேஜுகளில் விஜயநகரத்தைச் சார்ந்த பாகத்திற் கூறப்படுவன வருமாறு:— வைஷ்ணவாசாரிய புருஷராகிய தாதாசாரியுலு என்பவரொருவர் கிருஷ்ணதேவராயர் பாற்போய் அவருக்குத் தமது மதக்கொள்கைகளை அவர்மனம் வசப்படும் விதமாகப் போதித்து அவரை வைஷ்ணவ

மதத்திற் சேருமாறு செய்தனர். பின்னர்க் கிருஷ்ணதேவராயர் அவர்செய்த மனத்தைக் கவரும்படியான போதனை யாவற்றையும்,— (இதுசத்தியம், இஃதசத்தியமென யூகித்தறியும் சக்தியற்றவராய்) அந்தகனைப்போல அங்கீகரித்து விஜயநகர ராஜாங்கமேற்பட்ட காலமுதல் அந்த ராஜாங்கத்திலே ஜனங்களுக்குண்டாயிருந்த பிரியத்திற்கும் அந்த ராஜாங்கத்தார் செலுத்திய ராஜரீகத்திற்கும் முக்கிய ஆதாரவாயிருந்ததும், முன்னிருந்த அரசர்களால் அந்த ராஜ்யத்தின் அபிவிருத்தியினிமித்தம் உபயோகிக்கும்படி கிருஷ்ணதேவராயருக்கு வைக்கப்பட்ட பெரும்பிதிரார்ச்சிதம் போன்றதுமான—ஜனங்கள் தங்களுக்குள்ள சுதந்திரத்துடன் தங்களுக்கிஷ்டமான மதங்களின் கொள்கைகளை யநுஷ்டிப்பவர்களாகிச் சுகமாயிருக்குமாறு அரசு செய்தலாகிய நீடிய காலத்து நல்லவழக்கத்தைக் கைவிட்டனர். ஆயினும் அக்காலத்திருந்த சைவமதஸ்தர்களின் அதிர்ஷ்டவசத்தால் எங்கும்பரவிய கீர்த்திமானுகியும், சைவபண்டிதராகியும் வட ஆறகா டெனும் ஜில்லாவிலிருக்கும் விரிஞ்சிபுரத்தைத் தமக்குச் சனனபூமியாக வுடையராகியும் அக்காலத்திருந்த அப்பைய தீக்ஷிதுலு எனும் பெயருடைய ஒரு பண்டிதமணி— முற்கூறிய தாதாசாரியுலுவுடன் வாதப்போரிடத்துணிந்து, தாதாசாரியுலுசெய்த பலமான போதனைகட்கெல்லாம் வியதிரேகமான தைரியமும் நிர்ப்பயமுமாகச்செய்த சைவஸ்தாபனுர்த்தப் பிரசங்கத்தாற் புத்திசாலியான கிருஷ்ண தேவராயரது மனம் வைஷ்ணவக் கொடுமையினின்றும் விலகிச் சுத்தமானபின்பு, அவ்வரசர் மறுபடியும் எம் மதத்தோடும் பிணங்காத்தன்மையுற்று முற்காலத்து அவருடைய மதமாயிருந்த சைவத்தைச் சார்ந்தனர். பொதுநோக்காகப் பார்க்குங்கால், சேகரிக்கப்பட்ட சாசனங்களால் எந்தமதத்தினர் தேவாலயங்கட்கும் வரையாதுகொடுக்கும் வள்ளற்றன்மையுடன் தாம் அரசாண்டகாலமெல்லாம் இவ்வரசர் நன்கொடைகள் கொடுத்தன ரென்பதை நாமறிகின்றோம். ஜைனமதஸ்தர்களும் இப்படியே நன்கொடைகள் பெற்றார்கள்.

---

*Philosophic Hinduism, Religious Reform Part II. Page 21. C. L. S. Series.*

BHAGAVAD GITA.

The real author of the Bhagavad Gita is unknown. It was inserted in the middle of the Mahabharata to give it more authority. The date of its composition is also uncertain.

தத்துவ ஆராய்ச்சியோடுகூடிய மதச்சீர்திருத்தத்தின்
2 - பாகம் 21 - ம் பக்கம்.

**பகவற்கீதையை.**—ஆக்கியோர் இன்னாரென வேற்படவில்லை. அது விசேஷித்த பிரமாணநூலென்று எல்லாராலும் மதிக்கப்பட வேண்டுமென்கிற எண்ணத்துடன் பாரதத்தின்மத்தியில் நுழைக்கப்பட்டது. அஃதெப்பொழு தெழுதப்பட்டதோ அப்பொழுதும் சந்தேகமே.

---

*The Indian Review, September 1904, Page 596.*

THE CHRONOLOGY OF THE PURANAS.

The Bhagavata puts 1399 years between the end of the Andhras and the beginning of the Kainkilas, but its testimony has no independent value. first because it is based on the Vishnu (Purana) so far as genealogies are concerned and secondly because many orthodox Hindus even now believe it to be a work of a comparatively recent grammarian—Bopadeva.

1904 - ம்வரு செப்டெம்பர்மாசத்து இண்டியன் ரிவியூவெனும்
பத்திரிகையின் 596 – ம் பக்கத்திற் கூறப்பட்டது.

புராணங்களின்காலவரையறை.

**பாகவதத்தில்.**— ஆந்திரவம்ச முடிவிற்கும், கயிங்கிலவம்ச ஆரம்பத்திற்கும் இடையில் 1399 - வருஷங்கள் சென்றனவென்பது கூறப்பட்டது. ஆயினும் இக்கூற்றினால் ஒருபிரயோசனமுமில்லை. ஏனென்னில்,—பின்வருங்காரணங்களால். 1 - வது.—அஃது அதனிற்கூறிய வம்சாவளிகளுக்கு விஷ்ணுபுராணத்தை யாதாரவாகக் கொண்டது. 2 - வது.—வைதிகர்களாகிய அனேக இந்துக்கள் அப்

புஸ்தகத்தைதமிகவுஞ் சுவல்பகாலத்திற்குமுன்னிருந்த வையாகரணியாகிய பொப்பதேவரென்பவரால் இயற்றப்பட்டதென்று இக்காலத்தும் நம்புகிறார்கள்.

---

*Gazetteer of the South Arcot District, Volume No. I, Chapter II, Page 31.*

THE PALLAVAS, 4TH TO 8TH CENTURIES.

If we except the mere mention in one of the edicts of the Emperor Asoka of the three great realms of the south—the Chola, Chera, and Pandya kingdoms—the history of the Tamil country as gleaned from inscriptions on stone and copper (the only reliable sources of material regarding those early days) does not carry us further back than the period of the Pallavas who reigned at Conjeevaram—Kanchipuram, as it was called of old—in the early centuries of the present era. According to tradition, South Arcot formed part of Tondaimandalam and Tondaimandalam was included in the territories of this dynasty. The Allahabad pillar inscription of Samadrugupta, which has been assigned to the fourth century A. D., mentions king Vishnugopal of Conjeevaram, who is believed to have been a Pallawa, and the district may be supposed to have been part of his dominions.

தென்னுறுகாடு - கெஜட்டியர் 1 - ம் புத்தகம் 2 - ம் அத்தியாயம் 31 - ம் பக்கம்.

4 - ம் நூற்றுண்டுமுதல் 8 - ம் நூற்றுண்டுவரையும் அரசாண்ட பல்லவர்களின் செய்தி.

அசோகச் சக்கிரவர்த்தியின் சட்டப்பத்திரிகைகளுள் ஒன்றிற் சுருக்கமாகக்காட்டப்பட்ட தென்னிந்தியாவிலிருந்த 3-பெரிய இராஜாங்கங்களாகிய சோழசேர பாண்டியர்களின் இராஜ்ஜியத்தைக் குறித்த சூசனைகளை விட்டால் அத் தமிழ் இராஜ்ஜியங்களின் சரித்திரத்திற்கு நம்பத்தக்க ஆதாரவுகள் சிலைகளிலுஞ் செப்பேடுகளிலுங் காணப்படுஞ் சாசனங்களே. இவ்வாயிலாகக் கிடைத்த சரித்திரங்கள் இப்பொழுது நடக்குஞ் சகவருஷத்தின் பிரதம நூற்றுண்டுகளிற் பண்டைக்காலந் தொட்டுக் காஞ்சீவரம் அல்லது காஞ்சிபுரமெனும் பெயருடைய நகரத்தில் அரசாண்ட பல்லவர்க

ளின் காலம் வரையிற்றான் உள்ளன. கர்ணபரம்பரைச் சரிதைக ளின்படி தென்னாறுகாடு தொண்டைமண்டலத்தைச்சார்ந்ததாயும், அத் தொண்டைமண்டலம் மேற்குறித்த அரசர்களின் ஆளுகைக் குட்பட்ட இராஜ்ஜியமாயு மிருந்தன. சாமாத்ருகுப்தனுடைய கி. பி. 4-ம் றாற்றாண்டிலேற்பட்ட அலகபாத் ஸ்தம்பத்திலிருக் குஞ சாசனத்திற் பல்லவ வம்சஸ்தனாகிய ஓரரசனென்று அனேக ரால் ஸ்திரமாக வெண்ணப்பட்ட காஞ்சீபுரத்திலிருந்த விஷ்ணு கோபாலனைக்குறித்துக் கூறியசெய்தியுளது. அந்த ஜில்லா அவனு டைய இராஜ்ஜியத்தின் ஒருபாகமாக விருக்கலாம்.

---

*The Hindu, Monday, November 5, 1906.*

ANTIQUITY OF THE TRIPLICANE TEMPLE.

Mr. Venkayya, Government Epigraphist, contributes an interesting article on the "Triplicane Inscription of Dantivarman" in the last issue of the Epigraphia Indica just to hand. The article throws a considerable light on the early history of the temple and its surroundings. References to them in grants and the sacred Tamil works, Devaram and Nalayiraprabandham, take us back to the time of Tirugnanasambhandhar and Tirumangai Alwar and lastly to the still earlier poet, the immortal Tiruvalluvar, who possibly was a jain in religion. The present town of Madras was nothing more than a fishing village till the year 1639 A. D., when it passed into the hands of the English by a grant from the puppet sovereign Sriranga Raya of the Vizayanagar dynasty, then a refugee at Chandragiri. Though Madras, as a town, is of later origin, some of its suburbs possess histories going far back into antiquity. The Roman Catholic Church at St. Thome is believed to be built over the grave of St. Thomas and Ramaraya of Vizayanagara is also said to have led an expedition against the place in 1558 A. D. Mailapur and Tiruvamur are mentioned in the Tamil poem Devaram composed in *the seventh century A.D.* The saint *Tirugnanasambhandhar, one of the authors of it,* is reported to have revived at Mailapur a dead girl whose bones had been preserved by her father in a pot. It was also in olden days, the stronghold of heretics, Jains and Buddhists, and Tiruvalluvar is also believed to

have resided there. His date has not yet been defenitely fixed. Tiruvallikani (the modern Triplicane) is referred to in the Tamil Scriptures of the Vaishnavas known as Nalayira-prabandham by the saints Peyalwar, Tirumalisai Alwar, and Tirumangai Alwar, the last of whom inform us in Periya-tirumoli that Parthasarathy temple was founded by an unknown Pallava king. Egmore is mentioned in the records of the Chola king Kulottunga I (1070 A. D.) Nungambakum occurs in the copper plate inscription of the Chola king Rajendra Chola I (1012 A. D). The Devaram, besides, contains a hymn dedicated to the Siva temple at Tiruvotriyur. Puduppakum, Vepperi, Sembiyum, Nadum-barai and Veyasarbadi were granted to the Triplicane temple during the Vizayanagara period, while a pious Vaishnavaite devotee made, some additions to it in or before 1564-65 A.D., during the reign of Vijayanagar king, Sadasiva. The Triplicane temple contains besides a Pallava inscription, fragments of Chola records, an epitaph of a Pandyan king, and a few Vizayanagara inscriptions. The first of these is Pallava inscription of Dantivarman, dated 772 A. D. It records the redemption of the temple lands for the night offering by Pugaltunai-Vaisaiyarayan in the 12th year of the reign of Dantivarman. Tirumangai Alwar mentions a Pallava King Vayiramegan in one of his hymns. Mr. Venkayya thinks it is possible that he is indentical with Dantivarman of the Triplicane inscription and Dantippottarasar, during whose time the tank known as Vajiramegatataka at Uttaramallur not far away from Madras was built. Tirumangai Alwar also mentions the battle of Manuai in his hymn above referred to, and if that is the same as that which was fought according to the Udayendiram plates at Mannaikudi, then Tirumangai Alwar must have lived soon after the reign of the Pallava King, Nandivarman—Pallavamaka. If this surmise be correct, then Tirumangai's Vayiramegan must have been a successor of Nandivarman. These arguments would yield, concludes Mr. Venkayya, *the third quarter of the 8th centuary A. D.* for the labours, of Tirumangai Alwar. This, however, goes against current Vaishnava tradition, but the arguments for and against can only be studied in the original article itself.

1906-ம் ௵ நவம்பர் மீ 5 உ சோமவாரத்து
இந்துப் பத்திரிகையிற் பிரசுரிக்கப்பட்டது.

திருவல்லிக்கேணி யாலயத்தின் பூர்வீகஸ்திதி.

(திருஞானசம்பந்தசுவாமிகள் காலமும், திருமங்கையாழ்வார் காலமும் ஒரு காலமல்ல வென்பது.)

இப்பொழுது நமக்குக் கடைசியாக வந்துள்ள "எபிகிராபியா இண்டிகா" என்னும் பத்திரிகையிற் கவர்ண்மெண்டு—சிலாசாசன தாம்பிரசாசன சோதகராகிய ம-௱-௱-ஸ்ரீ, வெங்கையா வென்பவர்—தந்திவர்மனென்பவனாலேற்பட்ட திருவல்லிக்கேணிச் சிலாசாசனத்தைப்பற்றிச் சில வியப்பான விஷயங்க ளெழுதியுள்ளார். அவராலெழுதப்பட்டவைகளில் யாவருந் தெரிந்துகொள்ளும்படி திருவல்லிக்கேணிக் கோவிலைப்பற்றியும், அதனைச் சூழ்ந்திருக்கும் ஊர்களைப்பற்றியுஞ் சில பூர்வீக சரித்திரங்களடங்கி யிருக்கின்றன. அவைகளைக்குறித்துச் சாசனங்களிலும் தெய்வீகம் பொருந்திய தமிழ் நூல்களாகிய தேவாரங்களிலும நாலாயிரப்பிரபந்தங்களிலுங் காணப்பட்டவைகள் திருஞானசம்பந்த மூர்த்திகள், திருமங்கையாழ்வார், இவ்விருவருக்கும் முற்பட்ட காலத்துக் கவியாகியும் ஜைன மதஸ்தரென்று கொள்ளக்கூடியவராகியும் இறந்து பிறவாத் தன்மையினராகியுமிருந்த திருவள்ளுவர் ஆகிய இவர்கள் காலமவரையிலுமுள்ள சரித்திரங்களைக் குறிக்கின்றன. இப்பொழுது மதராஸ் என்னும் பெயருடையதான நகரமானது கி. பி. 1639-ம் ௵ வரையில் மீன் பிடிக்கும் வலைஞருடைய ஊராகத்தா னிருந்தது. சந்திரகிரி ஜமீன்தாரிடத்தில் அக்காலத்திலடைக்கலம் புகுந்திருந்த விஜயநகரத்து அரச வமிசத்தைச் சேர்ந்தவனுகியும் ஐடமாகிய பதுமைக்குச் சமமாகியுமிருந்த சீரங்கராயனென்பவனுற் கொடுக்கப்பட்ட சாசனத்தால் மேற்குறித்த வருஷத்திற்குப்பின் ஆங்கிலேயரின் வசத்தில் அந்த மதராஸ் வந்தது. அஃது அனேககாலத்திற்குப்பின் இப்போ திருக்கும் நகரமானதாக விருப்பினும் அதைச் சார்ந்திருக்கும் சிலசிற்றூர்கள் பூர்வீக முதற் சரித்திர முடையனவாக விருக்கின்றன. மைலாப்பூரிலிருக்கும் ரோமான்காதலிக் தோமையா தேவாலயமானது ஸெண்டு தாமஸ் என்பவரின் கல்லறைபின்மீது கட்டப்பட்டதென்று அனேகர் நம்பியிருக்கிறார்கள். விஜயநகரத்து ராமராயரென்பவர் கி. பி. 1558-ம் ௵ அவ்விடத்திற்குப் படையெடுத்துவந்தனரென்பதுங்

கூறப்படுகிறது. கி. பி. 7-ம் நூற்றூண்டிற் பாடப்பட்டதாகிய தேவாரமென்னுந் தமிழ்ப்பிரபந்தத்தில், மைலாப்பூருந் திருவான்மியூரும் பகரப்பட் டிருக்கின்றன. அத் தேவாரங்களை ஆக்கியோர்களிலொருவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் குடத்திலிட்டுப் பிதாவினுற் காக்கப்பட்டுவந்ததாகிய மரணமடைந்த ஒரு பெண்ணினெலும்பை மயிலாப்பூரில் மறுபடி யுயிருடனெழுப்பியதும் கூறப்பட்டிருக்கிறது. பண்டைக்காலத்தில் அது புறச்சமயிகளாகிய ஜைனபௌத்தர்களுக்கு ஒருறுதியான வாசஸ்தானமாகவு மிருந்துளது. திருவள்ளுவரும் அவ்விடத்திலேயே வசித்திருந்தனரென்பது நம்பப்படுகிறது. அவரிருந்தகாலம் இன்னும் ஸ்திரமாக யாராலுங் கண்டு பிடிக்கபபடவில்லை. தற்காலத்தில் "திருப்ளிகேன்" என்று வழங்கும திருவல்லிக்கேணியானது பேயாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகியவிவர்களாற் செய்யப்பட்ட நாலாயிரப்பிரபந்தமென்று வழங்கும் வைணவர்களின் திராவிடவேதத்தில் திருவல்லிக்கேணி குறிக்கப் பட்டிருக்கிறது. கடைசியாகக் கூறபபட்ட திருமங்கையாழ்வாரென்பார் பெரியதிருமொழியிற் பார்த்தசாரதியி னுலயமானது ஊர் பெயர் அறியப்படாத ஒரு பல்லவராஜனுற் கட்டபபட்டதென்று கூறினர்; கி. பி. 1070-ம வருஷத்திருந்த முதற்குலோத்துங்க சோழராஜனுடைய ராஜாங்க தஸ்தாவேஜுகளில் எழும்பூர் கூறப்பட்டது. கி. பி. 1012-ம வருஷத்திருந்த சோழராஜனுகிய முதல் ராஜேந்திர சோழராஜனுடைய செப்பேட்டிலிருக்கும் சாசனத்தில் நுங்கம்பாக்கம் கூறபபட்டிருக்கிறது. இவை யன்றித் தேவாரத்தில் திருவொற்றியூர்ச் சிவஸ்தலத்திற்கும் பதிகமிருக்கிறது. புதுப்பாக்கம், வேப்பேரி, செம்பியம், நதும்பரை, வியாஸர் பாடியாகிய இவ்வூர்கள் விஜயநகரத்துப் பூர்வீக அரசர்கள் காலத்தில் திருவல்லிக்கேணிக் கோவிலுக்கு விடப்பட்டன. சிலவூர்கள் கி. பி. 1564-65-ம் வருஷத்திலோ அதற்குமுன்னே விஜயநகரத்தரசராகிய சதாசிவனென்பவர் அரசாண்ட காலத்து விஷ்ணுபக்தியுள்ள ஒருவரால் அக்கோவிலுக்கே சேர்க்கப்பட்டன. திருவல்லிக்கேணிக்கோவிலிற் பல்லவ சிலாசாசனமொன் றிருப்பதுமன்றி, சோழராஜ்யத்தின் சில தஸ்தாவேஜுத் துண்டுகளும், ஒருபாண்டிய பூபதியின் சரமசாசனமும், இன்னுஞ் சில விஜயநகரசாசனங்களுமிருக்கின்றன. முதலிற் குறித்தது—தந்திவர்மனெனும் பல்லவனுடைய கி. பி. 772-ம் வருஷ சாசனமாகும். அதில் அக் கோவில்

நிலங்கள் அத் தேவஸ்தானத்திற்கு இராவிற் செய்யவேண்டிய நிவே
தனத்திற்காகத் தந்திவர்மனுடைய அரசாட்சியின் 12-ம் ஆண்டிற்
புகழ்த்துணை வைசாயரைய னென்பவரால் மீட்கப்பட்டவிஷயங்
கூறப்பட்டுளது. திருமங்கையாழ்வார் அவருடைய பதிகங்களில்
ஒன்றில் வைரமேகனெனும் பல்லவராஜனைப்பற்றிக் கூறியுள்ளார்.
இவ் வைரமேக னென்பவனே திருவல்லிக்கேணிச் சாசனத்திற்
சொல்லப்பட்ட தந்திவர்மனும், சென்னைக்குச் சமீபத்திலுள்ள உத்
தரமல்லூரெனுங் கிராமத்தில் வஜ்ரமேக தடாகமெனும் பெயரு
டைய ஏரியானது எவ்வரசன் காலத்துக் கட்டப்பட்டதோ அந்தத்
தந்திப்போத் தரசனென்பவனுமாக விருக்கலாமென்று ம-ா-ா-ஸ்ரீ
வெங்கையா வென்பவர் அபிப்பிராயப்படுகிறார். திருமங்கையாழ்
வார் மேற்குறித்த அவர் பதிகத்தில் மனுவாய் என்னும் ஊரினடந்த
யுத்தத்தையுங் கூறினர். இந்த யுத்தமே உதயேந்திரச் செப்பேடுக
ளிற் காணப்படும் மன்னைக்குடியில் நடந்த யுத்தமாகுமேல் நந்திவர்
மன் பல்லவமேகன் எனும் பல்லவராஜனது அரசாட்சிக்கு மிகவுஞ்
சமீபித்த பிற்காலத்தில் திருமங்கையாழ்வார் இருந்தவராதல்வேண்
டும். இப்படி யூகிக்கப்பட்ட அபிப்பிராயம் உண்மையாமேல் திரு
மங்கையாழ்வார் குறித்த வைரமேகன் நந்திவர்மனுக்குப் பின் வந்
தவனாதல்வேண்டும். இந்நியாயங்களால் ம-ா-ா-ஸ்ரீ வெங்கையா
வென்பார் முடிவாகக் கூறுவதாவது.—திருமங்கையாழ்வார் இரு
ந்து உழைத்தகாலம் கி. பி. 775-ம் ௵ முதல் 800-ம் ௵
வரையிலென்பதே. இம்முடிவுரை—வைஷ்ணவர்கள் இக்காலத்திற்
கூறுங் கர்ணபரம்பரைக் கதையோடு முரணுமாயினும் இவ்விஷயத்
திற்குச் சாதகபாதகமான நியாயங்கள் ஆரம்பத்திலேயே இவ்விஷ
யங்களைப்பற்றி யெழுதப்பட்டிருக்கும் *பத்திரிகையிற் காணலாம்.

---

*The Indian Review, June 1901, Page 283.*

## ON THE TRIMURTI.

(BY
MRS. ANNIE BEASANT.)

The Destroyer is Shiva, Mahadeva, whose name means welfare, happiness, beatitude, for as He dissolves the forms and draws the lives into His bosom, His peace enfolds all and they enter into blissful rest. The name "Destroyer"

sounds harsh in some ears, and perhaps the "Liberator" would have a sweeter, and therefore a truer sound; for He liberates the Jīvaṣ from their sufferings and leads them into the Peace.

When men are turning away their hearts from the world and are weary of its changes of its joys and its pleasures as well as of its pains and griefs, then comes the time when the austere beauty of Shiva attracts them even more than the joyous grace of Vishnu, and the tiger-skin and the serpent allure more than the peacock-feather and the flute. He is the God of the ascetic, of the yogi, of the closing stages of life, the Vànaprastha and the Sannyasa. Devotion to him means approaching peace.

1901 - ம் ௵ ஜூன் மாசத்து 'இண்டியன் ரிவியூ' என்னும் பத்திரிகையின் 283 - ம் பக்கத்திற் பிரசுரஞ் செய்யப்பட்ட ஆனிபெசண்டம்மாளது உபந்யாஸம்.

திரிமூர்த்திகள் விடயம்.

சங்கார கர்த்தாவாவார் சிவனென்னும் மஹாதேவர். சிவனென்னும்பெயர் க்ஷேமம், சுகம், ஆனந்தமெனும் பொருள்களையுடையது. ஏனெனில்,—அவர் சீவ தேகங்களை யொடுக்கிச் சீவர்களைத் தமக்குள் ஒடுக்குகின்றமையால்: அவரது சுகரூபம் யாவரையுங் கவர்ந்துகொண்டிருக்கின்றமையின் அச் சீவர்கள் யாவரும் ஆனந்த ரூபமாகிய சுகத்திற் பிரவேசிக்கின்றனர். சங்கார கர்த்தாவெனும் பெயர் சிலருக்குக் கேட்க இனிமையிலதாக விருக்கலாம். ஒருவேளை (அப்படிப்பட்டவர்கட்குப்) பந்த நிவர்த்தகன் எனும் பெயர் இனியதாகவும், ஆதலின் உண்மைப்பொருளை யுணர்த்துவதாகவு மிருக்கக்கூடும்: ஏனெனில்,—அவர் சீவர்களைப் பல துக்கங்களினின்றும் நீக்கிச் சுகநிலையிற் புகும்படி செய்தலின்.

மனிதர்கள் தங்கள் மனங்களைப் பிரபஞ்சத்தினின்றுந் திரும்பும்படி செய்து அந்தப் பிரபஞ்சத்திலுள்ள அசாசுவதமான விஷயங்களாலும், சந்தோஷங்களாலும், இன்பங்களாலும், துன்பங்களாலும் அலுத்தவர்களாகுங் காலத்தே சிவத்தின் தபோரூபம்—அழகியதாகத் தோற்றி விஷ்ணுவினது சந்தோஷகரமான மங்களரூபத்தைவிட மனத்தை விசேஷமாகக்கவருந் தன்மையதாகின்

றது. (அக்காலத்திற்றான் சிவனணிந்திருக்கிற) வியாக்ரசர்மமும் சர்ப்பங்களும் (விஷ்ணுவணிந்திருக்கிற) மயிலிறகையும் வேய்ங்குழலையும்விட அதிகமாக மனத்தைக் கிரகிக்கும். அந்தச் சிவன்றான், தபோதனர்கள் யோகிகள் வாழ்நாளின் இறுதிக்காலத்திற் கொள்ளத்தக்க வானப்பிரஸ்தம், சந்நியாஸமாகிய ஆச்சிரமங்களில் வழிபடுகடவுள். அக்கடவுளிடத்தில் உண்மையான பக்திவருங்காலந்தான் சுகநிலையைச் சமீபிக்குங் காலமாகும்.

---

*History of civilization in Ancient India based on Sanskrit Literature by Romesh Chunder Dutt of the Bengal Civil Service, and of the Middle Temple, Barrister-at-law; Member of the Asiatic society of Bengal; Author of a Bengali Translation of the Rig Veda Sanhita and other works.*

People's Edition, COMPLETE IN ONE VOLUME, Calcutta, Tacker Spink & Co., 1891.

PAGE 130.

Krishna-worship, which is of later origin, has been bodily transplanted into the ancient narrative of the Kuru-Panchala war.

ருக்வேத ஸம்ஹிதையையும் இன்னுஞ் சில
கிரந்தங்களையும் பெங்காளி பாஷையில் மொழி பெயர்த்தவரும், ஒருபாரிஸ்டரும், பங்காளத்து ஆசியாகண்டத்துக் கூட்டத்திற் சேர்ந்தவருமாகிய ரோமேஷ் சண்டர் டட் என்பவரால் வடமொழி
நூல்களின் ஆதாரத்தினால் எழுதப்பட்டதாகிய,
பூர்வீக இந்தியா எனும் புத்தகம்.

கிருஷ்ணனைத் தெய்வமாக வணங்குவது புதியதே. அது குருபாஞ்சல யுத்தமாகிய பூர்வீகசரிதையி னிடையே முழுதுஞ் சேர்க்கப்பட்டது. பக்கம் - 130.

---

PAGE 137.

The whole story of Krishna–a deity and a king–appears to us to be a very modern interpolation.

கிருஷ்ணனைத் தெய்வமாகவும், அரசனாகவும் எழுதப்பட்ட கதைமுழுதும் (அந்த நூல்களில்) நூதனமாக நுழைக்கப்பட்டதென்று நமக்குத் தோற்றுகின்றது. ப - 137.

---

PAGE 436.

It is natural for men to seek to improve their position, and the Sudras of India, to whom Hinduism in the past and in the present has been so cruel, have struggled hard to improve their status by accepting Buddhism, or Vaishnavaism or Islamism or anything else which has offered them a chance.

மனிதர்கள் தங்களுடைய நிலைமையை வரவர வுயர்த்திக் கொள்ளவேண்டுமென்று முயல்வது இயற்கை. இந்துமதமானது சென்ற காலத்தும் நிகழ்காலத்தும் இந்துதேசத்துச் சூத்திரர்களுக்கு மிகவுங் கொடுமையே செய்துவந்தமையால், அவர்கள் மிகவும் வருந்தி, பௌத்தம், வைஷ்ணவம், மகம்மதியம், அல்லது வேறெந்த மதத்தையாவது இசைந்தபடி தழுவித் தம்முடைய தாழ்ந்த நிலைமையை உயர்த்தப் பாடுபட்டார்கள். ப - 436.

---

PAGE 635.

The Gangetic house supplanted Siva worship by Vishnu worship. But neverthless none of those creeds was altogether extinct in Orissa: on the contrary, the three religions ran in parallel streams contracting or expanding in influence and power with the lapse of ages. Vishnu worship, in its peculiar modern form, is the prevailing religion in the present day.

ஒட்ரநாட்டில் ஏற்பட்ட கங்காவம்சமானது சைவத்தை மாற்றி வைணவத்தை யேற்படுத்திக்கொண்டது. ஆனால் முன்னிருந்த மதங்கள் அங்கு முழுதும் நசிக்கவில்லை. காலஞ் செல்லச் செல்ல மூன்று மதங்கள் குறைந்த வியாபகத்துடனும் அதிக வியாபகத்துடனும் காலத்திற்கிசையத் தனித்தனி நதிகளைப்போல இருந்தன. ஆனால் இக்காலத்துள்ளது நவீன வைணவமே. ப - 635.

---

PAGE 654.

The Vaishnava religion, in many of its forms, seems only a survival of the Buddhist religion.

பலவகைப்பட்ட அவ்வைணவம் முன்னிருந்து இறந்த பௌத்தத்தின் ஆபாஸமாகவே காணப்படுகிறது. ப - 654.

---

PAGE 657.

Dr. Buler maintains that the whole work was recast by an adherent of Vishnu; and that the final and introductory chapters (in verse) were composed by another and a still later writer. The period in which the work was thus repeatedly recast is between the fourth and the eleventh century A.D.

பியூலர் என்னும் பண்டிதர் விஷ்ணுஸ்மிருதி முழுதும் வைஷ்ணவாபிமான சிரேஷ்டனொருவனால் மாற்றப்பட்டதென்றும், அவனுக்கு வெகுகாலத்திற்குப் பின்பு உதித்த மற்றொருவனால் உபோற்காத அத்தியாயமும் இறுதியத்தியாயமும் (வடமொழிச்) செய்யுளாகச் செய்யப்பட்டனவென்றும் ஸ்தாபித்திருக்கிறார். இவ்விதம் அந்த ஸ்மிருதி அடிக்கடி மாற்றியெழுதப்பட்டது— கி. பி. 4-ம் நூற்றாண்டுக்கும், 11-ம் நூற்றாண்டுக்கும் மத்தியகாலத்திற்றான். ப - 657.

---

PAGE 664.

Padma Purana:—The Uttara khanda which is probably later than the other portions of the Purana, is intensely Vaishnava in its tone; the nature of Bhakti or faith in Vishnu, the use of the Vaishnava marks on the body, the legends of Vishnu's incarnations, and the construction of images of Vishnu are all explained by Siva to his consort Parvati, and they both finish by adoring Vishnu! We are also told that of the Hindu Trinity, Vishnu alone is entitled to respect! There can be no doubt much of this sectarian contoversy has been added after the Moslem conquest of India. There is mention, even in the earlier books of this Purana, of mlechchhas flourishing in India, while to the last portions of the work Dr. Wilson gives the 15th or 16th century A. D., as the probable date.

பாத்மபுராணத்தின், உத்தரகண்டமானது, அப் புராணத்தின் மற்றைப் பாகங்கள் தோன்றிய நெடுங்காலத்திற்குப் பிறகு பெரும்பாலும் வைஷ்ணவநடையிலெழுதப்பட்டதாகவே யிருக்கின்றது. விஷ்ணுப்பத்தியின் சொரூபமும், வைஷ்ணவ புண்டரதாரணப் பிரயோசனமும், விஷ்ணுவின் அவதார சரித்திரங்களும், விஷ்ணு விக்கிரகங்கள் செய்யும் விதிகளும் சிவனால் தன் தேவியாகிய பார்வதிக்குக் கூறப்பட்டன வென்பதும், அவ்விருவரும் இறுதிக்கண் விஷ்ணுவை வணங்கி நின்றனரென்பதும் வரையப்பட்டுள்ளன. இந்துக்கள் வணங்கும் திரிமூர்த்திகளில் விஷ்ணுவே வணக்கத்திற்குரியாரென்றுங் கூறுகின்றது. (ஆகையால்) இந்தியாவை முஹம்மதியர் ஜயித்துக் கைக்கொண்ட காலத்திற்குப் பிறகுதான் மதச்சண்டைகள் நடந்ததற்கு அறிகுறியாகிய இவ் விஷயங்க ளெல்லாம் எழுதப்பட்டன வென்பது சந்தேகமற்ற விஷயம். இந்த உத்தரகண்டத்தின் சில பூர்வபாகங்களில் இந்தியாவில் மிலேச்சர்கள் விருத்தியடைந்திருந்தமையுங் குறிக்கப்பட்டது. உவில்சன் என்னும் பண்டிதரும், இந்த இறுதிப்பாகங்கள் பெரும்பான்மையும் கி. பி. 15-ம், 16-ம் நூற்றூண்டுகளில் உண்டாயிருக்கலா மென்று காலவரை யறையுங் குறித்தனர். ப-664.

---

PAGE 667.

Brahma Kaivarta Purana:— It is divided into four books describing the acts of Brahma, Devi, Ganesa, and Krishna, respectively. The original character of the work has, however, been much altered, the present work is decidedly sectarian, and prominence is given to Krishna over all other deities. The great mass of the existing work, is taken up with descriptions of Vrindavana with endless prayers to Krishna, and with tiresome descriptions of the loves of Radha and the Gopis.

பிரஹ்மகைவர்த்தபுராணமானது நான்கு புத்தகங்களாகி முறையே, பிரஹ்மா, தேவி, கணேசர், கிருஷ்ணர் ஆகிய இவர்களின் மகிமைகளைக் கூறுகின்றது. அதன் யதார்த்தரூபம் அதிகமாக மாற்றப்பட்டது. இப்போதுள்ள புராணம் மதவைஷம்யத்தால் எழுதப்பட்டுக் கிருஷ்ணனுக்கு உத்கர்ஷமும், மற்றைத் தெய்வங்களுக்குச்

சாமானியத்துவமுங் கூறுவதாக இருக்கின்றது. இப்போதுள்ள நூலின் பெரும்பாகம் பிருந்தாவன வர்ணனைகளும், அளவற்ற கிருஷ்ண ஸ்தோத்திரங்களும், ராதையினுடையவும், கோபிகைக ளுடையவும், அளவற்றனவாந் தன்மையால் வெறுக்கத்தக்க விரக தாபவர்ணனைகளுங் கூறுவதாயிருக்கின்றது. ப - 667.

---

## Page 668.

Skanda Purana :— The Utkala Khanda gives an account of the holiness of Orissa and of Jagannatha, and is no doubt a later appendage by Vaishnava writers, who thus added an account of a Vaishnava Tirtha to an eminently Saiva Purana.

ஸ்காந்தபுராணத்தின் உத்கலகண்டமானது ஓட்ரதேசத்தின் பரிசுத்தத்தையும், ஜகந்நாதத்தின் மகிமையையுஞ் சொல்லும். இது வைஷ்ணவ வித்வான்களாற் பிற்காலத்திற் சேர்க்கப்பட்டதென்ப தற்குச் சந்தேகமில்லை. அவர்கள், சிறந்த சைவபுராணமாகிய (இதில்) ஒருவைஷ்ணவ தீர்த்த வைபவத்தையுஞ் சேர்த்து வைத் தனர். ப - 668. [உத்கலம்=ஜகந்நாத முதலிய இடம். இது பஞ்ச கௌடத்துளொன்று.]

---

## Page 670.

Siva was the first popular God of the Puranik period, as we find in the annals of Orissa and some other provinces, as well as in the classic literature of the Puranik Age. Krishna who is almost unknown to Kalidasa, Bharavi, Banabhatta, Bhavabhuti, and other classic authors became the popular god of the Hindus at a later date : Magha and Jayadeva celebrated his deeds in the eleventh and twelth, centuries : and all through the Musalman rule, Krishna was no doubt the most favourite deity of the Hindus.

ஓட்ரதேசம்முதலிய தேசங்களின் சரித்திரங்களிலும், புராண காலத்தில் ஏற்பட்ட சிறந்த நூல்களிலும் புராணகாலத்திற் சிறந்த தெய்வமாக மனிதர்களால் வழிபடப்பட்ட தெய்வம் சிவமே. காளி தாஸர், பாரவி, பாணபட்டர், பவபூதிமுதலிய மகாவித்துவான்க ளாற் கூறப்படாத கிருஷ்ணர் அக்காலத்திற்கு நெடுங்காலத்திற்குப்

பிறகுதான் இந்துக்களால் வழிபடப்படுந் தெய்வமாயினர். மாகரும், ஜயதேவரும் கிருஷ்ணசரித்திரங்களைப் 11-12-ம் நூற்றாண்டுகளிற் கூறினர். பின்னர் முஹம்மதியர் இராஜ்ஜியபாரஞ்செய்த காலமெல்லாம் கிருஷ்ணர் அன்புடன் இந்துக்களால் வழிபடபபட்டதெய்வமாயிருந்தா ரென்பதற்குஞ் சந்தேகமில்லை. ப - 670.

---

*Popular Edition. The Annals and Antiquities of Rajasthan or the central and westem Rajpoot states of India by Lieutenant-Colonel James Tod, late Political Agent to the western Rajpoot states Edited with introduction and exhaustive index by Ambika Charan Ukil M. A.*

Published by the Indian Publication Society Limited, Vol, 1. Calcutta. Printed by R C. Ghose at the Bengal Press, 17, Madan Mitter's Lane, 1898.

PAGE 50.

The Ambar Prince in his genealogies traces the descent of the Mewar family from Rama to Sumitra, through Lava, the eldest brother and not through Cush as in some copies of the Puranas, and in that whence Sir William Jones had his lists. Whatever dignity attaches to this pedigree whether true or false every prince and every Hindu of learning, admit the claims of the prince of Mewar as heir to the "chair of Rama;" and a degree of reverence has consequently attached, Not only to his person but to the seat of his power.

**கர்னல் ஜேம்ஸ் டாட் என்பவரால் எழுதப்பட்ட ராஜஸ்தானமென்னும் பூர்வீக சரித்திரங்கள்**

*(இராஜபுதனத்திலிருக்கும் மீவாரென்னுந் தேசம் ஸ்ரீராமருடைய சம்பந்தமுடையது: அங்கே தொன்றுதொட்டுச் சைவமேயிருந்தது: அவ்வரசர்களுஞ் சைவர்களேயென்பது.)*

அம்பார் தேசத்து அரசகுமாரர் தம்முடைய வமிசாவளிகளில் மீவார் வமிசமானது இராமராதியாகச் சுமித்திரன்வரையில் வநததாகக் காட்டியிருக்கின்றனர். ஆனல், அதற்கு மூலபுருஷனை மூத்தசகோதரனாகிய லவன் என்பவனைக் கொண்டனரேயொழியச் சிலபுராணப்பிரதிகளிற் கூறியதுபோலவும், சர் உவில்லியம்

ஜோன்ஸ் என்பவர் அவர்வமிசாவளிகளை யெதினின்றுஞ் சம்பாதித்தனரோ அதிற் கூறியதுபோலவும் குசன் என்பவனைக் கொள்ளவில்லை. பொய்யாகவோ மெய்யாகவோ எவ்வளவு கௌரவம் இந்த வமிசத்திற்கு உரியதாகவிருப்பினும், ஒவ்வொரு அரசகுமாரரும் வித்துவானாகிய ஒவ்வொரு ஹிந்துவும் மீவார் அரசகுமாரர் இராமருடைய சிங்காசனத்திற் குரியவரென்னும் பாத்தியதையை யங்கீகரிக்கின்றனர். இக்காரணத்தால் அவ்வரச குமாரரது தேகத்திற்கும், அதிகாரஸ்தானத்திற்கும் பூஜிதை யேற்பட்டிருக்கிறது. ப-50.

---

INTRODUCTION PAGE IV.

When matters of moment in the disorganized state of the country rendered it imperative to observe secrecy, the Rana of Mewar being applied to on the necessity of concealing them, rejoined as follows : " this is Chaomukhy-raj ; Eklinga the sovereign, I, his vicegerent, in him I trust, and I have no secrets from my children."

அத்தேசத்தி லுண்டாயிருந்த ஒழுங்கீனத்தால் இராஜாங்க சமாசாரங்கள் இரகசியமாக விருக்கும்படி மீவார்தேசத்தரசனுக்கு அவற்றை மறைத்துவைத்திருப்பது அவசியமென்று மனுக்கொடுத்தபோது அவன் பின்வருமாறுகூறினன். " இது சௌமுகிராஜ்யம் : *ஏகலிங்கரே இராஜன். யான் இராஜப்பிரதிநிதி. யான் அவரையே நம்பியிருக்கிறேன் : யான் என்னுடைய குழந்தைகளறியாமல் இரகசியமாக வைக்கவேண்டிய விஷயம் ஒன்றுமில்லை." [முகவுரை 4-ம் பக்கம்]

---

PAGE 551.

But the pursad (such is the denomination of the food sacred to Kaniya) is deemed unlucky, if not unholy.

கிருஷ்ணருக்கு நிவேதனமான பிரசாதமானது பரிசுத்தமற்றதன்றாயினும் க்ஷேமகரமானதன்று. [கணியா=கண்ணன்.] ப-551.

---

* ஏகலிங்க ரெனும் பெயருடன் மீவார்தேசத்து ரசபுத்திரர்களால் வணங்கப்படும் ஈசுவரனானவர் சிவலிங்கரூபமாகவாவது, சதுர்முகேசுவரரென மார்பளவினதாக நான்குமுகங்களோடு செய்யப்படும் வடிவமாகவாவது பூஜிக்கப்படுகின்றனர் என்பது மெழுதியுள்ளார் கர்னல் ஜேம்ஸ் டாட்.

*Swami Vivekananda. A collection of his speeches and writings with portraits. Second Edition. Published by G. A. Natesan & Co. Esplanade Madras.*

PREFACE.

"Be proud that you are an Indian" "Oh India, forget not that your ideal *woman* is Sita, Savitri, Damayanti; forget not that your ideal God is the great ascetic of ascetics, Umanath Sankar."

**விவேகாநந்த ஸ்வாமிகளின் உபந்நியாஸங்களும் அவர்செய்த நூல்களுஞ் சேர்ந்த புத்தகத்தின் முகவுரை.**

*"நீயொரு இந்துவா யிருப்பதற்காகச் செருக்குற்றிரு."*

*"ஓ இந்துக்களே! சீதை, சாவித்திரி, தமயந்தி என்பவர்கள் ஸ்திரீகளின் இலக்ஷணங்கள் முழுதும் அமையப்பெற்றவர்கள் என்பதையும்; ரிஷிகளுக்குள் மஹாரிஷியென்னும் அபிதானமுற்ற உமாகாந்தராகிய சங்கரர் அகோசரமான கடவுளென்பதையும் மறவாதிருங்கள்.*

---

*Preface to R. C. Dutt's Mahabarata by professor F. Max Muller.*

PAGE VII.

There is, no doubt, an introductory chapter of our poem which tells us how, with the help of Ganesa, the Mahabarata was written, But the absence of that chapter in a large number of Mss. more particularly, as Dr. Winternitz has shown, in the Mss. of the South of India, speaks for itself.

**ரோமேஷ் சண்டர் டட் என்பவர்செய்த பாரதத்திற்கு எப். மாக்ஸ் முல்லர் என்னும் பண்டிதரெழுதிய முகவுரை.**

*இந்நூலின் பீடிகையாகிய அத்தியாயத்திற் கணேசரது சகாயத்தினால் இம்மகாபாரதம் எழுதப்பட்டதென்று கூறுவது எவ்வகையான சந்தேகமுமற்ற விஷயமே. ஆயினும் அவ்வத்தியாயம் அநேகம் காலிகிதப் பிரதிகளில் முக்கியமாக விண்டர்நிட்ஸ் என்*

னும் பண்டிதர் எடுத்துக் காட்டியதுபோலத் தென்னிந்தியாவின் கரலிகிதப் பிரதிகளில் இல்லாதிருப்பதன் காரணம் எவருஞ் சொல்லாமே யூகித்தறியக் கிடக்கின்றது. பக்கம் - 7.

---

*ch. XV. P. 344. of the S. Arcot Gazetteer.*

*Varanjaram.* Eleven miles south-east of Kallakurichi on the banks of the 'Gomukhanadi, Police-Station : population 754, On the gopuram of the temple, which is modern work, are representations of parts of a story connected with the place which, unworthy though it is, is known and repeated throughout the Taluk. The name Varanjaram may be made to mean in Sanskrit "retraction of the boon." and the tale regarding its origin is as follows :— Ravana, the demonking of ceylon having performed many penances, was promised by Siva any boon he chose to ask. He accordingly requested a life lasting three and a half crores of years, Siva's sword Chandrahasa (the laughter of the moon) and lastly Siva's wife Parvati. Having obtained these, he was returned to Lanka when, near this village, he saw a man (who was really Vishnu in disguise) planting a piece of tulsi upside down and watering it with a pot without any bottom, He laughed at the man, but the latter retorted that his operations were perfectly sound and that it was Ravana's own vision which was distorted and made him see all things wrongly. He declared that the sword which Ravana supposed to be Siva's famous blade was only a piece of wood ; that the woman was not Parvati at all and that the life which he thought to have secured was only one half a crore of years. Ravana thereupon returned to Siva in a great fury and demanded explanations : whereon Siva took back the boons. and this time did really give him worthless substitutes in their place. The story has no authority in the Ramayana—though in a passage there (Uttara Kandam cant. 16) Siva is represented as giving Ravana his sword and an extension of life—and it is not seemly that Ravana, a fervent devotee of Siva should be represented as asking for that deity's wife. The story sounds rather as if it had been invented to account for the supposed

meaning of the name of the village, and then embroidered on to the passage in the Ramayana above referred to by some Vaishnavite as a set off to the tale of Ravana having carried off the wife of Vishnu during the latter's incarnation as Rama.

தென் ஆறுகாடு கெஜட்டியர் என்னும் புத்தகம், 15 - ம் அத்தியாயம், 344 - வது பக்கத்திற் காணப்பட்டது.

வரஞ்சரம். இவ்வூர் கோமுகநதிதீரத்திற் கள்ளக்குறிச்சிக்குத் தென்கிழக்காகப் பதினொருமைல் தூரத்தில் உள்ளது. இங்கு, ஒரு போலீஸ் சாவடியும் 754 - குடிகளும் உண்டு. இங்கு நூதனக் கட்டடமாகிய ஓராலயத்தின் கோபுரத்தில் இந்தக் குக்கிராமத்தோடு சம்பந்தமுற்ற ஒரு கதையின் பாகங்கள் பிரதிமாரூபமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. இவ்விஷயம் அத்துணை கவனிக்கத் தகாததாகவிருப்பினும் அந்தத்தாலூகா முழுதுந் தெரிந்ததாகவும், ஜனங்கள் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளும் விஷயமாகவும் இருக்கின்றது. வரஞ்சரமென்னும்பெயர் ஸம்ஸ்க்ருதபாஷையில் வரத்தைக் கிரகித்துக்கொள்ள லென்னும் பொருளைத் தருவதாயிருக்கிறது. அதனுற்பத்திக்குக் காரணமான கதை வருமாறு:— இலங்கைக்கரசனை இராவணனென்னும் இராக்ஷதன் அநேகதவங்களைச் செய்தமையால் சிவனார், அவன் எந்தவரங்கேட்பினுங் கொடுப்பதாக உறுதிமொழிகூறினர். அவன் அப்படியே $3\frac{1}{2}$ - கோடி வருடமிருக்கும் ஆயுளையும் (சந்திரனுடையநகையென்னும் அருத்தந்தரும்) சந்திரகாசமெனுஞ் சிவனாருடையவாளையும் கடைசியாகச் சிவபத்தினியாகிய பார்வதியையுங் கொடுக்கும்படி கேட்டு அவ்விதமே பெற்றுக்கொண்டு, இலங்கைக்குத் திரும்பிவரும்போது, இக்கிராமத்திற்குச் சமீபத்தில் தலைகீழாக ஒரு துளசிச்செடியை நட்டு அடிப்பாகமில்லாத ஒரு மட்பாத்திரத்தினால் அச் செடிக்கு நீர் விட்டுக்கொண்டு நிற்கும் (உண்மையாக, விஷ்ணுவே உருமாறின) ஒருமனிதனைக்கண்டனன். அவன் அம்மனிதனைப் பார்த்து நகைத்தனன். அதுகண்ட அம்மனிதன் தன்காரியம் யாவும் ஒழுங்காகவே யிருக்கின்றனவென்றும், அப்படி யிருந்தும் இராவணனுடைய வக்ரமான திருஷ்டிக்கே யப்படி வக்ரமாகத் தோன்றுகின்றனவென்றும் உரைத்து அவ்வளவில் நில்லாமல் இராவணன் சிவனது புகழ்பெற்றவாளென்று கருதியவஸ்து ஒரு மரத்துண்டேயென்றும், சிவபத்தினியாகிய பார்வதி

யென்று எந்த ஸ்திரீயை நினைத்தனனோ அந்த ஸ்திரீ பார்வதியே யல்லவென்றும், ஆயுளும் அவன் கருதியபடி $3\frac{1}{2}$ - கோடியே அல்ல அரைக்கோடியே யென்றும் மேலுங் கூறினன். அக்காரணத்தால் இராவணனும் சிவனரைக்கோபாவேசத்துடன் மறுபடிவந்து கண்டு (இப்படிக் கொடுத்ததற்குக்) காரணம் என்னையென வினவினன். அதன்மேற் சிவனர் வரமாகக் கொடுத்தவற்றைத் திருப்பி வாங்கிக்கொண்டவுடனே அவற்றிற்குப் பிரதியாக ஒன்றிற்கும் உதவாதவற்றை யீந்தனர்.

இக் கதைக்கு இராமாயணத்தில் ஆதாரமேயில்லை. ஆயினும் உத்தரகாண்டத்துட் 16 - ம அத்தியாயத்துள்ள ஒரு வாக்கியத்திற் சிவனர் இராவணனுக்குத் தமது வாளும், ஆயுள்விருத்தியுங் கொடுத்தனரென்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது. மேலும், சிவனுக்கு உண்மையடியானகிய இராவணன் அந்தத் தேவனுடைய பத்தினியைக்கேட்டனனென்று கூறுவதே ஒழுங்கீனமாம். ஆயின், இக் கதைக்குக் கதியேதென்னில், அந்தக் கிராமப்பெயருக்கு ஒரு கற்பிதமான அர்த்தத்தைக் கூறும வழியாக இராமாயணத்திலுள்ள மேற்குறித்த வாக்கியத்தோடு ஒருவாறு பொருந்தும்படி அலங்கரிக்கப்பட்டதாகவும விஷ்ணு இராமாவதாரஞ் செய்தகாலத்து அவர் பெண்டிரை இராவணன் கொண்டுபோனன் என்னும் சரித்திரத்திற்குப் பிரதியாக யாரோ வொருவனைவனுற் கற்பிக்கப்பட்ட வீண்கதையாகவுமே தோன்றுகின்றது.

---

*The Liberal Sunday, November 10, 1907.*

## BABA BHARATI AND HIS MISSION.

There is however one main point of difference between the two apostles of the aggressive Hinduism. Swami Vivekananda presents before the world the pure Vedanta. Swami Bharati, on the other hand preaches a more concrete aspect of the Vedanta Philosophy, viz " the worship of Krishna in flesh and blood." He preaches the Radha Krishna cult of Vallabhacharya of the northern India, This form of worship though it does not commend itself to some, still finds great favour with people of devotional temperament. This form of faith has all the voluptuousness about it such as is charac-

teristic of the song of soloman. It would look as though the devotees had to conceive of communion with God in terms of physical happiness. No one however can object to the Radha Krishna cult in the abstract but it is a notorious fact that many a piace oi Vishnu worship has degenerated at the present time with a scene of licentiousness and immorality.

1907-ம் ஹு நவம்பர் மீ 10உ ஆதிவாரம் வெளியிடப்பட்ட லிபோலெனும் பத்திரிகையிற் காணப்பட்ட பாபா பாரதியும், அவரது பிரசங்கமும்.

பரமதகண்டனமும், இந்துமதஸ்தாபனமுஞ் செய்ய வந்தவர்களாகிய பின்னே குறிக்கப்படும் இருபிரசாரகர்களுக்கும் முக்கியமான தாரதம்மியம ஒன்றுளது. விவேகாநநதஸ்வாமிகள் உலகத்தாருக்குப் பரிசுத்தமான வேதாந்தத்தையே பிரசங்கித்தனர். பாரதியாரோ அதற்கு வியதிரேகமாக அவ்வேதாந்தத்தின் சகுணபாகமாகிய உதிர மாமிச பிண்டமான தே[illegible]ள்ள கிருஷ்ணருடைய வழிபாட்டைப் பிரசங்கித்தனர். இந்தியாவின் உத்தரகண்டத்தில் வழங்கும் வல்லபாசாரியராற் போதிக்கபபட்ட ராதாகிருஷ்ண மதத்தைப்பற்றி உபநயஸித்தனர். இத்தகைய வழிபாடு சிலருக்கு அசம்மதமாக விருபபினும், பக்தியில் அழுந்தின தன்மையுடையோருக்கு மிகவும் பிரியமானதாகவே யிருக்கின்றது. சாலமோனுடையபாசுரங்கூறும்வழியாக எவ்வெவ்விதம் வரம்பின்றிச் சுகாநுபவஞ்செய்தல் கூடுமோ அவ்வவ்விதம் சுகத்தை . யநுபவிப்பதேயாம். அச்செய்கை— லௌகீகபோகாநுபவ வழியாக அந்தத் தெய்வத்தில் ஐக்கியமடைய முயல்வதாகக் காணபபடுகிறது. மானசிகமாக அநுஷ்டிக்கப்படும் ராதாகிருஷ்ண மதத்தை ஆக்ஷேபிப்பவரிலர். ஆனால், முற்காலத்தில் நலல ஸதிதியிலிருந்த அனேக விஷ்ணுகோவில்கள் இக்காலத்திற் காமோற்சவங்களுக்கும், அக்கிரமங்களுக்கும் இருப்பிடமாக விருக்கின்றன.

---

*The Imperial Gazetteer of India Vol, I.*

PAGE 421.

The Saivas represent the conservative force in the history of Hinduism.

இந்தியாவின் இராஜாங்கத்துக்கெஜட்டியர் I - ம் புத்தகம்.

இந்துமத சரித்திரத்தை விசாரிக்குங்கால், சைவர்கள் தங்கள் மதத்தைத் தொன்றுதொட்டு மாறுதலில்லாமற் காத்து வந்தவரென்பது தெரியவருகிறது. ப - 421.

---

PAGE 424.

Krishna in the early form of his cult may be regarded as the local god of some Rajput clan settled near the Jamna and his titles Govinda and Gopala the 'herdsman' suggest a connection of his worship with that of a God of flocks and herds. He is also the hero of the Pandava tribe who seem to have been new-comers opponents of the orthodox Brahmanism of the holy land. The mention of the Polyandry among them in the case of Draupadi has been supposed to connect them with the Himalays where this custom still prevails. In the cult of Krishna we have that form of Vaishnavism which by its luxurious ceremonial and lax standard of morality shares with Jainism the respect of the moneyed middle class.

கிருஷ்ண மதத்தின் பூர்வபாகத்தில், கிருஷ்ணர் யமுனாநதியருகிற் குடியேறியிருந்த சில ரசபுத்திரஜாதியாரின் கிராமதேவதையாக மதிக்கப்பட்டிருக்கலாம். "கோவிந்தன்" "கோபாலன்" (இடையன்) என்கிற அவருடைய பட்டங்களை நோக்குமிடத்து, கிருஷ்ண மதமானது ஆனினங்களுக்கும், ஆட்டினங்களுக்குந் தெய்வமாகக் கொண்டாடப்படும் ஒரு தேவதையின் வழிபாட்டுக்குச் சம்பந்தமுடையதெனல் தோன்றுகிறது. புண்ணிய பூமியில் வைதிகப்பிராமண மதத்திற்கு விரோதிகளாய் நூதனமாக வந்தவர்களாகக் காணப்படுகின்ற பாண்டவர்களுக்கும் ஒரு வீரனாக இருந்தார். திரௌபதி நிமித்தம் அவர்களுக்குள் ஏற்பட்ட விவாகமானது— இப்பொழுதும் அனேக கணவர்களை வரித்துக்கொள்ளும் வழக்கமுள்ள ஹிமாசல வாசிகளோடு அப்பாண்டவர்களுஞ் சம்பந்தமுடையாரென நினைக்க இடந்தருகிறது. தனவான்களான மத்திய வம்ச ஜனங்கள் ஜைனமதத்திற்கு மரியாதை செய்வது எக்காரணம் பற்றியோ அக் காரணத்தைக் கிருஷ்ணமதத்திலுள்ள ஒருவகை வைஷ்ணவத்தின் இடம்பமான சாங்கியங்களும் வரம்பில்லாத காமாநுபவங்களும் பொருந்துகின்றன. பக்கம் 424.

---

## Page 425.

Fifth in succession to him (Ramanuja) was Ramanand who lived during the fourteenth century, and was the missionary of popular Vaishnavism in Northern India. He preached the worship of Vishnu under the form of Rama, either singly or conjointly with his consort Sita. But his chief innovation was the introduction of low-caste dis-ciples into the communion.

இராமாநுஜருக்குப் பின்வந்தவர்களில் 5-ம் பட்டத்தினராகிப் 14-ம் நூற்றுண்டிலிருந்த இராமாநந்தர் என்பவர் இந்தியாவின் உத்தரபாகத்தில் ஜனங்களுக் கிசைந்த வைணவமத போதகரா யிருந்தனர். அவர் விஷ்ணுவைத் தனித்தராமராக வேனும், சீதை யுடனேனும் வழிபடும்படி பிரசங்கித்து வந்தனர். ஆயினும் அவரது முக்கிய ஒழுங்கின்மையானது தாழ்ந்த சாதியாரையுஞ் சீடர்களாக் கித் தங்களினத்தோடு சேர்த்ததே. ப - 425.

---

## Page 428.

In many cases these dissenting sects have taken the form of social rather than religious revolts. They were efforts on the part of the lower castes to free themselves from the tyranny of the caste system and the Brahmans who stood at its head. It is significant that many of the reformers sprang from the lower ranks. Ramanand himself a Brahman had among his disciples who founded separate schools Namdeo the cotton printer, Sena the barbèr, Kabir the weaver, Nabhaji the Dom.

அனேக சந்தர்ப்பங்களில் இந்த மதபேத முடையவர்கள் மதக்கலகங்களை விட்டுச் சனக்கலகங்களைச் செய்துகொண்டிருந் தார்கள். அந்தக்கலகங்கள்—கீழான ஜாதியார்கள், ஜாதிக் கட்டுப் பாட்டினாலும், அதற்குத் தலைவராயிருந்த பிராமணர்களாலும் நேரிட்ட கொடுமைகளினின்றுந் தப்பிப் பிழைக்கச்செய்த பிரயத் தனங்களேயாம். கீழானஜாதியிலிருந்து மதபோதக ரனேகர் வந் தார்களென்பதும் வெளியாகின்றது. இராமாநந்தரெனும் பிராம ணரே வெவ்வேறு மதக்கொள்கைகளையுடைய சிஷ்யர்களை யுடைய

வராயிருந்தனர். அச்சிஷ்யர்களில் நாம்தேவ் என்போன் சாயவேலை செய்வோனும், சேனன் என்பவன் நாவிதனும், கபீரென்பவன் துணிநெய்யுந் தொழிலாளனும, நாபாஜி யென்பவன் தொம்பனுமாக விருந்தனர். ப - 428.

---

*Sacred Books of the East— Edited by Prof: F. Max Muller*
*Vol · XLIV— Satapatha Brahmana Part V*
*Books XI. XII. XIII. XIV.*

ZULIUS EGGELING.

*Fourteenth Kanda— The Pravargya.*

**First adhyaya -First Brahmana.**

1. The Gods Agni, Indra, Soma, Makha, Vishnu and the Visve Devàh, except the two Asvins performed a sacrificial session.

2. Their place of divine worship was Kurukshetra. Therefore people say that Kurukshetra is the God's place of divine worship ; hence wherever in Kurukshetra one settles there, one thinks ; this is a place for divine worship ; for it was the God's place of divine worship.

3. They entered upon the session thinking, may we attain exellence ! may we become glorious ! may we become eaters of food ! and in like manner do these (men) now enter upon the sacrificial session thinking, may we attain excellence! may we become glorious ! may we become eaters of food.

4. They spake, "Who ever of us through austerity, fervour, faith, sacrifice and oblations, shall first compass the end of the sacrifice, he shall be the most exellent of us, and shall then be in common to us all," "so be it" they said.

5. Vishnu first attained it, and he became the most excellent of Gods ; whence people say Vishnu is the most excellent of the Gods.

6. Now he who is this Vishnu is the sacrifice; and he who is this sacrifice is yonder Aditya (the sun). But, indeed, was unable to control that (love of) glory of his; and so even now not every one can control that (love of) glory of his.

7. Taking his bow, together with three arrows, he stepped forth. He stood resting his head on the end of the bow. Not daring to attack him the Gods sat themselves down all around him.

8. Then the ants said— these ants (Vamri) doubtless were that (Kind called) 'Upadìkā'—" What would ye give to him who should gnaw the bow string?"— " We would give him the (constant) enjoyment of food and he would find water even in the desert: so we would give him every enjoyment of food"— " So be it" they said.

9. Having gone nigh unto him, they gnawed his bow-string. When it was cut, the ends of the bow, springing asunder, cut off Vishnu's head.

10. It fell with (the sound) "ghriṅ"; and on falling, it became yonder sun. And the rest (of the body) lay stretched out (with the top part) towards the east. And in asmuch as it fell with (the sound) "ghrin", therefrom the Gharma (was called); and in asmuch as he was stretched out (pra-vrig), therefrom the Pravargya (took the name).

11. The Gods spake, "Verily our great hero (Mahan virah) has fallen": therefrom the Mahavira pot (was named). And the vital sap which flowed from him they wiped up (sammrig) with their hands, whence the Samrâg.

12. The Gods rushed forward to him, even as those eager to secure some gain (will do). Indra reached him first. He applied himself to him limb after limb, and encompassed him, and, in encompassing him he became (possessed of) that glory of his. And, verily, he who knows this becomes (possessed of) that glory which Indra is (possessed of).

13. And Makha (sacrifice), indeed, is the same as Vishnu: hence Indra became Makhavat (possessed of Makha), since

Makhavat is (he) who is mystically called Maghavt, for the Gods love the mystic.

14. They gave to those ants the enjoyment of food; but, indeed all food is water, for it is by moistening (the food) therewith that one eats here whatever one does eat.

15. This Vishnu, the (Soma) sacrifice, they then divided amongst themselves into three parts: the Vasus (received) the morning-pressing, the Rudras the midday-pressing, and the Adity as the third-pressing.

*எப். மாக்ஸ்முல்லர் என்னும் பண்டிதரால் எழுதப்பட்ட கிழக்குக்கண்டத்தின் தெய்வீக புஸ்தகங்கள்.*

44 - ம் புத்தகம்.

**சதபதப்பிராஹ்மணம் :— 5 - ம் பாகம், 11 - 12 - 13 - 14 - ம் புத்தகங்கள். 14 - ங் கண்டம் : பிரவர்க்கியம், 1 - ம் அத்தியாயம், 1 - ம் பிராஹ்மணம். [யஜுர்வேதம்]**

1. *அசுவினிதேவதைகள் தவிர, அக்கினி, இந்திரன், சோமன், மகன், விஷ்ணு, விசுவதேவர் ஆகிய தேவர்கள் நீடித்துச் சிலகாலம் யாகஞ்செய்தனர். [அசுவினிதேவதைகள் = மருத்துக்கள்.]*

2. *அவர்கள் தேவபூஜைசெய்த இடம் குருக்ஷேத்திரமாம். ஆகையால் ஜனங்கள் தேவபூஜைக்குரிய திவ்வியதேசம் குருக்ஷேத்திரமென்கின்றனர். இக்காரணத்தாற் குருக்ஷேத்திரத்தில் எவ்விடத்தில் ஒருவன் தங்கியிருப்பினும் அவ் விடத்தை அவன், தேவர்கள் தேவபூஜைசெய்த இடம் இஃதாதலின் நாமுந் தேவபூஜை செய்தற்குரியது இவ்விடமேயென்று நினைக்கின்றனன்.*

3. *அத்தேவர்கள் அந்தயாக ஆரம்பகாலத்தில், நாம் புகழையடைவோமாக : நாம் பிரகாசத்தையடைவோமாக : ஆகாரத்தைப் புசிப்பவர்களாவோமாக என்று கருதினர். அவ்விதமாகவே இக்காலத்து மனிதர்களும் யாக ஆரம்பகாலத்திற் கருதுகின்றனர்.*

4. *அவர்கள் சங்கேதஞ் செய்துகொண்டதாவது—நம்முள் தபசினாலும், மனவெழுச்சியினாலும், பக்தியினாலும், பலியாகுதிகளாலும் முதலில் யாகபூர்த்தியைச் செய்கின்றவனெவனோ அவனே*

நம்மிற் சிறப்புடையவனுகவும் நமக்குப் பொதுவானவனுகவும் இருப்பான் என்றும், அவன் அப்படியே யாகக்கடவனென் றுங் கூறினர்.

5. விஷ்ணுவானவர் அச் சிறப்பைப் பிரதமத்தில் அடைந்த னர். ஆகையால் அவர் தேவர்களுட் சிறந்தவராயினர். அக்கார ணங்கருதியே மனிதர்கள் தேவர்களுள் விஷ்ணுவைச் சிரேஷ்ட ரென்று கூறுகின்றனர்.

6. யாவனொருவன் இந்தவிஷ்ணு ரூபியோ அவனே யாக ரூபியாவன். யாவனொருவன்யாகரூபியோ அவனே அவ்வாகாசத் திலிருக்குஞ் (சூரியனுகிய) ஆதித்தியனுவன். ஆயினும் உண்மையா கவே தன்புகழ்ச்சி விருப்பத்தைவெல்ல அசக்தனுக விருந்தனன். ஆதலால் இக்காலத்தும் புகழ்ச்சிவிருப்பத்தை வெல்லுதல் ஒவ் வொரு மனிதனுக்குஞ் சாத்தியமானது அன்று.

7. அவர் (விஷ்ணு) தமது தநுவையும் மூன்றம்புகளையும் எடுத்துக்கொண்டு முற்பட்டுவந்தனர். வில்லின் குதையின்மேல் தமது சிரசை வைத்துக்கொண்டு நின்றனர். அவர்மீது விழுந்து போர்புரியத் தேவர்களுக்குத் துணிவுண்டாகாமல் அவரைச் சூழ்ந்திருந்தனர்.

8. அப்போது எறும்புகள் கூறியதாவது :—இந்த வம்ரி என் னும் எறும்புகள் ஐயமில்லாமல் உபாதிகா என்னும் இனத்தைச் சேர்ந்தவைகளாக விருக்கின்றன. அந்தவில்லின் நாணினை அரித்து விடுகிறவனுக்கு யாதுதருவீர்களென்று வினவின. நாம் அவனுக்கு (எக்காலத்தும்) ஆகாரத்தைக் கொடுப்போம், அவன் காடாகிய விடத்தும் தாகத்துக்குச் சலத்தைப்பெறுவன் ஆகையால் எவ்வித ஆகார போஜன சுகத்தையும் நாம் அவனுக்குக் கொடுப்போமென் றும், அப்படியே அவனுகுகவென்றும் அவர்கள் சொன்னுர்கள்.

9. அவைகள் அவரைச் சமீபித்து அவருடைய தநுவின் நாணினை யரித்துவிட்டன. அரித்துவிடவே அத் தநுவின் குதை கள் நிமிர்ந்து விஷ்ணுவின் சிரசை யறுத்துவிட்டன.

10. அச்சிரசு 'கிரின்' என்னும் (ஓசையுடன்) விழுந்தது. விழுந்தபோது அஃது ஆகாசத்திலிருக்கும் சூரியனுயிற்று. (தேகத் தின் ஊர்த்துவபாகம்) கிழக்குநோக்கியிருக்க மற்றைப்பாகம் நீண்டு

கிடந்தது. அது கிரின் எனுஞ் சத்தத்துடன் விழுந்தகாரணத்தால் கர்மா என்பது உண்டாயிற்று. அவர் பிரவிரிக்காக நீண்டுகிடந்தமையால் அதினின்றும் பிரவர்க்கியமெனும்பெயர் உண்டாயிற்று.

11. உண்மையாகவே நம்முடைய பெரிய (மஹாவீரன்) விழுந்துவிட்டான் என்று தேவர்கள் கூறினர். அதினின்றும் மஹாவீரபாத்திரமெனும் பெயர் உண்டாயிற்று. அவ் விஷ்ணுவினது தேகத்தினின்றும் ஓடிய பிராண ரஸத்தைத் தங்கள் கைகளாற் சாம்ரிக் என்கிறபடி துடைத்தனர். அதினின்றும் சாம்ராக் உண்டாயது.

12. ஏதோவொரு பயனையடைய ஆவலோடு செல்கிறவர்களைப்போலத் தேவர்கள் அவருக்குச் சமீபத்தில் வேகமாகச் சென்றனர். இந்திரன் முதலில் அவரைச் சமீபித்தனன். தன் அங்கம் ஒவ்வொன்றாக அவர்மேற் பதியும்படி தன்தேகத்தால் அவரை மூடினன் (அவர்மேற் படுத்தனன்). அப்படி அவரை மூடினமையால் அவன் அவ் விஷ்ணுவினுடைய பெருமையை யடைந்தனன். உண்மையாகவே இதை யறிந்தவன் இந்திரனடைந்த பெருமையை யடைகிறான்.

13. யாகமாகிய மகமும் யதார்த்தத்தில் விஷ்ணுவே. இக்காரணத்தால் (மகத்தையுடையவன்) மகவத்தென்னும் பெயரை இந்திரனடைந்தனன். ஏனெனில்,— தேவதைகள் இரகசியத்தை விரும்புவோராகையால் இரகசியமாக மகவத் என்னப்படுவோனெவனோ அவனே மகவத் என்பவன் ஆவன்.

14. அந்தத் தேவர்கள் அந்த எறும்புகளுக்கு ஆகார சுகத்தைக் கொடுத்தனர். ஆனால் எவனும் இங்கே புசிக்கும் எந்த ஆகாரத்தையும் நீரால் ஈரமாக்கியே புசிக்கின்றனன் ஆகையால் எல்லா ஆகாரமும் நீரே.

15. சோமயாகமாகிய இந்த விஷ்ணுவை அவர்கள் தங்களுக்குள் மூன்றுபங்காகப் பங்கிட்டுக்கொண்டனர். (அவையாவன:—) வஸுக்கள் பிராதக்கால பாகத்தையும், உருத்திரர்கள் மாத்தியாந்நிகபாகத்தையும், ஆதித்தியர்கள் மூன்றும்பாகத்தையும்பெற்றனர்.

சைவசமயசரபம் முற்றிற்று.

# சைவசமயசரபத்துப்

## பிழை திருத்தம்

---

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௯ | ௨௭ | சிலா | சீலா |
| ௪௦ | ௨௮ | மற்றியாது | இங்ஙனம் மற்றியாது |
| ௬௧ | ௩௭ | லிங்கத்தைகுறித்து | லிங்கத்தைக்குறித்து |
| ௭௦ | ௧௦ | பரஸ்பர | தங்களுக்குட் பரஸ்பர |
| ௮௧ | ௧௯ | கலந்தவன | கலந்தவன். |
| ௮௮ | ௧௪ | வாஞ்சைசுயும் | வாஞ்சையும் |
| ௯௧ | ௪ | யெழிதினவன் | யெழுதினவன் |
| ௯௩ | ௨ | வவ-லு | வவலு |
| ௧௦௭ | ௯ | அங்ஙன்று | அங்ஙனன்று |
| ௧௧௧ | ௨௬ | எம்பிரானது. | எம்பிரானது |
| ௧௧௮ | ௨௩ | புறப்பட்ட | புறப்பட்டன |
| ௧௧௯ | ௧௬ | கொடுத்தென்ற | கொடுத்ததென்ற |
| ௧௨௯ | ௩௫ | அதிகாரம் | அத்தியாயம் |
| ௧௬௨ | ௧௦ | ருக்வேத | யஜுர்வேத |
| ௨௦௬ | ௧௫ | கேட்கபடு | கேட்கப்படு |
| ௨௦௮ | ௨௩ | பித்தன் என்பதன் | பித்தன் |
| ௨௪௫ | ௨௫ | ப்ரேகரம் | ப்ரேரகம் |
| ௨௫௫ | ௨௧ | இந்த்யா | இந்த்யாயத்தை |
| ௨௬௧ | ௧௬ | பிரிவினையாக | பிரிவாக |
| ௨௭௨ | ௭ | பிருப்ப | பிருப்ப் |